---

## Sama Veda

*R. O. C. No.: 160 G. 36 of 17—4—'36.*

The Director of Public Instruction, Madras, desires to bring to the notice of all Government and aided Colleges, High Schools and Secondary Training Schools in the Tamil area of the Madras Presidency the book Sama Vedam in Tamil by Mr. M. R. Jambunathan as being useful for their libraries.

The '*Hindu*' of 6—2—'36 writes :

This is a useful guide to the study of Vedic Literature. The price is very low for the quality and the quantity and the get up of the book.

# யஜூர் வேதம்

கிருஷ்ண சுக்கில

மந்திரங்களின் பரிபூரணத் தமிழ்மொழி பெயர்ப்பு.



இப் புத்தகம்

திருக்கைலாய பரம்பரை தருமபுரம் ஆதீனம் ௨௬-வது
குருமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் சுத்தாத்வைத
சைவசித்தாந்த ஸார்வபௌம பரமாசார்யவர்ய

**ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக மகாசந்நிதானம்**

அவர்கள் பொருள் உதவியைக்கொண்டு
பிரசுரிக்கப்பட்டது.

தமிழ் ஸாமவேதம்.
வேத சந்திரிகை, யஜுர்வேதக் கதைகள், உபநிஷதக்
கதைகள் ஜீனவேதம் யோகாசனம் முதலிய
பல நூல்களின் கர்த்தாவான
வேதோப நிஷத ஆசிரியர்

**எம். ஆர். ஜம்புநாதன்**



எழுதியது.



ஜம்புநாதன் புஸ்தகசாலை
சென்னை.

வெகுதான்ய ௵ ஆவணி ௴
1938



[விலை ரூபா. 3.

# முகவுரை.

வேத நூல்கள் நான்கு. அவை ரிக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வவேதமெனப்படும். கிருஷ்ணம் சுக்கிலம் மென யஜுர் இரண்டாகப் பிரியும். எல்லா சனங்களையும் எது ஆகர்ஷிக்கின்றதோ அதற்குக் கிருஷ்ண யஜுர்வேதமெனப் பெயர். சோதியான அறிவு நிறையும் நூலுக்கு சுக்கில யஜுர் வேதம் என்னும் நாமம் வழங்கும்.

## சாகைகள்.

யஜுர்வேதத்துக்கு ௧௦௧ சாகைகளிருந்தன. இதுவரை பல சாகைகள் மறைந்து விட்டன. இப்பொழுது ௫௯ சாகைகளைப் பற்றித்தான் அறிகிறோம். கிருஷ்ணயஜுர்வேத சாகைகளாவன.

௧. அக்கினிவேசம்.
௨. ஆத்திரேயம்.
௩. ஆபஸ்தம்பி.
௪. ஆர்ச்சாபினம்.
௫. ஆருணி.
௬. ஆலம்பினம்.
௭. ஆஹவரகம்.
௮. உலபம்.
௯. ஔகேயம்.
௧௦. ஐகேயம்.
௧௧. ஔபமன்னியவம்.
௧௨. கடம்.
௧௩. கபிஷ்டல கடம்.
௧௪. காண்டிகியம்.
௧௫. காமலாயினம்.
௧௬. காலாபம்.
௧௭. காலேதை.
௧௮. சரகம்.
௧௯. சாகலேயம்.
௨௦. சாராணீயம்.
௨௧. தாண்டினம்.
௨௨. துந்துபம்.
௨௩. தும்புரு.
௨௪. தைத்திரீயம்.
௨௫. பாதண்டகீயம்.
௨௬. பாரத்வாஜீ
௨௭. பாலங்கினம்.
௨௮. பிராச்யகடம்.
௨௯. மானவம்.
௩௦. மைத்திரயணீயம்.
௩௧. வாதூலம்.
௩௨. வர்தந்தவீயம்.
௩௩. வாராயணீயம்.
௩௪. வாராஹம்.
௩௫. வைகாநசம்.
௩௬. சாட்யாயநீ.

| | | | |
|---|---|---|---|
| ௩௭. | சியாமாயனம். | ௩௮. | சுவேதாசுவதரம். |
| ௩௯. | ஹாரித்திரவியம். | ௪0. | ஹாரீரதம். |
| ௪௧. | இரண்ணியகேசி. | | |

சுக்கில யஜுர்வேத சாகைகளாவன.

| | | | |
|---|---|---|---|
| ௧. | வாஜசனேயம். | ௨. | காண்வம். |
| ௩. | ஜாபாலம். | ௪. | பௌதேயம். |
| ௫ | மாத்தியன்தினம். | ௬. | தாபாயனீயம். |
| ௭. | காபோலம். | ௮. | வைநதேயம். |
| ௯. | பாராசரம். | ௧0. | பரமாவடிகம். |
| ௧௧. | ஆபடிகம். | ௧௨. | பௌண்டிரவத்சம். |
| ௧௩. | பைஜவாபம். | ௧௪. | கௌந்தேயம். |
| ௧௫. | வைதேயம். | | |

தைத்திரீய சாகைகளைச் சேர்ந்தவர்கள் தென்னாட்டிலதிகம். சுக்கில யஜுர்வேத மநுசரிப்பவர்கள் வடநாட்டில் பெருகியுளார்கள். எல்லா சாகைகளுக்கும் வேத மந்திரங்கள் ஏறக்குறைய ஒரே வகையான மந்திரங்களே.

## உபநிஷதங்கள்

யஜுர்வேதத்துக்கு சுமார்-௪௯ உபநிஷதங்களுண்டு. கிருஷ்ண யஜுர்வேத உபநிஷதங்கள் ௩௨. அவை.

| | | | |
|---|---|---|---|
| ௧. | கடம். | ௨. | தைத்திரீயம். |
| ௩. | பிரமம். | ௪. | கைவல்லியம். |
| ௫. | சுவேதாசுவதரம். | ௬. | கருப்பம். |
| ௭. | நாராயணம். | ௮. | அமிருத பிந்து. |
| ௯. | அமிருதநாதம். | ௧0. | காலாக்கினி ருத்திரம். |
| ௧௧. | க்ஷுரிகம். | ௧௨. | ஸர்வசாரம். |
| ௧௩. | சுக இரகசியம். | ௧௪. | தேஜோபிந்து. |
| ௧௫. | தியான பிந்து. | ௧௬. | பிரமவித்தை. |
| ௧௭. | யோகதத்துவம். | ௧௮. | தட்சிணாமூர்த்தி. |
| ௧௯. | ஸ்கந்தம். | ௨0. | சாரீரிகம். |
| ௨௧. | யோகசிட்சை. | ௨௨. | ஏகாட்சரம். |
| ௨௩. | அட்சி. | ௨௪. | அவதூதம். |

உரு. கடருத்திரம் உசா. ருத்திர இருதயம்.
உஎ. யோககுண்டலினி, [திரம். உஅ. பஞ்சப்பிரமம்.
உகூ. பிராண அக்கினிஹோத் ௩0. கலிசம்தரணம்.
௩௧. வராகம். ௩௨. சரஸ்வதி இரகசியம்.

சுக்கில யஜுர்வேதத்தின் ௧எ. உபநிஷதங்களாவன :—

௧. ஜாபாலம். ௨. ஹம்ஸம்
௩. பரமஹம்சம். ௪. ஸுபாலம்.
ரு. மாந்திரீகம். ௬. நிராலம்பம்.
எ. திரிசிகி பிராமணம் அ. மண்டலப் பிராமணம்.
௯. அத்வைதய தாரகம். ௧0. பைங்களம்,
௧௧. பிக்ஷு. ௧௨. துரியாதீதம்.
௧௩. அத்தியாத்மம். ௧௪. தாரஸாரம்.
௧ரு. யாக்ஞவல்கியம். ௧௬. சாட்யாயனீ.
௧எ. முக்திகம்.

உபநிஷதங்கள் என்பன வேத மொழிகளினின்று உயரிய ரிஷிகள் கண்ட உண்மைகளாகும். இனி யஜுர் சம்பந்தமான நூல்களின் விளக்கம்.

## வேறு நூல்கள்

யஜுர்வேத தைத்தீரிய பிராமணம் என்பது தைத்திரீய மந்திரங்களின் யாக விளக்கமான ஒரு நூல். இதைத் தவிர தைத்திரீய மந்திரங்களுடன் பிராமண பாகமென ஒன்று உண்டு. அதுவும் மந்திரங்களின் விளக்கங்களை சற்று புலனுக்கும். சதபத பிராமணம் என்னும் நூல் நான் தான் சுக்கில யஜுர்வேத பாஷ்யமெனக் கூறும். இன்னம் ஆபஸ்தம்பர், போதாயனர் பாரத்வாஜர், சத்திய சாதர் இரண்யணிய கேசினர், வைகானசர் முதலியவர் எழுதிய சிரௌத சூக்திரங்களுமுண்டு. தைத்திரீயாரண்ணியகம் வேத மந்திரங்களினின்று உண்டாகும் ஞான பண்டாரமாகும். பிருஹதாரண்ணியகம் சுக்கில யஜுரினின்று புலனுகும் புனிதமொழிகள். இவ்வேத இலட்சணங்களை யறிவிக்கும் பிரதி சாகைகளுமுண்டு.

## மூல ஸம்ஹிதை

யஜுர்வேத சம்பந்தமான நூல்களைப்பற்றிச் சுருக்கமாய் சொல்லி விட்டோம். இனி கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீய சம்ஹிதையைப் பற்றிக் கூறுவோம். ஸம்ஹிதை என்ருல் மந்திரக் கூட்டங்களாகும். ரிஷி தித்திரி பரம்பரையாய் வரும் கிருஷ்ண யஜுர்வேத மந்திரங்களுக்கு தைத்திரீய சம்ஹிதை யெனப்பெயர். இந்நூலை எ காண்டங்களாகப் பிரித்துளார்கள். காண்டங்கள், பிரபாடகங்கள் அல்லது பிரசினங்கள் என்னும் பிரிவுகளால் பிரிக்கப்பட்டு அவை அநுவாகங்களாக வகுக்கப்படும். அநுவாகங்களில் ஒவ்வொரு ஐம்பது பதங்களுக்கு ஒரு எண் உண்டு. அநுவாகக் கடையில் ஒரு குறிப்பு வாக்கியமுண்டு. அதில் ஒவ்வொரு மொழியும் வரிசையாய் அநுவாகத்திலுள்ள ஒவ்வொரு ருo-வது பதமாகும். இறுதி எண், அநுவாகக் கடையில் ருo பதங்களுக்குக் குறைவாஞல் அவற்றின் எண்ணிக்கையை யறிவிக்கும். ஒவ்வொரு பிரசினத்தின் முடிவில் எல்லா அநுவாகங்களின் முதல் மொழிகளுடன் அந்த அந்த அநுவாக மொத்தப் பதங்களின் எண்ணிக்கைகளுண்டு. பிறகு கடைசியாக அப்பிரசினத்தில் எத்தனை மொழிகள் உண்டு என்பதை ஒரு எண் அறிவிக்கும். காண்டத்தின் முடிவில் ஒவ்வொரு பிரசினத்தின் முதல் மொழியுடன் அத்துடன் அங்கு எத்தனை சொற்கள் உண்டு என்பதை ஒரு எண் புலஞக்கும். ஏழாவது காண்ட முடிவிலுள்ள குறிப்பாவது. இஷே-கசுருஅ௨. வாயவ்யம்-கக௨கரு. பிரசாபதி-கoசு௨௨. யுஞ்சான: கசகoரு. ஸாவித்ராணி-கககoச. பிராசீன வம்சம்-கசுகக௨. பிரஜனனம் கஙு, ஙஉரு. ஸப்தம்-ககo௨ககு. இஷே என்பது முதல் காண்டத்தின் முதல் பதமாகும். அடுத்த எண் அக்காண்டத்திலுள்ள மொத்தப் பதங்கள். பிறகு மிருதிகளான ஆறு காண்டங்களின் முதற் பதங்களும் எண்ணிக்கைகளுமாகும். ‘ஸப்தம்’ என்னும் மொழிக்கப்பால் வருவது ஏழுகாண்டங்களிலுமுள்ள மொத்த மொழிகளின் எண்ணிக்கையாகும்.

வேதமொழிகளில் எச்சொல்லும் தவருமலிருப்பதர்க்கும், மனப்பாடஞ்செய்பவர்கள் ஞாபக மறதியை ஸ்மரணை செய்வதர்க்கும் ஆதியில் மகரிஷிகள் இச்சூசனைகளை வேதமந்திரங்களுடன் சேர்த்திருக்கலாம்.

## மூல சுக்கிலம்

இனி சுக்கில யஜுர்வேதம். ரிஷிவாஜசனேய பரம்பரையாய் வருவது வாஜசனேய சம்ஹிதையாகும். இனி பொதுவாய் இதைச் சுக்கிலம் அல்லது சுக்கில யஜுர்வேதமென அழைப்போம். இதற்கு ௪௦ அத்தியாயங்கள். ஒவ்வொரு அத்தியாயங்களிலும் பல மந்திரங்களுண்டு. இந்த எல்லா மந்திரங்களின் தமிழ் வசனத்தை இங்கு காணலாம்.

## தமிழ் வேதம்

இனி தைத்தரீய சம்ஹிதையை கிருஷ்ண யஜுர்வேத மென அழைப்போம். கிருஷ்ண யஜுர்வேதம் பிராமணமும் மந்திரமும் கலந்துள்ளது. பிராமணம் பிரயோக பாகமாவதால் அதை வேதமெனச் சொல்வதற்கில்லை. ஆதலால் மந்திரங்களையே இங்கு மொழிபெயர்த்துளோம். இது ௬௫௮ அநுவாகங்களில் முடியும். ஒவ்வொரு அநுவாக முடிவில் மூன்று எண்களுண்டு. அவை மூல நூலின் குறிப்புகள். முதல் எண் காண்டம், இரண்டாம் எண் பிரசினம், மூன்றும் எண் அநுவாகத்தைக் காட்டும். ௬௫௬-வது அநுவாகத்தினின்று கடைசிவரை சுக்கில யஜுர்வேதமாகும். அந்த அநுவாகங்களின் கீழுள்ள எண்கள் மூல நூலின் அத்தியாயம் மந்திரங்களைக் குறிக்கும். பல தைத்தீரிய மந்திரங்கள் சுக்கிலத்தில் வருவதால் அவற்றை மறுபடியும் நாம் மொழிபெயர்க்கவில்லை. அவை எங்கே என யஜுர்ஜோதி என்னும் அநுபந்தத்தில் இன்னும் பல விஷயங்களுடன் காணவும்.

இத்தமிழ் வேதத்தைச் செய்வதில் ஒவ்வொரு வடமொழி பதத்துக்கும் தமிழ் உரையை யெழுதி பரிட்சையில் விடை எழுதும் மாணவன் அநுவாதம்போல் செய்யவேண்டு மென்னும் எண்ணத்துடன் இதைச் செய்யவில்லை. ஒரு மந்திரத்தைப் பூரணமாய் படித்து அதனால் தோன்றும் உணர்வையே முதன்மையாய்க் கருதி அதைப் புனைக்குவதில் நமது முழு கவனத்தையுஞ் செலுத்தி அப்பால் கூடியவரை வடமொழி பதங்களை யநுசரித்துளோம். வேத உணர்வை தமிழில் உயிராக்குங்கால் வேதபாஷ்யஞ்செய்யவோ அல்லது வேத விளக்கஞ் செய்யவேண்டுமென்னும் வேலையில் சாய்ந்துள்ளதாகவோ நாம் ஒருபொழுதும் நினைக்கவே

இல்லை. இத்தகைய விளக்கம் அத்தியாவசியமே யாயினும் இருக்கும் சந்தர்ப்பத்தைக் கருதி ஒருவனால் இதுமுடியாது என்பதை முன்னரே யோசித்து இவ்வேலையில் ஈடுபடவில்லை. வடமொழி கற்றவன் வேதமொழிகளைச் செவியுற்றவுடன் அம்மொழிகளால் சடேரென்று எக்கருத்துக்களை யெல்லா மடைகின்றானோ அவற்றையே தமிழ்மொழிகளில் இங்கு குவித்துளோம். தமிழ் செய்யுங்கால் மூல நூலில் வரும் புருஷன், பொருள்களின் பெயர்களைத் தவிர மற்ற பதங்களுக்கெல்லாம் கூடியவரை தமிழ்மொழிகளையும் தமிழ் எழுத்துக்களையுமே பயன் செய்துளோம். தமிழ் மொழி இப்பொழுது பெரிய குழப்பத்தில் முழுகியுள்ளது. வடமொழி யறியும் சிலர் எழுதும் மணிப்பிரவாளம் ஒரு தமிழ். ஆரியத்தை அடியுடன் நீக்கி ஒதுங்கி நிற்க முயலும் கூட்டம் ஒன்று உண்டு. யாழ்ப்பாணம் தமிழைக் கேட்பானேன்! பர்மாவிலும் சிங்கப்பூரிலும் எல்லா பாஷைகளுடன் கலந்தோங்கும் உயிர் தமிழை வியாபாரி களறிவார்கள். பிரிட்டிஷ் கயான முதலிய நாடுகளில் விசித்திர திராவிடன் ஒருவன் தாண்டவமாடுகிறான். இவர்கள் அனைவர்களும் சாதாரணமாய் வழங்கும் தமிழ்மொழி, எழுத்துக்களையே இங்கு பயன் செய்துளோம்.

## தலைப் பெயர்கள்

மூலவேதத்தில் தலைப்பெயர்களில்லை. உங்களுக்கு நன்கு விளங்கவேண்டுமென நாம் அவற்றை யளித்துளோம். ஒவ்வொரு அநுவாகத்துக்கும் தலைப்பெயர்களை அளிப்பது கஷ்டம். அநுவாகங்களுக்கு பரஸ்பரம் சம்பந்தமிருப்பதாக நூல கண்களுக்குத் தோன்றாது. ஒரே அநுவாகத்தில் பல விஷயங்களுண்டு. ஏகமந்திரத்தில் அநேக பொருள்கள் புலனாகலாம். சில சமயத்தில் ஒரே சொல்லில் சகமெல்லாம் சாய்ந்திருக்கும். இவற்றுடன் ஆண், பெண், ஒன்றன், பலர் பலவின் பால்கள், ஒருமை பன்மை தன்மை முன்னிலை படர்க்கை இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் கருத்தா கர்மா கிரியை எல்லாம் மறைந்து மலர்ந்து இணைந்து பிரியும். புராதனத்தில் பெரிய மேதாவிகள் ஒரு வேத மந்திரத்தை பல வருஷங்கள் தியானஞ்செய்து அதற்குப் பிறகும் தங்களுக்கு அது சரியாகப் புரியவில்லை யென சொல்வார்களானால் எல்லா மந்திரங்களுக்கும் தலைப்பெயர்களைத் திடீரெனக் கொடுப்பதில் எத்தனைக்

கடின மென்பதை யறியலாம். நாம் ஒவ்வொரு அநுவாகத்துக்கும் அந்தந்த அநுவாகத்தில் தோன்றும் முதன்மையான மொழியை அல்லது எந்த தேவர்களைக் குறித்து அவ்வநுவாகம் அதிகமாய் நாடுகின்றதோ அத்தேவர்களின் தலைத்தேவரை எழுதியுளோம்.

## தேவர்கள்

இந்த வேதத்தில் அக்கினி இந்திரன் சூரியன் விஷ்ணு சோமன் மருத்துக்கள் புவி சலம் உஷை வருணன் ருத்திரன் சரஸ்வதி முதலியவர்கள் முதன்மையான தேவர்கள். தேவர் என்றால் நமக்கு உதவிசெய்யும் புருஷன் அல்லது நாம் பயன் செய்து கொள்ளும் எல்லா நற்பொருள்களுக்கும் பெயர். சில சமயங்களில் நமது அங்கத்திலுள்ள கண் காது மூக்கும் தேவர்கள் யெனப்படும். தேவர்களின் பலவிதமான உரைகளை அங்கங்கு எழுதியுளோம்.

## யக்ஞங்கள்

இதைத் தவிர யக்ஞம் யக்ஞத்தின் பல வடிவங்களான சோம யாகம் வாஜபேயம் இராஜ சூயம் புருஷமேதம் சர்வமேதம் அசுவ மேதம் சௌத்திரமணி பிரவர்க்கியம் எனப் பல அங்கங்களை அங்க ங்கு எழுதியுளோம். வேத மூல மந்திரங்களில் சாதாரணமாய் அம் மொழிகளை நாம் காண்பதில்லையாயினும் சாயனரை யநுசரித்து அத்தலை நாமங்களளிக்கப்பட்டுள்ளன. ஆனால் யக்ஞங்களின் உட் கருத்துக்களுக்கு உபநிஷதம் நிருக்தம் முதலியவற்றைப் பற்றியு ளோம். யக்ஞமென்பது ஒரு மொழி சின்னமாகும். அது எல்லா நற்பணி நற்புருஷன் நற்பிராணி நற்பொருள் நற்செயல் முதலிய வற்றைக் குறிக்கும் பொது மொழியாகும். இயல்பில் நடைபெறும் செயல்களும் யக்ஞங்கள் என அழைக்கப்படும், அந்த யக்ஞங் களின் சில உண்மைகளை இங்கு அறிவிப்போம்.

## யக்ஞ உண்மைகள்.

யக்ஞமென்றால் விஷ்ணுவுக்குப் பெயர். விஷ்ணு என்பது வியாபகமான பொருளின் நாமம். யக்ஞமென்றால் வாமனன் அல்லது குள்ளனுக்கும் பெயர்.

ஒரு காலத்தில் அசுரர்கள் பிரபஞ்சத்தை யெல்லாம் பற்றி யிருந்தார்கள். அமரர்கள் அவர்களிடஞ் சென்று எங்களுக்குச் சிறிய பாகம் நிலம் கொடுத்தபோதிலும் போதுமெனச் சொன்னார் கள். இருள் என்னும் அரக்கர்கள் சரி கீழ்த்திசையில் சற்று அக்கினியை வைக்க நிலே தருகிறோம், என்றவுடன் தேவர்கள் யக்ஞனை உதய சூரியனாக அங்கு ஸ்தாபித்தார்கள். காலையில் வாமனனாய்ச் சென்ற அவன் உச்சியில் வந்து தன் பாதங்கள் என்னும் கிரணங்களால் மூவுலகை வியாபகனானன். சத. பிரா. க. உ. ரு. க.

யக்ஞமென்றால் புவியிலுள்ள எல்லா செல்வங்களுக்கும் பெயர். அரக்கர்கள் எல்லாப்பொருள்களையும் வராஹன் என்பவ னிடத்தில் வைத்திருந்தார்கள். எல்லா நற்பொருள்களும் குவியு மிடத்துக்கு வராஹமெனப் பெயர். அதை விஷ்ணு என்னும் யக்ஞன் இந்திரன் உதவியால் பற்றினன். தைத்திரீயம். சு. உ. ச. உ.

யக்ஞமென்றால் எல்லா மேன்மைகளைச் சுமக்கும் இரத மாகும். ரிக். ந. உ. அ. நம்மை சலத்தில் கடத்திச் செல்லுங் கப்பலுக்கு யக்ஞமென்னும் நாமமுண்டு. ரிக். க. கசO. கஉ. நிலம் உழுது விதைத்துக் காத்து பயிர்செய்து, தானியம் அறுப் புதற்கும் இன்னும் எல்லாத் தொழில்களுக்கும் யக்ஞமெனச் சொல்வதுண்டு. ரிக். கO, கOக, ந, ரு. யக்ஞமென்றால் சிருட்டிக் குப் பெயர். இந்த யக்ஞத்தினின்றே பூவுலகம் இன்னும் எல்லாப் பொருள்களும் வேதமும் தோன்றும், நகள - சு. எ. யக்ஞத்துக்கு வடிவங்கொடுத்தால் அவன் பிரஜாபதி முதலிய தேவர்களா யுளான். உகள. அவன் அங்கங்கள் நட்சத்திரங்கள், பன்னி ரண்டு மாதங்கள் இன்னும் அனைத்துமாகும். உகசு. யக்ஞமென் றால் என்ன? பசு ஆடு குதிரைகள் நிறைந்துள்ள பொருளே யக்ஞமாகும். யக்ஞம், பிரசை உணவு மிகுந்து தீர்க்கத் திரவியம் விரியும் மூல சபைகள் நிறைவதாகும். சுசு. கள.

புரோகிதர்களான பருவகாலங்கள் பட்சங்கள் என்னும் பாண்டங்களுடன் மாதங்களை யாகுதி செய்வதால் வருஷம் என் னும் யக்ஞமாகும். சத. பிரா. கக. உ. எ. நந. சோதி அக்கினி ஆதித்தியன் சமித்து. கிரணம் புகை. பகல் சுவாலை. திசை தணல்

இது ஒரு யக்ஞம் பி. சு. உ. அகங்காரம் அத்வர்யு. சித்தம் ஹோதா. வியானன் பிரஸ்தோதா. உதானன் உத்காதன் சமானன் மைத்திரா வருணன் சரீரம் வேதி, தலை துரோண கலசம், ஓங்காரம் யூபம், மனம் இரதம், காமம் பசு, தியாகம் தட்சிணை ஆத்மா யஜமானன். பிராணக்கிஹோத்திர உபநிடதம். மனிதர் பேசும் பொழுது மூச்சுவிடுவதில்லை. ஏனெனில் அப்பொழுது பிராணனை மொழியில் யக்ஞஞ் செய்கிறார்கள். மூச்சு விடும் பொழுது பேச முடிவதில்லை. அப்பொழுது மொழியை பிராணனில் யக்ஞஞ் செய்கிறார்கள். இவ்வழியாத அமுதமான யக்ஞம் விழிப்பிலும் தூக்கத்திலும் நடைபெறுகின்றது. கௌஷீதகம். ரு. ௪. மனிதர் வாழ்க்கையே ஒரு யக்ஞம் போலாகும். முதல் உ௪ வருஷம் காலை யக்ஞம். அடுத்த ௪௪ வருஷங்கள் பகல் யக்ஞம். மிகுதியான ௪அ வருஷங்கள் மாலை யக்ஞமாகும். ௪. ௬. கசு. பிரமசரிய வாழ்க்கையே யக்ஞமாகும். சா. அ. ரு.

## யாகங்கள்

யக்ஞ மென்றாலும் யாகமென்றாலும் ஒன்றுதான். சோமயாகமென்றால் சோமனை அமிருதத்தை நாடுவதற்கான செயல்கள். நீங்கள் செல்வம் நாடினால் அதற்கு வாஜபேய மெனப்படும். நீங்கள் ஒரு தேசத்தை அரசுபுரிய விரும்பி அதற்காக முயன்றால் இராஜசூய யாகம் செய்பவர்களாவீர்கள். இயல்பிலே நடைபெறும் சிருட்டி விசித்திரங்களை யறிய விரும்புவது புருஷமேதமாகும். பொருள்களின் பரஸ்பர சம்பந்தங்களை யறிய விரும்புவது சர்வமேதமாகும். தோல்வியானாலும் மறுபடியும் ஜயிக்க விரும்புவது சௌத்திரமணியாகும். நாம் திடகாத்திரர்களாவதற்கு செய்யும் முயற்சிகள் பிரவர்க்கிய மெனப்பெயர்.

## அசுவ மேதம்

குதிரை யாகத்துக்கு அசுவமேத மெனப்பெயர். துரகமொன்றை சுதந்தரமாய் அவிழ்த்துவிட்டு எங்குஞ் சுற்றச் செய்ய வேண்டும். இதைத் தடுப்பவனை நீ ஜயிக்கவேண்டும். இதன் நோக்கம் ஒருவன் பூமண்டலாதிபதியாக எச்செயலைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்ய வேண்டுமென்பதாகும். அசுவமேதத்தைப்பற்றி சதபதஞ் சொல்வதாவது. பரிக்கு பலியளிப்பதென்

பது பகைவர்களை பயங்கரமா யொழிக்கவேண்டு மென்பதைக் குறிக்கும். பூஷணனுக்கு அஜமளிப்பதென்பது நாம் புவியில் நிலையாயிருக்கவேண்டு மென்பதாகும். தைத்திரீய ஸம்ஹிதை பிராமண பாகமான ௫-௪. ௧௨-வது மொழிகளினின்று நாம் அறிவதாவது - துரகயாகமென்றால் ௧௨, மாதங்கள், ஐந்து பருவங்கள், மூவ்வுலகங்கள், பிரஜாபதி ஒன்றுசேரும் செயலாகும்,

அரி யாகத்தைப்பற்றி பிருகதாரண்ணியகஞ் சொல்வதாவது —உஷையே யக்ஞ குதிரையின் தலையாகும். சூரியன் கண், காற்று பிராணன். அக்கினி வாய். வருஷம் ஆத்மா. சோதி பின்புறம். ஆகாசம் வயிறு. புவி குளம்பு. திசைகள் பக்கங்கள். நடுத்திசை விலா எலும்புகள். ருதுக்கள் அம்புகள், மாசம் பட்சம் கணுக்கள். பகல் இரவு பாதங்கள், நட்சத்திரம் எலும்புகள், மேகம் மாமிசம். பாதி சீரண உணவு மணல், நதிகள் உதிர நாடிகள், மலை ஈரற் குலை, செடி கொடி ரோமங்கள், முன்பாகம் உதய சூரியன். பின் பாகம் அஸ்த சூரியன், மின்னல் வாய் திறப்பது, தேக அதிர்ச்சி இடி முழக்கம், சலம் பொழிவது மழை, கர்ச்சனை கனைப்பாகும். பி. க. க.

இதைப்பற்றி யஜுர்வேதம் சொல்வதாவது - அரியாக மென்பது சோதி மண்டல நிலைகளைக் குறிக்கும், உ௪௦. எ. துரகத்தை ஆதித்தியன் யமன் எனச் சொல்வார்கள். உ௯அ. ௯.

புவியிலுள்ள புரவிக்கு அனல் சகோதரன், வான குதிரையுடனிருப்பவன் வாயுவாகும், சோதி யசுவத்துடனிருப்பவன் சூரியனாகும், கால குதிரைக்கு ஆதித்தியன் சகோதரனாகும், ௯௬௫. நீ குதிரை, நீ அசுவம், நீ துரகம், நீ துரிதன், நீ ஆணாகும், நீ திடகுதிரை நீ வன்மையுள்ளவன், நீ சூழ்பவன், நீ சகமாகும், நீ அடக்குபவன், நீ புவியினரசனாகும், ௯௬௫. வசுக்கள்—அனல் நிலம் வாயுவானம் ஞாயிறு சோதி சந்திரன் நட்சத்திரங்கள் சூரியனிட மிருந்து குதிரையை குணமாக்கினார்களாம். இந்த புரவி எது? எவன்? ஒரு வேளை வேதப்பரி, அறிவின் ஆரோபமாயிருக்கலாம். ௯௫௯, உ.

குதிரையை இப்படி யாரோபஞ் செய்து புவியின் ஞான பண்டாரத்தை வேத யாக காண்டத்தில் சொல்லியுளார்கள். இங்கு நாம் அறியும் இன்னும் பல விஷயங்களாவன. கணித சாஸ்திர

மான எண்களின் மூலங்கள். ௩௨௭-௩௩௯-வது யநுவாகங்களை பார்க்கவும். அங்கங்களின் ஞான பீஜங்கள். ௩௪௨. ௩௪௪. திசை யறிவு. ௩௨௧. ருதுமாதம் பட்சத்தின் ஆராய்ச்சி. ௨௩௧. தேவ ஞானம் திரிகால அறிவு வேதக்கல்வி, பிராணசக்தி உழவுத் தொழில், பிரசோற்பத்தி முதலியன. ௩௩௭-௩௩௯, ௩௫௪.

அறிவுடன் மனிதர்கள் வீ ர மு ட ன் வாழவேண்டுமென்பது குதிரையாக நோக்கமாகும். ௨௩௮, ௧௧. குதிரையைப் போர்க்கள மாகவு மெண்ணும் சமர்சாதனங்களான வில் பேரிகை தூலப் புரவிகளின் பெருமைகளைப்பற்றி ௨௩௭ - வது யநுவாகத்தில் காண்கிறோம். குதிரை ஒரு வேளை எங்கும் புலனுகும் பரம சக்தி யைக் குறிக்கலாம்.

௩௧௪-வது அநுவாகஞ் சொல்வதாவது—சோதி உன் முதுகா கும். உன் நிலயம் புவி. உனதாத்மா வானமாகும். கடல் உன் மூல நிலயம். உன் கண் சூரியன், பிராணன் காற்று, உன் செவி சந்திரன். உன் சந்திகள் பட்சங்களும் மாதங்களுமாகும். உன் அங்கங்கள் ருதுக்கள். உன் மகிமை வருஷமாகும்.

இம் மர்மமான குதிரையை ௩௧௭-௫. கிருஷிக்கு சுகத்துக்கு செல்வத்துக்கு செழுமைக்கு சுகத்துக்கு சோதிக்கு எல்லா சீவராசி களுக்காகவும் பற்றவேண்டும். ஏனெனில் இவ்வசுவம், ௩௬௫. நமது பிராணன் அபானன் வியானன் தாங்கும் அவனே நமது கண் காது உயிருமாகும்.

இந்த அசுவமேத வழியாய் அகண்ட ஞானத்தை அறிவித்து வேதம் வாழ்க்கையின் இரகசியத்தையும் கோஷிக்கும்.

## வேத கோஷம்

புவி கனவாகும். பரமன் புறத்திலுளான். பொருள் மாயையா கும், எனப் புகலுபவர்களுக்கு புவி கனவில்லை. பரமன் இங்கு முண்டு. பொருள் வாழ்க்கைக்கு அவசியமென மறை கூறி டே லும் மொழிவாதாவது. நீ மரஞ்செடி மலைகளை யடையவும், பொன் வெள்ளி இரும்பு தாமிரத்தைப் பற்றவும், தேன் நெய் பால் தயிரைப் பருகவும், நெல் கோதுமை பயறு தானியத்தைப் பயிர் செய்யவும். வீடு நிலம் தேசம் தோட்டம் உனக்கு வேண்டும். இராஜ்யம் சாம்ராஜ்யம் புகழ் பெருமை பேச்சும் பிரகாசமும்

அவசியம். தேக பலம் மனோசக்தி ஆண்மவன்மை பெற்று தஸ் யுவாகாமல் புதிய புதிய பொருள்களை யெல்லாம் கண்டு பிடிக்க வும். [உசக-உசரு.] இவற்றை யடைவதற்குச் சிவ சங்கற்பமென் னும் (சOO) சௌம்யமான பிடிவாதம் வேண்டும். பிடிவாத மன்னி யில் நீ ஒரு பொருளையும் அடைய முடியாது. நீ பிடிவாதமுடன் முயலுங்கால் உனக்குத் தடைசெய்ய பல சத்துருக்கள் தோன்று வார்கள். உடனே உன்னகத்திலுள்ள ருத்திரனை நாட யஞ்சாதே. ருத்திரன் யார் தெரியுமா? கோபம் வந்தால் அவனுக்குத் தலைகால் தெரியாது. பெண் பிள்ளை தாயானாலும் அவன் கவனியான். தன் செயலைச் சாதித்துத் தான் வேறு வேலை எண்ணுவான். அப்படி நீயும் பகைவர்களை யொழித்துத் தான் தூங்கலாம். பகைவர் களைப் பாழாக்க உனக்காயுதம் வேண்டும். அதைக் கூறியதாக்க வும். பகைவர்களிடத்தில் செலுத்தவும். அவர்களில் ஒருவனையும் உயிருடன் வைக்காதே. [உகரு] பகைவர் ஒழிந்தால் நீ ஜயமுட னாவாய். அப்பொழுது உனக்கு எது வேண்டுமோ அது கிடைக் கும் என இவ்வேதம் கோஷஞ் செய்யும்.

## வேத நூல்

இப்படி கோஷஞ்செய்யும் இக்கிரந்தமான வேத நூல் இது வரை தமிழில் வரவில்லை. ஆரியமும் திராவிடமும் பல வருடங் கள் இணைந்திருந்த போதிலும் வேதம் தென் மொழியில் வராதது ஒரு பெருங் குறையாகவே இருந்தது. இக்குறையை பெருஞ் சந் தர்ப்பமாகக் கருதி பல அறிஞர்கள் இது தான் வேத ஆக்ஞை என தங்கள் மனம்போன வண்ணஞ் சொல்லி சமூகச் செழிப் பழிக்கும் பல பழக்க வழக்கங்களை ஏற்படுத்தியுளார்கள். வேத அறிவிலிகள் வேதத்தில் சொல்வது பசு இம்சை, அது முக்குணங் கள் உடையது அது கருமகாண்டமே யாகையால் நாம் யநுசரிக்க யருகதை யில்லை யென்பார்கள். சில மேதாவிகள் உபநிஷதங் களே வேதமெனச் சொல்லி சுருதியை மறந்து விடுகிறார்கள். வேதாந்தமே வேதமெனச் சொல்லி சில மாயாவாதிகள் சூக்திரங் களையே படித்துப் பிரசாரஞ்செய்து மறை மொழிகளை கவனிப்ப தில்லை. சில சண்டிகள் வேதத்திலுள்ள ஏதோ ஒரு சொல்லைக் குரங்குபோல் பிடித்து இலக்கியமாய்ப் பிழிந்து தங்கள் சித்தாந்தங் களுக்கு சாதகமாய் புலனாக்குகிறார்கள். சுருங்கச் சொல்லில் இவர்

களது மொழிகளை அமுத வாக்காய் கருதி வடமொழி யறியாத யோகிகளும் ரிஷிகளும் வேதத்தில் விருப்பையும் வெறுப்பையு மடைந்துளார்கள். பெரியவர்களுக்கும் படித்தவர்களுக்குமே இத் திண்டாட்டமானல் பாமரர்கள் நிலையைக் கேட்பானேன் !

## தமிழர்களே !

இப்பொழுது வேதம் தென் மொழியில் வந்து விட்டபடியால் இக்கஷ்டம் நீங்கும். வேத விரோதங்களை இனி நீங்களே கண்டு பிடித்துத் துரத்துவீர்கள். வனம் திரியும் இருளனே ! நிலம் உழும் ஏழுமலையே ! வணிகஞ்செய்யும் வைசியரே ! கலம் ஓட்டுங் கல்வி குவியுங் கணக்கனே ! ஆண், பெண், கிழவர் குமரர்களே ! நடர், சூதர், ஒற்றர் களைஞர், வங்கர் ,கன்னர்களே ! மாலுமி மாவலர் களே ! கொல்லர், தச்சர், தட்டார்களே ! பரத புத்திரர்களே ! கண்டி வாசிகளே ! கடல் கடந்து வசிக்கும் தமிழர்களே ! இந்து தர்மத்தில் எதைப்பற்றி இனி என்ன சந்தேகந் தோன்றிய போதிலும் இத் தமிழ்வேதம் அதைத் தீர்த்துவிடும். இதற்கு மாரு னவை யெல்லாம் வேத விபரீதமென நீங்களே அறிவீர்கள். புரிந் தாலும் புரியாவிட்டாலும் இதைக் கட்டாயமாக ஒருமுறை படி யுங்கள். பன்முறை படனஞ் செய்யுங்கள். தினந்தோறும் எல்லா விசேஷ நாட்களிலும் இதைப் பாராயணஞ் செய்யுங்கள். இவற் றின் பல மொழிகளைப் படித்து சற்று ஈசனை தியானஞ்செய்து புரோகிதர் உதவி, உதவியின்னியில் விவாக முதலிய எல்லா சம்ஸ் காரங்களையும் நடத்துங்கள். இதை வீட்டில் படிக்கவும். சபையில் கோஷிக்கவும். சமரில் நாடவும், கடலில் எடுத்துச் செல்லவும். ககனத்தில் பறந்து கவனமாய்ப் படிக்கவும். இவ்வேதம் மானிட கோடிகளுக்கு சூரியன் ஒளிபோல் வீசுங் காற்றுப்போல் பருகுஞ் சலம்போல் சொந்தமாகையால் விரும்புவர்க் கெல்லாம் வேத இரகசியத்தை யறிவிக்கவும். வேதப் பிரசாரஞ் செய்வது உங்கள் கடமை என தித்திரி ரிஷி கூறுகிருர்

## நன்றி.

இக்கடமையை உணர்ந்து இதுவரை தமிழ் காணுத இந்நூலை தென்மொழியில் பிரசுரஞ்செய்ய பொருள் உதவி யளித்தவர்களும் இதுபோல் பல வடமொழி தென்மொழிகளிலுள்ள பல புத்தகங்

களை அச்சியற்றி யாருக்கும் இலவசமாகக் கொடுத்து வருபவர்களுமான தருமபுரம் ஆதீனத் திவ்யத் தலைவரான ஸ்ரீ. ல. ஸ்ரீ. ஷண்முக தேசிக ஞானசம்பந்த மகாசந்நிதானம் அவர்களுக்கு நான் என்றும் நன்றியுள்ளவனாயிருப்பேன். தமிழ் மொழி யுள்ள வரை இப்பெரியாரின் புவிபுகழும் புனிதவேத தானத்தை பண்டிதர் முதல் பாமரர் வரை ஒருநாளும் மறக்கப் போவதில்லை. சர்வேசன் அவருக்கு திடகாயம் தீர்க்காயுசை யளிக்கவேண்டுமென நாம் பரமனைத் துதிசெய்து தமிழர் கைகளில் இந்நூலை யளிக்கிறோம்.

இந்நூல் அச்சு ஏறி வருங்கால் அருமையான பல யோசனைகளை எனக்குக் கூறி பல விட்டுப்போன பதங்களைப் புலனாக்கி எனக்குப் பெரும் உதவியளித்த தருமபுரம் ஆதீனம் சம்ஸ்கிருத வித்வான் அரியூர் பிரம்மஸ்ரீ கெ. நாராயண சாஸ்திரிகள் அவர்களுக்கும் ஸ்ரீமான் அ. பொ. சிதம்பரம் தேசிகர் அவர்களுக்கும் என் அன்பார்ந்த வந்தனங்கள்.

இதைப்படிக்கும் தமிழர்கள் என் குற்றங்களை யெல்லாம் நீக்கி குணங்களைக் கிரகித்து என்னை மேன்மேலும் வேதத் தொண்டில் சாய ஊக்கத்தையும் உற்சாகத்தையும் யளிக்கவேண்டுமென எல்லாம் வல்ல ஈசனைப் போற்றி தமிழர்களிடம் இந்நூலை சமர்ப்பிக்கிறோம்.

கார். பம்பாய். 21.
11—8—38.

எம். ஆர். ஜம்புநாதன்.

# பொருளடக்கம்

## சுக்கில யஜுர் வேதம்

# படங்கள்



1. திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

உ௪-வது மகாசந்நிதானம்

ஸ்ரீசண்முக தேசிக பரமாசார்ய சுவாமிகள்

# கிருஷ்ண யஜுர் வேதம்

## அநுவாகம் க.

[தரிச பௌர்ணிமை யக்ஞங்கள்*]

### சவிதா

க. நான் உணவுக்கு [1]உன்னை பலத்துக்கு உன்னை நாடுகிறேன்.

உ. நீங்கள் [2]வாயுக்கள், நீங்கள் அருகில் வருபவர்கள். ங. [3]தேவசவிதா உங்களைச் சிறந்த செயலுக்குத் தூண்டட்டும். ச. இம்சையற்றவர்களே! தேவர்களுக்குப் பாகத்தைப் பெருக்குங்கள். ரு. பலம் பால் நிறைந்து பிரஜை பெருகி நோய் நீங்கி துன்பம் தளரும் உங்களை எந்தத் திருடனும் தீமை புரிபவனும் சுவாதீனஞ் செய்யாமலிருக்கட்டும். சு. [4]உருத்திரனின் ஆயுதம் உங்களை நீங்கட்டும். எ. [5]நீங்கள் [6]இப் பசுபதியில் நிறைந்து நிலையா யிருங்கள்.

---

* தரிசமென்றால் அமாவாசைக்குப் பெயர். அமாவாசையில் சூரியன் சந்திரனை விழுங்குகிறான். அதைப்போல் சக்தியை அல்லது சத்துருவை தன்னில் ஐக்கியஞ் செய்து கொள்ள சாதகங்களாயிருக்குஞ் செயல்களுக்கு தரிசயக்ஞங்களெனச் சொல்லலாம். பௌர்ணிமை யக்ஞ மென்றால் பூரணமான பலத்தைப் பெறுவதற்குத் துணைபுரியுஞ் செயல்கள். இவற்றின் மந்திரங்களை முதல் கங அநுவாகங்களில் காணலாம்.

1 மனத்தை 2 புலன்கள் 3 அறிவு 4 துக்கத்தின் 5 பிராணன்கள் 6 தேகத்தில்.

அ. நீ [1]யஜமானன் [2]பசுக்களைப் பாது காக்கவும். க. க. க.

---

## அநுவாகம் உ.

### தருப்பை*

க. நீ யக்ஞச் செல்வமாகும். உ. அரக்கர்கள் [3]எரிக்கப்பட்டுளார்கள். அதியாயர்கள் சுடப்பட்டுளார்கள்.

ந. [4]வேதி, [5]மநுவாலழைக்கப்பட்டு [6]சுவதாவால் செம்மையாகி யக்ஞத் [7]தர்ப்பைக்கு வந்துளான். இங்கு கவிகள் முன்புறத்தினின்று இன்பமான புல்லை சுமக்கிறார்கள்.

ச. நீ தேவர்களால் தூண்டப்படுகிறாய்.

ரு. மழையால் வளரச் செய்யப்பட்டுளாய்.

சு. தேவப் [8]புல்லே! நான் உன்னை குறுக்குநெடுக்கில் தட்டாமலிருக்கட்டும். எ. நான் உன் [9]கணுக்களை அடிக்கட்டும். அ. நான் உன்னை அறுப்பதால் நீ துன்பத்துக்காளாக வேண்டாம். கூ. தேவப்புல்லே! நீ நூறு முளைகளுடன் எழுச்சியாகவும், நாங்கள் ஆயிரங் கிளைகளுடன் எழுச்சியாக வேண்டும். கo. நீ [10]பூமியின் பரிசத்தினின்று எம்மைப் பாதுகாக்கவும்.

கக. நான் உன்னை நல்ல சகாவுடன் சேர்க்கிறேன். கஉ. நீ [11]அதிதி கச்சையாகும், நீ [12]இந்திராணி கயிறுகும். கந. [13]பூஷணன் என்னை ஏற்றும் [14]பந்தத்தை

---

க. கருத்து. சவிதாவை நாடவும்.

* பக்குவஞ் செய்யப்பட்ட ஸ்தானம்.

1 ஆத்மாவின் 2 புலன்களை 3 எரிக்கவும் 4 போர்க்களம் 5 அறிவால் 6 பலத்தால் 7 சமர் ஸ்தானத்துக்கு 8 வளர்ச்சியே 9 கோணல்களை 10 புவியில் சாயாமலிருக்க 11 நிலத்தின் 12 பலம் 13 புஷ்டி 14 படிக்கட்டை.

நான் கட்டட்டும். ௧௪. நான் உன்னை 1இந்திரன் கைகளால் உயரப் பற்றுகிறேன். நான் உன்னை பிருகஸ்பதி தலையால் பற்றுகிறேன். ௧௫. நீ விரியும் வான வெளியில் செல்லவும். ௧௬. நீ தேவர்களுக்குச் செல்லுகின்றாய். ௧. ௧. ௨.

---

## அநுவாகம் ௩.

### கோஷம்

௧. 2நீங்கள் தேவயக்ஞம், திவ்யமானச் செயலுக்கும் புனிதமாயிருங்கள்.

௨. 3நீ 4மாதரிசுவனலாகும். ௩. நீ சோதியாகும், நீ சகமாகும். ௪. நீ பரமதரிப்புடன் விசுவந்தரிப்பவன். ௫. நீ நிலையா யிருக்கவும். இங்குமங்குமாகாதே! ௬. நீ நூறு தாரை வசுக்களின் புனிதன், ஆயிரம் தாரை வசுக்களின் புனிதன். ௭. அனு அளிக்கப்பட்டுளது. ௮. பிந்து பக்குவமாயுள. ௮-௯. பெரிய நிலயமான அக்கினிக்கு, வானம் வையகத்துக்கு சுவாஹா!

(௧௦) 5இவளே விசுவாயுசு, இவளே எங்குஞ் சூழ்பவள், இவளே விசுவஞ் செய்பவள்.

௧௧. தேன் நிறையும் அலைவீசும் சத்தியமநுசரிக்கும், இலாபத்துக்கு இனிமையாகும் 6நீங்கள் ஒன்று சேருங்கள்.

---

௨. கருத்து—நீ எச்செயலுக்கும் அதன் மூல ஸ்தானத்தைப் பக்குவஞ் செய்துகொள்ளவும்.

1 பலத்தின் சாதனங்களால். 2 புலன்களே! நீங்கள் 3 மனிதனே! நீ 4 துரிதானல் 5 போர் கோஷம் 6 மாணிடர்களான நீங்கள்.

கஉ. நான் [1]உன்னை [2]சோமனுடன் [3]இந்திரன் தயிர்களுக்காகக் கடைகிறேன். கரு. [4]விஷ்ணுவே! [5]ஹவ்யத்தைக் காக்கவும். க. க. ரு.

---

## அநுவாகம் ச.

### சாதனம்

க. நான் [6]உங்களை செயலுக்கு நாடுகிறேன். நான் தேவர்களுக்காக திடமுடனாக வேண்டும்.

உ. நான் உன்னை திவ்யத்துக்கு நாடுகிறேன்.

ரு. அரக்கர்கள் [7]எரிக்கப்பட்டுளார்கள். அநியாயர்கள் அனலாக்கப்பட்டுளார்கள்.

ச. நீ [8]நுகத்தடியாகும். ரு. துக்க மளிப்பவனுக்குத் துன்பமளிக்கவும். நாங்கள் எவனுக்குத் துன்பமளிப்போமோ அவனுக்கு நீ துக்க மளிக்கவும். சு. நீ தேவ திவ்ய காரணன். அதி நிறைபவன், அதி அநுகூலன், நீ சுமந்து செல்பவர் சிரேஷ்டன், தேவ திட அழைப்பன். எ. நீ தயங்கா ஹவிஷுவகிப்பவன்.

அ. நீ [9]நிலையா யிருக்கவும், இங்கு மங்கு மாகாதே. கூ. நான் மித்திரக் கண்ணால் உன்னைக் காண்கிறேன். க0. நீ அஞ்சாதே! அலறாதே! நான் உன்னை துன்பஞ் செய்யாம லாகவேண்டும். கக. நீ வாயுவுக்கு விஸ்தாரமாகவும்.

---

ரு. கருத்து—சமருக்கும் அல்லது எச்செயலின் ஆரம்பத்துக்கு கோஷஞ் செய்வது உதவியையும் உற்சாகத்தையு மளிக்கும்.

1 போர் கோஷத்தை 2 மனத்துடன் 3 மந்திரத்தின் திடங்களுக்கு 4 வியாபகனே 5 வீரனை 6 சாதனங்கள் 7 அரக்கர்களை எரிக்கவும் 8 மனிதனுன நீ 9 நட்புக் கண்ணால்.

கஉ. நான் [1]அக்கினி, [2]அக்கினி சோமனுக்குப், பிரியமான [3]உன்னை சவிதாத தூண்டுதலில், அசுவினி கைகளுடன், பூஷணை புஜங்களால் [4]அளிக்கிறேன். கங. நான் எமது திவ்ய யக்ஞசாதனத்தைப் பற்றுகிறேன். கச. நான் உன்னை செல்வத்துக்கு நாடுகிறேன். நான் செல்வ சூன்யம் நாடுவதில்லை. நான் [5]வைசுவாநர ஒளி சோதியைப் பார்க்கவேண்டும். கரு. [6]கதவுள்ளவர்கள் சுவர்கம் சகத்தில் திரமாயிருக்கவேண்டும். கசு. நீ விரியும் வெளியில் செல்லவும். கஎ. நான் [7]உன்னை [8]அதிதி நடுவில் வைக்கிறேன்.

கஅ. [9]அக்கினியே! நீ [10]ஹவ்யத்தைப் பாதுகாக்கவும். க. க. ச.

---

## அநுவாகம் ரு.

### பக்குவன்.

க. தேவ சவிதா சூரிய ஒளி கிரணங்களுடன் குறை கழியுங் குணத்தால் உன்னைச் சுத்தமாக்கட்டும்.

உ. முதன்மையாய் முன்னணியில் செல்லும் திவ்யமான [11]சலங்களே! நீங்கள் இவ் [12]யக்ஞத்தை முன் அழைத்துச் செல்லுங்கள். யக்ஞத்தலைவனை முன்புறம் ஸ்தாபியுங்கள். ங. இந்திரன் உங்களை [13]விருத்திர சண்டைக்காகத் தெரிந்தெடுக்கிறான். நீங்கள் இந்திரனை விருத்

---

ச. கருத்து—அகப்புற சாதனமுடன் நீ முன்செல்லவும்.

1 அறிவு 2 உறுதியான சத்துக்கு 3 சாதனத்தை 4 பயன் செய்கிறேன் 5 மனிதகோடிகளின் 6 சத்தியத்துக்குத் தயாராயுள்ளவர்கள் 7 சாதனத்தை 8 புவி நடுவில் 9 மனிதனே 10 சாதனத்தை 11 வச்சிராயுதங்களே 12 சமரை 13 அசுர சண்டைக்கு.

திரப்போருக்கு [1]வரிக்கிறீர்கள். ச. நீங்கள் [2]தெளிக்கப்பட்டுளீர்கள். ரு. நான் உங்களை [3]அக்கினி, அக்கினி [4]சோமனுக்கு அநுகூலமாய்த் தெளிக்கிறேன்.

சு. நீங்கள் தேவாயக்ஞம் திவ்யச் செயலுக்குத் தூய்மையா யிருங்கள்.

எ. இராட்சதர்கள் உதறப்பட்டுளார்கள், துஷ்டர்கள் தள்ளப்பட்டுளார்கள்.

அ. நீ [5]அதிதி [6]சர்மமாகும். புவி உன்னை அறியட்டும்.

கூ. நீ [7]வனஸ்பதி [8]பலகையாகும், உன்னை அதிதி சர்மம் அறியட்டும். க0. நீ அக்கினி தேகமாகும், வாக்கை விடுவிப்பவன். கக. நான் உன்னை தேவ சந்தோஷத்துக்குப் பற்றுகிறேன். கஉ. நீ வனஸ்பதி இணையும் ஆயுதமாகும். கங. நீ உன் நன்முயற்சியால் இவ்வவிப்பை தேவர்களுக்குத் திவ்யமாக்கவும்.

கச. நீ உணவு எனச் சொல்லவும்; பலம் எனக்கூறவும். கரு. நீங்கள் ஓங்கும் மொழிகளைச் சொல்லுங்கள். கசு. நாங்கள் போரில் ஜய முடனாகவேண்டும்.

கஎ. மழையால் நீ பெருகியுளாய். கஅ. எது மழையால் மேன்மையாகின்றதோ அது உன்னை அறியட்டும்.

ககூ. இராட்சதர்கள் தூய்மை யாக்கப்பட்டுள்ளார்கள்; தீமை புரிபவர்கள் தள்ளப்பட்டுள்ளார்கள்.

உ0. நீ இராட்சதர் பங்காகும்.

---

1 அழைக்கிறீர்கள் 2 ஸ்தாபிக்கப்பட்டுளீர்கள். 3 ஆயுதம் 4 சாமகிரியைக்கு. 5 நிலம், 6 சந்தோஷம், 7 இடிமுழக்கம் 8 சாதகன்.

உக. வாயு [1]உங்களைத் தனிமையாக்கட்டும். உஉ. [2]பொன்கை சவிதா [3]உங்களைப் பற்றட்டும். க. க. ரு.

---

## அநுவாகம் சு.

### யக்ஞம்

க. அரக்கர்கள் நீக்கப்பட்டுளார்கள்; அசுரர்கள் அகற்றப்பட்டுளார்கள்.

உ. நீ அதிதி சர்மமாகும், நிலம் உன்னை அறியட்டும். ங. நீ வானந் தாங்குபவன், [4]அதிதி சர்மம் உன்னை அறியட்டும். ச. நீ நிலையான யக்ஞமாகும். வாஜுதாரன் உன்னை அறியட்டும். ரு. நீ நிலைப்பொருளாகும், நிலையன் உன்னை அறியட்டும். சு. நான் உன்னை சவிதாத் தூண்டுதலில் [5]அசுவினி கைகளால் பூஷண புஜங்களுடன் உயரப் பொழிகிறேன். எ. நீ தூண்டுபவன், நீ தேவர்களைத் தூண்டவும். அ. நான் உன்னைப் பிராணனுக்கு நான் உன்னை அபானனுக்கு நான் உன்னை வியானனுக்கு நாடுகிறேன். கூ. ஆயுசு வரை நான் விஸ்தரிக்கிறேன்.

கo. பொன் கை [6]சவிதா உன்னைப் பற்றட்டும்.

---

## அநுவாகம் எ.

### அக்கினி

க. நீ வீரனாகும், பிரமத்தை எமக்களிக்கவும். உ. அக்கினியே! பச்சைப்பொருள் புசிக்கும்—புன்மை—

---

ரு. கருத்து—நீங்கள் பக்குவ புருஷர்களாக வேண்டும்.

சு. கருத்து—யக்ஞம் பற்று.

1 உங்கள் புன்மைகளை 2 சோதி சாதக யறிவு 3 உன்னையும் உன் நண்பர்களையும் 4 புவியுலுள்ளவன் 5 சிகித்சா சாதனங்களால் 6 சித்தம்.

யனலை யோட்டவும், பஸ்மம் புசிப்பதை பிரிக்கவும். தேவர் யக்ஞஞ் செய்யு மனலை இங்கு கொண்டுவரவும். ௩. இராட்சதர்கள்; எரிக்கப்பட்டுளார்கள். தீமை புரிபவர்கள் சுடப்பட்டுள்ளார்கள். ௪. நீ நிலையன், நீ நிலத்தை நிலையாக்கவும், ஆயுளை நிலையாக்கவும், பிரசையை நிலையாக்கவும். சஜாதார்களை இந்த யஜமானனுக்குக் கீழாக்கவும். ரு. நீ தாங்குபவன், வானத்தைத் திரமாக்கவும். பிராணன் அபானனைத் திரமாக்கவும். சஜாதர்களை யஜமானனுக்குக் கீழாக்கவும்.

சா. நீ தாங்குபவன், சோதியைத் திரமாக்கவும், கண்ணைத் திரமாக்கவும், செவியைத் திரமாக்கவும், [1]சஜாதர்களை இந்த யஜமானனுக்குக் கீழாக்கவும். எ. நீ தாங்குபவன், திசைகளைத் திரமாக்கவும், தேகத்தைத் திரமாக்கவும், பிரஜையைத் திரமாக்கவும், சஜாதர்களை யஜமானனுக்குக் கீழாக்குங்கள்.

அ. நீங்கள் குவிப்பவர்கள், பிரஜையை இவனுக்குக் கொண்டு வாருங்கள், செல்வத்தை அவனுக்குக் கொண்டு வாருங்கள், சஜாதர்களை யஜமானனுக்குக் கீழாக்குங்கள்.

கூ. [2]பிருகு ஆங்கிரசர் தவத்துடன் நீங்கள் தவமுடனுருகுங்கள்.

க0. அறிஞர் [3]யக்ஞத்துக்காகச் சேர்க்குங் [4]கபாலங்கள் பூஷணப் பாதுகாப்பிலாகும். இந்திரன் வாயு அவற்றை [5]விடுதலை யாக்கட்டும். க. க. எ.

---

எ. கருத்து—அக்கினி மகிமை.

1 சக-சனங்களை 2 அறிவுபிராணன் 3 சமர் ஜயத்துக்காக 4 எதிரி சிரங்கள் 5 நீக்கட்டும்

## அநுவாகம் அ.

### விருப்பம்.

க. நான் ஒருமையாய் ஊற்றுகிறேன். உ. [1]செடி [2]ரசத்துடன் சலம் சலத்தோடு சேர்ந்துள. ங. [3]நீங்கள் செல்வங்களை சகங்களுடன், இதத்தோடு இனிமைகளைச் சேருங்கள். ச. நீங்கள் சலத்தினின்று பிறந்தீர்கள்; நீங்கள் சலத்துடன் சேருங்கள்.

ரு. நான் [4]உன்னை சந்ததிக்குச் சேர்க்கிறேன். சு. நான் உன்னை அக்கினி, அக்கினி—சோமனுக்குச்—சேர்க்கிறேன். எ. நீ [5]மக்களின் தலைவன்.

அ. நீ விசுவாயுசான யக்ஞமாகும். கூ. நீ விரிந்து விஸ்தாரமாகவும். க0. யக்ஞத் தலைவன் விரிந்து பரவட்டும். நீ [6]சர்மத்தைப் பற்றவும்.

கக. இராட்சதர்கள் [7]தடுக்கப்பட்டுளார்கள், தீமை புரிபவர்கள் கழிக்கப்பட்டுளார்கள். கஉ. தேவ சவிதா உன்னை உயர் வெளியில் உணர்வுடனுக்கட்டும். கங. அக்கினி உன் காயத்தை அதி சூடாக்கவேண்டாம்.

கச. [8]அக்கினியே! நீ [9]ஹவ்யத்தைப் பாதுகாக்கவும். கரு. நீ எமது பிரமத்துடன் சேரவும். கசு. [10]ஏகதனுக்கு சுவாஹா! [11]துவிதனுக்கு சுவாஹா! [12]திரிதனுக்கு [13]சுவாஹா! க. க. அ.

---

அ. கருத்து—விருப்பம் நிறையும் யக்ஞத் தலைவனுக்குபதேசம்.

1 சத்துரு காயம் 2 உதிரம் 3 மனிதர்களான நீங்கள் 4 போர்த்தலைவனை 5 அசுரனின் 6 சகத்தை 7 தடுக்கவும் 8 ஆயுதமே 9 சேனையை 10, 11, 12 அளித்துக் காத்து மழிப்பவனுக்கு 13 வாழி.

## அநுவாகம் ௬.

### கத்தி

க. நான் 1உன்னைப் பற்றுகிறேன். உ. நீ ஆயிரம் ஈட்டி நூறு வாள்களுள்ள இந்திரனின் வலது கையாகும். ௩. நீ கூறிய வாளின் வீச்சாகும்.

௪. 2புவியே! எங்கு 3தேவர்களுக்கு 4யக்ஞஞ் செய்யப்படுகிறதோ அங்கு உன் செடியின் 5மூலத்தை நான் இம்சிக்காமலாகட்டும். ௫. 6அரரு புவியினின்று கொல்லப்பட்டுளான்.

௬. 7நீ பசுக்கூட்டத்துக்குச் செல்லவும்.

௭. உனக்கு சோதி பொழியட்டும். தேவ சவிதாவே! எங்களை வெறுப்பவனையும், நாங்கள் வெறுப்பவனையும் நூறு விலங்குகளால் வெகு தூரத்தில் கட்டவும். அங்கும் அவனை விடுவிக்காதே. ௯. அரரு யக்ஞ நிலய புவியினின்று கொல்லப்பட்டுளான். க0. நீ பசுக்கூட்டத்துக்குச் செல்லவும்.

கக. உனக்கு சோதி பொழியட்டும்.

கஉ. தேவ சவிதாவே! எங்களை வெறுப்பவனை நாங்கள் வெறுப்பவனை நூறு பாசங்களால் வெகு தூரத்தில் கட்டவும். அங்கும் அவனை விடுவிக்கவேண்டாம். க௩. தேவர்களுக்கு யக்ஞஞ் செய்யாத அரரு புவியினின்று கொல்லப் ~~பட்~~டுளான். க௪. நீ பசுக் கூட்டத்துக்குச் செல்லவும். க௫. சோதி உனக்குப் பொழியட்டும்.

க௬. தேவ சவிதாவே! எங்களை வெறுப்பவனை, நாங்கள் வெறுப்பவனை, நீ நூறு விலங்குகளால் வெகு

---

1 கத்தியை 2 புவியிலுள்ளவனே 3 நல்லவர்களுக்கு 4 நன்மை 5 சந்ததி மூலத்தை 6 அரக்கன் 7 மனிதன்.

தூரத்தில் கட்டவும், அங்கு அவனை விடுவிக்காதே!
கஎ. ஆரு உனக்காக வானத்திலேற வேண்டாம்.

கஅ. [1]வசுக்கள் உன்னை காயத்தில் [2]சந்தசால் பற்றட்டும். [3]உருத்திரர்கள் உன்னைத் திருஷ்டுப் சந்தசால் பற்றட்டும். ககூ. [4]ஆதித்தியர்கள் உன்னைச் சகதி சந்தசால் பற்றட்டும். அறிஞர்கள், செயலை சவிதாத் தூண்டுதலில் செய்கிறார்கள். உ௦. நீ [5]ருதமாகும். நீ ருத நிலயம், நீ ருதப் புகழாகும். உக. நீ தரிப்பவன், நீ சுவயந்தரிப்பவன். உஉ. நீவிரிபவன். நீ செல்வன். உங. மிக்கப் புகழுள்ளவனே! தீரர்கள் கடுஞ் சத்துரு நழுவுவதற்கு முன்னமே [6]சந்திரனில் சகத்தை ஸ்தாபித்து குவியும் இன்பங்களுடன் அதை தரித்து யக்ஞ வழி காட்டியாய் உலகத்தை பயன் செய்துளார்கள். க. க. கூ.

---

## அநுவாகம் க௦.

### சப்தம்

க. இராட்சதர்கள் [7]எரிக்கப்பட்டுளார்கள். தீமை புரிபவர்கள் தணலிலாக்கப்பட்டுளார்கள். உ. நான் [8]உங்களை கூறிய அக்கினி சுடரோடு எரிக்கிறேன்.

ங. நான் கோசாலையை நாசஞ் செய்யவேண்டாம். சத்துரு ஜயிக்கும் சக்தியுள்ள [9]உன்னை நான் சுத்தமாக் குகிறேன். ச. நான் கண் காது காயம் பேச்சு பிரஜை பிராணன் இவற்றை நான் நாசஞ்செய்யவேண்டாம். சத்

---

கூ. கருத்து — தீரர் செயல்.

1 பொருள்கள் 2 சக்தியால் 3 கோபிஷ்டர்களை 4 ஞானிகள். 5 சத்தியம் 6 சந்தோஷத்தில் 7 எரிக்கவும் 8 அசுரர்களை 9 பிராணனை.

துரு ஜயிக்கும் சக்தியுள்ள உன்னை நான் சுத்தமாக்குகிறேன். ரு. நான் தயை பிரஜை செல்வம் நாடி அக்கினி விரதமாகி நற்செயலுக்கு என் தேகத்தைக் கச்சைக் கட்டிக்கொள்கிறேன்.

சு. நாங்கள் சுகப்பிரஜை சீல புருஷர்களுடன் உன்னிடம் வந்துளோம். அக்கினியே! இம்சையற்று சத்துரு ஏமாற்றும் உன்னிடம், ஏமாராமலுள்ள நாங்கள் வந்துளோம். எ. நான் பிரிய சவிதாவால் கட்டப்பட்டுள்ள [1]இவ்வருணக் கட்டை யவிழ்க்கிறேன். [2]தாது சன்ம நிலயத்தில், சுகிருத ஸ்தானத்தில் எனக்கு இன்பமாக என் பதியுடன் செய்துகொள்ளுகிறேன். அ. அக்கினியே! நான் ஆயுசு, வர்சசுடன் மறுபடியும் [3]புருஷனுடன் [4]மனைவியாய்ச் சேர்ந்துளேன். என் தேகத்துடன் ஆத்மா தோயட்டும். கூ. நீ பெரியவைகளின் பாலாகும், ஔஷதிகளின் இரசமாகும். க்ஷயமாகாமலுள்ள உன்னை அடைய நான் அளிக்கிறேன். க0. நீ பெரியவைகளின் பாலாகும். நீ ஔஷதிகளின் இரசமாகும். ஏமாற்றமில்லாத கண்ணால் நான் உன்னை நற்பிரஜைக்காகப் பார்க்கிறேன்.

கக. [5]நீ தேஜசாகும்; நீ தேஜஸைத் தொடரவும். [6]அக்கினி உன் தேஜஸை கிரகிக்காமலாக வேண்டும். கஉ. நீ [7]அக்கினி நாக்காகும். தேவ திவ்யன் கங. நீ ஒவ்வொரு தேவர், பிரமம், யக்ஞத்துக்கு நன்மையாகவும், கச. நீ சுக்கிரன், தேஜசு, சோதியாகும்.

கரு. தேவ சவிதா, குறைவில்லா குணத்தால் சூரிய ஒளி கிரணங்களால் உங்களைச் சுத்தமாக்கட்டும்.

---

1 மிருத்யு பந்தத்தை 2 சிருட்டியின் மூலஸ்தானத்தை 3தலைவனுடன் 4சகாவாக 5மனிதனே நீ 6தீயனல் 7சக்தியின்.

கசு. நான் ஒவ்வொரு தேவர் பிரமம் [1]யக்ஞத்துக்கு சுக்கிரத்தில் சுக்கிரமான [2]உன்னைப் பற்றுகிறேன். கஎ. நான் ஒவ்வொரு தேவர் பிரமம் யக்ஞத்துக்கு ஒளியில் ஒளியான சோதியில் சோதியான உன்னைப் பற்றுகிறேன். க. க. கo.

---

## அநுவாகம் கக.

### கோட்டை

க. நீ [3]வனஸ்பதியில் வசிக்கும் [4]கிருஷ்ணனுகும், [5]அக்னிக்கு உன்னை சுவாஹா! உ. நீ [6]வேதியாகும். தர்ப்பைகளுக்கு உன்னை சுவாஹா! ந. நீ [7]தர்ப்பைகளாகும், சாதனங்களுக்கு உன்னை சுவாஹா! ச. சோதி வானத்துக்கு உன்னை சுவாஹா!

ரு. நீ [8]பிதுருக்களுக்கு சுவதா வாகவும்; நீ தர்ப்பாசனர்களுக்குத் திடமாகவும். சு. புவியில் நீங்கள் பலமுடன் செல்லுங்கள், எ. நீ விஷ்ணுவின் ரோமபந்தமாகும்.

அ. நான் தேவர்களுக்கு நல் நிலய மளித்து உன்னைக் கம்பளம் போல் மிருதுவாய்ச் சாய்க்கிறேன்.

கூ. நீ கந்தர்வன், விசுவாவசு, நீ யக்ஞ கர்த்தாவுக்கு ஒவ்வொரு எதிர்ப்பின் வேலியாகும், துதிக்கப்படுபவன் துதிப்பதற்கருகன். கo. நீ இந்திரன் வலது கையாகும், நீ யஜமானன் காப்பு. துதிக்கப்படுபவன், துதிப்பதற்கருகன். கக. மித்திரவருணன் திர தர்மத்துடன் உன்னை

---

**கo. க்ருத்து—பெரிய செயல்களைச் செய்து முடிக்க சபதஞ் செய்துகொள்வது சாதகமளிக்கும்.**

1 சமருக்கு 2 சவிதாவை 3 மேகத்தில் 4 மின்னல் 5 முழக்கத்துக்கு 6 ஸ்தானம 7 நிலயங்கள் 8 அறிஞர்களுக்கு.

வடக்கில் சுற்றிச் சாய்க்கட்டும். நீ யஜமானனின் காப்பாகும். நீ துதிக்கப்படுபவன், துதிப்பதற்கருகன். கஉ. கிழக்கில் சூரியன் எல்லாத் தீமையினின்றும் உன்னைப் பாதுகாக்கட்டும்.

கங. அறிஞனே! அக்கினியே! நாங்கள் யக்ஞத்தில் பெரிய சூரிய சோதியான உன்னை எழுச்சியாக்கவேண்டும். கச. நீங்கள் சன ஸ்தம்பங்களாகும். கரு. நீங்கள் வசு ருத்திர ஆதித்தியர்களது நிலயத்தில் அமருங்கள். கசு. நீ ஜுஹூ, உபபிருதன் துருவன். நீ நெய் நாடிபிரிய நிலயத்தில் பிரிய பெயருடன் உட்காரவும். கஎ. இவர்கள் நற்செயல் சகத்தில் சாய்ந்துளார்கள். கஅ. விஷ்ணுவே! அவர்களைக் காக்கவும்.

ககூ. நீ யக்ஞத்தைப் பாதுகாக்கவும், யக்ஞத் தலைவனைக் காக்கவும், யக்ஞம் நடத்தும் என்னைக் காக்கவும். க. க. கக.

---

## அநுவாகம் கஉ.

### நோக்கம்

க. நீ புவனமாகும். நீ வியாபகமாகவும்.

உ. அக்கினியே! யக்ஞஞ் செய்பவன் இந்த நமஸ்காரத்தை யளிக்கிறான்.

ங. ஜுஹூவே! நீ இங்கு வரவும். [1]அக்கினி உன்னை தேவ யக்ஞத்துக்காக அழைக்கிறான். ச. உபப்பிருதனே! தேவ சவிதா உன்னை தேவ யக்ஞத்துக்கு

---

கக. கருத்து—எதற்கும் பாதுகாப்பளிக்கும் கோட்டையவசியம்.

1 ஈசனே





2. சூரியன் (பூனா)



Copyright Bombay Museum

3. வருணன்

அழைக்கிறான். ரு. [1]அக்கினியே! [2]விஷ்ணுவே! நான் உங்களில் மிதிக்காமலிருக்கட்டும். சு. நீங்கள் [3]பிரிந்து விடுங்கள், என்னை எரிக்கவேண்டாம். எ. உலகஞ்செய் பவர்களே! எனக்கு ஒரு உலகத்தைச் செய்யுங்கள்.

அ. நீ விஷ்ணு ஸ்தானமாகும். கூ. அதனால் இந்திரன் பெரிய செயல்களைச் செய்துளான். க௦. அகண்டமாய் அறியாமலுள்ளவன் வானத்தைப்பற்றியுளான். கக. யக் ஞத் தலைவனின் யக்ஞம் அமைதியாயுளது. இந்திர னுக்கு அளிக்கப் பட்டுளது சுவாஹா! கஉ. பெரிய சோதி யான நீ சாதனமே! என்னைக் காக்கவும். [4]துஸ்சரிதத்தி னின்று நீக்கி சுஸ்சரிதத்தில் என்னை வைக்கவும்.

கஙூ. நீ மக்களின் தலையாகும்; நீ சோதியுடன் சேர்ந்து சோதியாகவும். க. க. கஉ.

---

## அநுவாகம் கங.

### ஜயகாப்பு

க. [5]அவன் என்னை பலோதயப் பெருமையோடு உயரத் தூக்கியுளான். பிறகு இந்திரன் என் சத்துருக் களைச் சோர்வினால் கீழ்ச் சாய்த்துளான். உ. தேவர் கள் என் [6]பிரமத்தைப் பெருக்கி யுளார்கள். அவர்கள் ஏழ்மை [7]தாழ்மையை யுண்டுபண்ணி யுளார்கள். இந்தி ரனே! அக்கினியே! இனி எல்லாப் பக்கங்களிலும் என் சத்துருக்களைச் சிதறடியுங்கள். ங. நான் வசு உருத்திரர் ஆதித்தியர்களுக்கு உன்னை நாடுகிறேன். ச. [8]பறவை பசையுள்ளதை ருசித்து பிரிந்து செல்லட்டும்.

---

கஉ. கருத்து—நீ அறிவுடனாகி முன் செல்லவும்

1 அனலே 2 யக்ஞம் 3 புன்மை செய்வதி லிருந்து 4 தீமையினின்று 5 ஈசன் 6அறிவை 7 பகைவனுக்குத் தாழ் மையை 8சந்தசு.

ரு. நான் பிரசை, [1]அங்கத்தை நாசஞ் செய்யாம லாகவேண்டும்.

சு. [2]சலம் செடி கொடிகளான நீங்கள் பெருகுங் கள். எ. நீங்கள் மருத்துக்களின் சுந்தர குதிரைகள், சோதி செல்லுங்கள். அ. பிறகு [3]எமக்கு [4]மழையைக் கொண்டுவாருங்கள்.

கூ. அக்கினியே! நீ ஆயுசு காப்பன், என் ஆயுசைக் காக்கவும். கo. அக்கினியே! நீகண் காப்பன், என் கண் ணைக் காக்கவும். கக-கஉ. நீ நிலையன். தேவரான அக்கி னியே! [5]பாணிகள் சூழுங்கால் உன்னைச் சுற்றிலுஞ் செய் துகொள்ளும் வேலியை நான், நீ சந்தோஷமாக இங்கு கொண்டு வருகிறேன். அது உன்னிடமிருந்து நீங்கவேண் டாம். கங. [6]இருவரான நீங்கள் தேவ நிலயத்துக்குச் செல்லுங்கள். கச. மகத்தும் மேன்மையுமான நீங்கள் [7]மிகு திகளில் பாகஸ்தர்கள். பிரஸ்தர தேவர்களான நீங்கள் தர்ப்பைகளில் உட்காருங்கள். இங்கு அமர்ந்து இம் மொழி விரும்பி இன்பமாகுங்கள்.

கரு. நான் [8]உன்னை நிச்சய நிலையான அக்கினி ஸ்தானத்தில் நாட்டியுளேன்.

கசு. நல்ல மனமுள்ள நீங்கள் என்னை நல்ல மனத் தில் நல்ல மனத்துக்கு ஸ்தாபியுங்கள். கஎ. நீங்கள் சேர்ப்பில் [9]ஜதை குதிரைகளைக் காருங்கள்.

கஅ. அக்கினியே! இம்சையற்ற ஆயுசுடன் சீத சூன்ய தேகத்தால் வானத்தினின்று என்னைக் காக்கவும். பந்தத்தினின்று காக்கவும். யக்ஞப் பிழையினின்று காக்க

---

1 பிரசனுங்கத்தை 2 மனிதர்களே 3 சாதாரண ஜனங் களுக்கு 4 கருணை மழையை 5 அரக்கர்கள் 6 தேகம் மனம் 7 மகாசனங்களுக்களித்து மிகுதியாயுள்ளவற்றில் 8 ஈசனை 9 காலகாரணங்களேற்றவைகளை.

வும். புன்னுணவினின்று காக்கவும். புன் செயலினின்று காக்கவும். கக. நீ எமது உணவை விஷத்தினின்று காக்வும். இன்பமயமாய் அங்கத்தைச் செய்யவும்.

உ0. சுவாஹா ! தேவ வழி அறியும் நீங்கள் வழி கண்டு வழி செல்லுங்கள்.

உக. மனத்தலைவனே ! நீ இந்த யக்ஞத்தை தேவர்களில் எங்களுக்கு ஸ்தாபிக்கவும். தேவரே ! சுவாஹா! காற்றில் சுவாஹா ! க. க. கந.

[கச-ம் அநுவாகம் பார்க்க]

---

## அநுவாகம் கச.

### யக்ஞங்கள் *

க. அக்கினியே ! இந்திரனே ! நீங்கள் இருவர்களும் அழைக்கப்படுவீர்கள். நீங்கள் இருவர்களும் அளிப்பில் ஆனந்தமாவீர்கள். நீங்கள் உணவு செல்வத்தை யளிப்பவர்கள். நான் உங்கள் இருவர்களை பலம் பெருக அழைக்கிறேன்.

உ. இருவர்களான நீங்கள் குறை மருமகன் மைத்துனனை விட பெருங் குணமுள்ளவர்கள் என நான் கேட்டுளேன். ஆதலால், அக்கினியே ! இந்திரனே ! நான் உங்களுக்கு சோம அளிப்புடன் புதிய ஸ்தோமத்தைச் செய்கிறேன். ந. இந்திரனே ! அக்கினியே ! கக கோட்டைகளின் தலைவர்களான தாசர்களை நீங்கள் ஒரே மூச்சில் சிதறடித்தீர்கள்.

---

கந. கருத்து—ஜயம் பெற்றவுடன் சாய்வதற்காகும் சிந்தனைகளை இங்கு காணலாம்.

* இதற்குக் காம்யேஷ்டி மந்திரங்கள் எனப்பெயர்.

ச. இந்திராக்கினியே! விருத்திரத் துவம்சர்களே! இன்று இப்புனிதம் புலனாகும் ஸ்தோமத்தை இன்பமுடன் அங்கீகரியுங்கள். விரும்புபவர்க்கு வன்மை யளிக்கத் துரிதமாயும் செவிகொடுக்கச் சித்தமுமுள்ள உங்கள் இருவர்களையும் நானழைக்கிறேன்.

ரு. பூஷணனே! வழித் தலைவனே! உன்னை எங்கள் பிரமத்துக்குப் போர் ஜயிக்கும் இரததைப்போல் இணைத்துளோம்.

சு. நான் எல்லா வழித்தலைவனை சொல் திடமுடன் நாடுகிறேன். அவன் அன்பினால் தூரத்தப்பட்டு அர்கனிடஞ் சென்றுளான். அவன் சொர்ண சுகத்தை எமக்களிக்க வேண்டும். பூஷணன் எமது எல்லா அறிவையும் பெருக்க வேண்டும்.

எ. நாங்கள் இதமான நிலத் தலைவனுடன், எங்கள் பசு குதிரைகளை எது போஷிக்கின்றதோ அதை அடையவேண்டும்.

அ. நிலத்தலைவனே! தேன் சுமக்கும் அலையான நீ எங்களுக்குப் பசு கறப்பதுபோல் கறக்கவும், ருதத்தலைவர்கள் நல்ல புனிதத்தை தேன் சிந்தி நெய்போல் எமக்கநுகூலமாக்க வேண்டும்.

கூ. அக்கினியே! எல்லா வழிகளையு மறியும் நீ எம்மை சீல வழியால் செல்வத்துக் கழைத்துச் செல்லவும். திரியச் செய்யும் தீமையை நீ எங்களிடமிருந்து தளர்த்தவும். நாங்கள் உமக்கு மேலான மரியாதையைச் செய்வோம்.

க0. எதைச்செய்ய சக்தியுண்டோ அதைச்செய்ய நாங்கள் தேவ வழிக்கு வந்துளோம். அறிஞனை அக்கினி யக்ஞஞ் செய்யட்டும். அவன் ஹோதாவாகட்டும். அவன் ருதுக்கள் யக்ஞங்களை ஒழுங்காக்ககட்டும்.

கக. சிலஞ் சுமப்பது அக்கினிக்காகும், ஒளிச் செல்வனே! கம்பீரமாய் கானஞ்செய்யவும். செல்வம் உன்னிடமிருந்து சக்தி உன்னிடமிருந்து சகம்போல் செம்மையாகின்றன.

கஉ. அக்கினியே! நீ எங்களை உனது பிரியச்செயலால் மறுபடியும் எல்லாப் புன்மையினின்று நீக்கவும். நீ பரந்து பலமான பெருங்கோட்டையாய் எங்களுக்காகவும். எங்கள் மக்கள் சந்ததிக்கு சுகஞ் செல்வமாகவும். கங. அக்கினியே! நீ தேவர் மனிதர்களில் விரதத்தின் காப்பளுரும். யக்ஞத்தில் அழைப்பதற்கானவன். கச. தேவர்களே! அறிஞர்களான உங்கள் விரதங்களை நாங்கள் அறியாமையால் பங்கஞ் செய்தால் உங்களைத் திருப்தியாக்கும், ருதங்களையறியும் அக்கினி, அவற்றைப் புனிதமாக்கட்டும். ரு. க. கச.

---

## அநுவாகம் கரு

### சோமயாகம்

### தீட்சை.

க. சலம் உன்னைப் புகழ் ஆயுசு நீண்ட சீவனுக்கு நனைக்கட்டும். உ. 1செடியே! நீ அவனைக் காக்கவும். ந. 2கோடாரியே! நீ அவனை இம்சிக்கவேண்டாம்.

ச. நான் தேவர்களுக்குத் தாழ்ந்து 3உன்னை நறுக்குகிறேன்.

ரு. நான் ஜயத்துடன் தீர்க்காயுளை யடையவேண்டும்.

சு. சலமானத் தாய்மார்கள் எங்களைச் சுத்தமாக்கட்டும். எங்கள் 4நெய்யைச் சுத்தஞ் செய்பவர்கள் நெய்

---

கச. கருத்து—தோத்திர மொழிகள்.

1 அன்னையே! 2 சாதகமே! 3 என் காயத்தின் கரிகுணத்தை 4 தேசசை.

யால் எங்களைச் சுத்தமாக்கட்டும். அவை எல்லா அசுத்தத்தையும் எம்மிடமிருந்து நீக்கட்டும்.

நான் சுத்தச் சோதியுடன் இச் சலத்தினின்று சீலமாகவேண்டும்.

எ. நீ சோமனின் தேகமாகும், என் தேகத்தைக் காக்கவும்.

அ. நீ[1] மேன்மைகளின் பாலாகும். நீ வர்சஸளிப்பவன் என்னில் வர்சஸை வைக்கவும்.

கூ. [2]நீ [3]விருத்திரனின் கண்மணியாகும். நீ கண் காப்பவன். , என் கண்ணைக்காக்கவும்.

க0. [4]சித்தபதி உன்னைச் சுத்தஞ் செய்யட்டும். வாக்பதி உன்னைச் சுத்தஞ் செய்யட்டும். தேவ [5]சவிதா குறை சூன்னியப் பவித்திரத்தால் ஒளி சூரிய சோதியுடன் உன்னைச் சுத்தமாக்கட்டும்.

கக. புனிதபதியே! நான் உன் பவித்திரத்தால் எப்பணியுஞ் செய்ய பலமுடனாக என்னைப் புனிதஞ் செய்துகொள்ளுகிறேன்.

கஉ. [6]தேவர்களே! நாங்கள் . சத்திய தார்மிகர்களான உங்களை யக்ஞத்தில் சேர்க்கிறோம்.

கந. புனிதர்களே! தேவர்களே! நீங்கள் விரும்புவதை நாங்கள் கேட்கிறோம்.

கச. நீ[7] இந்திரன், அக்கினி, வானம், நிலம், சலம், ஔஷதிகளாகும். கரு. நீ தீட்சைத் தலைவன். இங்குள்ள என்னை நீ காக்கவும். க. கஉ. க.

---

கரு. கருத்து.—சோமாருகனாக நீங்கள் தீட்சையுடனாகுங்கள். தீட்சை என்பது அகப்புறச் சுத்தியாகும்.

1 தேசளிக்கும் பொருளே! 2 கண் கூர்மையர்க்கும் ஔஷதமே! 3 அசுரனைக் கொல்பவனாகும். 4 மனம் 5 அறிவு 6 திவ்யமானவையே! 7 யக்ஞஸ்தானம்.

## அநுவாகம் கசு.

### தேவஹுகவும்

க. எழுச்சி, சங்கற்பம், அக்கினிக்கு [1]சுவாஹா! [2]மேதை, மனது, அக்கினிக்கு சுவாஹா! தீட்சை, தவம் அக்கினிக்கு சுவாஹா! [3]சரஸ்வதி, [4]பூஷணன், அக்கினிக்கு சுவாஹா!

உ. திவ்யமாய் விரிந்து எங்கும் சுகமளிக்கும் நீங்கள் [5]சலங்களாகும். சோதி, சகம் விரியும் வானம், நீங்களாகும், [6]பிருஹஸ்பதி எங்கள் [7]ஹவிஷால் இன்பமாகட்டும். சுவாஹா!

ஈ. ஒவ்வொரு மனிதனும், முன் அழைத்துச் செல்லும் [8]தேவ நட்பை நாடட்டும். ஒவ்வொருவனும் செல்வத்துக்கு[9] நாடுகிறான். அவன் புஷ்டியை அடைய புகழைப் போற்றட்டும். சுவாஹா!

ச. நீங்கள் ரிக்கு சாமன்களின் கலைகளாகும். நான் உங்களிருவர்களைப் பற்றுகிறேன். நீங்கள் என்னை இந்த யக்ஞ முடிவுவரைக் காக்கவேண்டும்.

ரு. தேவனே! [10]வருணனே! உன்னை நாடுபவனின் பிரமத்தைக் கூர்மையாக்கவும். அவன் திட திவ்ய அறிவைத் தூய்மையாக்கவும். நாங்கள் கஷ்டம் நீக்கும் அக் காப்புக் கப்பலை ஏறவேண்டும்.

சு. நீ[11] அங்கிரசர்களின் பலமாகும், கம்பளம் கனிந்தவன், எனக்கு பலத்தை யளிக்கவும். நீ என்னைக் காக்கவும், என்னை இம்சிக்காதே.

---

1 ஐக்கியமாகவும், 2 அறிவு, 3 மொழி, 4 பூமி, 5 சனங்கள் 6 பெரிய பதி, 7 அளிப்பால், 8 வேதத்தை, 9 இதை, 10 அறிஞனே. 11 வச்சிராயுதன்.

எ. நீ விஷ்ணு காப்பாகும், யஜமானன் காப்பாகும். எனக்குக் காப்பை யளிக்கவும். அ. தாரக [1]நெருப்புச் சுவாலையினின்று நீ என்னைக் காக்கவும் கூ. நீ இந்திரனின் மூல நிலயம். என்னை இம்சிக்காதே.

கO. நான் உழவுக்கு உன்னை, உயரிய தானியங்களுக்கு உன்னை நாடுகிறேன்.

கக. ஓஷதி நல் விளைவுகளுக்கு உன்னை நான் நாடுகிறேன். கஉ. திவ்ய மரமே[2]!—நான் நுழைய நீ சுலப வழியாகும். நேர்மையாகும் நீ, கடைவரை என்னைக் காக்கவும். சுவாஹா!

கந. நான் என் மனத்தால் யக்ஞத்தைப் பற்றுகிறேன். சுவாஹா! சோதி சகத்தினின்று சுவாஹா! விரியும் வானத்தினின்று சுவாஹா! நான் காற்றினின்று யக்ஞத்தைப் பற்றுகிறேன். க. உ. உ.

---

## அநுவாகம் கஎ.

### யக்ஞஸ்தானம்

க. நாங்கள் பிரிய புனித அறிவை இரட்சிப்புக்கு தியானஞ் செய்கிறோம். புகழளித்து எது யக்ஞம் சுமக்குமோ அது எமது விருப்பம்போல் பத்திரமாய் எங்களை நல்ல மார்க்கத்திலாக்க வேண்டும்.

உ. மனம் பிறந்து மனமிணையும், அறிவு மக்களான அறிஞராகும் தேவர்கள் எங்களைப் பாதுகாக்கவேண்டும். அவர்கள் எங்களை இரட்சிக்கவேண்டும். அவர்களுக்கு நமஸ்காரம்; அவர்களுக்கு சுவாஹா!

---

கூ. கருத்து—தீட்சையாகி திவ்ய சுபாவமுடனுகுங்கள்.

1 இராப்பகையினின்று 2 ஆயுதமே.

௩. [1]அக்கினியே! நீ விழித்திருக்கவும். நாங்கள் இன்பமாகட்டும். நீ எங்களைச் செல்வத்துக்கு ரட்சிக்கவும். மறுபடியும் எழுச்சியாக எமக்களிக்கவும். ச. அக்கினியே! நீ தேவர் மனிதர்களில் விரதங் காப்பன். எங்கள் யக்ஞங்களில் அழைக்கப்படுபவன். ௫. சகல தேவர்களான [2]பூஷணன் பொருளுடன் சோமன் செல்வத்துடன் ஒளியளிக்கும் தேவ சவிதா என்னைச் சூழ்ந்துளார்கள்.

௬. சோமனே! அதிகமளிக்கவும், இங்கு அதிகஞ் சுமந்து வரவும்.

எ. பூர்ணஞ் செய்பவன் ஒருபொழுதும் பூர்ணத்தின் பயனைத் தவறுவதில்லை. நான் ஆயுசினின்று பிரிக்கப்பட வேண்டாம். அ. நீ பொன்னாகும், என் போகத்துக்காகவும், நீ வஸ்திரமாகும் என் போகத்துக்காகவும், நீ பசுவாகும் என் போகத்துக்காகவும். நீ குதிரையாகும், என் போகத்துக்காகவும், நீ ஆடாகும் என் போகத்துக்காகவும், நீ மேஷமாகும் என் போகத்துக்காகவும்.

௯. நான் வாயுவுக்கு உன்னை வருணனுக்கு உன்னை நிர்ருதிக்கு உன்னை உருத்திரனுக்கு உன்னை நாடுகிறேன்.

க0. திவ்யசலமே! நீர் மகனும் ஹவிஷூ சமான ஓடையாயும் பெரும் பூரிப்புடனும் உங்கள் ஓட்டத்தை நான் மிதிக்காமலிருக்கவேண்டும். கக. நான் புவியின் முறியாத இழையில் செல்லவேண்டும்.

கஉ. நீ நன்மையினின்று நலத்துக்குச் செல்லுகிறாய். க௩. பிருகஸ்பதி உன் தலைவனுயிருக்கட்டும். நீ அவனை

1 ஆத்மாவே. 2 புஷ்டியளிப்பவன்

௫—௯ வரை யக்ஞபுருஷன் தேவ உதவியை நாடவேண்டுமெனச் சொல்லும்.

புவியின் உசித நிலயத்தில் விடுவிக்கவும். உன் எல்லா பலத்தோடு பகைவர்களைத் தூரந் துரத்தவும்.

கச. நாங்கள் தேவர்கள் பூர்வம் இன்பமுடனுறும் புவி நிலத்தின்கண் தேவ யக்ஞத்துக்காக வந்துள்ளோம். நாங்கள் ரிக்கு சாமன் யஜுஸோடு செயலை சாதித்து செழிப்பில் செல்வ நிறைவுடன் சந்தோஷமாகவேண்டும். க. உ. ங.

---

## அநுவாகம் கஅ.

### பசு[1]

க. [2]சுத்தனே! [3]இது உன் தேகமாகும். இது உன் வர்சசாகும். நீ அத்துடன் இணையவும். சோதியுடன் சேரவும். உ. நீ பலிஷ்டன், மனத்தால் பற்றப் பட்டு விஷ்ணுக் கநுகூலன்.

ங. நான் உன் எழுச்சியுடன் சத்திய உதய சத்தியோடு என் [4]சொல்லுக்கு ஆதரவை ஜயிக்கவேண்டும். சுவாஹா!

ச. நீ சுக்கிரன், நீ அமுதன். நீ விசுவேதேவ அவியாகும். ரு. நான் சூரியன் கண்ணை ஏறியுளேன். அறிவோடு சுவாலையுடன் அக்கினிக் கண்மணியான நீ, குதிரைகளால் செல்லுங்கால்—நான் உன்னை ஏறியுளேன்.

சு. நீ சித்தம். நீ மனது, நீ தியானம். நீ தட்சிணை நீ யக்ஞ சாதனம். நீ க்ஷத்திரச்சத்தி. நீ இருதலை அதிதி. எ. நாங்கள் போகும்பொழுது வரும்பொழுது நீ எங்களுக்கு ஜயமளிப்பவனாகவும். அ. மித்திரன் உன்னைக் காலால் கட்டட்டும்.

---

கஎ. கருத்து-யக்ஞஸ்தானம் அணுகுவதற்கான மொழிகள்

[1] மொழி, புலன் [2] மொழியே [3] தேஜசு. [4] விருப்பத்துக்கு

௯-க0. பூஷணன், வழிகளை, தலைவனான இந்திரனுக்குப் பாதுகாக்கட்டும். கக. உன் தாய் தந்தை கருப்ப சகோதரன், சபை நண்பன் உன்னை அங்கீகரிக்கட்டும். கஉ. தேவியே! தேவருக்குச் செல்லவும், இந்திரனுக்காக சோமனுக்குச் செல்லவும். கங. உருத்திரன் உன்னை இங்கு மித்திர வழியில் நடத்தட்டும். சுவாஹா! நீ செல்வத்துடன் நண்பனாகும் சோமனோடு திரும்பவும். க. உ. ச.

---

## அநுவாகம் க௯.

### பசு மகிமை[1]

க. நீ[2] வசவி, நீ [3] உருத்திரை, நீ [4] அதிதி, நீ [5] ஆதித்தியன், நீ [6] சுக்கிரன், நீ சந்திரன்.

உ. பிருகஸ்பதி உன்னை இன்பத்தில் இன்ப முடனாக்கட்டும். உருத்திரன் வசுக்களுடன் உனக்கு அநுகூலமாக வேண்டும்.

௩. நான் [7]நெய் நிறையும் உன்னை புவியின் தலை, யக்ஞ ஸ்தானம் அளிப்பு நிலயத்தில் ஊற்றுகிறேன். சுவாஹா!

ச. [8]இராட்சதர்கள், தீமை புரிபவர்கள் சுற்றப்பட்டுளார்கள். இப்படி நான் அரக்கர்கள் கழுத்தை வெட்டுகிறேன். ரு. எங்களை வெறுப்பவனை நாங்கள் வெறுப்பவனை நான் இப்படிக் கழுத்தை வெட்டுகிறேன். சு. எங்களுடன்

---

கஅ. கருத்து—சோமனை உன் மொழி அல்லது புலன்களால் விலைக்கு வாங்கவும்.

1சொல் மகிமை 2 செல்வமான சொல்லே 3 கோபி 4 புவி 5 சூரியன் 6 சோதி 7 தேஜசு 8உமது நோக்கத்துக்கு மாறாகி உமக்குப் நன்மை பிரிப்பவர்களை.

செல்வமாகட்டும், உன்னோடு செல்வமாகட்டும். செல்வம் உனதாக வேண்டும். எ. [1]தேவியே! தேவி [2]ஊர்வசியுடன் பார்க்கவும். அ. [3]துவஷ்டாத் துணையுடன் நான் உன்னிடமிருக்க வேண்டும். ரேதசு மிகுந்து ரேதசு சுமந்து நான் உன் முன்னிலையில் வீரனைக் காணவேண்டும்.

கூ. நான் செல்வமிகுதியினின்று நீங்காம லாக வேண்டும். க. உ. ரு.

---

## அநுவாகம் உ0

### சோமன் பரிமாணம்

க. [4]உன் துளி துளியுடன் தோயட்டும், உன் திடம் திடத்தோடாகட்டும். உன் சுகந்தம் இன்பத்தைப் பெருக்கட்டும். உன் நித்திய இரசம் இன்ப மளிக்கட்டும். நீ வீடு வசிப்பவன். உன் ஆகுதி சோதியாகும்.

உ. நான் இரு உதர நடுவே சத்தியோதயக் கவியான [5]சவிதா தேவரை நாடுகிறேன். பொன்கைக் கவியான கவி, எழுச்சியால் ஒளி சோதி உயரமாய் விளங்குமோ அவன் [6]கையால், [7]சுவர்கத்தை அளந்துளான். ந. நான் பிரசைக்கு [8]உன்னை, பிராணனுக்கு உன்னை நாடுகிறேன். நீ பிரசை யநுசரித்து சுவாசிக்கவும். பிரசை உன்னை அநுசரித்து சுவாசிக்கட்டும். க. உ. சு.

---

கக. கருத்து - யக்ஞ புருஷன் வாக்கைப் பார்த்துச் சொல்லும் மொழிகளையே இவ்வநுவாகத்தில் காணலாம்.

உ0. கருத்து. சோமனை உன் மனத்தாலளந்து அவனை யநுசரியுங்கள்.

1 மொழியே 2 வசிகரத்துடன் 3 சிருஷ்டி. 4 சோமன் 5 மனத்தை 6 சாதனத்தால் 7 சோமனை. 8 சோமனை.

## அநுவாகம் உக.

### சோமன் வாங்கு

க. நான் பலம்மிகுந்து ரசம்பொழிந்து வீரியம் வழியும் சத்துரு ஜயிக்கும் சோமனை [1]உன்னிட மிருந்து வாங்குகிறேன். சுததத்தைச் சுத்தத்தால் சோதியை சோதியால் அமுதத்தை அமுதத்தால் உன்பசுவுக்குச் சமமான சோமனை நான் வாங்குகிறேன்.

உ. எங்களுடன் பொன்னுகட்டும்.

ங. பிரசாபதியின் நிறமான நீ, தவ தேகதாரி. ஆயிரம் போஷணையுடனுன உன் கடைப் பசுவால் நான் சோமனை வாங்குகிறேன்.

ச. நாங்கள் உன்னுடன் ஐக்கியமாகி எங்களில் நீ ஒருமையுடனுகவேண்டும். உன் செல்வம் என்னில் சாசுவதமாகட்டும். ரு. எங்களுடன் சோதியாகட்டும், சோமன் விற்பவனில் இருளாகட்டும்.

சா. நீ நிலையான நட்புகள் செய்து நண்பனுய் எங்களிடம் வரவும். எ. இன்ப இன்பனுய் இனிய இனிமையான [2]இந்திரனின் வலது தொடையில் நுழையவும்.

அ. சுவானனே[3]! பிராஜனே ! அங்காரியே ! பம்பாரியே ! ஹஸ்தனே ! சுஹஸ்தனே, கிருசானுவே ! இதோ உங்கள் சோமனுக்காகப் பிரதியன்கள், அவற்றைப்பாலியுங்கள், அவை உங்களை இம்சிக்க வேண்டாம். க. உ. எ.

---

1 சோமன் விற்பவனிடமிருந்து, புவியிலிருந்து. 2 பலத்தின் சுவாதீன பெருக்கத்தில் 3 அறிஞன், ஒளி வீசுபவன் இருள்அழி, மந்தங்கொல்பவன், சுவாதீனன், நற் சுவாதீனன், அழிப்பவன்-இவர்கள் சோமனைக்காப்பவர்கள்.

உக. கருத்து. யக்ஞ கர்த்தா விற்பவனிட மிருந்து சோமன் வாங்குகிருன். விலை கொடுத்து வாங்கினு லன்றி

# அநுவாகம் உஉ.

## சோம இரதம்

க. நான் அமுதர்களை அநுசரித்து [1]ஆயுசோடு எழுந்துளேன், சுகமான [1]சீவனுடன் எழுந்துளேன். நான் [1]ஓஷதி ரசத்துடன் எழுந்துளேன். நான் [1]பர்ஜன்ய பலத்தோடு எழுந்துளேன். நான் [1]அமிருதர்களோடு நன்றாய் எழுந்துளேன்.

உ. நீ[2] விரியும் வான வழியாய் செல்லவும். ௩. [3]நீ அதிதி நிலயமாகும்.

ச. நீ[4] அதிதியின் ஸ்தானத்திலமரவும். ரு. [5]விருஷபன் வானஞ் சோதியை நிலை [6]செய்துளான். புவியின் விரிவையும் அளந்துளான். எல்லா உலகங்களிலும் இராஜாவாக [7]அவனைச் செய்துளான். இவையெல்லாம் [8]வருணனின் நியமங்கள்.

சு. அவன் வனங்களில் வானத்தை விரித்துளான். அவன் பசுக்களில் பாலை, குதிரைகளில் பலத்தை வைத்துளான். வருணன் அறிவை இருதயத்தில் வைத்துளான். அவன் வீடுகளில் அக்கினியை சோதியில் சூரியனை மலையில் சோமனை 9 வைத்துளான்.

---

ஒருபொருளின் மதிப்பை ஒருவன் அறிவதில்லை. சோமனைக் காக்கும் கந்தர்வர்களுக்கு ஏதாவது யளிக்கவேண்டும். அப்பிரதிபயனை வாக்கு என்னும் பசுவால் கந்தர்வனிடமிருந்து திவ்ய புருஷர்கள் சொமனைப் பெறுகிறார்கள், அல்லது பசுவென்னும் புலன்களால் மனத்திட மிருந்து பெறுவார்கள்.

1 சோமனோடு 2 சோமனை வகிக்கும் சிரசே 3 அறிவே 4 சோமனே 5 சோமனுல் பல புருஷன் 6 செய்வான் 7 சேர்மன் அடைபவனை 8 சோமனின் 9 ஓஷதியை

எ. உன் கிரணங்கள் ஜாதவேத சூரியனை [1]உன்னை சகலரும் காண மேல் சுமந்து செல்லுகின்றன. அ. நுகத் தடி சுமக்குஞ் சக்தியுள்ள [2]விருஷபங்களே! இங்கு வாருங் கள். கொடுமை நீங்கி மனங்கொல்லாமல் பிரமத்தைப் பெருக்குங்கள்.

கூ. நீ [3]வருணனின் ஸ்தம்பமாகும். க0. நீ வருண ஸ்தம்பத்தின் தூணாகும். கக. வருணனின் பாசம் [4]கட் டப்பட்டுளது. க. உ. அ.

---

## அநுவாகம் உங.

### சோமன் வருகை

க. [5]புவித்தலைவனே! உன் எல்லா நிலயங்களுக்கு நீ முன் செல்லவும். பகைவன் எவனும் உன்னைப் பார்க் காமலாகட்டும். கள்வர்களும் உன்னைக் காணாமலாகட் டும். கொடுமை செய்யும் ஓநாய்களும் உன்னைக் காணா மலாகட்டும். கந்தர்வனும் விசுவவசுவும் உன்னை இம்சிக்க வேண்டாம்.

உ. [6]தேவர்களுடன் நாங்கள் நன்கு செய்யும் [7]எஜமானன் வீட்டு நிலயத்துக்கு [8]நீ கருடனைப்பறந்து செல்லவும். [9]நீ யஜமானனின் மங்கள மளிப்பவனாகும். ங. சத்துரு ஜயித்து செல்வமடையும் பகை சூன்னிய இன்ப மழைக்கும் பாதையை நாங்கள் அடைந்துளோம். ச. [10]மித்திர வருணக் கண்ணுக்கு நமஸ்காரம். மகத்தான

---

உஉ. கருத்து—சோமசலனம்

1 சோமனை 2 வன்மையுள்ள மனிதர்களே 3 சோமனின் 4 உன் வசமாகியுள்ளது. 5 சோமனே 6 புலன்களுடன் 7 ஆத் மாவின் 8 மனிதனே 9 சோமன் 10 பிராணபான பிரகாசத் துக்கு.

தேவனுக்கு வணக்கம். தூரதரிசி துவஜன் தேவஜாதன் சோதிமகனான சூரியனுக்கு நீங்கள் கானஞ்செய்யுங்கள். ரு. நீ வருணனின் ஸ்தம்பமாகும்.

சா. நீ [1]வருண ஸ்தம்பத் தூணாகும்.

எ. வருணபாசம், [2]அவிழ்ந்துள்ளது. க. உ. சா.

---

## அநுவாகம் உச.

### அதிதி சோமன்

க. நீ அக்கினியின் [3]ஆதித்தியத்திலுளாய். நான் விஷ்ணுவுக்கு உன்னை நாடுகிறேன். நீ சோமனின் ஆதித்தியத்திலுளாய். நான் விஷ்ணுவுக்கு உன்னை நாடுகிறேன். நீ அதிதியின் ஆதித்தியத்திலுளாய். நான் விஷ்ணுவுக்கு உன்னை நாடுகிறேன். செல்வமளிப்பவனே! நான் அக்கினிக்கு உன்னை நாடுகிறேன். நான் உன்னை விஷ்ணுவுக்கு சோமன் கொண்டுவரும் கருடனுக்கு உன்னை, விஷ்ணுவுக்கு உன்னை நாடுகிறேன். உ. ஹவிஷால் மரியாதை செய்யும் உன் சத்திகள் எல்லாம் யக்ஞத்தைச் சூழவேண்டும். சோமனே! நீ செல்வமளிப்பவன். வீரர் மிகும் எழுச்சி செய்பவன். நீ ஆண்மைகளை அழிக்காமல் அகங்களில் நுழையவும்.

நீ அதிதி ஸ்தானமாகும். ௩. நீ அதிதியின் ஸ்தானத்திலுட்காரவும். ச. நீ விரதங்காக்கும் வருணன். நீ வருணனின் சேர்க்கையாகும்.

ரு. தேவ நட்பினின்று எமக்குச் செல்வமாகட்டும். தேவ சேவையினின்று நாங்கள் தளர வேண்டாம்.

---

உ௩. கருத்து—சோமனே! உனக்கு சுவாகதம்.

1 சோமனின் 2 உன் சுவாதீனமாயுள்ளது. 3 அதிதியாயுளாய்.

௬. நான் பிராணனுக்கு உன்னை கிரகிக்கிறேன். நான் உன்னை வியானனுக்குக் கிரகிக்கிறேன். நான் உன்னைத் 1 தநூநபதனுக்குக் கிருகிக்கிறேன். சக்திக்கு நான் உன்னை கிரகிக்கிறேன். திடதாதுக்கு நான் உன்னை கிரகிக்கிறேன். ௭. உன்னை எவனு மணுகவில்லை. நீ தேவர்களின் பலத்தாலும் அணுக முடியாத திடபலிஷ்டன். நீ புன்மொழி பிரிபவன். புன்மொழி பாயாதவன். ௮. தீட்சபதி என் தீட்சையைத் தொடரட்டும். தவபதி என் தவத்தைத் தொடரட்டும். நான் திடத்தைத் துரிதமாயடையவேண்டும். நீ என்னை நற்செயலில் சாய்க்கவும். ௧. ௨. ௧௦.

---

# அநுவாகம் ௨௫.

## உபசதங்கள்

௧. தேவனான சோமனே! உன் ஒவ்வொரு துளியும் தலைச் செல்வஞ் ஜயிக்கும் இந்திரனுக்கோங்க வேண்டும். இந்திரன் உனக்குப் பெருக்கவேண்டும். நீ இந்திரனுக்காக பெருகவும். ௨. நீ உன் நண்பர்களை செல்வஞ் சக்தியுடன் செழிமை யாக்கவும். தேவசோமனே! உன் மொழியை நல்ல நலமுடன் நான் செய்துமுடிக்க வேண்டும். ௩. உணவு உயரிய வாழ்க்கைக்கு ஓங்குஞ் செல்வங்கள் விரும்பப்படுகின்றன. சத்தியஞ் சொல்பவர்களுக்கு நீ சத்தியமா யிருக்கவும். சோதிக்கு நமஸ்காரம், சகத்துக்கு நமஸ்காரம்.

---

௨௪. கருத்து—சோமனை விருந்தாளியாய் வரவேற்று மரியாதை செய்யுங்கள்.

1 விரதத்துக்கு.

ச. அக்கினியே! விரத பதியே! நீ விரதங்களின் விரதபதியாகும். எனது இத்தேகம் உன்னிலிருக்கவேண்டும். உனது தேகத்தின் திடம் எது உண்டோ அது என்னிலாக வேண்டும். விருதபதியே! விரதங்காக்கும் எங்கள் [1]இருவர்களின் விரதமாகவும் ரு. அக்கினியே! உனது ருத்திர வடிவத்துடன் எங்களைக் காக்கவும். உனது அவ்வடிவத்துக்கு சுவாஹா! சு-எ. அக்கினியே! இரும்பு வெள்ளி, பொன்னில் சாய்ந்து, குகை வசித்து பெரியதாகும் உன் வடிவத்தால், நான் [2]கடும் மொழியைத் துரத்தி கோபச் சொல்லை நீக்கியுளேன். சுவாஹா! க. உ. கக.

---

## அநுவாகம் உசு.

### உத்திர வேதி.

க. நீ எனக்கு தன நிலயமாகும், நீ எனக்காகத் தாழ்ந்தோர் சரணமாகும், நீ என்னை அவசியத்தில் காக்கவும், அவஸ்தையில் என்னைக் காக்கவும். உ. நபஸ் என்னும் அக்கினி[3] உன்னை அறியவேண்டும்.

௩. இப்பூமியிலுள்ள அங்கிரச அக்கினியான நீ[4] ஆயுசு என்னும் பெயருடன் வரவும். உனது தூய நாமம் எத்தாலும் துன்ப மாகாதது. அத்தூய நாமத்தால் நான் உன்னை தரிக்கிறேன். ச. இரண்டாவது புவியிலுள்ள

---

உரு. கருத்து. சோமனைப்பற்றியவுடன் அதற்கு பல விரோதிகள் தோன்றுவார்கள். அவர்களை யழிக்க விரதம் யென்னும் உபசதமான முற்றுகையால் அவர்களை விலக்க வேண்டும்

சோமனைப் பற்றுவதற்கான சாதனங்களின் பெயர் பகை யழிக் கருவிகள்.

1 மனம், ஆத்மா, 2 சத்துருவை. உயரிய அறிவு 3 சலத்திலுள்ள அனல் 4 புவியனல்

அங்கிராசக்கினியான நீ ஆயுசு என்னும் பெயரோடு வரவும். வீரக்குணமே உனது புனித நாமமாகும். [1]நான் அத்தால் உன்னை உயரமாய் கிரகிக்கிறேன்.

ரு. [2]நீ பெண் சிங்கமாகும். நீ [3]மஹிஷியாகும்.

சு. நீ பரந்து விரியவும். யக்ஞத்தலைவன் உனக்குப் பரந்து விரியட்டும். எ. நீ நிலையாயுள்ளவன்.

அ. நீ திவ்யமாக இருக்கவும். தேவர்களுக்கு பிரகாசமா யிருக்கவும். கூ. இந்திரகோஷம் முன்புறம் வசுக்களுடன் உன்னைக் காக்கட்டும். மநோ ஜுதம், வலது புறம் பிதுருக்களுடன் உன்னைக் காக்கட்டும். அறிஞன் பின்புறம் உன்னை ருத்திரர்களுடன் காக்கட்டும். விசுவகர்மன் இடதுபுறம் ஆதித்தியர்களால் உன்னைக் காக்கட்டும்.

கo. நீ எதிரி ஜயிக்கும் பெண் சிங்கமாகும், சுவாஹா! நீ சுந்தரப் பிரஜையளிக்கும் பெண் சிங்கமாகும், சுவாஹா! நீ செல்வச் செழிப்பளிக்கும் பெண் சிங்கம், சுவாஹா! நீ ஆதித்தியர் ஜயிக்கும் பெண் சிங்கம், [4]சுவாஹா! நீ பெண் சிங்கம். நீ திவ்ய யஜமானனுக்கு தேவர்களைக் கொண்டு வரவும். சுவாஹா!

கக. நான் உன்னைப் பொருள்களுக்கு நாடுகிறேன். கஉ. நீ விசுவாயுசாகும், புவியைப் பலமுடனாக்கவும். நீ திடமாய் சாய்ந்துளாய், வானத்தைத் திடமாக்கவும். நீ இம்சையற்று சாய்ந்துளாய். நீ சுவர்கத்தைச் சத்தியுடனாக்கவும். கங. நீ அக்கினியின் பஸ்மங்கள். நீ அக்கினியின் பரமஅணுவாகும். க. உ. கஉ.

---

உசு. சோமனைப்பற்றியவன் பலவித அனல்களை யறிவான்.

1 உயரிய அறிவுள்ளவன் 2 உயரிய அறிவு 3 பெரியவன் 4 நானும் அப்படியாகிறேன்.

# அநுவாகம் உஎ.

## சோம வாஹனம்

க. அதிக மறியும் அறிஞர்களான [1]ஹோதாக்கள் தங்கள் மனங்களைச் சேர்க்கிறார்கள், மனனங்களைச் சேர்க்கிறார்கள். வழி யறியும் [2]அவனே விப்பிரச் செயல்களை நியமனஞ் செய்கிறான். [3]தேவ சவிதாவின் துதி சிறந்ததாகும்.

உ. [4]தேவனே! திவ்ய மொழியுடன் [5]கிரகத்தைக் கோஷிக்கவும்.

ந. தேவப் புகழ்பெற்ற [6]இருவரான நீங்கள் தேவர்களில் கோஷஞ் செய்யுங்கள்.

ச. [7]எமது தலைவனாய் பலர் அரசனாய் பெருஞ் செயல் வீரனாய் ஒருவன் எமக்குப் புலனாகவேண்டும். ரு. [8]விஷ்ணு இதன் மேல் தாண்டியுளான். அவன் தன் பாதத்தை [9]மும்முறை வைத்துளான். அதன் தூளியில் அனைத்தும் சேர்ந்துளது.

சு. மனிதனுக்குப் புகழ்பெறும் [10]நீங்கள் பசு, புசிப்பு [11]நற்புல்லில் பொழிபவர்களாகுங்கள். விஷ்ணு இவ் [12]விருலகங்களைத் தனித் தனியாய் தரித்துளான். அவன் சுகத்தை எங்கும் சுடர்களால் தரித்துளான். எ. நீங்கள் இருவர்கள் யக்ஞத்தை இம்சை யன்னியில் செய்துகொண்டு இங்கு முன் வாருங்கள். யக்ஞத்தை முன்புறங் கொண்டு வாருங்கள். தயங்கவேண்டாம். அங்கு புவியின் உயரத்தில் ரமியுங்கள்.

---

1பெருஞ் செயல் செய்பவர்கள் சோமனை சிரத்தில் சுமப்பவர்கள். 2 அறிவே 3 திவ்யமனம் நாடுவது 4 அறிஞனே 5 ஆத்மாவை 6 மனம், ஆத்மா 7 ஈசனே 8 ஈசன் 9 மூன்று காலங்கள். 10 மனம், ஆத்மா 11 நற்செயலில் 12 வானம்புவியை.

அ. விஷ்ணுவே ! நல்ல செல்வங்களால் சோதி அல்லது சகம், மகம் அல்லது வானத்தினின்று நீ உன் [1]கைகளை நிரப்பிக் கொள்ளவும். வலது இடது புறத்தினின்று எமக்களிக்கவும்.

௯. நான், வெகுதூரஞ்சென்று மும்முறை பாதம் வைக்கும் பெருந் நிலயம் ஸ்தாபனஞ்செய்யும் புவி சேரும் புறங்களை யளக்கும் விஷ்ணுவின் பெரிய செயல்களை கோஷிப்பேன்.

௧0. [2]நீ விஷ்ணு நெற்றியாகும், நீ [3]விஷ்ணு [4]முதுகாகும்.

௧௧. [4]நீங்கள் விஷ்ணுவின் வாயின் இரு மூலைகளாகும். ௧௨. நீ [5]விஷ்ணுவின் நிலை முனையாகும். நீ விஷ்ணுவின் இழையாகும். நான் விஷ்ணுவுக்கு [6]உன்னை நாடுகிறேன். ௧. ௨. ௧௩.

[உ௯-ம் அநுவாகம் பார்க்க]

---

## அநுவாகம் உஅ.

### யக்ஞங்கள்

௧. நீ [7]உன் பலத்தை விரியும் வலைபோல் ஸ்தாபிக்கவும். நீ பெரிய அரசனைபோல் உன் கையாட்களுடன் வரவும். நீ துரித வலை வீசி அம்புகளை எய்கிறாய். உன் கூறிய அம்புகளால் அரக்கர்களைக் குத்தவும்.

---

உஎ. கருத்து—சோமனை சிரம் என்னும் வாஹனத்தில் தரிக்கும் திவ்ய புருஷனின் சுபாவமும் அவன் நாடும் பரமனின் குணங்களும் இங்கு காணலாம்.

1 சாதனங்களை நிரப்புகிறாய் 2 சோமன் சுமப்பவன். 3 பலமாகும். 4 மனம்—ஆத்மா 5 சோமன் பற்றுபவன் 6 சோமனை 7 வீரனே

௨. உன் சுழல் சுவாலைகள் வேகமாய் விழுகின்றன. கண கணவென உன் கோபத்தோடு அச்சுவாலைகளை யநுசரிக்கவும். அக்கினியே! கட்டன்னியிலுள்ள உன் கனல் சுவாலைகள் எரி சுடர்களை எங்கும் பரப்புகின்றன.

௩. நீ துரித வேகத்துடன் தூதர்களை யனுப்பவும். அருகிலும் தூரத்திலும் தீமை புரிபவனிடமிருந்து நீ இச் சனத்துக்கு தவறுதக் காப்பனுகவும்.

[1]அக்கினியே! எத்துன்பமும் எங்களை உன்னிடமிருந்து அமிழ்த்தாமலிருக்கட்டும்.

௪. [2]அக்கினியே! நீ எழுச்சியாகவும். நீயே எங்கும் பரவவும். கூறிய அம்புள்ளவனே! என் சத்துருக்களை எரிக்கவும். சுவாலையுள்ளவனே! நீ தீமை செய்பவனை காய்ந்த புல்போல் நன்கு எரித்து விடவும்.

௫. நீ எழுச்சியாகவும். பகைவர்களை எங்களிடமிருந்து துரத்தவும். அக்கினியே! உன் திவ்ய பலத்தைப் புலனுக்கவும். எதிரி தூண்டும் வேதனையை வேக சூன்னியமாக்கவும். உறவு உறவில்லாத பகைவர்களை யொழிக்கவும்.

௬. அதி இளைஞனே! இப்பிரமத்துக்குப் புஷ்டியளிப்பவன் [3]உன் பெரும் மனத்தை அறிகிறான். புகழ் பொருள் எல்லாப் பிரிய நாள்களு மவனுக்காகும். கருமியின் கதவுகளைத் திறந்து—அவன் காட்சி யாக்கியுளான்.

௭. அக்கினியே! நித்திய அவியுடன் துதியோடு தேக வாழ்க்கையில் உன்னை இன்பமாக்க நாடுபவன் பொன் பொருள் நிறைந்து அவன் நாள்கள் எல்லாம் இன்பமாக வேண்டும். அதுவே அவன் விருப்பமாகட்டும்.

௮. உனது நல்ல மனத்தை நான் நாடுகிறேன். நீ பதில் யளிப்பது போல் உச்ச கோஷஞ் செய்கிறாய். நீ

1 ஈசனே 2 ஆயுதமே 3 ஆயுதத்தின்.

விரும்பும் இக்கானம் உன்னுடன் இசையட்டும். நாங்கள் உன்னை நல்ல குதிரை நல்ல இரதங்களுடன் அலங்கரிக்க வேண்டும். நீ எங்களில் தினந்தோறும் சூக்தங்களை ஆதரிக்கவும் ௯. அனைவரும் இங்கு இருளில் பிரகாசமாகும் உன்னை துரிதமாய் தினந்தோறும் நாடட்டும். நாங்கள் மனித மேன்மைக் குயரமாகும் உன்னை அநுசரிக்கட்டும். ௧௦. அக்கினியே! நல்ல குதிரைகளுடன் பொன் மிகுந்து திவ்ய ரதத்தோடு உன்னைச் சேர்பவனை நீ காக்கிறாய். உனக்கு ஒழுங்காய் இன்ப வரவேற் பளிப்பவனின் நண்பனாகும் நீ.

௧௧. [1]நான் பந்துத்வம், பாக்களால் பெரிய பகைவரை ஜயித்துளேன். அப்படி ஜயிக்குஞ் சக்தி எனக்கு [2] பிதா கௌதமனிடமிருந்து வந்துளது.

ஹோதாவே! மிக்க இளைஞனே! நீ அதி அறிஞன். இசையும் மனமுள்ளவன். எங்கள் இவ்வசனத்துக்குச் செவி சாய்க்கவும்.

௧௨. அறிஞனே! அக்கினியே! விழிப்புடன் வேகமாய் சுபமளித்து சோர்வு சத்துரு சூன்னியமாய் சஞ்சலமழியும் நினது பாலகர்கள் இங்கு தம்மிடங்களில் குவிந்து எங்களைக் காக்கவேண்டும்.

௧௩. அக்கினியே! [2]பாலகர்கள் இருளான [3]மாமதேயனை அறிந்து அவனைப் புன்மையினின்று ரட்சித்துளார்கள். [4]விசுவே தேவஞனை அவன் இச்சுகிருதங்களைக் காத்துளான். இம்சை நாடும் எதிரி இம்சிக்க முடியவில்லை.

௧௪. நாங்கள் உன்னுடன் இணைந்து உன் துணையோடு உன் தலைமையின் கீழ் திடத்தை யடையவேண்

---

**1 யக்ஞ கர்த்தா 2 ரட்சகர்கள். 3 பல மற்றவனை 4 விசுவே தேவஞனை அக்கினியென்று மாயுதம்.**

டும். சத்திய சீலனே! எங்கள் இரு விருப்பங்களை நிறைவேற்றவும். அச்ச மற்றவனே! அதை உடனே செய்யவும்.

கரு. அக்கினியே! இச்சமித்துடன் நாங்கள் உன்னை நாடுவோம். உனக்குக் கூறும் ஸ்தோமத்தை ஏற்கவும். தூஷணன் துஷ்டர்களை தகிக்கவும். நண்பர் நிறைபவனே! எதிரி, ஏசுபவன் ஏளனஞ் செய்பவனிடமிருந்து என்னைக் காக்கவும்.

கசு. நான் அரக்கர் அழிக்கும் அசுவத்தைப் பற்றுகிறேன். நான் வெகு விசால நண்பனிடஞ் சரணமடையச் செல்லுகிறேன். அக்கினி எங்கள் அளிப்புகளால் எழுச்சியாகி தன் அம்பைக் கூறு செய்து என்னை இம்சையினின்று இரவு பகல் காக்கவேண்டும்.

கஎ. [1]அக்கினி பெருஞ்சோதியுடன் பிரகாசிக்கிறான். அவன் எல்லா விசுவங்களை தன் மகத்தால் விளக்குகிறான். அவன் திவ்ய சூன்னியம் தீய மாயைகளைத் தொலைக்கிறான். அவன் அரக்கர்களைக் கொல்ல தன் ஆயுதங்களைக் கூறுக்குகிறான்.

கஅ. அக்கினியின் கோஷங்கள் சோதிக்கு அரக்கர்களைக் கொல்ல கூரிய ஆயுதங்கள் கிளம்பியுள. பலத்தின் உற்சாகத்தில் அவன் வெடித்துளான். தேவசூன்னிய எதிரிகள் அவனை அடக்க இயலாது. க. உ. கச.

[சஉ-ம் அநுவாகம் பார்க்கவும்.]

---

உஅ. கருத்து—சத்துரு சம்ஹாரம் யென்னும் யக்ஞங்களையுமறியுங்கள்.

1 வீரன்.

# அநுவாகம் உகூ.

[உஎ-ம் அநுவாகத் தொடர்ச்சி]

## சோம யாகம்.

க. நான் சவிதாத் தூண்டுதலில் பூஷணை புஜங்களால் அசுவினி கைகளுடன் [1]உன்னைக் கிரகிக்கிறேன். நீ ஆயுதமாகும். நீ சத்துரு சூன்னியன்.

உ. இராட்சதர்கள் சூழப்பட்டுளார்கள். தீமை புரிபவர்கள் சுற்றப்பட்டுளார்கள். இங்கு நான் இராட்சதர் கழுத்தை யறுக்கிறேன். ந. இங்கு நான் எங்களை வெறுப்பவனை நாங்கள் வெறுப்பவன் கழுத்தைத் துண்டிக்கிறேன்.

ச. நான் சோதி வானம் சகத்துக்கு உன்னை நாடுகிறேன். ரு. பிதுருக்கள் அமரும் [2]உலகம் புனிதமாயிருக்கட்டும்.

சூ. நீ [3]யவமாகும். எதிரிகளை எங்களிடமிருந்துத் தடுக்கவும். எ. நீ பிதுருக்கள் பீடமாகும். அ. சோதியைத் தாங்கவும், வானத்தை நிரப்பவும், சகத்தை நிலையாக்கவும். கூ. தியுதான மாருதன் உன்னை நிலையான மித்திர வருண தர்மத்துக் கிசைந்து வைக்கட்டும். க0. நான் பிரமம் ஜயிக்கும் உன்னை க்ஷத்திரம் ஜயிக்கும் உன்னை நற்பிரசை, செல்வச் சிறப்பு [4]ஜயிக்கும் உன்னை நான் எங்கும் வகிக்கிறேன். கக. நீ பிரமத்தை பலமுடனுக்கவும், க்ஷத்திரத்தைச் சக்தியுடனுக்கவும், செல்வச்செழிப்பை சிறப்புடனுக்கவும்.

கஉ. [5]புவியே வானமே! நெய்யால் நிறைந்துகொள்ளுங்கள்.

---

1 சபையை 2 உலகமான நீ 3 புவியின் சத்தாகும். 4 நமக்கு ஜயித்தளிக்கும் 5 புவியிலுள்ளவர்களே

கங. நீ இந்திரன் நிலயமாகும். [1]விசுவஜன நிழலாகும். கச. மொழி விரும்புபவனே! இந்த எமது மொழிகள் திட ஆயுஸோடாகும் உன்னை திடஞ்செய்து உன்னை எங்குஞ் சூழட்டும். அவைப் பிரியமளிப்பவை யாகட்டும். கரு. நீ இந்திரன் இழையாகும், இந்திரனின் நிலை முனையாகும். கசு. நீ இநதிரனின் இசையுள்ளவன். கஎ. நான் உன்னை [2]இந்திரனுக்கு நாடுகிறேன். க. ந. சு.

---

## அநுவாகம் நo.

### கோஷம்

க. நான், அரக்கர் அழித்து நாசங்குலைக்கும் [3]வைஷ்ணவ மானவற்றைக் [4]கெல்லுகிறேன்.

உ. நான், சமானன் அல்லது சம சூன்னியன், விரோதமாய் சாய்த்துள்ள சீர்குலைக்குஞ் சாதனத்தை இங்கு [5]எடுத்தெரிகிறேன்.

ந. நான், சமானன் சமானமற்ற எமது [6]சௌசன்ய சூன்னியனை இங்கு சிதைக்கிறேன்.

ச. நான் கெடுதலைக் [7]காயத்திரி சந்தசால் ஜயித்துளேன். ரு. இங்கு இருப்பதென்ன? சுபகரமான இது எமதாகட்டும். சு. [8]எங்கள் துவேஷிகளைக் கொல்லும் நீ, விராடாகும். எங்கள் எதிரிகளைக்கொல்லும் நீ, சாம்ராட்டாகும். சத்துருவைக் கொல்லும் நீ, சுவராட்

---

உக. கருத்து—சோமன் பற்றுபவன் சதஸ் யென்னும் சபையையே பலம பேராதரவுக்கு நாடுகிறான்.

1 சகல சனத்தின் 2 பலத்துக்கு. 3 வியாபக மானவற்றை 4 பிரகாச மாக்குகிறேன் 5 நாசமாக்குகிறேன் 6 சகஜமற்றவனை 7 அறிவால் 8 வீரனே

டாகும்; விசுவ அழிப்புக்களை யொழிக்கும் நீ, விசுவராட்டாகும்.

எ. நான், அரக்கர் கொன்று அழிப்பொழிக்கும் வைஷ்ணவங்களைத் [1]தெளிக்கிறேன். அ. நான், அரக்கர் கொன்று அழிப்பொழிக்கும் வைஷ்ணவங்களைப் பொழிகிறேன்.

கூ. நீ [2]பலமாகும், எதிரிகளை எங்களிடமிருந்து தடுக்கவும், தீயோர்களைத் தடை செய்யவும்.

கo. அரக்கர் ஒழித்து அழிப்பொழிக்கும் வைஷ்ணவங்களை நான் [3]இங்கு மங்கு மாக்குகிறேன். கக. அரக்கரொழித்து அழிப்பொழிக்கும் வைஷ்ணவங்களில் நான் ஆகுதி செய்கிறேன்.

கஉ. அரக்கரொழித்து அழிப்பொழிக்கும் வைஷ்ணவமான [4]இரண்டை நான் கீழே சாய்க்கிறேன்.

கங. அரக்கரொழித்து அழிப்பொழிக்கும் வைஷ்ணவமான இரண்டை நான் சூழ்கிறேன். கச. அரக்கரொழித்து அழிப்பொழிக்கும் வைஷ்ணவமான இரண்டை நான் இங்கு மங்குமாக்குகிறேன். கரு. அரக்கர் ஒழித்து அழிப்பொழிக்கும் வைஷ்ணவமான இரண்டை நான் இங்கு வைக்கிறேன்.

கசு. பெரு மாயுதத்தால் நீ [5]பெரியவனுயுளாய்; நீ பெரிய வாக்குடன் [6]இந்திரனுக்குக் கோஷஞ்செய்யவும். க. ங. உ.

---

ஙo. கருத்து—யக்ஞகர்த்தா சத்துரு சம்ஹார கோஷஞ் செய்கிறான்.

1 பிரகாசமாக்குகிறேன். 2 வீரமே 3 வியாபக மாக்குகிறேன் 4 ஆயுதம் வீரசுபாவம் 5 தீரனே 6 திடத்துக்கு.

## அநுவாகம் ௩௧.

### யக்ஞானல்கள்

௧. நீ [1]விரிபவன், வகித்துச் செல்பவன். ௨. நீ அவி சுமப்பவன், ௩. நீ இனியன், நீ அறிஞன். ௪. நீ விசுவமறியுந் தூதன். ௫. நீ கவியான உசிசனுகும்.

௬. நீ அங்காரி, பம்பாரியாகும். ௭. நீ நாடுபவனின் உதவி தேடுபவன். ௮. நீ ஒளியுள்ள மார்ஜலியன். ௯. நீ அரசனை கிருசானுவாகும். ௧௦. நீ மனிதர்கள் சூழ்ந்து சாய்வதர்க்காகும் சுத்தச் செயலோன்.

௧௧. நீ மேகமான உக்கிரனுகும். ௧௨. நீ பரிசுபடாத இருதயப் பக்குவஞ் செய்பவன். ௧௩. எவன் சோதி சுவர்கமோ எவன் வீடு சத்திய சொரூபமோ அவனே நீயாகும். ௧௪. எவன் ஒளி பிரமமோ, வீடு சுவர்கமோ அவனே நீ. ௧௫. நீ ஒரு பாதமுள்ள அஜனுகும்.

௧௬. அக்கினியே! நீ வானத்தின் வியாபகனுகும். உன் கோரமுகத்தோடு என்னைக் காக்கவும். என்னைத் திருப்தி செய்யவும், என்னை இம்சிக்க வேண்டாம். ௧. ௩. ௩.

---

## அநுவாகம் ௩௨.

### வேதீ மகிமை

௧. சோமனே! நீ எங்கள் அல்லது அந்நியர்களால் வரும் துவேஷத்தினின்று நீ திறம்படக் காப்பவன். சுவாஹா! துரிதன் நெய்யின் சேர்க்கையை இன்பமாயனுபவிக்கட்டும்.

---

௩௧. கருத்து. யக்ஞ சாதனமான ஒவ்வொரு செயலையுங் கண்டு அவற்றின் குணு குணங்களை இவ்வநுவாகங் கூறும்.

[1] யக்ஞானல்.

உ. இங்கு அக்கினி எமக்கு இரட்சை யளிக்கவேண்டும். அவன் எங்கள் முன் சத்துரு சிதைத்துச் செல்ல வேண்டும். ந. அவன் எதிரிகளை இன்பத்துடன் ஜயிக்கட்டும். போரில் பொருளை வெற்றிக்கு அவன் அடையட்டும்.

ச. விஷ்ணுவே! உன் பாதத்தை நீ விரிவாய் வைக்கவும். நீ நாங்கள் வசிக்க விரியும் நிலயத்தை யளிக்கவும். நெய்யில் சன்ம ஸ்தானமுள்ள நீ நெய்யைப் பருகவும். யக்ஞபதியைக் பெருக்கவும்.

ரு. வழியறியும் சோமன் செல்லுகிறான். அவன் சத்திய மூலநிலயத்தி லுட்கார தேவ வாசத்தை யடைகிறான்.

சா. நீ அதிதி பீடமாகும. எ. நீ அதிதி நிலயத்திலமர வேண்டும்.

அ. இந்த தேவசவிதா உங்கள் சோமனாகும். அதைக் காக்கவும். அது உன்னை நீங்கவேண்டாம்.

கூ. சோமனே! நீ தேவர்களுக்கு தேவனாய் நீ சென்றுளாய். நான் பிரசையுடன் செல்வச் செழிப்போடு மனிதனுக்கு மனிதனாயுளேன். க0. தேவர்களுக்கு நமஸ்காரம். பிதுருக்களுக்கும் வணக்கம். கக. நான் இங்கு வருண பாசத்தினின்று பிரியவேண்டும். நான் சுவர்கத்தில், வைசுவாநர சோதியில் நோக்கட்டும்.

கஉ. அக்கினியே! நீ விரதபதியாகும், நீ விரதங்களின் விரதபதியாகும். கந. உன்னிலுள்ள என் தேகம் இங்கு என்னிலாகவேண்டும். என்னிலுள்ள உன் தேகம் உன்னிலிங்கு இருக்கவேண்டும். கச. விரதபதியே! விரதம் செய்யும் எங்கள் விருதங்கள் நிறைவேறட்டும். க. ந. ச.

---

நஉ. கருத்து—யக்ஞ மூல ஸ்தான மகிமை.

## அநுவாகம் ௩௩.

### செடி கொடிகள்

க. நான் [1]சிலவற்றால் தாண்டியுளேன், நான் வேறு சிலவற்றை அணுகவில்லை. உ. நீ தூரத்தைவிட அருகிலுள்ளதை விட, தூரன் என நான் உன்னைக் கண்டுளேன். ௩. நான் வைஷ்ணவமான உன்னை தேவயக்ஞத்துக்காக நல்வரவு செய்கிறேன். ச. தேவ சவிதா, தேனால் உன்னைத் நனைக்கட்டும். ரு. ஓஷதியே! நீ [2]அதைக் காக்கவும் சு. கோடரியே! நீ [3]அதை இம்சிக்காதே. எ. உன் உச்சியால் சோதியை மேயவேண்டாம். நடுவால் வானத்தை இம்சியாதே, வையகத்துடன் இணையவும், அ. வனஸ்பதியே! நீ ஆயிரங் கிளைகளோடு வளரவும். ஆயிரம் பிரிவுகளுடன் நான் வளரவேண்டும். கூ. இம்சையற்ற இக் கூரிய கோடரியால் கனம் பெரும் குணக்குவியலுக்கு வரும் நீ, செல்வத்தை யளிக்கவும். க. ௩. ரு.

---

## அநுவாகம் ௩ச.

### யூபஸ்தாபனம் 4

க. நான் பூமிக்கு உன்னை, சோதிக்கு உன்னை நாடுகிறேன். உ. பிதுருக்கள் அமரும் உலகம் புனிதமாயிருக்கட்டும். ௩. நீ பலனுகும் நீ எதிரிகளை எங்களிடமிருந்து தடுக்கவும். சத்துருக்களைத் தடை செய்யவும். ச. நீ [5]பிதுருக்களின் நிலயமாகும். ரு. நீ அணுகுவதற்குச்

---

**௩௩. கருத்து—யக்ஞபுருஷன் வனத்திலுள்ள செடிகொடிகளை தன் உபயோகத்துக்கு பயன் செய்துகொள்ளவேண்டும்.**

**1 சில செடி மரங்களால் 2 யக்ஞத்தை 3 செடி கொடிகளை. 4 வச்சிராயுத ஸ்தாபனம் 5 அறிஞர் அடைக்கலம்**

சுலபனாகும். தலைவர்களின் தலையன். மரம் உன்னை ஏறும். அதன் மேன்மையில் நீ கவனமாகவும்.

சு. தேவசவிதா உன்னைத் தேனால் [1]நனைக்கட்டும். எ. நற்பழங்களுடனாகும் வனஸ்பதிகளுக்கு நான் உன்னை நாடுகிறேன். அ. நீ சோதியைத் தாங்கவும், வானத்தை நிரப்பவும், உன் மூலத்தால் நிலத்தை நிலையாக்கவும்.

கூ. துரிதமாய் பல ஆயுதங்களுடன் சனங்கள் வசிக்கும் உனது வாசங்களில் நாங்கள் வர விரும்புகிறோம்.

[2]பரம் விஷ்ணு பரவும் பாதத்தின் பெரிய நடை பிரகாசமாகின்றது. க௦. இந்திரனின் சத்திய நண்பனாய் விரதம் விளக்கும் விஷ்ணு செயல்களை நோக்கவும்.

கக. அறிஞர்கள் விஷ்ணு பரமபதத்தை சோதியில் நிறையுங் கண்ணைப்போல் சதாகாலங் காண்கிறார்கள்.

கஉ. பிரமம் ஜயிக்கும் [3]உன்னை க்ஷத்திரம் ஜயிக்கும் உன்னை நற்பிரசை, பொருள் ஜயிக்கும் உன்னை, நான் முன் செலுத்துகிறேன். கந. பரமத்தைப் பலமுடனாக்கவும், க்ஷத்திரத்தைச் சக்தியுடனாக்கவும், பிரசையை திடமுடனாக்கவும், ஓங்கும் பொருளைக் குவிக்கவும். கச. நீ பூர்ணமாக்கப்பட்டுளாய், தேவ கூட்டங்கள் உன்னைப் பூர்ணமாக்கட்டும். திரவியப் பெருக்கும், மனிதர் சபைகளும் யஜமானனைப் பூர்த்தியாக்கட்டும். கரு. நான் வான எல்லையில் உன்னை மர்மமாய் வைக்கிறேன். க. ந. சு.

---

**நச. கருத்து—சோமன் பற்றுபவன் ஆயுதந்தரிக்கவேண்டும்.**

1 **இனிய செயலால்** 2 **மனிதனே.** 3 **வச்சிராயுதத்தை.**

## அநுவாகம் ௩௫.

### அனலேழுச்சீ

௧. நான் முயற்சிக்கு [1]உன்னை நாடுகிறேன். ௨. நீ தூண்டுபவன்.

௩. அறிஞர்கள் அவாவுள்ளோர் அமர புருஷர்கள் [2]தேவர்களை யணுகியுள்ளார்கள்.

௪. பிருகஸ்பதியே! செல்வத்தைப் பாதுகாக்கவும்.

௫. உனது [3]அவியங்கள் இனிய சுவையுடனுக் கட்டும்.

௬. தேவ துவஷ்டாவே! எங்கள் வாசங்களை இன்பமாக்கவும்.

௭. செல்வர்களான [4]நீங்கள் திரமாகுங்கள்.

௮. நீ [5]அக்கினி சன்மஸ்தானமாகும்.

௯. நீங்கள் [6]இருவர்களும் வீரம் நிறைபவர்கள். ௧௦. நீ [7]ஊர்வசியாகும். நீ [8]ஆயுசாகும். நீ [9]புரூரவசுவாகும்.

௧௧. [10]நெய்யால் நனையும் நீங்கள் வீரனைப் புலனுக்குங்கள். ௧௨. காயத்திரி சந்தம், திருஷ்டுபு சந்தம், ஜகதீ சந்தமுடன் தோன்றுங்கள்.

௧௩. மாசற்று இணையும் வாசர்களாய் ஒரு மனமுள்ளவர்களாய் எமக்காகுங்கள்.

௧௪. எல்லாமறிபவனே! யக்ஞும், யக்ஞபதியை இம்சிக்கவேண்டாம். இன்று எமக்கு நீங்கள் மங்களகரார்களாகுங்கள்.

---

1 வச்சிராயுதத்தை 2 திவ்யமானவற்றை 3 தியாகங்கள் 4 சனமும் சபைக்குழைப்பவனும் 5 சபையே 6 சபையும் சபைக்குழைப்பவனும் 7 சபை 8 சபையாலுண்டாகும் நன்மை 9 சபையை காக்கும் வீரன் 10 தேஜசால்.

கரு. [1]அக்கினி அக்கினியில் நுழைந்தசைகிருன். ரிஷியின் மகனை அவன் பெரிய அரசனுகும். நான் [2]உனக்கு [3]சுவாஹா கிருத பிரமத்துட னளிக்கிறேன். [4]தேவபாகத்தை நீ பாழாக்காதே. க. ந. எ.

---

## அநுவாகம் நசா.

### சனங்களே துணே

க. நான் [5]உன்னைப் பற்றுகிறேன். உ. [6]தேவ அவியே, நான் உன்னை சத்தியத்தின் பாசத்தால் பற்று கிறேன். ந. [7]மனிதர்களை அஞ்சாதே! ச. [8]சலங்க ளுக்கு உன்னை ஓஷதிகளுக்கு உன்னை நான் [9]பிரோக்ஷிக் கிறேன். ரு. நீ சலங்களின் சத்தைப் பருகுபவனுகும்.

சா. திவ்ய சலங்களே! நீங்கள் [10]அதைச் சுவையுட னுக்குங்கள். தேவர்களுக்கு அதி ருசி அவியமாய்ச் செய் யுங்கள். எ. பிராணன் வாயுவோடும் அங்கங்கள் யக்ஞச் சேர்க்கையோடும் யக்ஞபதி ஆசியுடன் சேரட்டும்.

அ. [11]நீங்கள் [12]நெய்யால் நனைந்து [13]பசுவைப் பாது காருங்கள்.

கூ. செல்வர்களே! நீங்கள் பிரியமுடன் [14]யக்ஞ பதிக்கு ஆசிரியமாக வேண்டும்.

---

நரு. கருத்து—சோமன் பற்றிய வீரன் சபையுடன் சேர்ந்து வன்மையென்னு மனலே உண்டாக்கவேண்டும்.

1 வீரன் 2 சபைக்கு 3 என்னையே யளிக்கும் பலத்துடன் 4 திவ்யபாகத்தை. 5 ஆயுதத்தை 6 திவ்யத்துக்குச் செல்லு மாகுதியே 7 சத்துரு மனிதர்களை 8 பல மற்றவர்களுக்கு 9 பயன் செய்கிறேன் 10 ஆயுதத்தை 11 மனிதர்களே 12 தேஜ சால் 13 பாமரர்களை 14 போர்பதிக்கு.

கo. விரியும் வானமே! காற்றுடன் இணைந்து இந்து 1அவி சிவனோடு நாடவும். அத்தேகத்துடன் இணையவும். விரிந்து எங்கும் வியாபகமாகி யக்ஞபதியின் யக்ஞத்தை ஜயமுடனாக்கவும்.

கக. 2நீ புவி பரிசிப்பினின்று பாதுகாக்கவும். கஉ. வியாபகனே! உனக்கு நமஸ்காரம். கங. எதிர்ப் பற்றவனே! பிரசை, பொருள் பெருக்கு நெய்யோட்டத்துடன் 3நீ முன் வரவும். கச. 4சலங்களே! சுத்தர்களே! சுத்தஞ்செய்யும் நீங்கள் தேவர்களைக் கொண்டு வாருங்கள். சுத்தமான 5நாங்கள் உங்களால் ஆசிரயமாகி உங்களில் ஆசிரயமாகவேண்டும். க. ங. அ.

---

## அநுவாகம் ஙஎ.

### சம்ஹாரம்

க. 6உன் வாக்குப் பெருகவேண்டும். உன் பிராணன் பரவவேண்டும். உன் கண் ஓங்கவேண்டும். உன் செவி வளரவேண்டும். உ. உன் பிராணங்களில் பாயும் உன் கண்ணில் அடையும் உன் செவியில் சாயுங் குரூரமானது உன்னிலுள்ள கொடுமையும் அதன் கடுமையுமோங்கவேண்டும், அது 7இதனால் சுத்தமாகவேண்டும். ங. உன் கொப்பூழ் ஓங்கவேண்டும். உன் குதம் பெருகவேண்டும். ச. உன் கால்கள் சுத்தமா யிருக்கட்டும். ரு. சலங்களுக்கு சுவாஹா! ஔஷதிகளுக்கு

---

ஙசு. கருத்து—சோமன் ரக்ஷிப்பவன் மகா ஜனங்களின் துணையையே நாடுகிறான்.

1 தியாக 2 அஸ்திரமே நான் புவியில் விழாமல் 3 போருக்கு 4 சனங்களே 5 போர்வீரர்கள். 6 யக்ஞ கர்த்தாவின், 7 இவ்வாயுதத்தால்.

சுவாஹா! பூமிக்கு சுவாஹா! இரவு பகலுக்கு சுவாஹா!
கூ. செடி கொடியே! அவனைப் பாது காக்கவும். எ. [1]கோடரியே! அவனை[2] இம்சிக்கவேண்டாம்.

அ. [3]நீ இராட்சதர் பங்காகும். கூ. நான் அரக்கர்களை ஆழ்ந்த அந்தகாரத்துக்கு அழைத்துச் செல்லுகிறேன். கo. எங்களை வெறுப்பவனை நாங்கள் வெறுப்பவனை அதம அந்தகாரத்துக்கு நான் அழைத்துச் செல்லுகிறேன்.

கக. நான் [4]உன்னை உணவுக்கு நாடுகிறேன். கஉ. வானம் வையகமே! நெய்யால் கவர்ந்து கொள்ளவும். கங. இம்சிக்காமல் வீரவளர்ப்புடன் செல்வமளிக்கவும்.

கச. [5]நீ விரிவானத்தின் வழியாய் செல்லவும்.

கரு. [6]வாயுவே! இன்பத் துளிகளை ருசிக்கவும். சுவாஹா! கசு. [7]மருத்துக்களின் பிரஜையான [8]ஊர்த்துவ நபஸர்களுக்குச் செல்லவும். க. ங. கூ.

---

## அநுவாகம் ங அ.

### உபதேசம்

க. உன் மனம் மனத்துடன் பிராணன் பிராணனுடன் சேரட்டும். உ. [9]நெய் நிறையும் இந்த அவி தேவப் பிரியமா யிருக்கட்டும். சுவாஹா! ங. [10]இந்திரனின் பிராமணன் [11]ஒவ்வொரு அங்கத்திலும் வைக்கப் படட்டும்.

---

**ங அ—கருத்து. அகச் சத்துருக்களினின்று நீங்கி அகண்ட அறிவை யடையவேண்டு மென்பதே இவ்வநுவாக நோக்கம்.**

**1 சத்துருவி னாயுதமே, 2 யக்ஞ கர்த்தாவை 3 சத்துருவே 4 வானம் வையகத்திலுள்ள 5 வீரனே, 6 வியாபகனே, 7 பலங்களின் 8 உயரிய அறிவுகளுக்கு 9 இடம் 10 வன்மையின் 11 நமது.**

ச. [1]தேவ துவஷ்டாவே! வெகு பல நீங்கள் ஒரு [2]சொரூபமாகுங்கால் உனக்குச் [3]சித்தஞ் சேர்க்கப் படட்டும்.

நீ[4] தேவர்களில் செல்லும் பொழுது உன்னில் தாய் தந்தை நண்பர்கள் இன்பமாகவேண்டும்.

ரு. நீ ஸ்ரீ யாகும்.

சு. அக்கினி உன்னைப் பக்குவமாக்கட்டும். எ. [5]சலங்கள் ஒன்று சேர்ந்துள. அ. நான் காற்றின் சுழலுக்கு பூஷணனின் பாய்ச்சலுக்கு சலங்களின் பெருக்குக்கு செடிகொடி சிறப்புக்கு [6]உன்னை நாடுகிறேன்.

கூ. [7]நெய்யின் பானர்களே! நெய்யைப் பருகவும். சத்தின் ரசம் பருகுபவர்களே! சத்தைப் பருகவும். க௦. நீ வானத்தின் அவியாகும்.

கக. சுவாஹா! நான் வானத்துக்காக [8]உன்னை நாடுகிறேன்—கஉ—கங. திசைகள், உபதிசைகள் அக்கம் பக்கத் திசைகள், உச்ச நீச திசைகளுக்கு சுவாஹா! கச. திசைகளுக்கு நமஸ்காரம். க. ந. க௦.

---

## அநுவாகம் நகூ.

### ஆக்ஞை—விருப்பம்

க. [9]நீ கடலை அணுகவும். சுவாஹா! வானத்தை அடையவும், சுவாஹா! தேவ சவிதாவை யநுசரிக்கவும். சுவாஹா! இரவு பகலை நாடவும் சுவாஹா! மித்திரன்

---

நஅ.—சோமனை நாடுபவர்களுக்கு உபதேசம்.

1 திவ்யமாய் பொருள்களைச் சேர்ப்பவனே 2 எல்லா சனங்களையும் ஒன்று சேர்த்து ஒரே சொரூபமாக்குங்கால் 3 அறிவு 4 மனிதனே 5 சனங்கள் 6 ஒன்று சேரும் 7 தேஜஜின் வன்மையைப் பருகுபவர்களே. 8 சபை. 9 வீரனே.

வருணனை நோக்கவும், சுவாஹா! சோமனைச் சேரவும், சுவாஹா! யக்ஞத்தை யணுகவும், சுவாஹா! சந்தங்களுக்குச் செல்லவும், சுவாஹா! வானம் பூமிக்குப் போகவும், சுவாஹா! வான மேகங்களைச் சேரவும், சுவாஹா! அக்கினி வைசுவாநரனை அணுகவும் சுவாஹா!

உ. நான் [1]சலங்களுக்கு உன்னை[2], செடி கொடிகளுக்கு உன்னை[3] நாடுகிறேன்.

ந. [4]நீ மனம் இருதயத்தை எனக் களிக்கவும்.

ச. நான் தேகம்,சர்மம்,மகன், பேரனை அடைய வேண்டும்.

ரு. [5]நீ சோக ரூபனாகும், எங்களை வெறுப்பவனை நாங்கள் வெறுப்பவனை நீ துக்கமுடனாக்கவேண்டும்.

சா. இராஜனான [6]வருணனே! உன் ஒவ்வொரு ஆட்சியினின்று எங்களை விடுதலையாக்கவும். வருணனே! சலம், பசுக்கள் வருணனுடன் எந்தெந்த ஆணையினின்று நாங்கள் பிரமாணஞ் செய்துளோமோ அந்தந்த ஆணையினின்று எங்களை விடுதலை யாக்கவும். க. ந. கக.

---

## அநுவாகம் சO.

### நீங்கள்

க. இச் சலம் அவி மிகுந்தது, தேவ யாகம் அவி நிறைந்தது, அவன் அவி மிகுந்து ஜயிக்க நாடுகிறான். சூரியன் அவி நிறைந் திருக்கட்டும்.

உ. நான் நிலைத்து நிலயமுடனான அக்கினி பீடத்தில் [7]உங்களை வைத்துளேன். நீங்கள் பிரியத்துக்குப் பிரியமுடனாய் எனக்குப் பிரியத்தை யளியுங்கள். ந. [8]நீங்

---

சO., கருத்து—சோமாருகர்களுக்கு ஆக்ஞை

1 சாந்தத்துக்கு 2 வீரத்தை 3 புவியை 4 ஈசனே 6 தலைவனே 6 மரணமே. 7 மகா சனங்களை 8 மனிதர்கள்.

கள் [1]இந்திராக்கினியின் பாகமாகும். நீங்கள் [2]மித்திர வருண பாகமாகும். நீங்கள் எல்லா தேவர்களின் பங்காகும். ௪. நீங்கள் யக்ஞத்தில் கவனமாயிருங்கள். க. ந. க௨.

---

## அநுவாகம் ௪க.

### சோமன்

க. நான் இருதயத்துக்கு உன்னை[3], மனத்துக்கு உன்னை சோதிக்கு உன்னை, சூரியனுக்கு உன்னை—நாடுகிறேன். ௨. யக்ஞத்தை உயரமாய் எழுச்சியாக்கவும், நீங்கள் யக்ஞங்களை தேவர்களுக்கு நடத்தவும். ந—௪. அரசனான சோமனே! இங்கு வரவும், இறங்கவும், அஞ்சாதே. ரு. நான் உன்னை இம்சிக்காமலிருக்கட்டும். சா. நீ பிரசைக்கு இறங்கவேண்டும். பிரசை உனக்கு இறங்கவேண்டும். எ. சமித்தால் அக்கினி என் கோரிக்கையைக் கேட்கட்டும். சலங்கள் செவி கொடுக்கட்டும். திவ்ய [4]திஷணார்களும் செவி கொடுக்கட்டும். ஆயுதங்களே! அறிவுடனான நீங்கள் யக்ஞத்துக்குச் செவி கொடுங்கள். தேவ சவிதா என் அழைப்பைக் கேட்கட்டும்.

அ. திவ்ய சலமே! சலகுழந்தையே! அவி, பலம் இனிமை நிறையும் அலையை தேவர்களில் தேவர்களுக்கு அளிக்கவும். உங்கள் பாகமான சுத்த பானர்களுக்கு நீங்கள் சுத்தமாயிருங்கள், சுவாஹா! கூ. நீ[5] இழுப்பவன், [6]சலங்களின் சத்துருவை நீ இழுக்கவும். க0. சலராட்சணக்கு நான் உன்னை இழுக்கிறேன்.

---

௪0.—கருத்து. சோமனை நாடுபவர்களுக்கு இன்னம் சில மொழிகள்.

1 பலம் அறிவின் 2 நட்பு எதிர்ப்பின் 3 சோமனை 4 அறிவுகளும் 5 சோமனே! 6 சனங்களின்.

கக. [1]அக்கினியே ! நீ போர்களில் எவனைத் துணை புரிகிறாயோ, பொருளுக்குப் போரில் நீ எவனை பலமுடனாக்கியுள்ளாயோ அவன் பலத்திலமைந்து ஜயிக்கிறான். க. ந. கந.

[சந-ம் அநுவாகம் பார்க்க]

---

## அநுவாகம் சஉ.

[யக்ஞங்கள் உஅ-ம் அநுவாகத் தொடர்பு]

### ருத்திராக்கினி

க. அக்கினியே ! நீ ருத்திரனாகும், மகாசோதியின் அசுரனாகும், நீ மருத்து கணமாகும். நீ உணவுத் தலைவன். நீ கிரகஸ்தனை சுகஞ்செய்து சிகப்புக் காற்றுகளுடன் செல்லுகிறாய். நீயே பூஷணாய் உன்னை நாடுபவர்களைக் காக்கிறாய்.

உ. நீங்கள், யக்ஞ இராஜாவாய் ருத்திரனாய் சத்தியமளிப்பவனாய் இரு உலக ஹோதாவான பொன்நிற அக்கினியை இடிமுழக்கத்தின் முன் உதவிக்காக நாடுங்கள்.

ந. அக்கினி ஹோதாவாய் நல்ல யக்ஞஞ் செய்பவனாய் கவி, காளை, சத்தியன் மனிதர்களில் மேன்மையாய் எழுச்சியாக்கப்படும் சனத்தின் ஆதரவாகும். அவன் அனலே சுகந்தம் நிறையும் அன்னையின் அங்கத்தில் வைத்துளான். ச. அவன் இன்று எங்கள் யக்ஞத்தை நலஞ் செய்துளான். நாங்கள் யக்ஞத்தின் இரகசிய நாக்கை கண்டுளோம். அவன் ஆயுசணிந்து சுகந்தமுடன் வந்துளான். அவன் யக்ஞத்தை இன்று க்ஷேமத்துக்காகச்

---

சக. கருத்து—சோம மகிமை

1 அஸ்திரமே !

செய்துளான். ரு. அக்கினி ஔஷதி புசித்து புவி பரி சமாகி சோதியான இடிமுழக்கத்தைப் போல் கர்ச்சனை செய்துளான். அவன் சன்மத்திலேயே சுடராய் பிரகாசிக்கிறான். அவன் வானம் புவி நடுவே சோதியால் ஒளி வீசுகிறான்.

சா. வெகுமுக ஹோதாவே! புவி எல்லாப் பொருள்களையுந் தாங்கும் சுத்தஞ் செய்யும் சீலங்கள் வைக்கப் பட்டுள்ள உன்னில் யக்ஞஞ்செய்பவர்கள் இரவும் பகலும் தங்கள் செல்வங்களை வைக்கிறார்கள்.

எ. அக்கினியே! அங்கிரசர்களின் முதல்வனே! அனைவர்களும் தங்கள் சுகநிலயங்களுடன் தங்கள் தனித் தனி விருப்பமடைய உன்னை நோக்கியுளார்கள்.

அ. அக்கினியே! நாங்கள் உன் துணையால் எங்கள் விருப்பத்தை யடையவேண்டும். செல்வனே! நாங்கள் சுவீரரோடு செல்வத்தை அடையவேண்டும். நாங்கள் திடம் நாடி திண்மை பெறவேண்டும். அழியாதவனே! நாங்கள் அழியாப் புகழை யடைய வேண்டும்.

கூ. பாரத அக்கினியே! அதிஇளைஞனே! சோதியாயும் சிறந்ததுமான செல்வத்தை யளிக்கவும். வசுவே! பலர் விரும்பும் பொருளை யளிக்கவும். க0. அவன் இடிமுழங்கி வானம் நிலைத்து, அதிகாளையாய் ஓங்கிமுழங்கும் அமுதர்களோடு சோதி உடை அணிந்துளான். அக்கினி வெகு விஸ்தாரம் புசித்து முன் செல்லுகிறான்.

கக. இங்கு விரும்பப்படும் அக்கினி உனக்கு ஆயுசை எங்குமளிக்கவேண்டும். உன் பிராணன் உனக்குத் திரும்பட்டும். நான் நோயை உன்னிடமிருந்து நீக்குகிறேன்.

கஉ. அக்கினியே! ஆயுசளித்து அவியில் ஆனந்தமாகி நெய் சன்ம நிலயத்தில் நெய்யுடன் நீ எதிர்முகமாக

வும். பசுவின் திவ்யப் பொருளான இனிய நெய்யைப் பருகி மகனைத் தந்தைபோல் நீ அவனைப் பாதுகாக்கவும். கங. துரிதனே! அக்கினியே! ஜாதவேதசனே! விரும்பும் உனக்கு நான் இச்சுபஸ் துதியை யளிக்கிறேன். கச. சோதியினின்று அக்கினி முதன்மையாய்த் தோன்றியுளான். அவன் எங்களிடம், அடுத்தபடி ஜாதவேதசனும் மூன்றுவது சலத்தில் மனிதனும் தோன்றியுளான். புனிதன் அழியாத அவனை எழுச்சியாக்குங்கால் அவன்—புகழை—கானஞ்செய்கிறான். கரு. சுத்தனே! சுத்தஞ்செய்பவனே! நீ துதிக்கத் தகுந்தவன். அக்கினியே! நெய்யால் அவி அளிக்கப்படும் நீ மேன்மையொளி வீசுகிறாய். கசு. அவன் பொன்போல் ஒளி வீசி அமுத வாழ்க்கையுடன் சிரேயசுக்குப் பிரகாசமாக விரியும் சோதியாயுளான். நல்ல ரேத சுடனுகும் சோதி அவனைப் புலனுக்குங்கால் அக்கினி தன் பலத்துடன் அமுதமானுன். கஎ. எக்காலத்தில் அவன் தேஜசு மனிதர் தலைவனை பலத்துக்குத் தூண்டுமோ அக்காலம் சோதியானவன் புனித ரேதசைப் பிரத்தியட்சமாய்ப் பாயச் செய்துளான். அப்பால் அக்கினி புன்மை நீங்கி பலமுடன் போற்றும் புனிதத்தைப் புலனுக்கி அதற்கு மனமுமளித்துளான். கஅ. அவன் தேஜோ நினைவுடன் உன் துணையோடு பெருகுகிறான். அளிப்பவனே! நற்பிரசையுடன் பொருளை யளிக்கவும். அக்கினியே! நாங்கள் உனக்குத் துதி செய்பவர்களாய் மேன்மையாயுள்ள சுவீரர் நிறையுஞ் செல்வத்தை அநுபவிக்கவேண்டும். கக. அக்கினியே! போர்களில் ஜயமுடனுகப் பிரத்தியட்சமாய்ப் புலனுகி சகல வீரர்களுக்கும் மேலான சக்தி என்னும்—செல்வத்தை உன் சோதியின் சத்தியால் எமக்குக்கொண்டு வரவும். உ0. அக்கினியே! பலம் மிகுந்த

வனே! போர்களில் புலனாகும் பொருளை எமக்குக் கொண்டு வரவும். ஏனெனில் நீ கோக்களின் இலாப மளிப்பவன், சத்தியன். அற்புதன்.

உக. பசு காளையால் புசிப்பவனாகி சோமனால் அநுசரிக்கப்படுபவனாய் எதையும் நியமனஞ்செய்பவனான அக்கினிக்கு நாங்கள் துதிகளுடன் சேவிப்போம். உஉ. மகனே! கானஞ்செய்யும் நீ வைபவத்தில் வீற்றியுளாய். அக்கினி சன்மத்தில் நெறியை, நிலையை யுண்டுபண்ணியுளான். பல மளிப்பவனே! எமக்கு பல மளிக்கவும். நீ அரசனைப்போல் ஜயமுடனாகவும், நீ அகத்தில் எதிரி சூன்னியமா யரசு புரிகிறாய்.

உங. அக்கினியே! நீ ஆயுசைப் புனிதஞ்செய்கிறாய். நீ எங்களுக்கு உணவு, பலத்தையளிக்கவும். துன்பத்தை வெகு தூரந் துரத்தவும். உச. அக்கினியே! சீலச் செயலோனே! நீ எனக்குச் செல்வமும் செழிப்பும் சுவீரங்களுடன் வர்சசுமளித்து எமக்குச் சுத்தமாக்கவும். உரு. தேவனே! அக்கினியே! உன் சோதியுடன் இனிய சுவாலையால் சுத்தஞ்செய்து யக்ஞம், தேவர்களை இங்கு கொண்டு வரவும்.

உசு. அக்கினியே! ஒளி வீசி சுத்தஞ்செய்வோனே! எங்கள் யக்ஞம் அவிக்கு தேவர்களைக் கொண்டுவரவும். உஎ. சுத்த விரதங்களின் அக்கினி சுத்த ருஷியாகும். சுத்த கவியாகும். அவி அளிக்குங்கால் அவன் சுத்தத்தில் ஒளி விசுகிறான். உஅ. அக்கினியே! உன் சுத்தச் சுடர்கள் உன் சோதி சுவாலைகளை எழுச்சியாக்குகின்றன. க. ங. கச.

---

சஉ. கருத்து. அக்கினி தோத்திரம்.

# அநுவாகம் சா௩.

[சோமயாகம்-சக-ம் அநுவாகத் தொடர்ச்சி].

## இதோ சோமன்

௧. நான் [1]உன்னைப் பற்றுகிறேன். தேவர்களுக்காக [2]யக்ஞத்தைச் செய்யு மாயுதமே நீ! நீ யக்ஞத்தை ஆழமாக்கவும். சோமனே, பால் மிகுந்து இனிமை நிறைந்து மழையளிப்பதாய், இந்திரனுக்கு நீ நன்கு பொழியவும். ௨. விருத்திரன் கொல்லும் இந்திரனுக்கு உன்னை, விருத்திரன் ஜயிக்கும் இந்திரனுக்கு உன்னை, சத்துரு ஜயிக்கும் இந்திரனுக்கு உன்னை, ஆதித்தியர்களுடனான இந்திரனுக்கு உன்னை, விசுவேதேவர்களோடான இந்திரனுக்கு [3]உன்னை—நாள் நாடுகிறேன். ௩. நீங்கள் இனியர்கள், விருத்திர ஜயர்கள் செல்வத்துரிதர்கள், அமிருத [4]பத்தினிகள். [5]தேவிகளே! இந்த யக்ஞத்தைத் தேவர்களில் ஸ்தாபியுங்கள். அழைக்கப்படும் நீங்கள் சோமனைப் பருகுங்கள். உங்களால் அழைக்கப்பட்டு சோமன் [6]பருகட்டும்.

௪. சோதி சகம் விரியும் வானத்திலுள்ள [7]உன் சோதியால் இந்த [8]யஜமானனுக்குச் செல்வத்தை விரித்து விஸ்தாரமாக்கவும். இவனுக்கு அநுகூலமாகவும். ௫. சக்தியுள்ள [9]திஷணர்களே; சக்தியுடனாருங்கள். சத்திசேர்த்து எனக்குச் சத்தியை யளியுங்கள். நான் உங்களை இம்சிக்கவேண்டாம், நீங்கள் என்னை இம்சியாதேயுங்கள்.

---

1 தேகத்தை, 2 பெருஞ்செயலை, 3 சோமனை 4 சாய்பவர்கள், 5 திவ்யர்களே. 6 வியாபகமாகட்டும். 7 சோமனது. 8 ஆத்மாவுக்கு. 9 புலன்களே.

சு. முன், பின், மேல், கீழான இத்திசைகள் உங்களுக்குத் துரிதமாகட்டும். [1]அன்னையே! எ. நீ முன் வரவும். சோமனே! உனது பிழையில்லா எழுச்சியுடனாகும் நாமத்துக்கு, சோமனே! சோமனுக்கு! சுவாஹா! க. ச. க.

---

## அநுவாகம் சச.

### உபாம்சு கிருகம் 2

க. வலிமையுள்ளவனே! நீ வாக்பதிக்குச் சுத்தமாகவும். வீரக்கினைகளுடன் வீரன் தன் கைகளால் சுத்தமாயுளான். நீ தேவசுத்தி தேவனாகும். எவர்கள் பாகமாய் நீயுளாயோ அவர்களுக்காக உன்னை நாடுகிறேன். உ. நீ சுவயசித்தன், எங்கள் உணவை எமக்கு இனிமை நிறைந்ததாக்கவும், சோதி சகத்தின் எல்லா சக்திகளுக்கும் உன்னை நாடுகிறேன். ங. மனம் உன்னை நுழையவேண்டும். ச. நீ விரியும் வான வழியாய் செல்லவும். ரு. சுவாஹா! சூரியனுக்கு நற்சுபாவத்தின் உன்னை நாடுகிறேன். சு. ரசிமி பானஞ்செய்யும் தேவர்களுக்கு உன்னை நான் நாடுகிறேன். [3]இது உனது சன்மஸ்தானமாகும், பிராணனுக்கு உன்னை நான் நாடுகிறேன். க. ச. உ.

---

சங. கருத்து—சோமனுக்கு வாழி.

சச. கருத்து—சோமனை பிராணபலத்துக்கு நாடவும்.

1 சோமனே. 2 புனிதஞ்செய்யும் சாதனம். 3 வியானன்.

## அநுவாகம் ௨௫.

### அந்தர்யாமம் *

க. நீ புவியோடு கிரகிக்கப்படுகிறாய். உ. பகவானே! அதை நியமத்திலாக்கவும், சோமனைக் காக்கவும், செல்வத்தை ரட்சிக்கவும். நீயக் ஞத்தால் உணவை அடையவும். சோதி சகம் விரிந்த வானத்தை உன் அகத்தில் நான் வைக்கிறேன். பகவானே! மேலுங் கீழும் தேவர்களுடனிணைந்து அந்தர் யாமத்தில் நீ ஆனந்தமாக வேண்டும். ந. நீ சுவயசித்தன், எங்களுக்கு உணவை இனிமை நிறைந்ததாக்கவும். சோதி சகத்தின் எல்லா சத்திகளுக்கும் நான் உன்னை நாடுகிறேன். ச. மனம் உன்னை நுழையவேண்டும். ரு. நீ விரியும் வானவழியாய் செல்லவும். சு. சுவாஹா! பிரிய சுபாவத்தின் உன்னை சூரியனுக்கு நான் நாடுகிறேன். எ. ரசிமி பானஞ்செய்யும் தேவர்களுக்கு உன்னை நாடுகிறேன். அ. இது உனது சன்மஸ்தானம், நான் உன்னை அபானனுக்கு நாடுகிறேன். க. ச. ந.

---

## அநுவாகம் ௨சு

### இந்திரன்—வாயு

க. புனிதம் பருகும் [1]வாயுவே! எங்களிடம் வரவும். உங்கள் குதிரைகள் ஆயிரமாகும், தேவனே! விசுவ வியாபகனே! எதனால் நீ முதற் பானத்தைத் தரித்து

---

* பகையொழி கருவி.

௨௫. கருத்து—அபானம் போலான பலத்துக்கும் சோமனை நாடவும்.

1 மொழியே

ளாயோ அதனால் இவ்வினிய பானம் உனக்குப் பொழி யப்பட்டுளது. உ. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய், வாயுக்கு உன்னை நாடுகிறேன். ந. [1]இந்திரனே, [2]வாயுவே! இதோ இப்பானங்கள். இச் சாதனங்களுக்கு நீங்கள் வாருங்கள். ஏனெனில் இந்துக்கள். உங்களை விரும்புகின்றன. ச. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். இந்திரன் வாயுவுக்கு உன்னை நாடுகிறேன். [3]இது உனது சன்ம ஸ்தானமாகும். நண்பர்களுக்காக நான் உன்னை நாடுகிறேன். க. ச. ச.

---

## அநுவாகம் சஎ.

### மித்திர வருணன்

க. ருதம் பெருக்கும் மித்திர வருணனே! இந்த சோமன் உங்களுக்குப் பொழியப்பட்டுளது. இனி என் அழைப்புக்குச் செவி சாயுங்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். மித்திர வருணனுக்கு உன்னை நான் நாடுகிறேன். [4]இது உனது சன்ம ஸ்தானமாகும். சத்தியர்களுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். க. ச. ரு.

---

## அநுவாகம் சஅ.

### அசுவினிகள் க.

க. அசுவினிகளே! தேன் தோய்ந்து பிரியம் நிறையும் உங்கள் சாட்டையால் யக்ஞத்தைப் பரிசிக்கவும். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய்; அசுவினிகளுக்கு உன்னை

---

சசு. கருத்து. சோமனை சொல் சக்திக்குப் பற்றவும்.

சஎ. கருத்து—கண்போலாகும் அறிவு உறுதிக்குப் பற்றவும்

1 பலமே 2 பேச்சே 3 மொழி 4 கண் காட்சி.

நாடுகிறேன், 1 இது உனது சன்ம ஸ்தானமாகும். இனிமைக்கு உன்னை நான் பற்றுகிறேன். க. ச. கூ.

---

## அநுவாகம் சகூ.

### அசுவினிகள் உ.

க. முதன்மையாய் இணைக்கும் நீங்கள், இளகியுளீர்கள். அசுவினிகளே! இந்த சோமனைப் பருக நீங்கள் இங்கு வாருங்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். இது உனது சன்மஸ்தானம், 2அசுவினிகளுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். க. ச. எ.

---

## அநுவாகம் ரு௦.

### சுக்கிர மந்திரங்கள் 1

க. வேனன் பிருசினி கருப்பத்தில் புலனுகுபவற்றை புலர்ச்சியாக்கியுளான். அவன் சோதியில் சூழ்ந்து வான விரிவிலே யுளான். அறிஞர்கள் அவனை சூரியன், சலசந்தியில் சிசுவைப்போல் சித்தங்களால் பாலனஞ் செய்கிறார்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். நான் சண்டனுக்கு உன்னைப் பற்றுகிறேன். 3இது உனது சன்மஸ்தானமாகும். நீ சனத்தைக் காக்கவும். க. ச. அ.

---

சஅ. கருத்து—சிகித்சை யளிக்கும் அசுவினிகளின் சக்திக்குப் பற்றவும்.

சகூ. கருத்து—கேள்வி சக்திக்கு சோமன்

ரு௦. கருத்து—மனம் இருதயத்துக்கு சோமபானம்

1 செவி 2 சிகிச்சைகளுக்கு 3 மனம் ஆத்மா

## அநுவாகம் ருக.

### சுக்கிரமந்தினம் உ.

க. நீ உன் மொழியால், முன்போல் பூர்வம் போல் எப்போதும் இப்போதும் போல், தருப்பை சாய்ந்து சுவர்க்கங்கண்டு, பலன் பிரியன் பெரியவனு யுள்ளவனைக் கறக்கிறாய், நீ துரித ஜயனைபெருகும் பொருள்களில் நாடுகிறாய். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். நான் உன்னை மர்க்கனுக்குப் பற்றுகிறேன். இது உனது சன் மஸ்தானம். நீ பிரஜைகளைப் பாதுகாக்கவும். க. ச. கூ.

---

## அநுவாகம் ருஉ.

### அக்கிராயணம் க.

க. சோதியில் பதினொன்றாயும் சகத்தில் பதினொன்றாயும் சலங்களில் மகத்தாயமரும் பதினொன்றுமான நீங்கள் இந்த யக்ஞத்தை அங்கீகரியுங்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். நீ முதல்வன், நீ மேலான முதல்வன். நீ யக்ஞத்தைத் துரிதமாக்கவும், யக்ஞபதியைத் துரிதமாக்கவும், சாதனங்களைக் காக்கவும்; விஷ்ணு உன்னைக் காக்கட்டும். நீ சனத்தை உன் சத்தியால் காக்கவும், இது உன் சன்மஸ்தானம்; விசுவே தேவர்களுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. க௦.

---

ருக. கருத்து—மனம் இருதயத்துக்கு சோமபானம்.

ருஉ. **கருத்து—ஆத்ம பலத்துக்குப் பானம்.**

## அநுவாகம் ருங.

### அக்கிராயணம் உ.

க. மூன்று முப்பதாய், சத்துரு ஒழிக்கும் ருத்திர கணர்கள் சோதி, வானத்தைச் சேவை புரிகிறார்கள். கக. ருத்திரர்கள் சலங்களில் சாய்ந்துளார்கள். அவர்கள் யக்ஞத்துக்கு சோமாமிருதத்தைப் பற்றட்டும். உ. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய்; நீ முதல்வன், நீ மேலான முதல்வன்; யக்ஞத்தைத் துரிதமாக்கவும், யக்ஞபதியைத் துரிதமாக்கவும். மொழிகளைக் காக்கவும்; உன்னை விஷ்ணு காக்கட்டும்; சனத்தை உன் சத்தியால் காக்கவும். இது உன் சன்மஸ்தானம்; நான் எல்லா தேவர்களுக்கும் உன்னைப் பற்றுகிறேன். க. ச. கக.

---

## அநுவாகம் ருச.

### உக்தியம் 1

க. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். நான் உன்னை பலசாமனுன திடமுடன் துதி விரும்பும் இந்திரனுக்கு கிரகிக்கிறேன். இந்திரனே! உன் பெரும் பலத்துக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். நான் விஷ்ணுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உன் சன்மஸ்தானம். துதி விரும்பும் இந்திரனுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். க. ச. கஉ.

---

ருங. கருத்து—ஆத்ம சக்திக்குப் பானம்.

ருச. கருத்து—பூரண பலத்துக்கு பற்றுங்கள். பகைவரின் பலம்.

## அநுவாகம் ருரு

**துருவம் 1**

க. தேவர்கள் தங்கள் முதன்மையான வற்றிற்குக் கிருகமாக, கவி, அரசன், புவி தூதன், ருதசன்மன், மனிதர் அதிதி, வைசுவாநரன், சுவர்க்கத் தலைவனை அக்கினியை புலனாக்கியுள்ளார்கள். உ. [1]நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். அக்கினி வைசுவாநரனுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன், நீ நிலையன், நிலை நிவாசன், நிலையின் அதி நிலையன். நிலைகளின் அதிநிலைய நிலையன். இது உன் சன்மஸ்தானமாகும். அக்கினி வைசுவாநரனுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். க. ச. கந.

---

## அநுவாகம் ருசா.

**ருதுக் கிருகங்கள்**

க. நீ மதுவாகும், நீ மாதவனாகும், நீ சுக்கிரனாகும். நீ சுசியுமாகும், நீ நபனாகும், நபசியனு மாகும், நீ உணவாகும், நீ பலமாகும், நீ ஸஹனாகும், ஸஹஸ்யனுமாகும், தபனாகும் தபஸ்யனாகும். உ. நீ ஆதரவோடுப் பற்றப்படுகிறாய். ந, நீ சம்சர்ப்பனாகும். [2]நான் உன்னை [3]அம்ஹஸ்பத்தியனுக்குப் பற்றுகிறேன். க. ச. கச.

---

ருரு. கருத்து—ஆயுசுக்கு சோமனைப் பற்றுங்கள்.

ருசா. கருத்து—ருது சோமன்களைப் பற்றுங்கள்

1 இடஸ்தானம். 2 நன்கு செல்பவன் ; 3 தலைத்துன்பங் கழிய.

## அநுவாகம் ருஎ.

### இந்திர அக்கினி

க. இந்திரனே! அக்கினியே! இன்பம் பொங்கும் சோமபானமுடனுள்ள எங்கள் துதிக்கு வாருங்கள். எங்கள் துதியால் எழுந்து அதன் இரசத்தைப் பருகுங்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். இந்திர அக்கினிக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனது சன்ம ஸ்தானமாகும். இந்திர அக்கினிக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. கரு.

---

## அநுவாகம் ருஅ.

### விசுவே தேவர்கள்

க. போஷகர்களே, விசுவே தேவர்களே! மனித ரட்சகர்களே, யஜமானனின் சோம பானத்துக்கு உதாரமாய் வாருங்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். விசுவேதேவர்களுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உன் சன்ம ஸ்தானம், விசுவே தேவர்களுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. ககூ.

---

## அநுவாகம் ருகூ.

### மருத்துக்கள்

க. நாம் நவீனப் பாதுகாப்புக்கு தாராளன் உக்கிரன் சர்வபலன் திடவிருஷபன் பலமளிக்கும் மருத்துக்க

---

ருஎ. கருத்து—பலிஷ்டன் புத்திமானுக்குப் பற்றுங்கள்.

ருஅ. கருத்து—சகல சனங்களுக்கும் சோமனைப் பற்றுங்கள்.

ளுடனுகும் இந்திரனை அழைப்போமாக. உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிருய், மருத்துக்களுடனுன இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனது சன்மஸ்தானம், மருத்துக்களுடனுன இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. கஎ.

---

## அநுவாகம் கூ௦.

### மருத்துக்கள்

க. நீ சர்யாதையுடன், முதன்மையாய் பொழியும் பானத்தைப் பருகுவதுபோல், இந்திரனே! இங்கு சோமனை மருத்துக்களுடன் பருகவும். வீரனே! யக்ஞம் நன்கறியுங் கவிகள் உன்னை அநுசரிக்கிருர்கள். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிருய். மருத்துக்களுடனுன இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனது சன்மஸ்தானம். மருத்துக்களுடனுகும் இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. கஅ.

---

## அநுவாகம் கூக.

### இந்திர—விருஷபன்

க. இந்திர விருஷபனே, இன்பம் மகிழ்வுக்கு உன் பிரியம்போல் சோமனைப் பருகவும். இனிய அலையை உன் உதரத்தில் ஊற்றவும். நீ பழைய இரசங்களது மன்னனுகும். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிருய். மருத்துக்களுடனுகும் இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது

---

ருகூ. கருத்து—பாமரர்களுக்குச் சோமனைப் பற்றுங்கள்.

கூ ம. கருத்து—சேனைகளுக்குச் சோமனைப் பற்றுங்கள்.

உனது சன்மஸ்தானம்; மருத்துக்களோடாகும் இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. ௧௯.

---

## அநுவாகம் ௯௨.

### மஹேந்திரன்

க. இந்திரன் மழையுடனாகும் பர்ஜன்னியனைப் போல் தன் பலத்தால் பெரியவனாயுள்ளான். அவன் வத்சனின் துதிகளால் வளர்கிறான். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். மகேந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உன் சன்மஸ்தானம், மகேந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. ௨௦.

---

## அநுவாகம் ௯௩.

### மகேந்திரன்

க. வீரனாய், ஓங்கும் பலத்தின் ஓயாத பலிஷ்டனாய் மனிதரை நடத்தும் இந்திரன் பெரியவன். பலத்துக்கு அவன் எங்கள் பக்கம் பெருகுகிறான். அவன் விரிந்தும் படர்ந்தும் செயல் செய்பவர்களால் சீலமாயுள்ளான். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். மகேந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உன் சன்மஸ்தானம். நான் மகேந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. ௨௧.

---

௯௧. கருத்து—பெரியவன் பொழிபவனுக்கு சோமனைப் பற்றுங்கள்.

௯௨. கருத்து—மகத்தாய் தலைமை வகிப்பவனுக்குப் பற்றுங்கள்.

௯௩. கருத்து—மகேந்திரனுக்கு சோமனைப் பற்றுங்கள்.

## அநுவாகம் கூச.

### ஆதித்தியர்கள்

க. நீ ஒருபோதும் இம்சிப்பவனுவதில்லை. இந்திரனே! நாடுபவனை நீ நீக்குவதில்லை. மகவானே! இப்போது மேலும் மேலும் உன் தேவதானம் பெருகியுளது. உ. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய், ஆதித்தியர்களுக்கு உன்னைப்பற்றுகிறேன். ந. நீ ஒருபோதும் கவன சூன்னியமில்லை. ஆனல் நீ இரு சன்மங்களையுங் காக்கிருய். நான் காவது ஆதித்தியனே! யக்ஞம் உன் பலமாகும். சோதியில் அமிருதம் தயாராயுளது. ச. யஜமானன் தேவர்களின் பிரியத்தை நாடுகிருன். ஆதித்தியர்களே! நீங்கள் பிரியமாயிருங்கள். எங்களைத் துன்பத்தினின்று நீக்க உமது பிரிய அன்பு இங்கு வரட்டும். ரு. ஒளி வீசும் ஆதித்தியனே! இது உனது சோமபானம். அதில் இன்பமாகவும், அதில் ஆனந்தமாகவும். உன்னை ஆனந்தமாக்கும் நாங்கள், ஆனந்தமாகவேண்டும். சோதியின் மழையுடன் நான் உன்னைச் சேர்க்கிறேன். க. ச. உஉ.

---

## அநுவாகம் கூரு.

### சவிதா

க. சவிதாவே! இன்று செல்வம் நாளை செல்வம் என்றும் செல்வத்தை எமக்குப் பிரேரிக்கவும். இவ்வறிவால் க்ஷேமமாகச் செல்வத்தை யடையவேண்டும். தேவனே! உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிருய். தேவ சவிதாவுக்கு உன்னைப்பற்றுகிறேன். க. ச. உங.

---

கூச. கருத்து—ஆதித்திய உண்மை.

கூரு. கருத்து—மனத்துக்குச் சோமனைப்பற்றுங்கள்.

## அநுவாகம் சுசு.

### சவிதா

க. சவிதாவே! இம்மை சூன்னியக் காப்புக்களுடன் மங்களமாய் எங்கள் வீட்டை நீ இன்று காக்கவும். பொன்னுயுள்ள நீ புது க்ஷேமத்துக்கு எங்களைக் காக்கவும். புன்மை புரிபவன் எங்களை அரசுபுரிய வேண்டாம். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். தேவசவிதாவுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. உச.

---

## அநுவாகம் சுஎ.

### சவிதா

க. நான் பொன்கை சவிதாவை துணைக்கு அழைக்கிறேன். தேவனுகும் அவன், பதத்தை அறிகிறான். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். தேவ சவிதாவுக்கு உன்னைப்பற்றுகிறேன். க. ச. உரு.

---

## அநுவாகம் சுஅ.

### விசுவேதேவர்கள்

க. நீ நற்சுகமளிப்பன், நீ நன்கு நிலைத்துள்ளவன். உ. பெரிய காளைக்கு நமஸ்காரம். ங. இது உனது சன்மஸ்தானமாகும்; விசுவே தேவர்களுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. உசு.

---

சுசு. கருத்து—சோதிக்கு சோமனைப்பற்றுங்கள்.

சுஎ. கருத்து—உற்பத்தி சக்திக்குச் சோமனைப் பற்றுங்கள்.

சுஅ. கருத்து—பொது நலப்பிரியர்களுக்கு சோமனைப் பற்றுங்கள்.

## அநுவாகம் சுக.

### அக்கினி

க. இந்துவே! வீரியம் நிறைந்து பிரகஸ்பதியால் புல்ஞகி மனைவிகளுடன் இணையும் உன் கிரகத்தை நான் பற்றுகிறேன். உ. அக்கினியே! நீ மனைவிகளுடன் தேவதுவஷ்டாவோடு சேர்ந்து சோமனைப் பருகவும். சுவாஹா! க. ச. உஎ.

---

## அநுவாகம் எ0.

### குதிரை சேர் கிருகம்

க. நீ குதிரையாகும், குதிரை இணைப்பவன், குதிரை ஏறுபவன், வச்சிராயுதம் வகிப்பவன், பிருஷ்ணி பிரோகன்; தேவஞன சோமனே! யக்ஞத் துதி, ஸ்தோமம் மந்திரம் மொழியப்படும் உனக்கு குதிரை சேரும் கிருகத்தை, நான் கிரகிக்கிறேன். உ. நீங்கள் இருவர்கள் குதிரைகள். நீங்கள் குதிரைகளுக்கு சோமன் கலந்துள்ள தானியங்களாகும். ந. இந்திரனுக்கு சுவாஹா! க. ச. உஅ.

---

## அநுவாகம் எக

### அக்கினி உபகிருகம்

அக்கினியே! நீ ஆயுசைப் புனிதஞ்செய்கிருய். நீ எங்களுக்கு உணவையும் பலத்தையு மளிக்கவும். துஷ்ட சேனைகளை தூரத்திலே துரத்தவும். உ. நீ ஆதரவுடன்

---

சுசு. கருத்து—அக்கினியை நாடவும்.

எ0. கருத்து—குதிரைகளைச் சேரவும்.

பற்றப்படுகிறாய், தேஜசுள்ள அக்கினிக்கு உன்னைப் பற்று கிறேன். இது உனது சன்மஸ்தானமாகும்; தேஜசுள்ள அக்கினிக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. உகூ.

---

## அநுவாகம் எஉ.

### இந்திர உபகிருகம்

க. இந்திரனே! உன் ஓஜசால் எழுந்து சேனை பொழியும் சோமனைப் பருகியவுடன் உன் தாடைகளை அசைக்கிறாய். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய், ஓஜசுள்ள இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உன் சன்மஸ்தானம். ஓஜசுள்ள இந்திரனுக்கு உன்னைப் பற்று கிறேன். க. ச. ௩௦.

---

## அநுவாகம் எ௩.

### சூரிய உபகிருகம்

க. நீ ஜயிக்கும் சகல தரிசியாகும். சூரியனே! நீ சோதி செய்பவன். நீ எல்லா சகத்தையும் பிரகாசஞ் செய்கிறாய். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். சோதியான சூரியனுக்கு உன்னைப்|பற்றுகிறேன். இது உனது சன்ம ஸ்தானமாகும். சோதியான சூரியனுக்கு உன்னைப்பற்றுகிறேன். க. ச. ௩க.

---

எக. கருத்து—அக்கினி போற்று.

எஉ. கருத்து—இந்திரனை மறுபடியும் பற்று.

எ௩. கருத்து—சூரியனைச் சேரவும்.

## அநுவாகம் எச.

### இனிய சோமன்

க. அதி இனிய சோமனே ! உன் சகல துணைகளுடன் நீ பெருகவும். நீ எமக்குப் பொருள் பூர்ணமுடனாகவும். க. ச. ரு௨.

---

## அநுவாகம் எரு.

### உஷை

க. பூர்வத்தில் பூர்வோதய உஷை பார்ப்போர்கள், பிரிவார்கள். நமக்கு உஷைப் புலனாகியுளது. வருங் காலங் காணவும் அவள் வருவாள். க. ச. ரு௩.

---

## அநுவாகம் எசு.

### சோதி

க. சோதியாயுள்ள உன்னை நான் வைக்கிறேன். ௨. சோதி செய்யும் உன்னை நான் வைக்கிறேன். ௩. சோதி காணும் உன்னை நான் வைக்கிறேன். ச. சோதி வீசும் உன்னை நான் வைக்கிறேன். ரு. எரியும் உன்னை நான் வைக்கிறேன். சு. மின்னும் உன்னை நான் வைக்கிறேன். எ. சுவலிக்கும் உன்னை நான் வைக்கிறேன், அ. சுடர் வீசும் உன்னை நான் வைக்கிறேன். சு. அமுதனை உன்னை நான் வைக்கிறேன். க0. பெருஞ் சோதியுள்ள உன்னை நான் வைக்கிறேன். கக. எழுச்சியாகும் உன்னை நான் வைக்கிறேன். க௨. விழித்துள்ள உன்னை நான் வைக்கிறேன். க. ச. ருச.

---

**எச. கருத்து—சோமனின் செழிப்பு.**

**எரு. கருத்து—உஷை நோக்கவும்.**

**எசு. கருத்து—சோதி பற்று.**

## அநுவாகம் எஎ.

### பலம்

க. பலத்துக்கு சுவாஹா! முயற்சிக்கு சுவாஹா! விவிதத்துக்கு சுவாஹா! உழைப்புக்கு சுவாஹா! பிரயத்தனத்துக்கு சுவாஹா! நாடுவதற்கு சுவாஹா! சுத்தத்துக்கு சுவாஹா! சோகத்துக்கு சுவாஹா! தவஞ் செய்வதற்கு சுவாஹா! தவத்துக்கு சுவாஹா! பிரமஹத்திகு சுவாஹா! அனைத்துக்கும் சுவாஹா! க. ச. நரு.

---

## அநுவாகம் எஅ.

### தேவர் எங்கே?

க. மனிதர்களே நீங்கள், தசையுடன் சித்தத்தை ஈரற்குலையுடன் பவத்தை, இளந்தசையுடன் ருத்திரனை தூல இருதயத்துடன் பசுபதியை இருதயத்துடன் அக்கினியை, இரத்தத்துடன் ருத்திரனை, சலாசயங்களுடன் சர்வனை உதிர மாமிசத்துடன் மகாதேவனை, குடல்களுடன் துரிதமாய்க்கொல்பவனை யறியுங்கள். க. ச. நசு.

---

## அநுவாகம் எகூ.

### க்ஷோட சீனம்

க. விருத்திரசம்காரனே! உன் இரதத்தை ஏறவும். உன் குதிரைகள் எங்கள் பிரமத்தால் சேர்க்கப்பட்டுள்ளன. முழங்கு மாயுதம் உன் மனத்தை எங்கள் பக்

---

எஎ. கருத்து—நமக்கு அவசியமானவை.

எஅ. கருத்து—எல்லா தேவர்கள் உங்களகத்திலாகும்.

கம் திருப்பட்டும். உ. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். ஷோடசின இந்திரனுக்கு உன்னை நான் பற்றுகிறேன். இது உன் சன்மஸ்தானம். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. ௩எ.

---

## அநுவாகம் அ௦.

### ஷோடசின இந்திரன்

க. இரு குதிரைகள் இணையற்ற பலத்தின் இந்திரனை ருஷிகளின் துதிக்கும் மனித யக்ஞத்துக்கும் வகித்துச் செல்லுகின்றன. உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உன் சன்மஸ்தானம். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப்பற்றுகிறேன். க. ச. ௩அ.

---

## அநுவாகம் அக.

### ஷோடசின இந்திரன்

க. இந்திரனே! சோமன் உனக்குப் பொழியப்பட்டுளது. அதிபலனே! உக்கிரனே! நீ இங்கு வரவும். சூரியன் தன் ரசிமிகளால் வானத்தைச் சூழ்வதுபோல் வன்மை உன்னைச் சூழட்டும். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனது சன்மஸ்தானம். ஷோடசின இந்திரனுக்கு நான் உன்னைப்பற்றுகிறேன். க. ச. ௩௯.

---

எகூ. கருத்து—பதினறு கலைகளுடனுகும் இந்திரன்.
அ௦. கருத்து—இன்னும் இந்திரன்.

## அநுவாகம் அஉ.

### ஷோடசீன இந்திரன்

க. சகலருஞ் சூழும் சகம் உன்னை அவள் அங்கத்தில் வைத்துளாள். நீ சுகமளித்து, சுகநிலய மாகவும். நீ விரிந்து விஸ்தாரக் காப்பை அவனுக்கு அளிக்கவும். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன்! இது உனது சன்மஸ்தானமாகும். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. ச௦.

---

## அநுவாகம் அ௩.

### ஷோடசீன இந்திரன்

க. ஷோடசின இந்திரன் மகானாகும், வச்சிராயுதக் கையுடன் அவன் சுகமளிக்கட்டும். பகவான் எமக்குச் க்ஷேமத்தைச் செய்யவேண்டும். எங்கள் துவேஷியை அவன் தொலைக்கட்டும். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனது சன்மஸ்தான மாகும். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். க. ச. சக.

---

## அநுவாகம் அச.

### ஷோடசீன இந்திரன்

க. இந்திரனே! மருத்துக்களுடன் இணைந் திசைந்து நீ சோமனைப் பருகவும், வீரனே! அறிஞனே! விருத்திர சம்காரனே! எங்கள் எதிரிகளைக் கொல்லவும், பகைவர்களைத் துரத்தவும். இப்படி எமக்கு நீ அச்சமன்னியிலாக்

கவும். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன்; இது உன் சன்ம ஸ்தானம். ஷோடசின இந்திரனுக்கு உன்னைப் பற்று கிறேன். க. ச. சஉ.

---

## அநுவாகம் அரு.

### சம்ஸ்கிருதம்

க. கிரணங்கள், தேவனான ஜாத வேதசனை அனை வருங்காண உயரச் சுமந்து செல்லுகின்றன. உ. மித்திர வருண அக்கினியின் கண்ணான தேவ திவ்ய சதிருசன் எழுந்து சோதி வானம் பூமியை நிறைத்துளான். சூரிய னான அவன் அசையும் அசையாப் பொருளின் ஆத்மா வாகும். ங. அக்கினியே! எல்லா வழிகளை யறியும் தேவனே! நல் வழியால் எங்களைச் செல்வத்துக்கு அழைத்துச் செல்லவும். நீ கோணலான கயமையை எங்களிடமிருந்து கழிக்கவும். உனக்கு வெகு பல துதி வணக்க மளிப்போம். ச. சோதிக்குச் செல்லவும், சுவர்க் கம் பறக்கவும். ரு. என் ரூபத்தால் உன் ரூபத்தை யடை கிறேன். என் ஆயுசால் உன் ஆயுசை யடைகிறேன். சு. எல்லாமறியும் தூதன் உங்களுக்கு மிக்க உயரிய வானத்தில் பகிர்ந்து கொடுக்கவேண்டும். எ. உனது இந்தச் செல்வம் சோமனால் தூண்டப்பட்டு வருகின்றது. அ. மித்திரனின் வழியால் நீ அதை அழைத்துச் செல்ல வும். கூ. யக்ஞ நெறியுடன் சுபஞ் செலுத்தும் சந்திர தட்சிணை வழியில் நீங்கள் செல்லுங்கள். கo. யக்ஞ தட் சிணைக் கருகனாய் திவ்ய தாதை தந்தையின் பேரன் மக னாய் ருஷிகளின் வழியான ருஷியாகும் பிராமணனை

---

அக—அச. கருத்து—எல்லாம் இந்திரனை பற்றி யாகும்.

நான் இன்று அடையவேண்டும். கக. சுவர்க்கம் பார்க்கவும், வானங் காணவும். கஉ. அங்குள்ளவர்களுடன் சேரவும். கங. எங்களா லளிக்கப்படும் நீங்கள் தேன் நிறைந்து தேவர்களுக்குச் செல்லுங்கள். அளிப்பவனை நுழையுங்கள். தேவர்களுக்குச் செல்லும் வழியால் எங்களை விட்டு விடாமல் செல்லுங்கள், சுகிருத சகத்தில் அமருங்கள். எமக்கு இது சம்ஸ்கிருதமாகட்டும். க. ச. சங.

---

## அநுவாகம் அசு.

### விருப்பங்கள்

க. சவிதா, அக்கினி, தானசீல தாத்ரு, தனபதி பிரஜாபதி எமக்கு இச் செயலில் இன்ப மாகவேண்டும். விஷ்ணு துவஷ்டா யஜமானனுக்கு பிரசையுடன் பொருளை பிரியமா யளிக்கவேண்டும். உ. இந்திரனே! இருதயத்தில் எங்களைப் பசுக்களுடன் இணைக்கவும், தானசீலர்களுடன் க்ஷேமத்தோடு எங்களைச் சேர்க்கவும். மகவானே! தேவர்களால் செய்யப்படும் திவ்ய அறிவுடன், யக்ஞஞ் செய்யப்படும் தேவர்களின் நல்ல மனத்தோடு எங்களை ஒன்றாக்கவும். ந. சுபமான மனங்களுடன், புகழோடு பாலோடு யாமே கலந்துளோம். துவஷ்டா எமக்குச் செல்வத்தைச் செய்யவேண்டும். அவன் எங்கள் தேகங்களின் எத் தீமையையும் தூய்மை யாக்கவேண்டும். ச. அக்கினியே! நாங்கள் உன்னை இன்று இந்த யக்ஞஞ் செய்யுங்கால் எங்கள் ஹோதாவாக நியமித்துளோம். நீ சிறப்பாய் யக்ஞஞ் செய்துளாய். நீ சீலமாய் முயற்சி செய்துளாய். அறிவும் முன்னறிவுமான நீ, யக்ஞத்துக்கு வரவும். ரு. தேவர்களே! இவ்வாச

---

அசு. கருத்து—அக்கினி மகிமை.

னத்தை சுவாஹாவுடன் உங்களுக்குச் செய்துளோம். சகல செல்வர்களே! இங்கு இந்த யக்ஞத்தில் இன்பமாகும் நீங்கள், புசித்துப் பருகியவுடன் எமக்குச் செல்வத்தை யளியுங்கள். சு. தேவனே! நீ விருப்பமாய் தேவர்களை இங்கு கொண்டு வந்துளாய். அக்கினியே! நீ அவர்களை அவர்கள் நிலயத்திலேயே தூண்டவும். அவி சுமந்து வந்து சோதி செல்வ யக்ஞத்தை நீங்கள் ஏறுங்கள். எ. யக்ஞமே! யக்ஞத்தைச் சேரவும். யக்ஞபதியை யணுகவும். உனது சன்மஸ்தானத்தை நாடவும். சுவாஹா! அ. யக்ஞபதியே! நல்ல வாக்குக்களுடன் நலமான வீரர்களை யுண்டுபண்ணும் இது, உனது யக்ஞமாகும் சுவாஹா! கூ. வழிகாணும் தேவர்களான நீங்கள் வழிகண்டு வழியில் செல்லவும். கo. தேவனே! மனத்தின் பதியே! தேவர்களில் எமக்காக இந்த யக்ஞத்தை ஸ்தாபிக்கவும், சுவாஹா! வாக்கை வைக்கவும். சுவாஹா! காற்றை வைக்கவும் சுவாஹா! க. ச. சச.

---

## அநுவாகம் அஎ.

### வருணன்

க. வருணராஜன் சூரியன் செல்ல, விரியும் வழியைச் செய்துளான். அவன் அவனை வழியற்ற வழியில் பாதங்கள் வைக்கச் செய்துளான். அவன் இருதய இன்னல் செய்யும் எதையும் நீக்குகிறான். உ. அரசனே! உன் சிகிச்சைகள் நூறு ஆயிரமாகும். உன் நல் மனம் விரிந்தும் ஆழ்ந்துமிருக்கட்டும். நீ துவேஷிகளை ஜயிக்கவும், சத்துருவை யொழிக்கவும், நாங்கள் செய்துள்ள பாவத்தை நீக்கவும். ந. வருணனின் பாசம் நீக்கப்பட்டுள்ளது.

---

அசு. கருத்து—தோத்திரம்

௪. அக்கினியின் முகம் சலங்களில் நுழைந்துள்ளது, சலமகன் அரக்கர் பலத்தினின்று காக்கிறான். அக்கினியே! ஒவ்வொரு வீட்டிலும் நீ சமித்தை யளிக்கவும், உன் நாக்கு நெய்யை நாடட்டும். ரு. சமுத்திரத்தில் சலத்தினுள்ளே உனது சித்தமாகும். சலங்களும் செடி கொடிகளும் உன்னை நுழையட்டும். யக்ஞபதியே! வணக்க மொழியில் துதியின் உச்சரிப்பில் யக்ஞ அவிகளுடன் நாங்கள் நாடட்டும். சு. ஓ ஸ்னன நீரே! வெள்ளப் பெருக்கே! நீ பெருகுகிறாய். சலப்பெருக்கே! நீ யக்ஞத்தால் தேவர்களுடன் தேவர்களால் செய்யப்படும் பாவத்தை நீக்கியுளாய். மனிதர்களால் செய்யப்படும் பாவத்தை மனிதர்களுடன் நீக்கியுளாய். விரியும் எதிரியினின்று நீ எங்களைப் பாதுகாக்கவும். எ. சலம் செடி கொடிகள் எமக்கு நட்புடனிருக்கட்டும். எங்களை வெறுப்பவனிடம் நாங்கள் வெறுப்பவனிடம் அவர்கள் நட்பன்னியிலிருக்கட்டும். அ. திவ்ய சலங்களே! இது உன் கருப்ப ஸ்தம்பமாகும். நாங்கள் அதை இன்பமாயும் இனிய போஷிப்போடும் உங்களுக்குச் செய்துளோம். நற்செயல் ஆசிரியர்களாக எங்களை தேவர்களில் கோஷியுங்கள். கூ. வருணனின் பாசம் கட்டப்பட்டுளது. வருணனின் பாசம் நீங்கியுளது.

க0. நீ சமித்தாகும், நாங்கள் செழிக்கவேண்டும். நீ உதய சாதனன். நீ தேஜசாகும். நீ எனக்குத் தேஜஸை யளிக்கவும். கக. நான் சலங்களுக்குச் சேர்ந்துளேன். நான் இரசத்துடன் இணைந்துளேன். அக்கினியே! நான் பால்நிறைந்து வந்துளேன். நீ என்னை வர்சஸோடு சேர்க்கவும். க. ௪. ௪ரு.

[கஙஎ-ம் அநுவாகம் பார்க்க]

---

அஎ. கருத்து வருண மகிமை.

## அநுவாகம் அஅ.

### யக்ஞங்கள்

க. மிருதனை நான் அமிருதனை உன்னை சீலமான சித்தத்தால் அழைக்கிறேன். ஜாதவேதசனே! நீ எங்களில் யசசை யளிக்கவும். அக்கினியே! நான் பிரஜைகளால் அமிருதத்தைப் பெறவேண்டும். உ. அக்கினியே! எவன் நற்செயல்களுக்கு நீ சுகஞ்செய் சகத்தைச் செய்கிறாயோ அவன் பசு வீரர் மக்கட்கள் மிகுந்து செல்வம் செழிப்பை ஜயிப்பான். ங. பல மகனே! அவர்கள் உன்னையே விருப்பம் நிறைய நோக்குகிறார்கள். இந்திரனே! எவனும் உனக்கு மேன்மையாவதில்லை. ச. யஜமானர்கள் சமான பலத்துடன் தந்தையை பிள்ளைகள் போல் மகவானைத் துணைக்கு அழைக்குங்கால், பொழியும் சோமன் ஒவ்வொரு துதியிலும் இந்திரனை இன்பமுடனாக்குகிறான். ரு. அக்கினியே! ஜாதவேதசனே! அரக்கர் அக்கிரமங்களைக் கொல்லும் நீ, ரசம் தேசசுடன் ஒளி வீசுகிறாய். சு. நான் ரசங்களில் சேர்ந்துளேன். நாங்கள் ரசத்துடன் இணைந்துளோம். அக்கினியே! நான் பலம் மிகுந்து வந்துளேன். நீ என்னை ஒளியுடன் சேர்க்கவும். எ. நீ செல்வன், செல்வபதி. அக்கினியே! நீ ஒளி மிகுந்தவன். நாங்கள் உன் அநுகூலத்தையடையவேண்டும். அ. அக்கினியே! நீர் செல்வபதி. செல்வர். நான் உன்னை ஆசி கூறுகிறேன். போரில் உன்னால் நாங்கள் ஜயமுடனாகவேண்டும். நாங்கள் மனிதர்களின் துவேஷங்களைத் தொலைக்கவேண்டும். கூ. அக்கினியே! பலத்தின் பெருஞ்ஜயனே! அறிஞர்கள், நன்கு துதிக்கப்படும் உன்னை போஷிக்கிறார்கள். நீ வீரர் செல்வத்தை எமக்களிக்கவும். க0. அக்கினி எமக்கு தீரர்களைச் செய்ய

வேண்டும். அவன் எதிரிகளைப் பிளந்து முன் செல்லட்டும். அவன் எங்கள் பகைவர்களை இன்பமாய் ஜயிக்க வேண்டும். போரில் பலத்துக்காக அவன் சாதனத்தை யடைய வேண்டும். கக. அக்கினி அக்கினியால் எழுச்சி யாக்கப்பட்டுளான். அவன் கவி, கிருகபதி, அவி சுமப்பவன் தன் முகத்தில் ஆயுதந் தரிப்பவன். கஉ. அக்கினியே! கவி கவியால் நலம் நன்மையால், நட்பு நண்பனால் அக்கினியால் நீ எழுச்சியாக்கப்பட்டுளாய். கங. அக்கினியே! உனது புனித சோதி கிளம்புகின்றது. கச. உனது ஒளியால் பிரகாசிக்கின்றது. க. ச. சகு.

---

## அநுவாகம் அகூ.

### அனல் ஸ்தாபனம்

க. நீ ஆழத்தில் பூமியாகும், விரிவில் சோதியாகும், வளர்ச்சியில் வானமாகும். அக்கினியே! தேவ அதிதியே! நான் உன் அங்கத்தில் உணவு புசிப்போனை உணவு உண்ண வைக்கிறேன். உ. வெண் பசுவான சூரியன் வந்துளான். அவன் சுவர்க்கம் நாடி தாய் தந்தையை மறுபடியு மணுகியுளான். ங. அவன் முப்பது முகூர்த்தங்களை அரசுபுரிகிறான். வாக்கு, பட்சிக்குச் ஆசிரிதமாகின்றது. அதை தினங்களுடன் சுமந்து செல்லவும். ச. உலகங்களின் நடுவே பிராணனின்று அபானத்தில் அவன் சுற்றுகிறான். [1]மகிஷன் சுவர்க்கத்தைப் பிரகாசிக்கிறான். ரு. அக்கினியே! நான் உன்னை கோபம் கடுமை சோகத்தால் தள்ளியிருந்தால் நீ தூய்மை செய்பவனாகவும். நாங்கள் உன்னை மறுபடியும் மூட்டுகிறோம்.[2]

---

அஅ. கருத்து—அக்கினி போற்று.

1 மேன்மையானவன். 2 எழுச்சி யாக்குகின்றோம்.

சு. வசு ஆதித்தியர் விசுவே தேவர்கள் கோபலத்தில் எங்குமான உன் தேஜஸை ஒன்று சேர்த்துள்ளார்கள். எ. மனம் சோதி [1]நெய்யி லின்பமாகவும். அவன் இங்குமங்குமான யக்ஞத்தை ஒன்று சேர்க்கவேண்டும். பிரஹஸ்பதி அதை விஸ்தரிக்கட்டும். எல்லாதேவர்களும் இங்கு சந்தோஷமாகவேண்டும். அ. அக்கினியே! உன் [2]சமித்துக்கள் ஏழாகும், உனது நாக்கள் ஏழு. உன்னை ஏழு ரிஷிகள், ஏழு யக்ஞங்கள் ஏழு ஹோதாக்கள் ஏழு பிரிய நிலயங்கள் நாடுகின்றன. நீ ஏழு மூல நிலயங்களை, நெய்யால் நிரப்புகிறாய். கூ. நீ திடத்துடன் திரும்பவும். அக்கினியே! நீ உணவு ஆயுசுடன் திரும்பவும், நீ எங்களை எங்கும் பாதுகாக்கவும். கூ0. அக்கினியே! நீ செல்வத்துடன் திரும்பவும், எங்கும் எல்லாஞ் ஜயித்து நீ தாரையோடு திடமாகவும்.

கக. [3]இலேகன், சலேகன், சுலேகன்—இவ்வாதித்தியர்கள் இன்பமாகி எங்கள் நெய்யைப் பருகட்டும். கேதன், சகேதன், சுகேதன்—இவ்வாதித்தியர்கள் இன்பமாகி எங்கள் [4]நெய்யைப் பருகட்டும். அதிதி, தேவஜூதி விவசுவன்—இவ்வாதித்யர்கள் மகிழ்ந்து எங்கள் நெய்யைப் பருகட்டும். க. நி. ந.

---

## அநுவாகம் கூ0.

### ஆஹவனீயம் 5

க. தூரத்தினின்றே நம்மைச் செவியுறும் அக்கினிக்கு மந்திரத்தை யக்ஞ மணுகுங்கால் மொழிவோம்.

---

அகூ. கருத்து—அக்கினியை ஸ்தாபிக்கவும்.

1 தேசசில். 2 கருவிகள். 3 அனலாதித்தியரின் பல நாமங்கள். 4 நட்பை. 5 தேகம் ஒங்க நாடுவதற்கான யனல்.

௨. வீரர்கள் ஆயிரம் வெல்லும் ரிஷியினிடமிருந்து அவன் பழைய ஒளி நாடி சோதியைக் கறந்துளார்கள். ௩. அக்கினி சோதியின் சிரமும் சிகரமுமாகும், புவி பதியாகும். அவன், இங்கு சலங்களின் ரேதசுகளைத் துரிதமாக்குகிறான். ௪. இங்கு யக்ஞங்களில் அழைக்கப்படும் இளம் ஹோதா வீடுவீடாய் வியாபகமாகி, [1]அப்னவானன் [2]பிருகுக்களால் பிரகாசமாகி பற்றப்படுபவர்களால் தரிக்கப்பட்டுளான்.

௫. இந்திராக்கினியே! நீங்கள் இருவர்களும் அழைக்கப்படுவீர்கள். அளிப்பில் இணைந்து இருவர்கள் இன்பமாவீர்கள். நான் போரின் ஜயத்துக்காக உணவு பொருளளிக்கு முங்களை அழைக்கிறேன். ௬. நீ தோன்றி பிரகாசமாகும் இது, உனது சன்மஸ்தானமாகும். அக்கினியே! நீ அதை அறிந்து ஏறவும். நீ எமது செல்வத்தைச் செழுமையாக்கவும். ௭. அக்கினியே! நீ ஆயுசைப் புனிதஞ் செய்கிறாய். நீ உணவையும் பலத்தையும் எமக்கு அளிக்கவும். நீ எதிரி சைன்னியங்களை தூரத்தில் துரத்தவும். ௮. சுபச் செயலக்கினியே! நீ எங்களில் பலத்தை சுவீரத்தைப் புனிதமாக்கவும். என்னில் செல்வப் பெருக்கை யளித்து, எங்களுக்குச் சுத்தமாக்கவும். ௯. தேவரே! அக்கினியே! உன் சோதியால் சுத்தஞ்செய்து இனிய நாவால் யக்ஞத்தையும் தேவர்களையு மிங்கு கொண்டு வரவும். ௧0. அக்கினியே! பிரகாசித்துப் புனிதஞ்செய்பவனே! தேவர்களை எங்கள் [3]அவி யக்ஞத்துக்குக்[4] கொண்டு வரவும்.

௧௧. அக்கினி அதி சுத்த விரதமுடனானவன். சுத்த அறிஞனும் சுத்தமான கவியுமாகும். அளிக்கப்படுங்கால் அவன் சுத்தத்தில் சோதி வீசுகிறான்.

---

1 அறிஞர் 2 பண்டிதர்களால். 3 அளிப்பு 4 நற்செயலுக்கு.

கஉ. அக்கினியே! உன் சுத்த ரசிமிகள்[1] ஒளி வீசி மேல் செல்லுகின்றன. உன் சோதிகளும் சுவாலைகளும் உயரமாகின்றன. கங. அக்கினியே! நீ ஆயுசை யளிப்பவன் எனக்கு ஆயுசையளிக்கவும். அக்கினி நீ வர்சஸை[2] யளிப்பவன், நீ எனக்கு வர்சஸை யளிக்கவும். அக்கினியே! நீ காயங்காப்பன். நீ என் காயத்தைக் காக்கவும். கச. அக்கினியே! என் காயத்திலுள்ள எக்குறையையும் நீ குணமாக்கவும். கரு. அதிசயச் செல்வச் சீமானே! [3]சுவஸ்தியுடன் உன் எல்லையை நான் சேரவேண்டும்.

கசு. அக்கினியே! பலமுள்ள நாங்கள் பலஞ் செய்யு முன்னை புகழுள்ள நாங்கள் புகழளிக்கு முன்னை வீரம் நிறையும் நாங்கள் இம்சையற்ற உன்னை, அதிவானத்தில் எதிரி நாசகாரனும் ஒளிவீசும் உன்னை நூறு வருஷங்களுக்கு மூட்டவேண்டும். கஎ. அக்கினியே! நீ சூரிய ஜோதியை சேர்ந்துளாய். நீ [4]ரிஷி துதிகளுடன் பிரிய நிலயத்தோடு கலந்துளாய். கஅ. நீ சூரிய சமான சோதியாகும். நீ எனக்கு ஜோதி, ஆயுசு, பிரஜையை யளிக்கவும். க. ரு. ரு.

---

## அநுவாகம் கசு.

### கார்ஹபத்தியம் 5

க. நான் பசுப்பிரஜை மனிதப் பிரஜையில் பார்க்கிறேன். அவர்கள் எங்கள் கிருகத்திலாகட்டும்.[6] உ. நீங்கள் சலமாகும், நான் உங்கள் சலத்தைப் பருகவேண்

---

கசO. கருத்து—அனல் சக்தியால் நூறு வருடங்கள் வாழுங்கள்.

1 கிரணங்கள் 2 ஒளியை 3 க்ஷேமத்துடன். 4 அறிஞர் துதியுடன். 5 இல்லற வாழ்க்கைக்குக்கான சக்தி, 6 எனக்குப் பிரஜனசக்தியில் பிரியமுண்டு.

டும். நீங்கள் மகத்தாகும். நான் உங்கள் மகத்தை அருந்தவேண்டும். நீங்கள் வன்மையாகும், நான் உங்கள் [1]பலத்தைப் புசிக்கவேண்டும். ங. நீங்கள் வன்மையாகும். நான் உங்கள் வன்மையைப் புசிக்கவேண்டும். செல்வர்களே! இவ்வுலகம் இக்கூட்டம் இக்கிருகம் இச்சன்மஸ்தானத்தில் நீங்கள் நிலையாகுங்கள். நீங்கள் இங்கு இருங்கள். எங்குஞ் செல்லவேண்டாம். நீங்கள் எனக்கு வெகு பலவாய் வாருங்கள்.

ச. நீ விசுவரூப சம்ஹிதையாகும். நீ பலம் பசுத் தலைமை, பொருள் போஷணையுடன் என்னைப் பிரவேசிக்கவும். ரு. நான் உங்கள் ஆயிரம் போஷணையால் புஷ்டியுடனாக வேண்டும். உங்கள் செல்வம் என்னில் சாயவேண்டும்.

சா. அக்கினியே! இரவு நீக்கு முன்னிடம் தினந்தோறும் எங்கள் மனோ நமஸ்காரத்துடன் நாங்கள் வருகிறோம். எ. யக்ஞபதியான நீ ருதங்காத்து ஒளி வீசுபவனாய் உன் நிலயத்தில் பெருகியுளாய். அ. அக்கினியே! மகனுக்குத் தந்தையைப்போல் நீ நாங்கள் அணுக சுலபமாயிருக்கவும். கூ. அக்கினியே! நீ எங்கள் அருகிலிருப்பவனாகவும், சௌம்யமாகவும், கவசனாகவும். பரஞ்சோதியே! பிரகாசனே! நாங்கள் நண்பர்களுக்காக உன் நல் மனத்தை நாடுகிறோம். பெருஞ் சோதியின் சோதியான அக்கினியே உன் மிகுந்த சோதியோடு இங்கு வரவும். நீ எமக்குச் செல்வத்தை யளிக்கவும்.

கo. நான் [2]உங்களை பலத்துடன் பார்க்கிறேன். நீங்கள் பலத்தால் என்னைப் பாருங்கள். நான் உங்களைச்

---

**கக. ச—ரு. ஏராளமான பசுக்களையடையவும். கo—கக வளரும் வீடுகளுடனாகுங்கள்.**

1 பாலை, 2 வீடு வாசல்களை.

செல்வச் செழிப்புடன் பார்க்கிறேன். நீங்கள் என்னைச் செல்வச் செழிப்போடு பாருங்கள். கக. நீங்கள் உணவாகும், இனியவை செய்பவர்கள். பானம் போஷணையாய் பிரியமுடன் என்னில் நுழையுங்கள். நான் உங்கள் ஆயிரம் போஷணையோடு பெருகவேண்டும். உமது செல்வம் என்னில் சாயவேண்டும். கஉ. அவன் எமது அறிவுகளைத் தூண்ட அச் சவிதா[1] தேவரின் சிறந்த ஒளியை நாங்கள் தியானஞ் செய்கிறோம். கங. [2]பிரமணஸ்பதியே! [3]கட்சிவந்தன் கௌசிஜனைப்போல் சோமன் பொழிபவனைப் பெருமையுடனாக்கவும். கச. [4]இந்திரனே! நீ எக்காலமும் இம்சிப்பதில்லை. நாடுபவனை நீ கைவிடுவதில்லை. மகவானே! இப்போது இன்னும் மேலும் மேலும் உன் தேவதானம் வளர்கின்றது.

கரு. அக்கினியே! காப்பனாய், நற்குணனாய் வீரனாய், அழிக்குமரக்களை யொழிப்பவனான உன்னை நாங்கள் தினந்தோறும் எங்களை சுற்றி வைத்துத் தரிக்கிறோம். கசா. அக்கினியே! [5]கிரகபதியே! கிரகபதியான உன்னால் நான் நல்ல கிரகபதியாகவேண்டும். கிரகபதியான என்னால் நீ நல்ல கிரகபதியாகவேண்டும். நான் இச்சோதியை சந்தானத்துக்கு அளிப்பவனாய் நூறு வருடங்களுக்கு இந்த [6]ஆசியை வேண்டுகிறேன். இவனுக்கு சோதி கொண்டுவரும் இவ்வாசியை நான் பற்றுகிறேன். க. ரு. சா.

---

கக. கருத்து—உங்கள் பெண் பிள்ளை ஆடு மாடு வீடு வாசல்கள் வளர்வதற்கான அனலை காடுங்கள்,

1 மனோசூரியனின் 2 ஈசனே! 3 கனல் இரகசியமறிபவன். 4 சக்தியே. 5 இல்லறத் தலைவனே! 6 நன்மையை.

## அநுவாகம் கூஉ.

### அனல் பெருமை

க. ஜாதவேதசனே! தாயுந் தந்தையும் என்னி லளித்த முதல் பெயரை நான், குருகுலத்தினின்று திரும்பும் வரை, நீ தரிக்கவும். அக்கினியே! நான் உன் பெயரைத் தரிப்பேன். உ. ஜாதவேதசனே! மனிதர் உடை மாற்றுவதுபோல் மறுபடியும் பரஸ்பரம் பெயரை மாற்றிக்கொள்வோம். நீ ஆயுசுக்கும் நாங்கள் சீவனுக்கும் நாம் மாற்றிக்கொள்வோம். ங. இம்சிக்கப்படாத அக்கினிக்கு நமஸ்காரம். எவராலும் அணுக முடியாதவனுக்கு நமஸ்காரம். அக்கினி எதிர்ப்பற்றவனாகும். அதிபலிஷ்டன். சகலஞ் ஜயிப்பவன். அபரிமித பல மிகுந்தவன். சிரேஷ்டனும் கந்தர்வனுமாகும்.

ச. அக்கினியே! தேவர்கள் உன்னையே பிதாவாக[1] அடைந்துளார்கள். அவர்கள் உனக்கு ஆகுதிகளை யளிக்கிறார்கள். அவர்கள் உன்னையே விசாரகனைப் பெற்றுளார்கள். நீ ஆயுசு பசுத் தலைமையுடன் இதத்தை என்னில் ஸ்தாபிக்கவும். ரு. இங்கு அக்கினி சகலத்திலும் சிரேஷ்டன். நாடுவதற்கருகன். ஆயிரத்தை அதிசயமா யளிக்கத் துரிதமாயுள்ளவன். அவனை நாடுபவனுக்கு எல்லாச் சுவீரியமு[2]மாகவேண்டும். சா. மனஞ் சோதியான அவன் அளிப்பி லானந்தமாகவேண்டும். அவன் இங்கு மங்குமான யக்ஞத்தை ஒருமையுடனுக்கட்டும். அளிப்புக்களை நெய், அவியுடன் காலை மாலையில் நான் சேர்க்கிறேன். செடி கொடிகள் பால் நிறைந்தவை

க. கல்வி கற்கச்சென்றால் இன்பானல் நீக்கி கல்விக் கனல் நாடவும் உ—ச மறுபடியும் இன்பானலைப் பற்றவும்.

1 காப்பாக 2 திடபலம்

யாகும். அரும்பின் ரசமும் பால் மிருந்தது. இந்திரனே! நீ என்னை சலரசப் பாலோடு சேர்க்கவும்.

அ. அக்கினியே! விரதபதியே! நான் இந்த விரதத்தைச் செய்கிறேன். நான் அதை நிறைவேற்ற வேண்டும். அது எனக்கு ஜயமுடனாகவேண்டும். கூ. நான் இங்கு ஹோதாவான அக்கினியை அழைக்கிறேன். நாம் யக்ஞார்க தேவர்களை அழைக்கிறோம். இத் தேவர்கள் நல் மனத்தோடு வரட்டும். தேவர்கள் எனது இந்த அவியை யநுபவிக்கட்டும். க0. உன்னை எவன் இணைக்கிறான்? அவன் உன்னை இணைக்கட்டும்.

கக. அறிஞர்கள் யக்ஞத்துக்குத் திரட்டுங் [1]கபாலங்கள் பூஷணனின் பாதுகாப்பிலாகும். இந்திரனும் வாயுவும் அவற்றை விடுதலையாக்குகிறான். கஉ. யக்ஞம் பின்ன மன்னியி லிருக்கின்றது. அதிக மளிக்கும் அது எங்கிருந்து வந்துளதோ அங்கே திரும்புகின்றது. வேதி, சமித்து, சூழ்பவை, யக்ஞாயுசை சஞ்சரிக்கின்றன. கங. நான், விரிந்து யக்ஞப் பாதுகாப்புச் செய்யும், ஙங [2]இழைகளின் அறுந்த தொன்றை சரியாக்குகிறேன். சுவாஹா! யக்ஞம் தேவர்களுக்குச் செல்லட்டும். க. ரு. க0.

---

கஉ. கருத்து—பெரிய செயல்களைச் செய்ய நீங்கள் விரும்பினுல் நான் அவற்றை செய்துதான் முடிப்பேன் யென சபதஞ் செய்துகொள்ள வேண்டும்.

1 சாதனங்கள் 2 வசு-அ, ருத்திரர்-கக, ஆதித்தியர்-கஉ, இந்திரன்-க, பிரஜாபதி-க, ஆக-ஙங.

## அநுவாகம் கூங.

### யக்ஞங்கள்

க. வைசுவாநர அக்கினி, அவனைச் சுமக்கும் துதியால், துணையோடு தூரத்தினின்று எமக்கு வரட்டும். உ. [1]ருதம் மிகும் வைசுவாநரனாய், சோதி, சத்தியத்தின் தலைவனான சாசுவத அனலை, நாங்கள் நாடுகிறோம். ந. வைசுவாநரச் சம்பந்தச் செயல் களினின்று [2]ரிஷி தானாகவே சுபகாரியத்தால் சிரேஷ்ட பயனை அடைந்துளார். ரேதசு நிறையு மக்கினி வானம் பூமியான தாய் தந்தையை மேன்மை செய்துகொண்டு பிறந்துளான். ச. அக்கினி சகம் சோதி எங்கும் பரிசித்து செடி கொடிகளில் நுழைந்துளான். சத்தியால் சேரும் வைசுவாநராக்கினி எங்களைச் சத்துருவினின்று இரவும் பகலுங் காக்கவேண்டும்.

ரு. அக்கினியே! நீ புலனாகுங்கால் புவனங்களையெல்லாம், துரிதகோபன் மந்தையைச் சுற்றுவதுபோல், பார்க்கிறாய். [3]பிராமணனுக்கு வழியைப் புலனாக்கவும். நீங்கள் சதாகாலம் சுவஸ்திகளுடன் எங்களைக் காக்கவேண்டும். சு. அக்கினியே! நீ தோன்றும் பொழுதே சோதி சுவாலையுடன் வானம் பூமியை நிரப்புகிறாய். ஜாதவேதச வைசுவாநரனே! உன் திடத்தால் தேவர்களை எதிரியினின்று நீக்குகிறாய். எ. அக்கினியே! இந்திரர்களில், நல்லவீரம், நரை மூப்பு சூன்னியமாய் எவனுக்கும் தலைகுனியாமலுள்ள [4]க்ஷத்திரபுருஷனை ஸ்தாபிக்கவும். அ. அக்கினியே! வைசுவாநரனே! நாங்கள் உன் துணையால் நூறு ஆயிரமான செல்வத்தை ஜயிக்கவேண்டும்.

---

1 இசை 2 அறிஞர். 3 அறிவை நாடுபவனுக்கு, 4 வீரமகனை

நாங்கள் வைசுவாநரத்தின் நல்ல மனத்தை யநுபவிக்க வேண்டும். ஏனெனில் அவன் அரசன். அகிலசோதி. இதனால் தான் இவன் புலனாகும்போதே சகலத்தையும் பார்க்கிறான். வைசுவாநரன் சூரிய ரூபத்துடன் பிரகாசிக்கிறான். கூ. [1]வருணனே! நாங்கள் உன் கோபத்தை அவிகள் யக்ஞங்கள் நமஸ்காரத்தால், கழிக்கிறோம். அறிஞனே! அரசனே! [2]அசுரனே! நாங்கள் செய்யும் பாவங்களை, அரசுபுரியும் நீ, பிரிக்கவும். கo. வருணனே! நீ மேல், கீழ், நடுவான [3]பந்தத்தை எம்மிடமிருந்து நழுவச்செய்யவும். ஆதித்தியனே! இனி அதிதிமுன் உன் விரதத்தில் நாங்கள் குற்ற மற்றாகவேண்டும். கக. நான் திட துரித குதிரையான ததிக்கிராவணனின்,[4] செயலை, கானஞ் செய்பவனாயுளேன். அவன் எங்கள் முகங்களை சுகந்தமாக்கவேண்டும். அவன் எங்கள் ஆயுசுகளைப் பெருக்கவேண்டும். கஉ. சூரியன் ரசிமியால் சலங்களைப் போல், ததிக்கிரன் தன் பலத்தால் பஞ்சேந்திரியங்களை விஸ்தரிக்கிறான். கங. நூறு ஆயிரம் ஜயித்து பலம் பரப்புடனாகு, மவன், இந்து எமது மொழிகளை தேனால் நிரப்பட்டும். கச. அக்கினி தலைவனாகும். கரு. நீ இருக்கிறாய்.

கசு. மருத்துக்களே! சோதியினின்று உங்கள் நல் நினைவை நாங்கள் நாடும்பொழுது நீங்கள் வரவேண்டும். கஎ. நன்கு தேடுபவனுக்கு நீங்கள் வைத்துள்ள ரட்சைகளை மூன்றாய் [5]யஜமானனுக்கு அளியுங்கள். எமக்கு அவற்றைக் கொடுங்கள். சத்திமான்களே! வீரம் செழிப்பு, செல்வத்தையும் எமக்குப் பொழியுங்கள். கஅ. [6]அதிதி எமக்குச் சுகத்தையளிக்கட்டும். அதிதி எங்களை எதிர்ப்பினின்று ரட்சிக்கட்டும். ககூ. சுவிர

---

1 காலனே. 2 அதிபலமுள்ளவனே. 3 கட்டை. 4 துதிப்பதற் கருகதையானவன். 5 மனிதனுக்கு. 6 புவி.

தங்களின் சிறந்த சன்ம நிலயனை, பெரிய ருதபத்னீ யாய் மிகச் செல்வியாய், விரிந்து அழியாதவளாய், பெருங்காப்பு புனித வழியை யளிக்கும் அதிதியை நமது ரட்சிப்புக் கழைப்போம்.

உ0. பரவுஞ் சோதியாய் சகத்துக்குச் சத்தியுடனுகுஞ் சகமாய், ஒழுகாமல் குற்றங் கழியுந் திடத்துடுப்புக் களுடனுகும் தேவ கப்பலான அதிதியை க்ஷேமத்துக்கு நாம் ஏறவேண்டும்.

உக. நூறு துடுப்புக்களுடன் நூறு தண்டங்களோடு ஒழுக்கு சூன்னியமாய் தாண்டுவதற்குத் திடமான இக்கப்பலை இன்பமுடன் ஏறியுளேன். க. ரு. கக.

---

## அநுவாகம் கூச.

[தரிச பௌர்ணிமை யக்ஞங்கள். கரு-ம் அநுவாகம் பார்க்க.]

### அக்கினி

க. நான் ஆயுசு பிரஜை பொருளான உன்னை [1]யஜுஸால் [2]ஊற்றுகிறேன். யஜமானன், பிருஹஸ்பதியால் பிரேரிக்கப்பட்டு இங்கு இம்சையாகாமலிருக்கட்டும்.

உ. நீ நெய்யாகும். நீ சத்தியனுகும், நீ சத்தியத்தின் தலைவனுகும், நீ சுத்த சத்தியுடன் சகல தேவர் சத்திய சக்தி. வைசுவாநர அவியாகும். நீ பலன், நீ ஜயிக்பவன்; நீ எதிர்ப்பை ஜயிக்கவும், நீ எதிர்ப்புப் பழகுபவர்களை ஜயிக்கவும்; நீ சத்துருவை ஜயிக்கவும். நீ சத்துருசாதகனை ஜயிக்கவும்; நீ ஆயிரம் பலமுள்ளவன். நீ என்னைத் துரிதமாக்கவும். நீ நெய் தோய்பவன். நீ சத்திய

---

கூரு. கருத்து—அதிதி வருணன் மருத்து, ததிக்கிரன் வைசுவாநராக்கினி இரகசியங்களை நாடவும்.

1 துதியால், 2 போற்றுகிறேன்.

சத்தியத்தின் சேர்க்கையுள்ளவன். நீ சத்திய ஆயுசை அடைந்துள்ளாய். நான் உன்னை சத்தியத்தால் பார்க்கிறேன். அப்படியுள்ள உன்னை நான் அநுபவிக்கலாமோ!

ங. உன்னை பஞ்சப் பிராணங்களின் சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். ச. பஞ்ச [1]ருதுக்களின் சாரதி சாதகனுக்கு நான் உன்னை கிரகிக்கிறேன். ரு. நான் உன்னை பஞ்ச திசைகளின் சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். சு. நான் உன்னை பஞ்ச சனங்களின் சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். எ. நான் உன்னை பஞ்ச வாசலுடனுகும் பாண்டத்தின் சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். அ. நான் பிரமத்தின் தேஜசுக்கு சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். கூ. நான் உன்னை க்ஷத்திரத்தின் சத்திக்கு சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். க0. நான் என்னை சனத்துக்கு சாரதி சாதகனுக்கு கிரகிக்கிறேன். கக. நான் உன்னை நல்ல வீரியத்துக்கு கிரகிக்கிறேன். கஉ. நான் உன்னை நல்ல பிரசைக்கு கிரகிக்கிறேன். கங. நான் உன்னை செல்வச் செழிப்புக்கு கிரகிக்கிறேன்.

கச. நான் உன்னை பெரும் பலத்துக்கு கிரகிக்கிறேன். கரு. நான் உன்னை புவி, அவி, ஆசிகள் முறையே எமக்கு தேவர்களுக்கு யஜமானர்களுக்கு தேவ திவ்யங்களுக்காக கிரகிக்கிறேன். கசு. விருப்பத்துக்கு நான் உன்னை கிரகிக்கிறேன் க. கூ. க.

---

கூச. கருத்து—யக்ஞம் யக்ஞசாதனம் யக்ஞானலைப் பற்ற வேண்டும்.

1 பருவங்களின்.

## அநுவாகம் கடு.

க. நீ [1]திரனாகும், நான் [2]சமானர்களில் திரன், தீரன், இரட்சகன் செல்வ மளிப்பவனாகவேண்டும். உ. நீ உக்கிரனாகும்; நான் சமானர்களில் உக்கிரன் இரட்சகன் செல்வமளிப்பவனாகவேண்டும். ங. நீ ஜயிப்பவனாகும்; நான் சமானர்களில் தலைவன் ஜயிப்பவனாகவேண்டும். ச. ஜாதவேதசனே! நான் உன்னை திவ்ய [3]பிரமத்தால் இந்த [4]அவி சுமப்பதற்குச் சேர்க்கிறேன். உனக்கு பலியளித்து உன்னை எழுச்சி செய்து கொண்டே, நற்பிரசை நல்ல வீரர்களுடன் நாங்கள் நீண்ட காலம் வாழவேண்டும்.

ரு. அக்கினியே! என் இந்த யக்ஞத்தில் நாசமாவது எது உண்டோ, விஷ்ணுவே! நெய்யின் குறைவுடனாகும் எது உண்டோ, அதனால் கொல்லக் கடுமையாகும் சத்துருவை நான் கொல்லுகிறேன். நான் அவனை அழிப்பின் அங்கத்தில் வைக்கிறேன். சா. [5]பூ: புவ: சுவ: எ. அக்கினியே! நீ யஜமானனை பலமுடனாக்கவும்; புன்மை புரிபவனை பலஈனமாக்கவும். அ. [6]ஹோதாவே! அக்கினியே! இனிய சுவாலையுடன் அமுதமாயுள்ளவனே! மனு,[7] தேவர்களால் எழுச்சியாகும் உன் சிரத்தை, நான் பலம் நற்பிரசை பொருள் பெருக்குக்குப் [8]பரிசிக்கிறேன் கூ. நீ மனமாகும், பிரஜாபதியினின்று புலனாகுபவன்—சிருட்டிப்—பொருள் சித்தத்தால் என்னில் பிரவேசிக்கவும். கo. நீ மொழியாகும், [9]இந்திரனில் தோன்றுபவன். எதிரி யழிப்பவன் நீ மொழி [10]இந்திரியத்துடன் என்னில் நுழையவும்.

---

1 நிலையாயிருப்பவன், 2 சமானமாயுள்ளவர்களில் 3 அறிவால் 4 மனத்தை வகிக்க. 5 முக்கால யனலே, 6 தலைவனே! 7 மனிதனால் 8 பற்றுகிறேன், 9 பலத்தினின்று, 10 வன்மையுடன்.

கக. நான் ருதுக்களின் வசந்தத்தை இன்பமாக்கு கிறேன். அது இன்பமாகி என்னை இன்பமாக்கட்டும். கஉ. நான் ருதுக்களின் கிரீஷ்மத்தை இன்பமாக்குகி றேன். அது இன்பமாகி என்னை இன்பமாக்கட்டும். கங. நான் ருதுக்களின் மழைகளை இன்பமாக்குகிறேன்; அவை இன்பமாகி என்னை இன்பமாக்கட்டும். கச. நான் ருதுக்களின் சரத் ருதுவை இன்பமாக்குகிறேன். அது இன்பமாகி என்னை இன்பமாக்கட்டும். கரு. ருதுக்களின் ஏமந்தம் சசி ருதுக்களை இன்பமுடனாக்குகிறேன், அவை இன்பமாகி என்னை இன்பமாக்கட்டும். கசு. அக்கினி சோமர்களின் தேவ [1]யஜனத்தால் நான் கண்ணுள்ளவ னாகவேண்டும். கஎ. அக்கினி தேவனுக்கு யஜிப்பால் நான் உணவின் சத்து உண்பவனாகவேண்டும். கஅ. நீ [2]இம்சிப்பவன்; நான் இம்சையற்றவனாக வேண்டும். நான் எதிரியை இம்சிக்கவேண்டும். கக. அக்கினி சோமதேவர் களுக்கு யக்ஞஞ் செய்வதால் நான் எதிரி யழிப்பவனாக வேண்டும். உ0. இந்திராக்கினி தேவர்களுக்கு யக்ஞஞ் செய்வதால் நான் பலமுள்ளவனாய் உணவு புசிப்பவனாக வேண்டும். உக. நான் இந்திரதேவனுக்கு யக்ஞஞ்செய் வதால் பலமுள்ளவனாக வேண்டும். உஉ. நான் மகேந் திர தேவனுக்கு யக்ஞஞ்செய்வதால் மேன்மை மகிமை யை யடையவேண்டும். உங. நான் சுவிஷ்டகிருத அக் கினி தேவனுக்கு யக்ஞஞ் செய்வதால் நீண்ட ஆயுசுகளை யநுபவித்து நிலையான வாழ்க்கையை யடையவேண்டும். க. சா. உ.

---

கூரு. கருத்து—நாம் இன்பமாகி சுகவாழ்க்கையுடனாக வேண்டும்.

**1 யக்ஞத்தால் 2 பகைவனைத் துன்பஞ்செய்பவன்.**

## அநுவாகம் கசு.

### என் நோக்கம்

க. தீச்செயலினின்று என்னைக் காக்கவேண்டும். [1]சவிதா என்னை பாவச் செயலினின்று காக்கவேண்டும். உ. அருகிலும் தூரத்திலும் எனக்கு எதிர்ப்புசெய்பவனை நான் [2]இதனால் ஜயிக்கவேண்டும். [3]சுரூப வர்ஷ நிறனே! நீ இச்சுப நிலயத்துக்கு வரவும். நீ என்னை அநுகூலத்துடன் அணுகவும். ச. தலைகளைப் பரிசிக்கவும். ரு. [4]இடையே! இங்கு வரவும். [5]அதிதியே! இங்கு வரவும். சரஸ்வதியே இங்கு வரவும். சு. நீ இன்பன், நீ இன்பமளிப்பவன். எ. நீ இனியன். இன்பம் கிரகிக்கப்படும் உன்னிடமிருந்து நான் இன்பத்தை யடையவேண்டும். அழைக்கப்படும் உன்னிடமிருந்து நான் அழைப்பை அடையவேண்டும். அ. யஜமானனின் பிரார்த்தனை எனக்கு நிறைவேறவேண்டும்.

கூ. நான் இம்சையற்ற மனத்தால் இதற்கு பலமுடனாகவேண்டும். க0. யக்ஞம் சோதியை ஏறட்டும். யக்ஞஞ் சோதியைச் சேரட்டும். கக. யக்ஞம் தேவபாதை வழியாய் தேவர்களுக்குச் செல்லட்டும். கஉ. இந்திரன் எங்களில் இந்திரியத்தை யளிக்கவேண்டும். யக்ஞங்களும் செல்வங்களும் எங்களில் சாயவேண்டும். எங்களுக்கு ஆசிகளாகட்டும். [6]அவள் எங்களுக்குச் செல்வம் பிரியம், ஜயமளிப்பவளாக வேண்டும். கங. நீ இன்பமாகும் எமக்கு இன்பத்தை யளிக்கவும். நீ எம்மால் சேவிக்கப்படுகிறாய். உன்னிடமிருந்து நான் இன்பத்தை அடையவேண்டும். கச. மனம் சோதியான அக்கினி யக்ஞத்தில்

---

1 சித்தம் 2 என் காயத்தால் 3 அழகான மழையின் நிறமே 4 அனலே 5 புவியாக்கினியே. 6 சுந்தரமான யனல்.

இன்பமாகட்டும். அவன் இங்குமங்குமான யக்ஞத்தை இணைக்கவேண்டும். எமக்கு இதை [1]பிருஹஸ்பதி விஸ்தரிக்கவேண்டும். இங்கு எல்லா தேவர்களும் இன்பமாக வேண்டும். கரு. யக்ஞமே பொழியவும்.

கசு. நான் அளிக்குங்கால் என் செயல் அழியாமலாகவேண்டும். நான் முயற்சி செய்யுங்கால் என் பணி பாழ் சூன்னியமாகவேண்டும். கஎ. நீ பால் பலம் நிறையும் பிரஜாபதி பாகமாகும். கஅ. நீ என் பிராணுபானனைக் காக்கவும், நீ என் சமான வியானனைக் காக்கவும். நீ என் உதான ஞானனைக் காக்கவும். கசு. நீ அழியாதவன்; நான் அழியாமைக்கு உன்னை நாடுகிறேன். நீ அங்கு தூர [2]உலகத்தில் எனக்கு அழியாமலாகவும். க. சு. ௩.

---

## அநுவாகம் கஎ

### ஜய பேரிகை

க. [3]திவ்ய தர்ப்பைக்கு யக்ஞஞ் செய்வதால் நான் பிரசைகளுள்ளவனுக வேண்டும். உ. [4]தேவ நராசம்சனுக்கு யக்ஞஞ் செய்வதால் நான் பசுக்களின் செல்வத்தை யடையவேண்டும். ௩. அக்கினி சுவிஷ்டகிருத தேவனுக்கு யக்ஞஞ் செய்வதால் நிலையான சீவனையும் நீண்ட வாழ்க்கையை யக்ஞத்தால் நான் அடையவேண்டும். ச. அக்கினியின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். ரு. சோமனின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். சு.

---

கசு. கருத்து—நமக்கு அவவசியமானவைகளை இங்கு காணலாம்.

1 பெரும் அறிவு. 2 எதிர்காலத்தில். 3 திவ்யரேதசுக்கு 4 மனிதர் போற்றும் மேன்மைக்கு.

அக்கினியின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். எ. அக்கினி சோமனின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். அ. இந்திராக்கினியின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். கூ. இந்திரனின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். க0. மகேந்திரனின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும்.

கக. அக்கினி சுவிஷ்ட கிருத்தின் ஜயத்தால் நான் ஜயமாகவேண்டும். கஉ. அவன் என்னை பலோதயம் எழுச்சியுடன் பற்றியுளான். அப்பால் இந்திரன் என் எதிரிகளை சோர்வையால் சாய்த்துளான். கங. எழுச்சியும் வீழ்ச்சியுமான என் பிரமத்தை தேவர்கள் பெருக்கியுளார்கள். [1]இந்திராக்கினியே! இனி என் எதிரிகளை எங்கும் துரத்துங்கள். கச. கற்க விரும்பி இவ்வாசிகள் இங்கு வந்துள்ளன. நாங்கள் [2]இந்திரன் நிறைந்து ஜயிக்கவேண்டும். நாங்கள் உணவை, பிரசையைக் கறக்கவேண்டும். கரு. சிகப்பு குதிரையோடு அக்கினி உன்னை தேவருக்குச் சுமக்கவேண்டும், கபில குதிரைகளுடன் உன்னை இந்திரன் தேவருக்குச் சுமக்கவேண்டும். [3]எதசனுடன் சூரியன் உன்னை தேவருக்குச் சுமக்கவேண்டும்.

கசா. நான் உன் [4]தலைக்கயிறுகள் தடைவார்கள், தடைக்கட்டுக்கள், அணிகலத்தை அவிழ்க்கிறேன். நலத்தையும் செல்வத்தையும் எங்களில் பொழியவும். தேவர்களில் எங்கள் அவிகளை கோஷிக்கவும். கஎ. நான் விஷ்ணுவுக்கு யக்ஞத்தால், தேவயஜனத்தால் சுகம், செல்வம், சாசுவதத்தை அடையவேண்டும். கஅ. நான் சோமனுக்கு தேவயஜனத்தால் நல்ல ரேதசுடன் ரேதசு ஸ்தாபிப்பவனுகவேண்டும். ககூ. துவஷ்டாவுக்கு தேவயஜனத்தால் நான் பசு ரூபத்தைப் போஷிக்கவேண்டும்.

1 அறிவும் அனலுமான ஆன்மாவே 2 பலம் 3 ஒளியுடன் 4 ஒளிபந்தங்கள்

உ0. கிரகபதியான அக்கினியும் தேவ பத்தினிகளும் யக்ஞத்தின் ஜதையாகும். நான் இத் தேவர்களுக்கு யக்ஞஞ் செய்வதால் ஜதையுடன் செழிப்பாகவேண்டும்.

உக. நீ வேதமாகும். நீ அறிவாகும். நான் அறிவுடனாகவேண்டும். உஉ. நீ செயலாகும், நீ செய்பவனாகும், நான் செய்பவனாகவேண்டும். உங. நீ ஜயிப்பவன், நீ ஜயன். நான் ஜயிக்கவேண்டும். உச. வேதம் நெய் மிகுந்து வீடு பெருகும் ஆயிரஞ் செல்வச்செழிப்பை யளிக்கவேண்டும். க. சு. ச.

---

## அநுவாகம் கூஅ.

### திக் விஜயம்

க. துருவன் ஒவ்வொரு யக்ஞத்துக்கு உன்னை நாடுபவர்களுக்கு நெய்யுடன் பொழியட்டும். அதிதியின் அங்கத்தில் சூரியையின் ஸ்தானத்தில் துருவன் நெய்யுடன் பெருகட்டும். பூமி, இந்த யக்ஞத்தில் பரவுந் தாரையோடாகட்டும். உ. விபன் என்னும் உலகம், பிரசாபதியினதாகும். நான் அதில் உன்னை யஜமானனோடு வைக்கிறேன். ங. நீ சத்தியனாகும், நீ எனக்கு சத்தியமாகவும், நீ சர்வனாகும், நீ எனக்குச் சர்வமாகவும், நீ பூர்ணனாகும், நீ எனக்குப் பூரணமாகவும், நீ அழியாதவன், நீ எனக்கு அழியாமலாகவும்.

ச. தேவர்கள், ருத்விக்குக்கள், என்னைக்கீழ்த்திசையில் சுத்தமாக்கவேண்டும்: மாதங்கள், பிதுருக்கள் என்னைத் தென் திசையில் சுத்தமாக்கவேண்டும்: வீடுகள் பசுக்கள் மேற்திசையில் என்னைச் சுத்தமாக்கவேண்டும்: சலம்

---

கூஎ. கருத்து—நீங்கள் எல்லா தேவர்களின் உதவியைக் கொண்டு ஜயமுடனாகவேண்டும்.

செடி, கொடி, மரங்கள் என்னை வடதிசையில் சுத்தமாக்க வேண்டும்: வருஷம் யக்ஞம் யக்ஞபதி என்னை உச்சியில் சுத்தமாக்கவேண்டும். ரு. நீ சத்துரு சிதைக்கும் விஷ்ணு பாதமாகும், நான் காயத்திரி சந்தசால் பூமியைத் தாண்டுகிறேன். எங்கள் துவேஷி [1]தள்ளப்பட்டுள்ளான். சு. நீ அபவாதமழிக்கும் விஷ்ணு பாதமாகும், நான் திருஷ்டுபு சந்தசால் வானத்தைத் தாண்டுகிறேன், எங்கள் துவேஷி தள்ளப்பட்டுளான். எ. நீ அரக்கனழிக்கும் விஷ்ணு பாதமாகும், நான் சகதி சந்தசால் சோதியைத் தாண்டுகிறேன், எங்கள் துவேஷி தள்ளப்பட்டுளான். அ. நீ சத்துரு வொழிக்கும் விஷ்ணு பாதமாகும், நான் அநுஷ்டுபு சந்தசால் திசைகளைக் தாண்டுகிறேன். எங்கள் துவேஷி தள்ளப்பட்டுளான். க. சு. ரு.

---

## அநுவாகம் கூகூ.

### அக்கினி போற்று

க. நாங்கள் [2]சுவர்க்கத்துக்கு வந்துளோம், சுவர்க்கத்துக்கு நாங்கள் வந்துளோம். உ. உன்னைப் பார்ப்பதினின்றும் நான் பிரிக்கப்பட வேண்டாம் எத்தவம் என்னால் உன் நிமித்தம் அநுசரிக்கப்படுகிறதோ, அதன் அநுக்கிருகத்துக்கு நான் தளரா மலாகவேண்டும். ங. நீ நலன்; ரசிமி தலைவன், நீ ஆயுசளிப்பவன், என்னில் ஆயுசை யளிக்கவும், நீ வர்சஸளிப்பவன், என்னில் வர்ச்ஸை யளிக்கவும் ச. நான் இங்கு இத்திசை, இச்சோதி, இவ்வானம், இப்பூமி, இவ்வுணவினின்று என் இச் சத்துருவை தள்ளுகிறேன், எங்கள் துவேஷித் தள்ளப்பட்டுளான். ரு. நான் சோதியோடு சேர்க்கப்பட்டுளேன்.

---

கூஅ. கருத்து—நீ எல்லா சக்திகளையு மநுசரித்து சத்துருக்களை யொழிக்கவும்.

1 துவேஷிகளை நான் யழிக்கிறேன். 2 பெரிய நிலைக்கு

௬. நான் இந்திரனின் சுற்றைச் சுற்றுகிறேன். எ. நான் பிரஜையுடன் பிரஜை என்னுடன் பொருத்தமாக வேண்டும். அ. செல்வச் செழிப்பு என்னுடன் நான் செல்வச் செழிப்போடு சேர்க்கப்பட வேண்டும் கூ. எழுச்சியாகும் அக்கினியே! எனக்கு ஒளி வீசவும். அக்கினியே! உன்னை எழுச்சியாக்கி நான் ஒளி வீசவேண்டும் க0. யக்ஞம் செல்வமுடனாகட்டும்; நான் செல்வமுடனாகவேண்டும். கக. அக்கினியே! நீ ஆயுளைப் புனிதஞ் செய்கிறாய். எமக்கு உணவையும் உறுதியையு மளிக்கவும். துஷ்டசேனையை தூரத்திலே துரத்தவும். க௨. அக்கினியே நீ சுபஞ் செய்பவன், எனக்குச் சுத்தஞ்செய்பவன். பொருள் புஷ்டியை எனக்களித்து சுவீரர்களுடன் புகழையும் எனக்களிக்கவும். க௩. அக்கினியே! கிரகபதியே, நான் கிரகபதியான உன்னால் நல்ல கிரகபதியாகவேண்டும், நீ, கிரகபதியான என்னால் நல்ல கிரகபதியாகவேண்டும். நான், சந்ததி, நூறு வருஷங்களுக்கு சோதி செய்யும் இவ்வாசியை அழைக்கிறேன். சோதிசெய் இவ்வாசியை இவனுக் கழைக்கிறேன். க௪. உன்னை இணைப்பவன் யார்? அவன் உன்னை விடுதலையாக்கட்டும். க௫. அக்கினியே விரதபதியே! நான் என் விரதத்தைச் செய்துளேன். அதற்கேற்ற சக்தி என்னிடமுண்டு. அது என்னால் பூர்ணமாகும். க௬. யக்ஞம் சம்பூர்ணமாயுளது. அது புலனாகியுளது. அது புலனாக்கப்பட்டு பெரிதும் வளர்ந்துளது. அது தேவர்களின் தலைமையாயுளது. அது நம்மை அதிபதிகளாக்கவேண்டும். நாங்கள் செல்வபதிகளாகவேண்டும். க௭. அக்கினியே! பசு ஆடு குதிரைகள் நிறைந்துள்ள பொருளே யக்ஞமாகும், சதாகாலம் மாறுதலற்று வீர சகாக்களுடனுள்ளதே யக்ஞமாகும். [1]அசுரனே!

1 அகாத பல முள்ளவனே.

இந்த யக்ஞம், பிரசை உணவு மிகுந்து தீர்க்கத் திரவியம் விரியும் மூல சபைகள் நிறைவதாகும், ௧. ௬. ௬.

[அமாவாசை, பௌர்ணிமை யாகங்கள் முற்றிற்று]

---

## அநுவாகம் ௧00.

### யக்ஞங்கள்

௧. அந்நியர்களிடமிருந்து இந்திரனை உமக்காக எங்கும் நாங்கள் அழைக்கிறோம். அவன் எமக்கே யாகட்டும். ௨. மனிதர்கள் தங்கள் நினைவுகளை நிறைவேற்ற போரில் இந்திரனை அழைக்கிறார்கள். அவன் சூரன், சனஜயன். சக்தியில் சந்தோஷமாகுபவன். நீ எங்களில்: கோ நிறையுஞ் சாலையை யளிக்கவும். ௩. சதக்கிரதுவே! நான் [1]ஐந்து சனங்களிலுள்ள உன் இந்திரியங்களை கிரகிக்கிறேன். ௪. இந்திரனே! யக்ஞாருகனே மனித ஜயத்துடன் சதாகாலம் [2]விருத்திரனைக் கொல்லும் சிறந்த சக்திக்கு திடனும் சகலத் தலைமையும் தேவர்களால் உனக்கு அளிக்கப்பட்டுள்ளன.

௫. தாமாகவே ஏறியுள்ள ஏழு வாசவர்கள்—ரசிமிகள்—சூரியனில் சாய்ந்துளார்கள். அவன் தீர்க்க செவிதாயனாகும். ஒளியான—சூரியன்—இந்திரனின் அதிதியாகும். ௬. அபக்குவத்தில் நீ பக்குவத்தைப் புலனாக்கியுளாய், சோதியில் சூரியனை ஏறச் செய்துளாய். கானம் விரும்புபவனுக்கு இன்பமாய், இனிய கானங்களுடன் கனிந்த யக்ஞத்தைப்போல் [3]சாமனைத் தவமுடனாக்குங்கள். ௭. கானர்கள் இந்திரனை கோஷித்துளார்கள்,

---

௬௬. கருத்து—யக்ஞத்தால் சுவர்க்கஞ் செல்லலாம்.

1 பஞ்சப் புலன்களில், 2 அநியாயஞ் செய்பவனை. 3 வேண்டுஞ் செயலை,

அர்ச்சகர்கள் அர்ச்சனைகளுடன் இந்திரனை நாடியுளார்கள். கானங்கள் இந்திரனைப் போற்றியுள. அ. கானங்கள் உன்னை கானஞ் செய்கின்றன. போற்றுவோர்கள் உன் புகழைப் போற்றுகிறார்கள் [1]சதக்கிரதுவே! பிராமணர்கள் உன்னை உச்சிக் கம்பத்தைப்போல் எழுச்சியாக்குகிறார்கள். கூ. நாம் அளிக்கத் துரிதனான துன்பம் நீக்குபவனின் நல் நினைவைப் புகழ்ந்து, அவனுக்குத் துதியளிப்போம். இந்திரனே! இந்திரனே! இவ்வளிப்பை அங்கீகரிக்கவும்.

க0. எதற்குத் [2]திஷை என்னைத் தூண்டினாளோ, அதை நான் உண்டு பண்ணியுளேன். நான் போர் தினத்தின் முன் இந்திரனைத் துதிப்பேன். [3]படகுடன் போல் நம்மைக் காக்க செல்லுமவனை இரு கட்சிகளும் அழைக்கிறார்கள். கக. மனிதரே! சலங்களின் மகனாய் யக்ஞத்தின் முதல் தலைவனாய், துன்பம் நீக்கும் யக்ஞாருக விருஷபனாயுள்ள இந்திரனை—நாடுங்கள். அசுவினிகளே! நீங்கள் இதில் ஒஜஸையும் பலத்தையுமளியுங்கள். கஉ. இந்திரனே! எங்கள் எதிரிகளை கொல்லவும். பகைவர்களையொழிக்கவும், எங்கள் விரோதியை வீழ்த்தவும். கங. [4]விருஷபனே! இந்திரனே! சனங்களின் செழிக்கும் சக்தி, க்ஷத்திரத்துக்கு, நீ தோன்றியுளாய். நட்பற்ற சனத்தை நீ நாசமாக்குகிறாய். நீ தேவர்களுக்கு விரிவான உலகத்தைச் செய்துளாய்.

கச. புன்மையுடன் பயமளிக்கும் மிருகத்தைப் போல் மலைகளைச் சுற்றி, வெகு தூரத்தினின்று அவன் வந்துளான். இந்திரனே! உன் கூறிய அலகு, ஆயுதத்தைக் கூர்செய்து எதிரிகளை யொழிக்கவும். பகைவனைத்

1 எல்லையில்லா பலிஷ்டனே. 2 அறிவு, 3 சாதனமுடன், 4 நன்மை வர்ஷிப்பவனே.

துரத்தவும். கடு. எதிரியையும், விரோதியையு மொழிக்கவும். விருத்திரனின் தாடைகளை யுடைக்கவும், சத்துரு கோபத்தை உன் கோபத்தால் தடுக்கவும். கசு. துணை இந்திரன், தாரக இந்திரன், அநேகர் அழைக்கும் திடனை இந்திரன், எல்லா அழைப்பிலும் செவியுறச் சித்தமாகும் இந்திர சூரனை நான் அழைக்கிறேன். பெருந் தன்மை இந்திரன் எங்களில் க்ஷேமத்தை யளிக்கவேண்டும். கஎ. திடனே! இத்துன்பத்தில் நாங்கள் தீமைக்கிரை யாகவேண்டாம். வழித்தலைவனே! சத்திய ரட்சையுடன் எங்களைக் காக்கவும். அறிஞர் நடுவே நாங்கள் உங்களுக்குப் பிரியமுடனுகவேண்டும்.

கஅ. [1]புருஹூதனே! மனிதர்கள் ரதத்தை உன் குதிரைக்குச் செய்துளார்கள். துவஷ்டா சோதியுடன் வச்சிராயுதத்தைச் செய்துளான். எதிரியைக் கொல்ல பிராமணர்கள் இந்திரனைத் துதிகளால் விளக்கி அவனை திடஞ்செய்துளார்கள். கக. இந்திரனே! ஆயுதங்களுடனிணையும் அதிதியான திடன் திடனுக்குத் துதியைச் செய்யுங்கால், இந்திரனுல் தூரிதமாகும் வச்சிராயுதங்கள், குதிரைகளும் இரதங்களுமில்லாமலேயே [2]தஸ்யுக்களில் பாய்ந்துள்ளன. க. சு. கஉ.

---

க00. கருத்து. நீங்கள் இந்திரனை நாடி பகைவர்களை யொழியுங்கள்.

1 சனங்களுக்கு நன்மை செய்பவனே. 2 அடிமைகளில்.

# அநுவாகம் கoக.

[வாஜபேயம். கoக—கoஎ.]

## இரதம்

க. தேவசவிதாவே! யக்ஞத்தைத் தூண்டவும், யக்ஞத்தலைவனை செல்வத்துக்குத் தூண்டவும். விக்ஞானங்களைச் சுத்தமாக்கும் திவ்ய கந்தர்வன் எங்கள் விக்ஞானத்தைச் சுத்தமாக்கட்டும். இன்று வாசஸ்பதி எங்கள் வாக்கை இனிமையாக்கவேண்டும். உ. நீ இந்திரனின் வச்சிராயுதம். உன்னால் இது விக்கினங்களைக் கொன்று விருத்திரனை யழிப்பதாக வேண்டும். ந. பலம் புலனாக எவனில் இவ்வெல்லா உலகமும் நுழைந்துளதோ அப்பெருந் தாயை அதிதி பெயரென்னும் சொல்லால் அழைப்போம். அவளில் தேவசவிதா எங்கள் தர்மத்தைத் தூண்டட்டும்.

ச. சலங்களின் நடுவே அமிருதமுண்டு. சலங்களில் ஒஷதியுண்டு. சத்திமான்களே! நீங்கள் சலவழியில் அசுவங்களாகுங்கள். ரு. வாயு உன்னை மநு உன்னை உஎ கந்தர்வர்கள், இணைத்துளார்கள். அவர்கள் குதிரையை முதன்மையாய் சேர்த்துளார்கள். அதில் துரிதத்தை ஸ்தாபனஞ் செய்துளார்கள். சூ. சலங்களின் மகனே! [1]துரிதனே, போரை ஜயிக்க விரும்பும் எதிர்த்தோங்கு மலையால் அவன் சமரை ஜயிக்கவேண்டும். எ. நீ விஷ்ணுவின் அடியாகும், நீ விஷ்ணுவின் பாதமாகும், நீ விஷ்ணுவின் பாய்ச்சலாகும். அ. எதிர் காற்றோடு துரிதமாகி, திடமாய் பறந்து தூரம் பாயும் இரதத்தின் இருபக்கங்களிலுள்ள இரண்டு அங்கங்கள், இரண்டு நியங்கர்களான

---

1 குதிரையே.

பூர்ணஞ்செய்யும் அனல்கள் எங்களைப் பூரணமாக்கவேண்டும். க. எ. எ.

---

## அநுவாகம் கOஉ.

### சமர் குதிரைகள்

க. தேவ சவிதா தூண்டுதலில் சமர் ஜயிக்கும் பிரகஸ்பதியாய் நான் சமரை ஜயிக்கவேண்டும். உ. தேவ சவிதாவின் தூண்டுதலில் சமர் ஜயிக்கும் பிரகஸ்பதியால் நான் உயரிய நிலயத்தை ஏறவேண்டும். ந. இந்திரனுக்கு உங்கள் மொழிகளை கோஷஞ் செய்யுங்கள். சமரை இந்திரன் ஜயிக்கச் செய்யுங்கள். இந்திரன் சமரை ஜயித்துளான். ச. குதிரை யசைப்பவனே! காளையே, சமர்களுக்குச் சத்தியுடனாகும் நீ சமர்களில் குதிரைகளைச் சத்தியுடனாக்கவும். ரு. நீ வேகன், வன்மையுள்ளவன், துரிதஞ் செய்பவன். சு. குதிரைகளே! சமருக்குத் துரிதமாகுங்கள், மருத்துத் தூண்டுதலில் ஜயமாகுங்கள். [1]யோசனைகளை அடைந்து வழிகளை ஸ்தாபியுங்கள். எல்லையையடையுங்கள். எ. சத்திமான்களே! ஒவ்வொரு சமரிலும் எங்களை ரட்சியுங்கள். இவ்வினிய ரசத்தைப் பருகி, அதில் இன்பமாகி தேவ வழிகளால் இனிமையாய்ச் செல்லுங்கள்.

அ. சொல் செவியுறும் எல்லா அசுவங்களும் எங்கள் சொல்லைச் செவியுறட்டும். கூ. துரிதஞ்சென்று ஆயிரஞ் ஜயித்து அறிவின் அமுதமடைய ஆத்திரமாகும் அசுவங்கள் சமர்களில் சிறந்த செல்வங்களை ஜயித்துளார்கள்.

---

கOக. கருத்து—சமருக்குச் சாதனமான இரதத்தைச் சுவாதீனஞ் செய்துகொள்ளவும்.

1 கடிவாளங்களை.

நாங்கள் அழைக்குங்கால் அவர்கள் மங்கள மளிப்பவர்களாகவேண்டும். ௧0. தேவர்களில் துரிதர்களாய் துதி யோக்கியர்களாய் சோரன் சத்துரு சீல சூன்னியர்களை நாசஞ் செய்யுமவர்கள் எதிரியை எம்மிடமிருந்து நீக்க வேண்டும். ௧௧. முகம் பக்கம் கழுத்தில் கட்டப்பட்டுள்ள இக்குதிரை தன் வேகத்தைத் துரிதமாக்குகிறுன். ததீகரன் தன் அறிவைப் புலனுக்கி வழிகளின் கோணல்களில் பாய்ந்தோடுகிறுன். உக்கிரக் கருடனின் வேகமான ததிக்கிராவன் வன்மையால் வளையும் வழிகளைக் கடந்து, ஜய வேகமாய்த் துரிதமாகுங்கால் காற்றுனவன் பறவைச் சிறகை யநுசரிப்பது போல் பாய்ந்து வீசுகிறுன். ௧௨. போரின் ஜயம் எனக்கு வரவேண்டும். வானம் பூமி எல்லா மங்களத்துடன் வரவேண்டும். தாய் தந்தை எனக்கு வரவேண்டும். சோமன் அமிருதத்துக்கு என்னிடம் வரவேண்டும். ௧௩. குதிரைகளே! போர் ஜயர்களே! போர் செல்லப்போகிறவர்களே! போர் ஜயிக்கச் செல்பவர்களே! நீங்கள் பிரகஸ்பதி பாகத்தைப் பரிசியுங்கள். ௧௪. போருக்குச் சென்ற போர் ஜயிக்குங் குதிரைகளே! போர் ஜயித்துள்ளவர்களே; நீங்கள் பிரகஸ்பதி பாகத்தைப் புனிதமாக்குங்கள். ௧௫. நீங்கள் இந்திரனுடன் செய்யப்பட்டுள்ள பிரதிக்ஞை சத்தியமாகவேயுள. நீங்கள் இந்திரனை[1] ப் போர் ஜயிக்கச் செய்வீர்கள், வனஸ்பதிகளே, துந்துபிகளே, நீங்கள் விடுதலையாகுங்கள். ௧. எ. அ.

---

௧0௨, கருத்து—சமர் குதிரைகளைப் பற்றவும்.

1 சக்தியை

## அநுவாகம் க0௩

### இன்ப கோஷம்

க. நீ க்ஷத்திரத்தின் காப்பாகும். நீ க்ஷத்திரத்தின் நிலயமாகும்.

உ. மனைவியே, இங்கு சுவர்க்கத்துக்கு வரவும். நாம் இருவரும் ஏறுவோம். நான் சுவர்க்கத்தை நம் இருவருக்காக ஏறுவேன்.

௩. பலம் அதன்மூலம், அம்மூலத்தின் மூலம், அறிவு சுவர்க்கம், சிரம், வியசினியம், கடைச் சந்தானம், கடை, புவனத்தின் பயன், புவனம் அதிபதி இப்பன்னிரண்டு மாதங்களை நாடுகிறேன்.

ச. ஆயுசு யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும். பிராணன் யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும். அபானன் யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும், வியானன் யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும், கண் யக்ஞத்தால் பலமுடனாக வேண்டும், செவி யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும். மனம் யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும். வாக்கு யக்ஞத்தால் பலமுடனாகவேண்டும், ஆத்மா யக்ஞத்தால் பலமுடனாக வேண்டும். யக்ஞம் யக்ஞத்தால் பலமுடனாக வேண்டும்.

ரு. நாங்கள் சுவர்க்கம் வந்துளோம். தேவர்களுக்கு வந்துளோம். நாங்கள் அமிருதமாயுளோம். நாங்கள் பிரஜாபதியின் பிரஜையாயுளோம்.

சா. நான் பிரஜையுடன் சேரவேண்டும். பிரஜை என்னுடன் சேரட்டும். நான் செல்வச் செழிப்புடன் சேரவேண்டும், செல்வச் செழிப்புடன் நான் சேல்ல வேண்டும்.

எ. நான் உணவுக்காக உன்னை, உயரிய உணவுக்கு உன்னை, போருக்குச் செல்ல உன்னை போரின் ஜெயத்துக்கு உன்னை நாடுகிறேன்.

அ. நீ அமிருதமாகும் நீ புஷ்டியாகும், நீ பிரஜைப் பிறப்பிப்பவனாகும். க. எ. கூ.

---

## அநுவாகம் கOச.

### சக்தி பெருக்கு

க. பழமையாய் பொழியப்படும் பலத்தின் உதயனை இச்சோமன் சலம் செடி கொடிகளில் தலைவனாகும். அவை நமக்கு இனிமை யளிப்பவை யாகட்டுமே. [1]புரோகிதர்களான நாங்கள் [2]க்ஷத்திரத்தில் கவனமாகவேண்டும். உ. பலத்தின் உதயன் இவ்வுலகம் எல்லா உலகங்களையும், எங்கும் பரவியுளான். அவன் புஷ்டி, பிரஜையை எமக்குப் பெருக்கி பெருமையை அறிபவனாய் எங்குஞ் சுற்றுகிறான். ந. பலத்தின் உதயம் சோதியில் சாய்ந்துளான். அவன் ராஜாவாக கவர்ந்துளான். அறியுமவன் அளிக்காதவனை தாராளமாக்குகிறான். அவன் எல்லா வீரர்களுடன் செல்வத்தை எமக்களிக்கவேண்டும்.

ச. அக்கினியே! எங்களிடம் பேசவும். நீ நல்ல மனமுடன் எமக்காகவும். புவனபதியே! எங்களைப் பெருக்கவும். புவனபதியே! நீ எமக்குச் செல்வத்தை யளிப்பவன்.

---

**கOந. கருத்து. யக்ஞத்தால் அனைத்தையு மடைந்து அமுதமடையவும்.**

1 சனங்களுக்கு இதஞ் செய்பவர்களான, 2 பலத்தில்.

ரு. அரியமான், எங்களைப் பெருக்கவேண்டும். பகன், வாக்தேவி, பிருகஸ்பதி, தேவர்கள், சக்தியர்கள் எங்களுக் களிப்பவர்களாக வேண்டும்.

௬. இந்திரன் அரியமான், பிருஹஸ்பதியே, எமக்குத் தானங்களாகப் பிரேரியுங்கள். விஷ்ணு, வாக்கு, சரஸ்வதி, திடமான சவிதாவைப் பிரேரியுங்கள். எ. நாங்கள் விஷ்ணு சூரியன். அக்கினி, வருணன் சோமராஜன், பிராமணன் பிருகஸ்பதி ஆதித்தியர்களைப் பற்றுகிறோம்.

அ. அசுவினி கைகளுடன், பூஷணா புஜங்களால், தேவ சவிதாத் தூண்டுதலில் சொல் நியமனஞ் செய்யும் சரஸ்வதி ஆக்ஞையுடன், நான் அக்கினியின் சாம்ராஜ்யத்தால் உன்னை அபிஷேகஞ் செய்கிறேன். இந்திரன் பிரகஸ்பதி சாம்ராஜ்யத்தால் நான் உன்னை அபிஷேகஞ் செய்கிறேன். க. எ. கO.

---

## அநுவாகம் கOரு.

### ஜயபேரிகை

க. அக்கினி, வாக்கை ஒரு [1]அட்சரத்தால் ஜயித்துளார். அசுவினிகள் பிராணபானனை [2]இரு அட்சரங்களால் ஜயித்துளார்கள். விஷ்ணு மூவ்வுலகங்களை மூன்று அட்சரங்களால் ஜயித்துளார். சோமன் நான்கு பாத பசுக்களை நான்கு அட்சரங்களால் ஜயித்துளார். பூஷணன் பங்கிதியை பஞ்சாட் சரங்களால் ஜயித்துளார். தாத்ரு ஆறு ருதுக்களை ஆறு அட்சரங்களால் ஜயித்துளார்.

---

கO௬. கருத்து. திடத்தையும் தீட்சையையும் இங்கு காணலாம்.

1 அழியாப் பொருளால் 2 பல வடிவங்களுள்ள அழியாப் பொருள்.

மருந்துக்கள் ஏழு பாதங்களுடனான சக்வரிகளை ஏழு அட்சரங்களால் ஜயித்துளார்கள். பிரகஸ்பதி காயத்ரியை எட்டு பாதங்களால் ஜயித்துளார். மித்திரன் திருவிருத சோமனை ஒன்பது பாதங்களால் ஜயித்துளார்.

வருணன் விராஜனை பத்து அட்சரங்களால் ஜயித்துளார். இந்திரன் திருஷ்டுபுவை பதினொன்று அட்சரங்களால் ஜயித்துளார். விசுவேதேவர் ஜகதியை பன்னிரண்டு அட்சரங்களால் ஜயித்துளார். வசுக்கள் கங ஸ்தோமங்களை [1] கங அட்சரங்களால் ஜயித்துளார். இந்திரன் கச ஆன ஸ்தோமனை கச அட்சரங்களால் ஜயித்துளார். ஆதித்தியர்கள் கரு ஆன ஸ்தோமனை கரு அட்சரங்களால் ஜயித்துளார்கள். அதிதி ககூ ஆன ஸ்தோமனை ககூ அட்சரங்களால் ஜயித்துளார். பிரஜாபதி கஎ ஆன ஸ்தோமத்தை கஎ அட்சரங்களால் ஜயித்துளார். க. எ. கக.

---

## அநுவாகம். க0சு.

### எங்கும் பலம் பற்று

க. நீ[2] ஆதரவோடு கிருகிக்கப்பட்டுளாய். மனிதர்களில் சாயுமுன்னை, வனஸ்பதி யிலமையுமுன்னை, உலகத்திலுட்காரு முன்னை, இந்திரனுக்குப் பிரியமான உன்னை நான் கிரகிக்கிறேன். இது உனது சன்ம நிலயம். இந்திரனுக்கு உன்னை நாடுகிறேன்.

உ. [3]நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். சலங்களில் சாயுமுன்னை, நெய்யி லமையு முன்னை, வானத்தி லுட்காரு முன்னை இந்திரனுக்குப் பிரியமான உன்னை, நான் பற்று

---

க0ரு. கருத்து—ஜய இரகசியம்.

[1] பற்பல விருப்பங்களை. [2] புவி [3] வானம்

கிறேன். இது உனது சன்ம நிலயம். இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன்.

ந. [1]நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். புவியிலமையு முன்னை, வானத்தி லுட்காரு முன்னை, உச்சியிலமையு முன்னை, இந்திரனுக்குப் பிரியமான உன்னை, நான் கிரகிக்கிறேன். இது உனது சன்ம ஸ்தானம். இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன்.

ச. இந்த கிரகங்கள் பஞ்ச சனங்களின் நன்மை செய்பவையாகும். அவற்றின் மூன்று—அக்கினி இந்திரன் சூரிய சம்பந்தங்கள்—பெரிய சன்மத்தின்—தோற்றங்கள். அவற்றின் திவ்ய கோசம் நன்கு திறக்கப்பட்டுளது. அவற்றின் வெகு சாதனங்களுடனுன உணவையும் பலத்தையும் நான் கிரகித்துளேன். இது உனது சன்ம ஸ்தானம். இந்திரனுக்கு உன்னை நான் நாடுகிறேன். ரு. உங்கள் நடுவிலுள்ள சத்தியான சலங்களின் ரசத்தை, குவிக்கப்பட்ட சூரியனின் ரசிமியை சலரசத்தின் ரசச்சிறப்பை நான் கிரகிக்கிறேன்.

சு. இவ் வடிவத்தால் வன்மைச் செயல்களை அவன் விளக்குகிறுன். அவன் கோரன். அவன் சிறப்புக்கு விஸ்தார மாகிறுன். அவன் இனிமை சுமந்து உச்சிக்கு வந்துளான். தன் சோதியில் நமது தேகத்தைச் சேர்க்குங் கால் நமக்கு அவன் அருள் சுரக்கும்.

எ. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். நான் உன்னை பிரசாபதிக்கு அநுகூலமாகப் பற்றுகிறேன். இது உனது சன்ம ஸ்தானம். நான் உன்னை பிரசாபதிக்குப் பற்றுகிறேன். க. எ. கஉ.

---

கம்சு. கருத்து—நீ மூவுலகங்களை ஜயித்துத் தலைவனைப் பற்றவும்.

[1] சோதி.

## அநுவாகம் கOஎ.

### யக்ஞங்கள்

க. மலை, புவி, வானம், வனங்கள், ஓஷதிகள் மாதங்கள், விரும்பும் சலங்கள் இந்திரனை அவன் புலனு குங்கால் அநுசரித்துள.

உ. இந்திரனே! யக்ஞாருகனே? மனித ஜயத் துடன் சதா காலம் விருத்திரனைக் கொல்லவும். சக்தி, சகலத் தலைமை, தேவர்களால் திடமான திறத்துக்காக உனக்கு அளிக்கப்பட்டுள.

ங. நான், [1]இந்திராணியை ஸ்திரீகளில் நல்ல மனைவி யெனச் செவியுற்றுளேன். ஏனெனில் எச்சமயத் திலும் அவள் [2]புருஷன் மூப்பினுல் மரிப்பதில்லை. ச. இந்திராணியே! தேவர்களுக்குப் பிரியமாய் சலம் நிறை யும் அவி செலுத்துபவனுகும் என் நண்பனுன விருஷா கபி யன்னியில் நான் இன்பமாவதில்லை.

ரு. இந்திரனுன தேவன் முதல் பிறக்குங் கால், தேவர்கள் நடுவே தீரன் அறிஞனுகி சூட்சம சத்தியால் தேவர்களை ஆக்கிரமித்துளான். அவன் பலத்தினின்று வானமும் பூமியும் நடுங்கியுளது. மனிதர்களே! வீர வன் மையில் அவன் இந்திரனு யுளான். சு. உக்கிர இந்திரனே! பலமான மனிதர்களின் கைகளினின்று அம்பு பாயுங் கால், போர் சைன்னியம் சேரும் பொழுது இரட்சிப்போடு உன் வன்மை இங்காகவேண்டும். உன் மனம் வேறு எங் கும் செல்லவேண்டாம். எ. எங்களை அழிக்காதே! திவ்ய யஜமானனுக்கு அளிப்பதற் கான செல்வத்தைக் கவர்ந்து எமக்களிக்கவும். நாங்கள் இத் துதியை இந்

---

1 அறிவை 2 சக்தி

னூதன அளிப்புக்குக் கானஞ் செய்துளோம். இந்திர னின் துதியில் நாங்கள் பிரார்த்திப்போம்.

அ. அதைச் செல்வத்தை எமக்குக் கொண்டுவர வும். அதை எவரும் தடுக்க வேண்டாம். ஏனெனில் உன்னை செல்வங்களின் செல்வபதியாக நாங்கள் அறி கிறோம். இந்திரனே ! குதிரைத் தலைவனே ! உன் மகத் தான அளிப்பை எமக் களிக்கவும். கூ. நாங்கள் அவி யுடன், அளிக்கு மிந்திரனை அழைக்கிறோம். உங்கள் இரு கைகளை செல்வத்தால் நிரப்பவும். வலது இடது கைகளி னின்று எமக்களிக்கவும். க0. [1]தானன், புமான், ரிஷ பன், பலவான், ஜயிப்பவன், சோமபானன், விருத்திர சம் காரன், வச்சிராயுதந் தரிப்பவன், இந்தத் தர்ப்பைகளில் வீற்றியுளான். நீ யஜமானக்குச் சுகம் செல்வ மாகவும்.

கக. விசுவே தேவனாய் துணைகளுடன் துணை யளிக் கும், இரட்சகனாய் இந்திரனை நீ, எமக்குப் பிரியமாகவும். அவன் துவேஷிகளைத் தடுக்கட்டும், அவன் அபய மளிக் கட்டும். நாங்கள் நல்ல வீரத் தலைவர்களாகவேண்டும்.

கஉ. நாங்கள் யக்ஞாருகனாக அவன் நல்ல மனத் தை அநுபவிக்கவேண்டும். ரட்சிக்கும் இந்திரன் ரட்சிப் பின் தாதா சத்துருவைச் சதா தூரமாய் துரத்தட்டும். க௩. எவற்றால் புசித்து இன்பமாவோமோ, அப்பெரும் போகங்கள் பெரும் பலமுடனான் இந்திரனால் எமக்காக வேண்டும்.

கச. முன்னணியில் தன் இரதத்தை வைக்க இங்கு இந்திரனுக்கு கானஞ் செய்யவும். யுத்த முழக்கத்தில் அவன் விசால உலகத்தைச் செய்கிறான். போர்களில் பகைவர்களை ஜயிக்கும் நீ எமக்கு சுக மளிப்பவனாகவும்,

1 எல்லாம் இந்திரனுக்குப் பெயர்

பகைவர்களின் பல மில்லாத விற்கயிறுகள் அவர்கள் விற்களில் அறுகட்டும். க. எ. கரு.

---

## அநுவாகம் க௦அ.

[இராஜசூயம் க௦அ—கஉரு]

### புன்மையொழி

க. [1]நிர்ருதியே ! அவியில் இன்பமாகி சென்று விடவும், சுவாஹா ! இது உன் பாகமாகும். செல்வ மடையும் நீ, அவியில் மிருந்தவன். அவனைப் புன்மையினின்று பிரிக்கவும். சுவாஹா ! இதைச் செய்துள்ளவனுக்கு நமஸ்காரம். க. அ. க.

---

## அநுவாகம் க௦கூ.

### நோக்கம்

க. கலப்பில் இன்பமாகி எதிரி புசித்து யக்ஞம் சுமக்கும் மருத்துக்களை நாங்கள் அழைக்கிறோம்.

உ. தேவனான இந்திரனே ! போர்களில் நீ எமக்கு எதிராகவேண்டாம், [2]உக்கிரனே ! உன்னைத் திருப்தியாக்க பரிகார மிருக்கட்டும். ஏனெனில் இம் மகவானின்[3] யவக் குவியல்[4] பெரியதாகும். எங்கள், கானம் துதிக்கும் மருத்துக்கள், அவிச்செல்வர்களாகும். ரு. காடு, கிராமம், சபை சகோதரர்களில் நாங்கள் செய்யும் பாவத்தின், ஆரியன்

---

க௦எ. கருத்து—தோத்திர மொழிகள்

க௦அ. கருத்து. புன்மையை புனித மொழியாலொழிக்கவும்.

1 புன்மையே. 2 கோபமுள்ளவனே, 3 ஐசுவரியவானின், 4 தானியக் களஞ்சியம்.

சூத்திரனுக்குச் செய்யும் பாவத்தின், இரண்டிலொன்றின் அறத்துக்கு மாறான பாவத்தின் பரிகாரன் நீயே, சுவாஹா!

ச. செயலின் கர்த்தாக்கள் அதிசய மொழியுடன் செயலைச் செய்துளார்கள். [1]நல்ல தானர்களே! தேவர்களுக்குச் செயலைச் செய்து நீங்கள் உங்கள் நிலயஞ் செல்லுங்கள். க. அ. ந.

---

## அநுவாகம் ககo.

### இராஜப் பிரஜா தர்மம்

க. ஆயுதமே! நீ பூர்ணமாகிப் பறக்கவும், மறுபடியும் நீ நன்கு நிறைந்து திரும்பவும். [2]சதக்கிரதுவே! நாங்கள் உணவு பலத்தை பொருள்களைப்போல் பண்டமாற்றட்டும். உ. நீ எனக்கு அளிக்கவும். நான் உனக்களிப்பேன். நீ என்னில் அளிக்கவும். நான் உன்னில் அளிப்பேன், என் அளிப்பைப் பெற்றுக் கொள்ளவும். நான் உன் அளிப்பைப் பெற்றுக்கொள்வேன். க. அ. ச.

---

## அநுவாகம் கககஂ.

### பிதுரு யக்ஞம்

க. பிதாவே! இது உனக்காகும், உனது பரம்பரைக்கு மாகும். பாட்டனே! முப்பாட்டனே! இது உனக்காகும், உனது பரம்பரைக்கு மாகும். பிதுருக்களான நீங்கள் உங்கள் பாகங்களில் இன்பமாகுங்கள்.

---

கOக. கருத்து. நம்முடைய பலம், நாம் சபை முதலியவற்றில் செய்யுங் குற்றங்களை பரிகாரஞ் செய்யும்.

ககO. கருத்து. அரசர் மரியாதை யளித்தால் பிரஜையும் கண்ணிய மளிக்கவேண்டும்.

1 நலமுடன் அளிப்பவர்களே. 2 அதி அறிஞனே.

உ. மகவானே! [1]சுக தரிசியே! நாங்கள் உன்னை இன்பமாக்குவோம். இப்போது துதிக்கப்படும் நீ பூரண ரதத்துடன் வந்து எங்களிஷ்டம் போல் செல்லவும். இந்திரனே! உன் இரு கருங் குதிரைகளை இணைக்கவும்.

ங. அவர்கள் புசித்துளார்கள், அவர்கள் இன்பமாயுளார்கள். பிரியர்கள் புன்மையைப் பிரித்துளார்கள். புதிய துதியால் புனித அறிஞர்கள் போற்றப் பட்டுளோர்கள். இந்திரனே! உன் இரு கருங் குதிரைகளைப் பூட்டவும்.

ச. [2]பிதுருக்கள் புசித்துளார்கள், பிதுருக்கள் இன்பமா யுளார்கள். பிதுருக்கள் இன்பமாக்கப் பட்டுளார்கள், பிதுருக்கள் இன்பமா யுளார்கள், பிதுருக்கள் புனிதமா யுளார்கள். ரு. சோமன் விரும்பும் பிதுருக்களான நீங்கள் உங்கள் பழைய கம்பீர வழிகளால் சென்று விடுங்கள். அப்பால் சீவனில் யமனிடஞ் சந்தோஷமாகும் பிரிய பிதுருக்களிடஞ் செல்லுங்கள்.

சு. பிதுருக்களின் வணக்கத்துடன் மனிதாருகத் துதியால் மனத்தை நாம் அழைக்கிறோம். எ. மனம் எமது பலம் புலனறிவு, வாழ்க்கைக்கு சூரியனை வெகு காலங் காண்பதற்கும் திரும்பி வரட்டும்.

அ. பிதுருக்களும் தேவ சனங்களும் எமக்கு மனத்தைத் திருப்பி யளிக்கட்டும். நாங்கள் உழைப்பு வாழ்க்கையை நாடவேண்டும்.

க. கிரகத்தின் அக்கினி, நான் புவி, சோதி வானம், தாய் தந்தைக்கு எக் குற்றஞ் செய்திருந்த போதிலும் அந்த இக் குற்றத்தினின்று என்னை விடுதலையாக்கட்டும். நாங்கள் செய்துள்ள எல்லாப் புன்மையி

1. சுந்தரத் தோற்றனே. 2 அறிஞர்கள்

ணின்றும் அவன் என்னைப் புனிதமாக்க வேண்டும். க. அ. ரு.

---

## அநுவாகம் ககஉ.

### திரியம்பக துணை

க. அவன் ஒவ்வொரு புருஷனுக்கும் ஒரு கபாலத்திலளிக்கிறான், ஒன்று அதிகமாகவு மளிக்கிறான். உ. நான், வீட்டின் வாசமாகு மனைவர்களுக்கும் சுகத்தைச் செய்துளேன். ௩. நீ [1]பசுக்களின் பாதுகாப்பாகும், நீ யக்ஞத்தின் பாதுகாப்பாகும், நீ எனக்குப் பாதுகாப்பை யளிக்கவும். ச. ருத்திரனே எவனுக்கும் இரண்டாவதாவதில்லை. ரு. ருத்திரனே! ஆயுதமே உன் மிருகமாகும். அதில் இன்பமாகவும். சு. ருத்திரனே! இது உனது பாகமாகும். உன் சகோதரி அம்பிகையுடன் அதில் இன்பமாகவும். எ. நீ பசு, குதிரை, மனிதனுக்கு மருந்தளிக்கவும். எமக்கும் ஔஷதியை யளிக்கவும். ஆடு ஆடு சாதிக்கு நன்மையான சிகிச்சை நிறையும் ஓஷதியை யளிக்கவும். அ. அம்பாவே! நாங்கள் ருத்திரனை, தேவ திரியம்பகனை, அவன் எங்களைச் செல்வமுடனாக்கவும் அவன் எங்கள் செல்வத்தைச் செழிப்பிக்கவும், எங்களைப் பசுப் பொருளுடனாக்கவும், எங்களை வீரமுடனாக்கவும், திருப்தி செய்துளோம். கூ. புஷ்டி செய்பவனாய் சுகந்தமுள்ள திரியம்பகனை நாங்கள் உபாசிக்கிறோம். கொடியினின்று, வெள்ளரிப் பழத்தைப்போல், [2]மிருத்யுவினின்று நான் விடப்படவேண்டும். ஆனால் அமிரு

---

ககக. கருத்து—பிதுருக்களான பெரியார்களுக்கு நாம் செய்யவேண்டிய கடமைகள்.

1 புலன்களின் 2 மரணத்தினின்று

தத்தினின்று நான் நீங்காம லாகவேண்டும். க0. ருத்திரனே! இது உனது பாகமாகும், அதில் இன்பமாகவும்; கக. நீ சர்ம உடை விசால வில், கையிலா யுதத்தோடு, உணவுக்கு அத்துடன் மூஜவந்துக்களுக் கப்பால் சென்று விடவும். க. அ. ௬.

---

## அநுவாகம் கக௩.

### அரக்காழி

க. அக்கினியினுல் தலைமை வகிக்கப்படும் கீழ்த் திசையி லமருந் தேவர்கள்; யமனுல் தலைமை வகிக்கப்படும் தென் திசை யமருந் தேவர்கள், ஸவிதாவால் தலைமை வகிக்கப்படும் மேற் திசையிலமருந் தேவர்கள்,வருணனுல் தலைமை வகிக்கப்படும் வடதிசை சாயுந் தேவர்கள், பிரகஸ்பதியால் தலைமை வகிக்கப்படும் உச்சியி லமையுந் தேவர்கள், அரக்கர்களை யழிக்கு மவர்கள் எம்மைக் காக்க வேண்டும். எம்மை அவர்கள் ரட்சிக்கட்டும். அவர்களுக்கு நமஸ்காரம், அவர்களுக்கு ஸுவாஹா!

உ. அரக்கர்கள் சேர்க்கப்பட்டுளார்கள், [1]அவர்கள் எரிக்கப்பட்டுள்ளார்கள், நான் இங்கு அரக்கர்களை எரிக்கிறேன்.

௩. அரக்கரழிக்கும் அக்கினிக்கு ஸுவாஹா! யமன், வருணன், சாவித்திரி அரக்காழிக்கும் யக்ஞாருக பிருககஸ்பதிக்கு ஸுவாஹா! தேவ ஸவிதாவின் தூண்டுதலில், அசுவினிகளின் கைகளால், பூஷணனின் புஜங்க

---

ககஉ. கருத்து—ருத்திரனை கோபத்தையும் நீங்கள் பற்றவேண்டும்.

1 அவர்களை எரியுங்கள்





4. யமன்



5. சூரியன் (ஒரிஸா)

ளுடன் அரக்கர் அழிவுக்கு நான் அளிக்கிறேன். அரக்கர்கள் அழிக்கப்பட்டுள்ளார்கள், நாங்கள் அரக்கர்களை அழித்துளோம். க. அ. எ.

## அநுவாகம் கக௪.

### அரசன் யார் ?

க. விருத்திரனைக் கொல்லும் மன்னன் எங்கள் இராஜாவாகவேண்டும். அவன் எதிரியை அழிக்கட்டும். க. அ. கூ.

## அநுவாகம் கக௫.

### இவன் இராஜா

க. எழுச்சிகளின் ஸவிதா உன்னை எழுச்சியாக்கட்டும். பசுவின் ருத்திரன், பேச்சின் பிரகஸ்பதி. சத்தியத்தின் மித்திரன், சிரேஷ்டர்களின் இந்திரன், தரும பதிகளின் வருணன் கிரகபதிகளின் அக்கினி வனஸ்பதிகளின் சோமன்—உன்னை எழுச்சி யாக்கட்டும்.

உ. தேவர்களைத் தூண்டும் தேவர்களே! இச் சந்ததி சேர்ந்தவனை எதிரிகளினின்று நீக்கி பெரும் பலம், பெரும் தலைமைப் பதவி, சனத்தில் பெரிய ஆட்சிக்கு எழுச்சி யாக்குங்கள்.

ந. பரதர்களே[1]! இவன் உங்கள் அரசனாகும். சோமன் நமது பிராமணர்களின் அரசனாகும்.

---

கக௩. கருத்து. அங்கங்குள்ள தேவர்களின் உதவியை நாடி சத்துருக்களைச் சம்ஹாரஞ் செய்யுங்கள்.

கக௪. கருத்து. உண்மையான சத்துருக்களை யொழித்து உங்கள் அரசர்களை தேர்ந்தெடுங்கள்.

1 பொருப்புள்ளவர்களே.

ச. இந்த இராஜாங்கம் நமக்குச் சூட்டப்பட்டுள்ளதாகும். வருணன் தன் [1]தேகத்தையே வியாபிக்கச் செய்துளான். புனிதமான [2]மித்திரனுக்கு நாங்கள் தாழ்மை யாயுளோம். பெரிய [3]ருதத்தின் பெயரை நாங்கள் பெருமை யாக்கியுளோம்.

ரு. இவர்கள் எல்லாம் வருணனின் சைன்னியங்களாயுளார்கள், மித்திரன் தன் வழியில் சத்துருவை ஜயித்துளான். திவ்யர்கள் ருதமனு சரித்துப் பற்றியுளார்கள். எங்கள் மூப்பை திரிதன் தரித்துளான்.

சு. நீ விஷ்ணுவின் மிதியாகும். நீ விஷ்ணுவின் பாதமாகும். நீ விஷ்ணுவின் தூர நடையாகும். க. அ. க0.

---

## அநுவாகம் ககசு.

### சலஞ் சேர்க்கவும்

க. நீங்கள் விருப்பமுள்ளவர்கள், நீ சலங்களின் தலைவன், நீ வர்ஷிக்கு மலையாகும். நீ வர்ஷிக்குங் கூட்டம். நீங்கள் [4]கோசாலை வாசிகள். நீங்கள் மருத்துக்களின் பலமாகும். நீங்கள் சூரியனின் வர்சஸை யடைந்துளீர்கள். நீங்கள் சூரியனின் சோதியை யடைந்துளீர்கள். நீங்கள் இனிமையானவர்கள். நீங்கள் [5]இணக்கமானவர்கள். நீங்கள் வன்மை யுள்ளவர்கள். நீங்கள் எல்லாம் தாங்குபவர்கள். நீங்கள் சனங்களின் சத்தியைத் தாங்குபவர்கள். நீங்கள் அக்கினியின் தேஜஸை யடைந்துள்ளவர்கள். நீங்கள் சலம் ஓஷதிகளின் [6]இரசமாகும்.

---

ககரு. கருத்து. இராஜ இரகசியம்.

1 குணத்தை, 2 சத்தியனுக்கு, 3 உண்மையின். 4 பசுக்கூட்டம் வசிப்பவர்கள். 5 பரஸ்பரம் சேர்பவர்கள். 6செடிகொடிகளின்.

உ. மது நிறைந்து பலம் மிகுந்து இராஜ சூயத்துக்கு விருப்பமான எவற்றால் அவர்கள் மித்திர வருணனை அபிஷேகஞ் செய்தார்களோ, எதிரிகளுக் கப்பால் இந்திரனை எவற்று லழைத்துச் சென்றார்களோ. அந்த திவ்ய சலங்களை அவர்கள் பற்றி யுளார்கள்.

ந. நீங்கள் ராஷ்டிரங்களை யளிப்பவர்கள். நீங்கள். இராஜ்யத்தை யளியுங்கள், சுவாஹா! நீங்கள் இராஜ்யத்தை யளிப்பவர்கள். இவனுக்கு இராஜ்யத்தைக் கொடுங்கள். க. அ. கக.

---

## அநுவாகம் ககஎ

### பக்துவ சலம்

க. க்ஷத்திரியர்களுக்கு சிறந்த சோதியை ஜயித்து இனிமையோடு இனிமை நிறையும் திவ்யமான [1]சலங்களே! நீங்கள் ஒன்று சேருங்கள். உ. க்ஷத்திரியனில் [2] சிறந்த சத்தியை யளித்து சத்திமிகும் அதி விசேஷமான நீங்கள் கீழே அமருங்கள். ந. நீ மொழி பந்து, தவத் தினுதயன். நீ தோல்வி யாகாதவன், நீ சோமனின் பங்காகும். ச. சோதியான உன்னை நான் சோதியால் சுத்தமாக்குகிறேன். நான் சந்திரனை சந்திரனால் அமுதத்தை அமுதத்தால், இராஜ சூயத்துக்கு விரும்பும் உன்னைச் சுத்தமாக்குகிறேன். ரு. சுவாஹா! வருணன் துரிதமாகி, தோல்வியாகாமல், இன்பங்கலந்து, இவற்றிலணிந்து திடத்தில் திவ்யமாய், சலங்களில் தாய்க் கதிகமாகி சலங்களில் மகனாய், தன் நிலயத்தை அவற்றில் செய்துளான்.

---

ககசு. கருத்து. தீட்சைக்கு சலத்தைச் சேருங்கள்.

1சனங்களே. 2சக்தியில்.

சு. நீ பலத்தின் ரட்சகன். நீ பலத்தி னுதய நிலயன். எ. கிரகபதியான அக்கினி பிரசித்தமாயுளான், பழையப் புகழி னிந்திரன் பிரசித்தமாயுளான், விசுவவேத பூஷணன் பிரசித்தமாயுளான், சத்தியம் பெருக்கும் மித்திர வருணர்கள் பிரசித்தமா யுளார்கள். நிலை விரத வானம் பூமி பிர்சித்தமாயுள. விசு விரூபங்களின் தேவி அதிதி பிரசித்தமாகியுளாள். இந்த சனம், தேசத்தில், பெருந் தலைமைக்கு சனத்தில், பெருமாட்சிக்கு இப்பரம் பரையைச் சேரும், இவன் பிரசித்தமாயுளான்.

அ. பரதர்களே! இவன் உங்கள் அரசன், நமது பிராமணர்களின் அரசன் சோமனாகும். கூ. நீ எதிரிகளைக் கொல்லும் இந்திரனின் வச்சிராயுதமாகும். உன்னால் அவன் எதிரியை யழிக்கவேண்டும். க0. நீங்கள் எதிரிகளின் ஜய சீலர்களாகும். கக. முன்புறம் என்னைக் காக்கவும், பக்கத்தில் என்னைக் காக்கவும். பின் புறத்தினின்று என்னைக் காக்கவும், திசைகளி னின்று என்னைக் காக்கவும், என்னை எல்லா நாசப் பொருள்களின்றுங் காக்கவும். கக. மித்திர வருணனே! உஷைகளின் உதயத்தில் பொன்னிறமாய் சூரியோதயத்தில் செம்புத் [1]தூணாய் உங்கள் இரத பீடத்தில் ஏறுங்கள். அப்பால் திதி அதிதியைப் பாருங்கள். க. அ. கஉ.

---

## அநுவாகம் ககஅ

### தீக் விஜயம்

க. எழுச்சி யாகும் திசையில் நீ ஏறவும்; சந்தங்களின்[2] காயத்திரி உன்னைக் காக்கட்டும். திருவிருது

---

ககஎ. கருத்து. அரசர் கடமை.

1 சக்தியுள்ளவர்களாய். 2 சந்தோஷம், சிறந்த சக்தி.

ஸ்தோமன், ரதந்தர ஸாமன், தேவதை அக்கினி, உன்னைக் காக்கட்டும். பிராமணன் பொருளைக்-காக்கட்டும். உ. உக்கிர திசையை நீ ஏறவும், சந்தங்களின் திருஷ்டுபு உன்னைக் காக்கட்டும். பஞ்ச தச ஸ்தோமன், பிருஹத் சாமன், தேவதை இந்திரன், உன்னைக் காக்கட்டும். பலம் செல்வத்தை-ரட்சிக்கட்டும். ௩. நீ ஒளி வீசும் திசையை ஏறவும். சந்தங்களின் ஜகதி உன்னைக் காக்கட்டும். சப்த தச ஸ்தோமன், வைரூப சாமன், தேவதை மருத்துக்கள், உன்னைக் காக்கட்டும். வேளாண்மை, செல்வத்தை-ரட்சிக்கட்டும்.

ச. நீ வடதிசையை ஏறவும். சந்தங்களின் அனுஷ்டுபு உன்னைக் காக்கட்டும். ஏகவிம்ச ஸ்தோமன் வைராஜ சாமன். தேவதை மித்திரன் வருணன்-உன்னைக் காக்கட்டும். திடம் பொருளைக்-காக்கட்டும். ரு. நீ உச்சியை ஏறவும், சந்தங்களின் பங்க்தி உன்னைக் காக்கட்டும். திரிணவம் திரியத் திரும்ச ஸ்தோமங்கள் சாக்வர ரைவத சாமன்கள், தேவதை பிருகஸ்பதி, உன்னைக் காக்கட்டும். வர்சஸூ செல்வத்தைக்-காக்கட்டும். சா. அதுபோல வேறுபோல, இதுபோல, ஒன்று போல ஒரே மாதிரி ஒழுங்காய் ஒருமையுடனுளான். எ. சோதியாய் சத்தியனுய், சுத்தசோதி, சத்தியசோதி, விசித்திர சோதியின்-காப்பனுய்-ருதத்தின் ரட்சகனுய், துன்பத்துக் கப்பாலுள்ளவனுகும்.

அ. அக்கினிக்கு சுவாஹா! சோமனுக்கு சுவாஹா! சவிதாவுக்கு சுவாஹா! சரஸ்வதிக்கு சுவாஹா! பூஷணனுக்கு சுவாஹா! பிரகஸ்பதிக்கு சுவாஹா! இந்திரனுக்கு சுவாஹா! கோஷத்துக்கு சுவாஹா! சுலோகத்துக்கு சுவாஹா! அம்சத்துக்கு சுவாஹா! பகனுக்கு சுவாஹா! நிலத் தலைவனுக்கு சுவாஹா! கூ. புவிக்கு சுவாஹா!

சு. நீ பலத்தின் ரட்சகன். நீ பலத்தி னுதய நிலயன். எ. கிரகபதியான அக்கினி பிரசித்தமாயுள்ளான், பழையப் புகழி னிந்திரன் பிரசித்தமாயுள்ளான், விசுவவேத பூஷணன் பிரசித்தமாயுள்ளான், சத்தியம் பெருக்கும் மித்திர வருணர்கள் பிரசித்தமா யுளார்கள். நிலை விரத வானம் பூமி பிர்சித்தமாயுள. விசு விருபங்களின் தேவி அதிதி பிரசித்தமாகியுள்ளாள். இந்த சனம், தேசத்தில், பெருந் தலைமைக்கு சனத்தில், பெருமாட்சிக்கு இப்பரம் பரையைச் சேரும், இவன் பிரசித்தமாயுள்ளான்.

அ. பரதர்களே! இவன் உங்கள் அரசன், நமது பிராமணர்களின் அரசன் சோமனாகும். கூ. நீ எதிரிகளைக் கொல்லும் இந்திரனின் வச்சிராயுதமாகும். உன்னால் அவன் எதிரியை யழிக்கவேண்டும். க0. நீங்கள் எதிரிகளின் ஜய சீலர்களாகும். கக. முன்புறம் என்னைக் காக்கவும், பக்கத்தில் என்னைக் காக்கவும். பின் புறத்தினின்று என்னைக் காக்கவும், திசைகளி னின்று என்னைக் காக்கவும், என்னை எல்லா நாசப் பொருள்களினின்றுங் காக்கவும். கஉ. மித்திர வருணனே! உஷைகளின் உதயத்தில் பொன்னிறமாய் சூரியோதயத்தில் செம்புத்[1] தூணாய் உங்கள் இரத பீடத்தில் ஏறுங்கள். அப்பால் திதி அதிதியைப் பாருங்கள். க. அ. கஉ.

---

## அநுவாகம் ககஅ

### தீக் விஜயம்

க. எழுச்சி யாகும் திசையில் நீ ஏறவும்; சந்தங்களின்[2] காயத்திரி உன்னைக் காக்கட்டும், திருவிருது

---

ககஎ. கருத்து. அரசர் கடமை.

1 சக்தியுள்ளவர்களாய், 2 சந்தோஷம், சிறந்த சக்தி.

ஸ்தோமன், ரதந்தர ஸாமன், தேவதை அக்கினி, உன்னைக் காக்கட்டும். பிராமணன் பொருளைக்-காக்கட்டும். உ. உக்கிர திசையை நீ ஏறவும், சந்தங்களின் திருஷ்டுபு உன்னைக் காக்கட்டும். பஞ்ச தச ஸ்தோமன், பிருஹத் சாமன், தேவதை இந்திரன், உன்னைக் காக்கட்டும். பலம் செல்வத்தை-ரட்சிக்கட்டும். ௩. நீ ஒளி வீசும் திசையை ஏறவும். சந்தங்களின் ஜகதி உன்னைக் காக்கட்டும். சப்த தச ஸ்தோமன், வைரூப சாமன், தேவதை மருத்துக்கள், உன்னைக் காக்கட்டும். வேளாண்மை, செல்வத்தை-ரட்சிக்கட்டும்.

ச. நீ வடதிசையை ஏறவும். சந்தங்களின் அனுஷ்டுபு உன்னைக் காக்கட்டும். ஏகவிம்ச ஸ்தோமன் வைராஜ சாமன். தேவதை மித்திரன் வருணன்-உன்னைக் காக்கட்டும். திடம் பொருளைக்-காக்கட்டும். ரு. நீ உச்சியை ஏறவும், சந்தங்களின் பங்க்தி உன்னைக் காக்கட்டும். திரிணவம் திரியத் திரும்ச ஸ்தோமங்கள் சாக்வர ரைவத சாமன்கள், தேவதை பிருகஸ்பதி, உன்னைக் காக்கட்டும். வர்சஸ செல்வத்தைக்-காக்கட்டும். சு. அதுபோல வேறுபோல, இதுபோல, ஒன்று போல ஒரே மாதிரி ஒழுங்காய் ஒருமையுடனுளான். எ. சோதியாய் சத்தியனாய், சுத்தசோதி, சத்தியசோதி, விசித்திர சோதியின்-காப்பனாய்-ருதத்தின் ரட்சகனாய், அன்பத்துக் கப்பாலுள்ளவனாகும்.

அ. அக்கினிக்கு சுவாஹா! சோமனுக்கு சுவாஹா! சவிதாவுக்கு சுவாஹா! சரஸ்வதிக்கு சுவாஹா! பூஷணனுக்கு சுவாஹா! பிரகஸ்பதிக்கு சுவாஹா! இந்திரனுக்கு சுவாஹா! கோஷத்துக்கு சுவாஹா! சுலோகத்துக்கு சுவாஹா! அம்சத்துக்கு சுவாஹா! பகனுக்கு சுவாஹா! நிலத் தலைவனுக்கு சுவாஹா! கூ. புவிக்கு சுவாஹா!

வானத்துக்கு சுவாஹா! சோதிக்கு சுவாஹா! சூரியனுக்கு சுவாஹா! சந்திரனுக்கு சுவாஹா! நட்சத்திரங்களுக்கு சுவாஹா! சலங்களுக்கு சுவாஹா! செடி கொடிகளுக்கு சுவாஹா! மரங்களுக்கு சுவாஹா! அசையும் பொருள்களுக்கு சுவாஹா! நீந்தும் சீவர்களுக்கு சுவாஹா! ஊரும் பிராணிகளுக்கு சுவாஹா! க. அ. கரு.

---

## அநுவாகம் கககூ.

### அபிஷேகம்

க. நீ சோமனின் சோதி வீச்சாகும். நான் உன்னைப்போல் சோதி வீசுபவனாக வேண்டும். உ. நீ அமிருதனாகும், என்னை மிருத்தியு வினின்று காக்கவும். ந. இடி முழக்கத்தினின்று என்னைக் காக்கவும். ச. சர்ப்பங்கள் சாந்த மாக்கப்பட்டுள. ரு. நமூசியின் தலை தூரத்தில் எறியப்பட்டுளது.

சு. சோமன், வருணராஜன் தர்மம் தூண்டும் தேவர்கள், உன் வாக்கைத் தூண்ட வேண்டும். அவர்கள் உன் பிராணனைத் தூண்ட வேண்டும். அவர்கள் உன் காட்சியைத் தூண்டவேண்டும். அவர்கள் உன் காதைத் தூண்டவேண்டும். எ. சோமனின் ஒளி சூரியனின் சோதி அக்கினியின் தேஜசு, இந்திரனின் பலம் மருத்துக்களின் ஓஜசு, மித்திரவருண வீரியத்தோடு நான் உன்னை அபிஷேகஞ் செய்கிறேன்.

அ. நீ பலங்களின் பல பதியாகும். கூ. சோதியினின்று என்னைக் காக்கவும்.

---

**சுவாஹா—வாழி.**

**ககஅ. கருத்து. மனிதனே! நீ எல்லா திசைகளும் சென்று ஜயிக்கவும்.**

க0. ஆழ எதிரியை அநுசரித்து அகாதத்தினின்று அவர்கள் வந்துளார்கள். மலையான ரிஷபத்தின் முதுகில் தாமாகவே வர்ஷிக்கும் கப்பல்கள் சதாகாலம் செல்லுகின்றன.

கக. ருத்திரனே! உன் உயரிய துரித நாமத்துக்கு நீ அளிக்கப்பட்டுளாய். நீ யமனுக் களிக்கப்பட்டுளாய். கஉ. பிரஜாபதியே! இவ்வெல்லாப் பொருள்களை உன்னை விடவேறு எவனும் ஆக்கிரமிப்பதில்லை. உனக்கு எதற்காக நாங்கள் யக்ஞஞ் செய்கிறோமோ அது எமக்காக வேண்டும். நாங்கள் செல்வபதிகளாக வேண்டும். க. அ. கச.

---

## அநுவாகம் கஉ0.

### ஜயாதன்

க. நீ இந்திரனின் வச்சிராயுதமாகும், எதிரிகளை யழிப்பவன், அவன், எதிரியை உன்னு லழிக்கவேண்டும். உ. ஆக்ஞாபிக்கும் மித்திரவருணா நியமத்தோடு யக்ஞத்தின் இணைப்பால் நான் உன்னை இணைக்கிறேன். ௩. நீ விஷ்ணுவின் மிதியாகும், நீ விஷ்ணுவின் பாதமாகும், நீ விஷ்ணுவின் பாய்ச்சலாகும். ச. [1]மருத்துக்களின் எழுச்சியில் நான் ஜயிக்கவேண்டும். ரு. அதற்கு மனது பக்குவமாகட்டும். சு. நான் பலம் வன்மையுடன், சேர்க்கப்படவேண்டும். எ. நீ பசுக்களின் கோபமாகும், அவற்றைப் போல என் கோபமுமாகவேண்டும். அ. தாய் போலாகும் பூமிக்கு நமஸ்காரம், நான் தாயான புவியை இம்சிக்கவேண்டாம், தாயான புவி என்னை இம்சிக்கவேண்டாம்.

---

ககக. கருத்து. நீங்கள் குபேரர்களாகுங்கள்.

1 மகாசனங்களின்.

௬. நீ மிகவும் பெரியவன். நீ ஆயுசாகும், என்னில் ஆயுசை யளிக்கவும், நீ பலமாகும், என்னில் பலத்தை யளிக்கவும்: நீ சேர்ப்பவன்; நீ சோதி வீசுபவன், என்னில் சோதி வீச்சளிக்கவும். க0. கிரகபதியான அக்கினிக்கு சுவாஹா! வனஸ்பதி சோமனுக்கு சுவாஹா! இந்திரனின் சத்திக்கு சுவாஹா! மருத்துக்களின் ஓஜசுக்கு சுவாஹா!

கக. அவன், புனிதத்திலிருக்கும் ஹம்சன்,[1] வானத்திலமரும் வசுவாகும். யக்ஞ பீடத்திலுள்ள ஹோதா. வீட்டிலமரும் அதிதியாகும். மனிதர்களில் வசிப்பவன், உயரிலிருப்பவனாகும், சத்தியத்தில் சாய்பவன், சோதியி லடைபவனாகும். சலங்களின் சத்தியால், சனிப்பவன். கோக்களின் செல்வத்தில் தோன்றுபவன். மலையின் மலர், ருதத்தின் சன்மனும் மேன்மையான ருதனாகும். க. அ. கரு.

---

## அநுவாகம் கஉக.

### அரசனே வாழி

க. நீ மித்திரன், நீ வருணனாகும். உ. நான் விசுவே தேவர்களுடன் ஒன்றாக வேண்டும். ௨. நீ க்ஷத்திர நடுவாகும், நீ க்ஷத்திர சன்ம நிலயமாகும். ௪. சுகமானதிலமரவும்: நீ சுகந்தாசனத்தில் சாயவும். ரு. அவள் உன்னை இம்சிக்க வேண்டாம். அவள் என்னை இம்சிக்க வேண்டாம். ௬. சூட்சும அறிஞனான நிலை விரத வருணன், சலங்களில் சாம்ராஜ்யத்துக்கு அவனை ஸ்தாபித்துளார்.

---

ககரு. கருத்து: நீங்கள் எங்கும் ஜயிக்கவேண்டும்.

1 சார்ந்தன்.

எ. அறிஞனே! அரசனான நீ, பிராமணனாகும். நீ சத்திய எழுச்சியின் சவிதாவாகும். அறிஞனே! அரசனான நீ, பிராமணனாகும். சத்திய சத்தியின் இந்திரன் நீயே, அறிஞனே! அரசனான நீ, பிராமணனாகும், நீயே பிரிய இந்திரனாகும். அறிஞனே! அரசனான நீ, பிராமணனாகும். சத்திய தர்மத்தின் வருணனும் நீயே! அ. நீ இந்திரனின் வச்சிராயுதமாகும், எதிரிகளை யழிப்பவன். இதனால் எனக்கு உடந்தையாகவும். கூ. இம் மன்னன் திசைகளை ஆக்கிரமித்துளான். க0. நற் புகழுள்ளவனே! பொருளுள்ளவனே, புனிதாசனே! கக. சலங்களின் மகனுக்கு சுவாஹா! சத்தியின் மகனுக்கு சுவாஹா! கிருகபதி அக்கினிக்கு சுவாஹா! க. அ. கசு.

---

## அநுவாகம் கஉஉ.

### சௌத்திர மணி

க. நான் இனியதை இனிப்போடு, கசப்பைக் கசப்புடன் அமுதத்தை அமுதத்தோடு, உன்னை சோமனுடன் சேர்க்கிறேன். நீ சோமனாகும், நீ அசுவினிகளுக்குப் பக்குவமாகவும், சரஸ்வதிக்கு பக்குவமாகவும், நல்ல ரட்சகனான இந்திரனுக்குப் பக்குவமாகவும், உ. சூரியனின் பெண்ணானவள் நித்திய பவித்திரத்தால் பாயுஞ் சோமனை உனக்காகச் சுத்தமாக்கட்டும். ந. பவித்திரத்தால் வாயுவைப்போல் புனிதமாகி இந்திரனின் பிரிய நண்பனான சோமன் துரிதமாகியுளான். ச. இனி என்ன? புல் நீக்கி யவதானியத்தை யவக்கதிராளர், அறுப்பது போல் தர்ப்பையின் திவ்யச்செயலுக்கு செல்லாதவர்களது உணவை இங்கு கொண்டு வரவும்.

---

கஉக. கருத்து. அரசர் இலட்சணங்கள்.

ரு. சோமனால் தலைமை வகிக்கப்படும். பிதுருக்களே! சந்தோஷமாகுங்கள். க. அ. உக.

## அநுவாகம் கஉங.

### யக்ஞங்கள்

க. விஷ்ணுவே! அக்கினியே, உங்கள் மகிமை மேன்மை வாய்ந்தது. நெய்யின் இரகசிய நாமங்களில் நீங்கள் இன்பமாகுங்கள். ஒவ்வொரு வீட்டிலும் சப்த செல்வங்களை ஸ்தாபித்து உங்கள் நா கிருதத்துக்குச் செல்லட்டும். உ. விஷ்ணுவே, அக்கினியே! உங்கள்பிரிய நிலயம் பெரியதாகும். நெய் இரகசியங்களில் இன்பமாகி அதை ருசியுங்கள். துதிகளை ஒவ்வொரு வீட்டிலும், பெருக்கி கிருதத்துக்கு உங்கள் நாக்குச் செல்லவேண்டும். ங. அறிவு காக்கும் தேவி சரஸ்வதி தீரம் நிறையுமவள், திடத்துடன் எங்களை விருத்தியாக்கட்டும். ச. வியாபகனே யக்ஞாருக சரஸ்வதி, சோதி, சிறந்த மலையினின்று, எமக்கு, யக்ஞத்துக்கு, வரட்டும். நெய்மிகும் தேவி எங்கள் அழைப்பில் ஆனந்தமாகி எங்கள் சித்திபூரண சொல்லுக்கு இன்பமாய் செவி சாய்க்க வேண்டும்.

ரு. பிரஹஸ்பதியே! எங்கள் அவிகளில் எல்லா தேவர்களோடு நீ, இன்பமாகவும். சீல தானனுக்குச் செல்வங்களை யளிக்கவும். சு. இனி அவி யக்ஞம் நமஸ்காரங்களுடன் எல்லா தேவர்களோடு திடமுள்ள பிதாவுக்கு, வணக்க மளிப்போம். பிரகஸ்பதியே! நற்பிரசை வீரர்களோடு நாங்கள் பொருள்களின் தலைவர்களாக வேண்டும். எ. பிரஹஸ்பதியே! ருதத்தின் சத்தியால் தோன்றுபவனே! மனிதர்களில் மர்ம மதியுடன் மேன்மையாய்

---

கஉஉ. கருத்து. பிதுருக்களே சோமபானஞ் செய்யுங்கள்

ஒளிவீசி, புகழோடு பிரகாசமாய், பகைவர்களைப் பாழாக்கும் பற்பல பொருளை எம்மிலளிக்கவும்.

அ. மித்திர வருணனே! பசும் புற்றரையை நெய்யால் பசுமை யாக்குங்கள். தீரர்களே! திசைகளை தேனால் திவ்யமாக்குங்கள். கூ. உங்கள் கைகளை நாங்கள் சேவிக்க நீட்டுங்கள், நெய்யினால் எங்கள் புற்றரையைப் பசுமை யாக்குங்கள். அதி இளைஞர்களே! சனங்களில் எம்மைச் சிறப்புடனாக்குங்கள். மித்திர வருணனே! எங்கள் துதிகளுக்குச் செவி கொடுங்கள்.

க௦. நான் உங்களுக்காக, நிலங்களைச் செழிமையாக்கும் சோதிகளின் முதல் தேவனான அக்கினியை பிரியமான நண்பனைப்போல் மரியாதை செய்து கானத்தால் துதி செய்கிறேன். கக. ஒவ்வொரு போரிலும் வீரனைப்போல் திவ்யனின் ரதமானது துரிதமாய்ச் செல்லுகின்றது. தேவர்களின் மனத்தை யக்ஞத்தால் ஜயிக்க விரும்பவனது ஜயமே, யக்ஞ சூன்னியர்மேல் ஸ்தாபிதமாகும். கஉ. யஜமானனே! நீ இம்சை யாவதில்லை. பொழிபவனே! நீ இம்சையாவதில்லை. திவ்யனே! நீயும் இம்சையாவதில்லை. அங்கு வீரர்களின் செல்வமுண்டு, துரித குதிரைகளின் பெருக்கமு முண்டு. செயலில் அவனுக்குச் சமானன் எவனுமில்லை. அவனுக்கு மிகுதியாகுபவனில்லை. அவனைத் தடுப்பவனில்லை. கங. சுகம் பாயும் நதிகள், யக்ஞஞ் செய்பவன், செய்யப் போகுபவனுக்கு, பசுக்களைப்போல் பொழியும். நெய் தாரைகள் சிரேயசுடன் எல்லாப்பக்கங்களிலும், பூரணஞ் செய்து திருப்தி யளிப்பவனுக்குப் பொழியும்.

கச. சோமனே, ருத்திரனே! எங்கள் வீட்டில் நுழையும் ரோகத்தை நீக்குங்கள். நிர்ருதியை தூரத்திலேயே துரத்துங்கள், நாங்கள் செய்துள்ள எப்பாவத்தையும்

எம்மிடமிருந்து துரத்துங்கள். கரு. சோமனே! ருத்திரனே! நீங்கள் எமது தேகங்களில் இவ்வெல்லா சிகிச்சைகளையும் அளியுங்கள். எங்கள் தேகங்களில் [1]பந்தமான நாங்கள் செய்த புன்மையை நீக்கிப் பிரியுங்கள். கசு. சோமனே! பூஷணனே! செல்வத்தின் தாய்களே, சோதியின் தாய்களே, சகத்தின் தாய்களே! தேவர்கள், எல்லா சகத்தின் காப்பார்களாகத் தோன்றும் உங்களை, அமிருதத்தின் நடுவாகச் செய்துளார்கள்.

கஎ. அவர்கள் இத்தேவர்களது சன்மத்தில் ஆனந்த மாயுளார்கள். அவர்கள் வெறுக்கும் இருளை மறைத்துளார்கள். இந்திரன் பச்சைப் பசுக்களில், சோமன் பூஷணனுன இவ்விருவர்களால் பக்குவமானப் பாலை செய்துளார். க. அ. உஉ.

---

## அநுவாகம் கஉச.

[ காண்டம், உ ]

### யக்ஞ மந்திரங்கள்

க. நாம்-எங்கும் இந்திரனை அழைப்போம். உ. இந்திரனில் மனிதர்கள், சாய்கிறார்கள்.

௩. மருத்துக்களே! நாங்கள் சோதியினின்று அழைக்குஞ் சமயத்திலெல்லாம், நீங்கள் வரவேண்டும்.

ச. உங்கள் காப்பை எமக்களியுங்கள்.

ரு. நாங்கள் போர்களில், செவித்தூரிதனுயும் துன்பம் நீக்கி நன்மை செய்யும் திவ்ய சனமுமான இந்திரனை, அழைக்கிறோம். அக்கினி மித்திர வருணனை இலாபத்துக்காகவும், புவி வானம் மருத்துக்களை [2]சுவஸ்திக்காகவு மழைக்கிறோம்.

---

கஉ௩. கருத்து—தேவப் பிரார்த்தனை.

1 கட்டான. 2 க்ஷேமத்துக்காகவும்.

௬. காலையில் வீசும் சரன், எங்களை சந்தோஷமாக் கட்டும். சலம் பொழியும் வாதன் எங்களை இன்பமாக் கட்டும். இந்திரனும் பர்வதனும் எங்களைத் துரிதமாக் கட்டும். எல்லா தேவர்களும் இதை எமக் கநுகூலமாக் கட்டும்.

௭. நாங்கள் உக்கிரமான உமது பிரிய நாமங்களை ஆசி கூறுகிறோம். மருத்துக்களே! அப்படி ஆசி கூறி உங்களை அழைக்குங்கால் நீங்கள் ஆனந்தமாகிறீர்கள். ௮. சிறப்படைய, அவர்கள் சுவாலைகளுடன் சேர்ந்துளார்கள். அவர்கள் சூரிய ரசிமிகளுடன் கானர்களோடு சேரு மவர்கள் சோதிகளால் சுந்தரமா யுளார்கள். அவர்கள் கோஷித்து உக்கிரமுடன் அச்ச மன்னியிலுளார்கள். நாடுவோர், இங்கு மருத்துப்பிரிய கிரகத்தைக் கண்டுளார்கள் ௯. முதன்மையாய் அக்கினி வசுக்களுடன் எங்களை ரட்சிக்கட்டும். சோமன் ருத்திரர்களுடன் எங்களை ரட்சிக்கட்டும். இந்திரன் மருத்துக்களுடன் எங்களை ருதுக் குசிதமாய் செய்யட்டும். ஆதித்தியர்களுடன் வருணன் எங்களைத் துரிதமாக்கட்டும். ௧0. தேவ அக்கினி வசுக்களோடு சோமன் ருத்திர தேகங்களுடன், யக்ஞாருக மருத்துக்களோடு இந்திரன், ஆதித்தியர்களுடன் வருணன், எங்களில் இசைந்துளார்கள்.

௧௧. மருத்துக்களுடன் ருத்திரர்கள் வசுக்களுடன் ஆதித்தியர்கள் இணைவதுபோல், மூன்று நாமங்களுள்ள நீயும் விசுவே தேவர்களும் கோபமன்னியில் ஒரே மனத்தின் நினைவை யடைய வேண்டும்.

௧௨. நரர்கள் அவனை மரியாதையுடன் எழுச்சி செய்து ஒன்று சேர்ந்து புலனுக்கி, அவனை எங்குமுள்ள மனிதர்களின் நிலயங்களில் அணுகி இன்பமுடனுகிறார்கள்.

கரு. நாம் மனிதர்களின் அவிகளான உணவை யளிக்குங்கால் அவன் ஒளியின் பலத்தோடு ருதத்தின் கயிறுகளைப் பற்றுகிறான்.

கச. யக்ஞமானது தேவர்களின் நல் மனத்தை நாடுகின்றது. ஆதித்தியர்களே! நீங்கள் பிரியமுடனுருங் கள். எங்கள் துன்பத்தினின்று தாராளமாய் தளர்த்தும் உங்கள் பிரிய மனத்தை எங்கள் பக்கம் திருப்புங்கள்.

கரு. வீரமக்களோடு, மிக்க விருத்தியாகி பசும் புற் பொருள் சலங்களில், இம்சையாகாமல் அவன் சுத்தனுய் வசிக்கிறான். எவனும், அருகிலோ தூரத்திலோ ஆதித்தியர் வழி யிலிருப்பவனை அழிப்பதில்லை.

கசு. ஆதித்தியர்களான நீங்கள் அகிலத்தைத் தாங்குகிறீர்கள், தேவர்களான நீங்கள் விசுவத்தின் காப் பாளர்கள். தீர்க்க திருஷ்டியுடன் திவ்யங் காத்து,நியத கடன்களைப் பறிப்பவர்களே நீங்கள்.

கள. அவர்கள் மூன்று புவி சோதிகளைத் தாங்கு கிறார்கள். அவர்கள் சட்டத்தில் மூன்று நியமங்களுண்டு. ஆதித்தியர்களே! ருதத்தால் உங்கள் மகிமை யோங்கும். மித்திரனே! வருணனே! அர்யமானே! அது ரமணீய மாகும். கஅ. நாங்கள் ரட்சணைக்காக சுக மளிக்கும் ஆதித்தியர்களான வீரர்களுக்கு பிரார்த்தனை செய்வோம். கக. ஆதித்தியர்களே! வலது இடது கிழக்கு மேற்குத் தெரியவில்லை. வசுக்களே! நான் அபக்குவ மனமுட னிருந்தபோதிலும், உங்கள் தலைமையில் நான் அச்சமன் னியில் சோதியை யடைய வேண்டும். ௨௦. ஆதித்தியர் களின் மிக்க நூதனத் துணையுடன், நிகழும் அவர்களது அதிக ரட்சிப்போடு நாங்கள் ஒருமையுடனுக வேண்டும். பர்வம் பிரியவும், விடுதலையாகவும். செவி சாய்க்கும் சத்தி மான்கள் இந்த யக்ஞத்தை ஸ்தாபிக்கட்டும். ௨க. வரு

ணனே! என் அழைப்பைக் கேட்கவும்; இன்று எங்களைச் சுகமுடனுக்கவும். துணை தேடி நான் உன்னை அழைக்கிறேன். உஉ. என் துதியால் உன்னைத் துதித்துக்கொண்டு உனது இத்-துணையை-நாடுகிறேன். யஜமானன்[1] அவிசுளுடன் இத்-துணையைத் தேடுகிருன். வருணனே இங்கு இருக்கவும். கோபமாகாதே. விசால மன்னனே, எங்கள் ஆயுளை அழிக்காதே. உ. க. கக.

---

## அநுவாகம் கஉ௫.

### யக்ஞ மந்திரங்கள்

க. ஹிரண்ணிய கருப்பன் முதன்மையாய் தோன்றியுளான்.

உ. சலங்கள் செல்லும் பொழுது தேவ சுவாசம் தோன்றும்.

ந—ச. பிரஜாபதியே! அவன், மகன் போல், தந்தையை, தாயை, யறிகிருன். அவன் மகனுகும். அதிதாராளன். அவன் சோதி வானம் சுவர்க்கத்தைச் சூழ்ந்துளான். அவன் அனைத்து மாயுளான், அவன் அருகிலிருக்க வந்துளான். ௫. ரசிமிகள் அவனை உயரமாய் சுமக்கின்றன. சு. ஒளியுள்ள தேவர்களின் தேஜசு தோன்றியுள.

எ. அக்கினியே! பழைய காலத்தின் பொருளைப் போல், புதிய புகழுடன் உன் நட்பான சோதியோடு நீ விசால விஸ்தாரமாகி, யுளாய். அ. அவன் பல வீரச் செயலை புஜத்தில் சுமந்து போற்றுபவனின் தந்திர யுக்தி

---

கஉச. கருத்து—எல்லா தேவர்களையும் நாடவும்.

1 மனிதன்.

களைக் கீழே சாய்த்துளான். அவன் சதாகாலம் எல்லா அமுதப் பொருள்களைச் செய்து பொருள்களின் தலைவனா யுளான்.

க. நான் பொன்கையுள்ள சவிதாவை எங்கள் ரட்சிப்புக்கு அழைக்கிறேன். தேவனான அவன் பதத்தை அறிகிறான். கo. சவிதாவே! இன்று செழிப்பு, நாளை செழிமை, தினந்தோறும் செல்வத்தை எமக்குப் பிரேரிக்கவும். நாங்கள் இவ்வறிவால் வெகு பல சீல வாசச் செல்வத்தை ஜயிக்கவேண்டும். கக. புவியே! நீ மலைகளின் பாரத்தைச் சுமக்கிறாய். குன்றுகளோடு நிகழும் அகண்ட பூமியே! உன் பலத்தால் எம்மைத் துரிதமாக்கவும்.

கஉ. ஒளியுள்ளவனே! திரண்ட செல்வங்களைப் போல் மூலத்தை முன் கிளப்பி வெகு விஸ்தாரமாகு முன்னை தினந்தோறும் கானங்கள் நாடுகின்றன.

கங. பொன் குதிரைகளின் தலைவனே! பருகி என்னை இம்சிக்காமல் அகத்தில் இனிமையுடனுள்ள நண்பனோடு, நான் நட்புடனிருக்கவேண்டும். ஆயுசு வளர, எமத்கத்தில் வைக்கப்பட்டுள்ள இச்சோமனுக்காக நான் இந்திரனிடஞ் செல்லுகிறேன். கச. பருகுங்கால் கோபமளித்து துரித எதிர்ப்புடனாகும் சோமன், பலமாய், உக்கிரமாய் அம்புகள் சுமந்து மிகுதியோடுளான். பூர்வ உபமானங்களைப் போல் செடி கொடி மரங்கள் இந்திரனை இம்சிப்பதில்லை. கரு. ஜமதக்கினி இந்திரனுக்குத் துதியை கானஞ் செய்யுங்கால் பொழியப்படும் சத்தியமான சோமன் தரிசனமாகிறான். உக்கிரமான பலத்தின் சத்தியை உயரியக் கைவசஞ் செய்பவன் நீயே, வெளிவரத் துரிதமாகவும், நாடுபவனுக்கு ஆதரவை பலமுடனாக்கவும். கசு. உணர்வு உற்சாகத்தை யளிக்கும் இப்பிரமத்தை யுனக்கு பிரமங்கள் செய்ய மனிதர்கள், ஒன்று

சேர்ந்து செய்கிறார்கள். சோமனின் சோதியுடன் துதி துரிதமாகுங்கால் போர்களில் இந்திரன் தன் பலத்தைப் புலனாக்குகிறான்.

கஎ. விஷ்ணுவே! நான் உனக்கு, வாயினின்று வஷட் அழைப்பைக் கர்ச்சனை செய்கிறேன். சிபி விஷ்டனே! நீ என் அவியை அங்கீகரிக்கவும். என் சுபத் துதி மொழிகள் உன் பெரிய விருத்திக்குக் காரணமாகட்டும். சதாகாலம் உங்கள் சுவஸ்திகளால் எங்களை நீங்கள் காக்கவேண்டும். கஅ. சிபிவிஷ்டனே! வழிகளை யறியும் உன் திவ்ய நாமத்தை நான் இன்று புகழ்கிறேன். ஏழையான நான் இத்திசைக் கப்பால் அரசுபுரியும் திடமான உன்னை கானஞ் செய்கிறேன். கக. விஷ்ணுவே! 'நான் சிபிவிஷ்டன்' என நீ சொல்லுங்கால் உன்னில் இன்னம் விளக்க வேண்டுவது எது? போர் சமயத்தில் நீ மாற்றும் உன் வடிவத்தை, உனது அந்த உருவை எங்களிடமிருந்து மறைக்காதே!

உ0. அக்கினியே! அளிப்பவனுக்கு ஐசுவரியத்தை யளிக்கவும், வெகுமிகும் வீரர் செல்வத்தையு மளிக்கவும். மக்கட் பெருக்கையும் எமக்குத் துரிதமாக்கவும். உக. அக்கினியே! எமக்கு நூறு செல்வங்களை யளிக்கவும், ஆயிரம் செல்வங்களை கொடுக்கவும். சிறப்புக்கு செல்வத்தை கதவுகளைப்போல் எமக்காக திறக்கவும். சோதி சகத்தை பிரமத்தால் மங்களமுடனாக்கவும். சோதி சுவர்க்கம்போல் உஷைகள் பிரகாசமாயுள்ளன. உஉ. ஆபிரங்களை ஜயிக்கும் அனலான அக்கினி வீரனை யலங்கரிக்கும் செல்வத்தை யளிக்கிறான். அக்கினி சோதியில் அவியை வைத்துளான். அக்கினியின் நிலயங்கள் வெகு பல இடத்திலுண்டு. உங. எங்களை யழிக்காதே. உச. எமக்குக் கொண்டுவரவும். உரு. சுத்த நெய், சுத்தப் பொன்

போல், உன் [1]தேகம் குற்றமன்னியிலுள்ளது. திடமுள்ள வனே! உன் தேகம் ஆபரணம்போல் பிரகாசமாகின்றது.

உ௬. நல்ல சந்திரனே! நெய்யின் இரு சாதனங்களை உன் வாயிலே நீ பக்குவமாக்குகிறாய். பலத்தின் பதியே! எங்கள் துதிகளுக்கு நீ எங்களைப் பூர்ண மாக்கவும். உணவை நாடுபவர்களுக்குச் சுமந்து வரவும்.

உ௭. வாயுவே! புஷ்டிக் கருகதையான குதிரையின் சதத்தை நீ இணைக்கவும். ஆயிரங் குதிரைகளின் உன் ரதம் பலத்துடன் வரட்டும். உ௮. வாயுவே! வீட்டில் தேடி, தானனுக்கு எக்குதிரைகளுடன் வருகிறாயோ, அக் குதிரைகளால், பசு, தீரர் துரகச் செல்வத்தையும், புஷ்டி மிகும் பொருளையும் எமக்களிக்கவும்.

உ௯. எவற்றால் புசித்து நாம் இன்ப மாவோமோ, அப்புஷ்டி போக்தங்கள் பெரும் பலமுடன் இந்திரனால் எமக்காகட்டும். ௩0. திரவிய, தாராளனின் திவ்யத்தை துதி செய்பவன், உன்னைப்போல் திரவிய னாகவேண்டும். குதிரைகளுள்ளவனே! புகழுள்ள உன் துதி கர்த்தா புகழுள்ளவனாகட்டும். உ! உ. கஉ.

---

## அநுவாகம் கஉ௬.

### சுவிஷ்ட கிருதன்

க. நீ நிலையாயிருப்பவன், சஜாதர்களில் நான் நிலையாயிருக்க வேண்டும். நான் தீரன், இரட்சகன், திரவிய சேகரனாக வேண்டும். நீ நிலையா யிருப்பவன். நான் சஜாதர்களில் நிலையா யிருக்கவேண்டும். நான்-தீரன், இரட்சகன், திரவிய சேகரனாகவேண்டும். நீ நிலையாயிருப்

---

கஉ௫. கருத்து—யக்ஞத் துதிகள்

[1] குணம்

பவன். நான்—சஜாதர்களில் நிலையாயிருக்க வேண்டும். நான் கோரன், இரட்சகன். திரவியஞ் சேகரிப்பவனாக வேண்டும்.

உ. நீ, பிரேமையாகும். பிரியத்தின் தேவர்களே! நான் ஒரு மனத்தின் காளைகளான சமானர்களை என் இருதயத்துடன் விரும்புகிறேன். அவர்கள் இருதயங்களுடன் என்னை விரும்பட்டும். என்னுடன் அவர்களை ஒரு மனத்துடனாக்கவும்; சுவாஹா! நீ பிரேமையாகும்! பிரேமையின் தேவர்களே! ஒரே மனத்தின் ஸ்திரீகளை நான் என் இருதயத்தால் விரும்புகிறேன்; தங்கள் இருதயங்களுடன் அவர்கள் என்னை விரும்பட்டும். என்னுடன் அவர்களை ஒருமனத்தின் நண்பர்களாகச் செய்யுங்கள். சுவாஹா! உ. ரு. சூ.

---

## அநுவாகம் கஉஎ.

### ஆயுஷ் ஹோமம்

க. நவீனமாய் நகர்வது நவ நவனீதம். செல்வது, உருகும் வெண்ணெயாகும். நிலையாயாவது நெய்யாகும்.

உ. நீ அசுவினிகளின் பிராணனாகும். நீ பிராணனாயிருக்கும் இருவர்கள் அதன் அமுதத்தை உனக்களிக்கட்டும், சுவாஹா! நீ இந்திரனின் பிராணனாகும்; உன் பிராணனாகு மிந்திரனின் அதன்—அமுதத்தை—உனக்களிக்கட்டும் சுவாஹா! நீ மித்திர வருணனின் பிராணனாகும்; உன் பிராணனை அவர்கள் அவன்-அமுதத்தை —உனக்களிக்கட்டும், சுவாஹா! நீ விசுவே தேவர்களின் பிராணனாகும். உன் பிராணனை அவர்கள் அதன் அமுதத்தை உனக்களிக்கட்டும். சுவாஹா!

கஉசு. கருத்து—அனைவரும் ஒரு மனமுடனாகுங்கள்.

ங. விஷ்ணு மருத்துக்களா லளித்து இந்திரனால் கொடுக்கப்படும், நெய் தாரை, அமுதவழியான உன்னைக் கண்டுளான். பிறகு இடை, உன்னைப் பசுவில் அசைக்கிறான். ச. தேவ சவிதா பாவமான ஸ்தோமமுடன் உபாம்சுவின் பலத்தால், காயத்திரியின் வழியோடு, உன்னை சீவனுக்கும் வாழ்க்கைக்கும், விடுதலை யாக்கட்டும். தேவ சவிதா, திருஷ்டுபுவின் வழியுடன், சுக்கிரத்தின் சக்தியால் பிருகத்—ரதந்திர ஸ்தோமங்களோடு, சீவனுக்கும் வாழ்க்கைக்கும், உன்னை விடுதலையாக்கட்டும். தேவ சவிதா, ஜகதீ வழியுடன், அக்கினியின் அளவினால், ஆக்கிரயண பலத்தோடு சீவனுக்கும் வாழ்க்கைக்கும் உன்னை விடுதலை யாக்கட்டும்.

ரு. அக்கினியே! சோதிக்கும் சீவனுக்கும் அவனைத் துரிதமாக்கவும். அரசனே! சோமனே வருணனே! அவன் இரேதசைப் பிரியமுடனுக்குங்கள். அதிதியே! அன்னைபோல் அவனுக்குக் காப்பளிக்கவும். விசுவே தேவர்களே! அவனைப் பூரணாயுசு ஜயிக்கச் செய்யுங்கள்.

சா. அக்கினி பூர்ணாயுசன், அவன் வனஸ்பதிகளால் ஆயுசு பூரணன். நான் உன்னை இத்தால் ஆயுசு பூரண மாக்குகிறேன்; சோமன் பூரணாயுசன், அவன் ஓஷதிகளால் ஆயுசு பூரணன். யக்ஞம் பூரணாயுசுள்ளது. அது தட்சிணையால் ஆயுசு பூரணமாகும். பிராமணன் பூரணாயுசன், அவன் பிரம்மங்களால் ஆயுசு பூரணன்; தேவர்கள் பூர்ணாயுசர்கள். அவர்கள் அமுதத்தால் ஆயுசு பூர்ணர்கள்; பிதுருக்கள் பூர்ணாயுசர்கள், அவர்கள் சுவதா அழைப்பால் ஆயுசு பூர்ணர்கள்; நான் இவ்வாயுசால் உன்னை ஆயுசு பூரணமாக்குகிறேன். உ. ங. கO.

---

கஉஎ. கருத்து—நான், பூரண ஆயுசுடனுகவேண்டும்.

## அநுவாகம் கஉஅ.

### இந்திர-வருண ஸாதகம்

க. இந்திரனே, வருணனே! நீங்கள் இவனைத் துன்பத்தினின்று முயற்சிக் கருகதையான உங்கள் தேகத்தால் நீக்குங்கள். துணை திடம் தேஜசுடனுகும் உங்கள் தேகத்தால் அவனைத் துன்பத்தினின்று நீக்குங்கள்.

உ. இந்திரனே, வருணனே! அக்கினியிலுள்ள உங்கள் குறையை நான் இதனால் நீக்குகிறேன், இந்திரனே! வருணனே! நான், பசு, வீடு, சலம், ஓஷதி மனிதன் மரங்களிலுள்ள உங்கள் குறையை நான் இதனால் நீக்குகிறேன். உ. ரு. கரு.

---

## அநுவாகம் கஉகூ

### யக்ஞ மந்திரங்கள்

க. நீ புராதனத்தின் பொருளைப்போல் பரவவும். உ. அவன் தந்திர யுக்திகளைக் கீழே சாய்த்துளான். ரு. நாம் எங்கும் இந்திரனை அழைக்கிறோம். சு. நரர்கள் இந்திரனை அழைக்கிறார்கள்.

ரு. அரசனே, சோமனே! எங்கும் புன்மை செய்பவனிடமிருந்து எம்மைக் காக்கவும். உன்னைப் போலுள்ளவனின் நண்பன் இம்சைக்குள்ளாக வேண்டாம். சூ. அரசனை சோமனே! நீ கோபமன்னியில் கருணையாய் சோதி சகம், மலைகள் சலங்கள் செடி கொடிகளில் இவ்வெல்லா சைன்னியங்களுடன் எங்கள் அவிகளை அங்கீகரிக்கவும்.

---

கஉஅ. கருத்து—நோயற்ற வாழ்வு வேண்டும்.

எ. அக்கினியே! சோமனே! சமான அளிப்புடன் சேர்ந்து எங்கள் துதிகளை யங்கீகரியுங்கள். தேவர்களில் ஒன்று சேர்ந்து தோன்றியுளீர்கள். அ. அக்கினி சோமனே! சமான சங்கற்பத்தோடு சோதியில் ஒளிகளை ஸ்தாபித்துளீர்கள். கடும் பிடிப்பில் கோர கர்ச்சனையி னின்று தாரைகளை விடுவிக்கிறீர்கள் கூ. அக்கினி சோமனே! திடர்களான நீங்கள் என் அழைப்புக்குப் பிரிய மாய் செவி கொடுங்கள். இன்பமுடன் எமது சூக்தங்களை யங்கீகரியுங்கள், தானனுக்குச சுக முடனுகுங்கள். கㅇ. மாதரிசுவான் சோதியினின்று ஒன்றைக் கொண்டு வந்து ளான், பறவை மற்றொன்றை பாறையினின்று கடையும். அக்கினிசோமர் பிரமத்தால் பெரிதும் பெருகியுளார், நீங் கள் விசால நிலயத்தை யக்ஞத்துக்குச் செய்துளீர்கள். கக. அக்கினி சோமனே! வைக்கப்பட்டுள்ள அவியை நீங் கள் ருசியுங்கள். திடர்களே! அதை அங்கீகரித்து அதில் இன்பமாகுங்கள். எமக்கு நீங்கள் நற்காப்பின் நலமான துணையின் அளிப்பாகுங்கள். யஜமானனுக்கு சுகம் செல் வத்தை யளியுங்கள்.

கஉ—கஙु—கச. பெருகவும். உனக்கு ஒன்று சேரட் டும். நாங்கள் கவிகளின் கவி, அதி கீர்த்தியுடனுகுங் கணங்களின் கணபதியை அழைக்கிறோம். பிராமணர் களின் சிரேஷ்ட ராஜனை பிரமணஸ்பதியே! எங்களுக் குச் செவி சாய்த்து ரட்சையுடன் உன் நிலயத்தி லமர வும்.

கரு. எவன் பிரமணஸ்பதியான தேவர்களின் பிதாவை சித்தம் சிரத்தை அவிகளுடன் சேர விரும்புகி றானோ, அவன், சனம், இனம், நரர், மக்களோடு போர், பொருள்களை ஜயிப்பான். கசு. அவன் வலன் பலிகளை சத்தம், சுபகானம் ஒழுங்கு சேருங் கணத்துடன் கொன்

றுளான். கனைக்குங்கால் கர்ச்சனை செய்து அவி கலக்கும் பசுக்களை பிரகஸ்பதி பிரேரித்துளான்.

கஎ. மருத்துக்களே! சோதியினின்று அழைக்கும் பொழுதெல்லாம் நீங்கள் வரவேண்டும். கஅ. நீங்கள் அடைந்துள்ள ரட்சிப்புக்களை அளியுங்கள்.

ககூ. அருகன் புருஹூதன் செல்வத்தின் தானன், சத்தியுடனாகும் காளையான அரியமான் செல்லுகிறான். ஆயிரங்கண்களுடன் கையில்வச்சிராயுதத்தோடு கோசாலைகளைத் திறந்து அவன் அசைகிறான், தேவன் எங்களில் செல்வத்தை யளிக்கவேண்டும். உ0. தேவனே! அரசனே! அரியமானே! சோதியினின்று வந்து, தேவர்கள் செல்லும் உன் வெகு பல வழிகளோடு எமக்குப் பெருங் காப்பை யளிக்கவும், எங்கள் துவி சதுர் பாதங்களுக்கு நீ மங்கள மளிப்பவனாகவும்.

உக. ஆழத்தினின்று உச்சிவரை மலைகளின் நிலை பாகங்களை, அங்கிரசர்களால் துதிக்கப்படுபவன், பிளந்துளான். கிருத்திரமமாய் அவர்கள் செய்துள்ள தடைகளை அவன், உடைத் தெறிந்துளான். இந்திரன் இவற்றையெல்லாம் சோமனின் சந்தோஷத்தில் செய்துளான். உஉ. கீழினின்று உச்சிவரை அளவுகளால் அவன் அளந்துளான். அவன் வச்சிராயுதத்தால் நதிகளின் உட்குழிகளைத் துவம்சஞ் செய்துளான். நீண்ட சுற்று வழிகளால் சுலபமாய் அவற்றை அவன் விடுதலை யாக்கியுளான். இந்திரன் இவற்றை யெல்லாம் சோமனின் சந்தோஷத்தில் செய்துளான். உந. தன் உறவை அறிந்து அவன் புல்லாகியுளான். தேவன் எல்லா சன்மங்களையு மறிவிக்கிறான். அவன் பிரமத்தின் நடுவினின்று அவன் பிரமத்தைச் சுமந்துளான். ஆழத்தினின்று உச்சியில் அவன் விருப்பம்போல் எழுச்சியாகிறான். உச. மகத்தில் பிறந்து

மேன்மையானவற்றை தனித்தனியாய் ஸ்தாபித்துளான். புவியின் வானத்தையும் சோதியையும் ஸ்தானமாய் அவன் ஸ்தாபித்துளான். சம்ராட்டான பிருகஸ்பதி எவன் தேவதையோ, அவன் தன் சன்மத்தினுல் தாழ்மையி னின்று திவ்யத்துக்கு வந்துளான். உ௫. தேவர்கள், சத்தியால் ஆழத்தினின்று உச்சிக்குச் செல்லும் பிருஹஸ்பதியை ஜயிக்க விரும்புகிறார்கள். அவன் வலயை உடைத்துளான், கோட்டைகளைப் பிளந்துளான். அவன் கர்ச்சித்து சுவர்கம் சலங்களை ஜயித்துளான். உ. ௩. கச.

## அநுவாகம் க௩0.

### நான் தலைவன்

க. அக்கினியே! பசுக்களுடன் எங்களுக்கு வரவும். இந்துவே! புஷ்டியுடன் எம்மை இன்பமுடனுக்கவும். எங்கள் வீடுகளில் இந்திரனே ஆதரவாகும். உ. ஆயிரம் வகைச் செல்வங்களுடனுன சவிதா எங்கள் வீடுகளில் எம்மை இன்பமுடனுக்கட்டும். பூஷணன் வரட்டும்; பொருள் எமக்காகவேண்டும். ௩. ஈசனும் சகத்தின் தலைவனுமான தாத்ரு எமக்குச் செல்வத்தை யளிக்க வேண்டும். அவன் பூரணப் பொருளுடன் எம்மைப் பிரீதியாக்கட்டும். ௪. விருஷபனும் வர்ஷிப்பவனுமான துவஷ்டா எங்கள் வீடுகளில் ஆயிரம் பதினுயிரச் செல்வத்தோடு எம்மை இன்பமுடனுக்கவேண்டும். ௫. செல்வ போஷகனே! உன்னுல் திவ்யத்தில், தேவர்கள் தீர்க்க சிரேயசுடனுன அமிருதத்தை ஸ்தாபித்துளார்கள். எமது வாழ்க்கைக்குப் பசுக்களின் கூட்டத்தை யளிக்கவும். ௬. அக்கினி கிரகபதியாகும், சோமன் விசுவஞ்

கஉ௬. கருத்து—அக்கினி சோமனை நாடவும்.

ஜயிப்பவன், சவிதா தீரனுகும், சுவாஹா! எ. அக்கினியே! கிரகபதியே! நீ, ஆக்கிரமிப்பவனுக்கு வலிமையையும் வன்மையையும் உன் நெய் பாகத்துடனளிக்கவும்.

நான் நெறியின் உச்சியினின்று நழுவாமலாகவேண்டும். நான் தலைவனுகவேண்டும், சுவாஹா! உ. ச. ரு.

---

## அநுவாகம் கருக.

### மழை நாடு

க. நீ மருத்துக்களுடன் சேர்பவன், நீ மருத்துக்களின் வலிமையாகும், நீ சலங்களின் தாரையைப் புலனுக்கவும். உ. மருத்துக்களே! திடம் திவ்யமாயும் மனத்தைப்போல் துரிதமாயும் வேகமாயுள்ள கருடனை நிறுத்துங்கள். அதனுல் செல்லும் உக்கிர சைன்னியம் விடுதலையாகின்றது. அசுவினிகளே! அதை எங்கும் க்ஷேமமளித்து காக்கவும்.

ரு. கீழ்காற்று வர்ஷிகன். வேகமாகவும், திரும்பவும், சுவாஹா! வேகப்புசலன் வர்ஷிகன், உக்கிரன், எங்குமாகவும் சுவாஹா! இடி முழக்கன், வர்ஷிகன் பயங்கரன், சூழ்பவன் சுவாஹா! மின்னலில்லா இடி முழக்கன், மின்னுபவன், பரவவும். சுவாஹா! இரவெல்லாம் பொழிபவன் திருப்தியளிப்பவன், திகழ்பவன், சுவாஹா! பொழிபவன் எனப் பெயர் வாய்பவன். பரவவும், சுவாஹா! சூரியன் ஒளி வீசுங்கால் பொழிபவன், ஒளி வீசுபவன், எங்குமாகவும், சுவாஹா! முழங்கி மின்னி, பொழிந்து பெருகி வளர்பவன், வியாபிக்கவும், சுவாஹா!

---

கரு0. கருத்து—ஒவ்வொருவனும் தலைவனுகவேண்டும் என எண்ணி சதா கால முயற்சியிலாவதவசியம்.

ச. இன்ப மளிப்பவர், இனிமை பொழிபவர், சுத்தஞ் செய்பவர், துரிதர், சோதி நிறைபவர், வெகு இருளர், சுகநுரையுடன் பிரகாசிப்பவர். நண்பர்களைத் தாங்கி க்ஷத்திரங்களை ஆதரிப்பவரான நீங்கள், பூர்ண ராஷ்டிரங்களோடு எம்மைக் காருங்கள். ரு. நீ பல குதிரையின் பந்தமாகும், நான் உன்னை மழைக்காக இணைக்கிறேன். உ. ச. எ.

---

## அநுவாகம் கநஉ.

### பர்ஜன்னியர்கள்

க. அக்கினியே, சோமனே! சூரியனே! செல்வ முள்ள தேவர்களே! மித்திரனே, வருணனே! அரிய மானே! காப்பளிக்கும் தேவர்களே! சேர்ந்து பருகும் தேவர்களே! சலங்களின் மகனே! துரித எதிர்ப்புட னுள்ளவர்களே! சலத்தின் தாரையை யளிக்கவும், சலங் களின் தரிப்பைப் பிளக்கவும், புவி, சோதி, வானம் பர் சன்னியன் இன்னம் அப்பாலிருந்தும் மழையினால் எமக் குத் துணைபுரியுங்கள். உ. அவர்கள் புவியை சலப்பிர வாகஞ் செய்யுங்கால் சலம் சுமக்கும் பர்ஜன்னியனால், பகலிலும் இருளைச் செய்கிறார்கள்.

ந. நல்ல தான நரர்கள் யஜமானனுக்கு சோதியின் செல்வ கோசத்தை அசைக்கிறார்கள். பர்ஜன்னியர்கள் வானங்களின் வழிகளினின்று உன்னை விடுதலை யாக்கி யுளார்கள். அதனால் பாலைவனத்தில் மழைகள் பொழி யும். ச. மருத்துக்களே! கடலினின்று நீங்கள் மழையை உதிக்கச் செய்கிறீர்கள், துளிகள் நிறைபவர்களே! நீங் கள் மழையை விழச்செய்கிறீர்கள், அதிசயர்களே! உங்

---

கநக. கருத்து—மருத்துக்களின் இரகசியம்.

கள் பசுக்கள் தவறுவதில்லை. நீங்கள் துரிதமாய்ச் செல்லுங்கால் உங்கள் இரதங்களையே அந்நியர்கள் அநுசரிக்கிறார்கள். ரு. சோதியினின்று மழையை விடுதலையாக்குங்கள். சலங்களால் சமுத்திரத்தை நிரப்புங்கள். முதல் தோன்றும் நீ சலங்களின்-சத்தியில்-சனனமாகுபவன். நீ சமுத்திரத்தின் சத்தியாகும்.

சு. புவியை வெள்ளமாய்ப் பெருக்கவும். இத் திவ்ய மேகத்தைப் பிளக்கவும். திவ்ய சலத்தின் சத்தியை எமக்களிக்கவும். தலைவனாகும் நீ, சலகோசத்தை விடுதலையாக்கவும்.

எ. சோதியில் பாகமுள்ள தேவர்கள், வானத்தில் பாகமுள்ள தேவர்கள், வையகத்தில் பாகமுள்ள தேவர்கள், இந்த யக்ஞத்தைக் காக்கவேண்டும், அவர்கள் இந்நிலயத்தை நுழையவேண்டும், இந்நிலயத்தை வசிக்கவேண்டும். உ. ச. அ.

---

## அநுவாகம் கநந.

### யக்ஞ மந்திரங்கள்

க. அவன் சதாகாலம் நவமாய் ஜன்மமாகிறான். தினங்களின் கொடி, உஷைகளின் முன்னே செல்லுகின்றது. செல்லுங்கால் அவன் தேவர்களுக்கு அவர்களது பாகத்தை நிலையாக்குகிறான். சந்திரன் தீர்க்காயுசை விஸ்தரிக்கிறான்.

புவனத்தின் ரட்சகர்களான பிரகஸ்பதியும் மன்னன் வருணனும் அமுதர்கள் பருகும் அமுதமான ஆதித்

கநஉ. கருத்து—சோதியிலுள்ள தேவர்களை சுவாதீனஞ் செய்து கொள்ளவும்.

தியர்கள் பெருக்கும் இந்துவால் எங்களை விருத்தியாக்க வேண்டும். ௩. இந்திரனே! நீ கீழ்த் திசையில் அரசனுகும். விருததிர துவம்சனே! நீ வடதிசையில் எதிரிகளை யழிப்பவனுகும். நீ தாரைகள் செல்லுமிடத்தில் ஜயித்துளாய். தென் திசையில் நாங்கள் அழைக்கும் ரிஷபமாகவும். ௪. இந்திரன் ஜயிப்பான், அவன் ஜயிக்கப்படமாட்டான். அரசர்களில் அதிராஜனுய் அவன் அரசுபுரிவான். மரியாதையையும் மேன்மையு மடையஅவன், எல்லாப் போர்களிலும் ப்ாதுகாப்பனு யிருப்பான். ௫. அவன் சிறப்பு சோதி சகம் சுவர்க்கத்தையும் ஜயிக்கும். தன் நிலயத்தில் அனைவராலும் ஆசி கூறப்படும் இந்திரன் அதித் தலைவனுகும். வீரனுய் முழக்கஞ் செய்யு மவன் போருக்காகப் பெரிதும் வளர்கிருன். ௬. வீரனே! நாங்கள் துதியுட னுன்னை கறக்காத பசுக்களைப்போ லழைக்கிறேும். இந்திரனே! சுவர்க்க சோதி காணும் சரத்தின் தலைவனே! அசரத்தின் தலைவனே! உன்னை அழைக்கிறேும். ௭. போர் ஜயிக்க கவிகளான நாங்கள் உன்னை அழைக்கிறேும். இந்திரனே வீரர்களின் தலைவனே! எதிரிகளின் நடுவிலும் குதிரையின் ஓட்டத்திலும் உன்னை மனிதர்கள் அழைக்கிருர்கள்.

௮. இந்திரனே! நூறு சோதிகளும் நூறு சகங்களும், உன்--திடத்துக் கதிகமாவதில்லை. இரு உலகங்களும் ஆயிரம் சூரியர்களும் சன்மத்தில் உனக்கு நிகராவதில்லை, ௯. இந்திரனே! சோமனைப் ப்ருகவும்; அது உன்னை இன்பமுட னுக்கட்டும். குதிரைகளின் தலைவனே! சாதகனின் கைகளால் நன்கு செலுத்தப்படும் குதிரைபோல், ஆயுதம் பயன் செய்யப் பட்டுள்ளது. ௧0. பலம் மிகுந்து எவற்ருல் உணவில், மகிழ்வுடனுவோமோ அவற்ருல் இந்திரனேடு எமக்கு திவ்ய போக்தங்களாக வேண்டும.

கக. அக்கினியே! உனது புனித சோதியை—ஓங்கச் செய்யவும். கஉ. சோதியுடன்—அக்கினி ஒளிவீசுகிறான். கங. ஜாத வேதசனே! உன்னை—ரசிமிகள், சுமந்து கொண்டு செல்லுகின்றன.

கச—கரு. தீரனே! திவ்ய சூரியனே! ஏழு குதிரைகள், உன் இரதத்தில் சோதியின் கேசத்துடன் உன்னைச் சுமக்கின்றன. கசு. அக்கினி மித்திர வருணக் கண்ணுன தேவர்களின் திவ்ய ஒளி, உதயமாயுள்ளது. அவன் சோதி சகம் வானத்தை நிறைத்துளான். அசைந்து அசையாமலுள்ளதின் ஆத்மாவே சூரியனுகும்.

கஎ. ருதுவில் அழைப்புக்குச் செவி சாய்த்து சத்தியம் பெருக்கும் விசுவதேவர்கள், இவ்வுசித பானத்தில் இன்பங் காணவேண்டும். கஅ. விசுவ தேவர்களே! சோதியி லிருப்பவர்களே! வானத்தி லிருப்பவர்களே! என் அழைப்பைச் செவி கொடுங்கள். யச்ஞாருகமாய், உங்கள் சுவாலையான அக்கினியுடன் இத் தர்ப்பைகளில் அமர்ந்து ஆனந்தமாகுங்கள். உ. ச. கச.

---

## அநுவாகம் கஙச.

### யக்ஞ மந்திரங்கள்

க. உனக்கு ஆயுசாகும்.

உ. ஆயுசளிக்கும் அக்கினியே! நீ பெருக்கவும். ங. உனக்கு ஒன்று சேரட்டும். ச. உன் கோபத்தை—நாங்கள் நீக்குகிறோம்.

கு. அதி உத்தமனை—நாடுகிறோம். எ. தேவியே! முன் செல்லவும். அ. சோதியினின்று எமக்குப்

---

கஙங. கருத்து. தேவர்களை எல்லாம் உங்கள் கைவசமாக்குங்கள்.

பொழியவும். கூ. அக்கினியே, விஷ்ணுவே! க0. அக்கினியே, விஷ்ணுவே!

கக. வருணனே! இது எனக்காகும். கஉ. நான் உன்னிடம் அதற்காக வருகிறேன். கங. ரசிமிகள் அவனை உயரமாய்ச் சுமக்கின்றன. கச. ஒளியுள்ள தேவ தேஜசு தோன்றியுள்ளது.

கரு. ஜலங்களில் மகன் சோதியுடை யணிந்து எழுச்சியாகி சுற்றுபவைகளின் அங்கத்தில் ஏறியுளான். பொன்னிறச் சிறியோர்கள் அவன் பெரும் மகிமையைச் சுமந்து எங்கும் சுற்றுகிறார்கள்.

கசு. சிலர் ஒன்று சேர்கிறார்கள். சிலர் மேலே செல்லுகிறார்கள். நதிகள் சம நிலயத்தை நிரப்பும். சுத்த சலங்கள் சுத்த சோதி வீசும் சலங்களின் மகனைச் சுற்றி நிற்கும்.

கஎ. பிரிய யுவதிகளான சலங்கள், அவனைச் சுத்தஞ் செய்து இளமை சுற்றிச்செல்லும். மறைவாய் சலங்களில், சோதியணியும் அக்கினி செல்வம் சுத்தச் சுடரோடு ஒளி வீசுகிறான்.

கஅ. நான் சம்ராட்டுக்களான மித்திர வருணனின் உதவியை நாடுகிறேன். அவர்கள் என்னைப் போலுள்ளவனுக்குப் பிரியமாகவேண்டும்.

ககூ. இந்திரனே! வருணனே! நீங்கள் எங்கள் இனம் சனம் யக்ஞத்துக்கு பெரும் பாதுகாப்பை யளியுங்கள். நாங்கள் போரில், நீண்டகாலம் யக்ஞஞ்செய்பவனை ஜயிக்க விரும்பும் சீலமழிந்தவனை, வெல்லவேண்டும்.

உ0. மித்திரனே, வருணனே! எமக்கு அளியுங்கள். உக. உங்களாயுதங்களை முன்னுக்குங்கள்.

உஉ. அக்கினியே! அறிஞனை நீ யக்ஞத்தால் எமக்கு வருணனின் கோபத்தைத் தணிக்கவும்.[1] ஒளியுள்ளவனே! வகிப்பவர்களது உத்தமனே! உயரிய யக்ஞஞ் செய்பவனே! எம்மை எல்லாத் துவேஷியினின்றும் நீக்கவும். உங. அக்கினியே! இவ்வுஷையின் உதயத்தில் உதவி நெருங்கி எமது பக்கமாகவும். நீ எமக்குப் பொழிந்து யக்ஞத்தால் வருணனின் கோபத்தைத் தணிக்கவும். உன் பிரியத்தைப் புலனாக்கி எமது அழைப்பைச் செவி சாய்க்கத் துரிதமாகவும். உச. சூரியனைப் போல் பரஞ்சோதியாய் பிரகாசிக்கும் இப்பரதாக்கினி பெரிதும் புகழ்பெற்றவனாகும். திவ்ய அதிதியான, போரில் [2]புருவை ஜயிக்குமவன் எமக்கநுகூலமாய் பிரகாசமாகியுளான். உரு. நான் உனக்கு யக்ஞஞ் செய்கிறேன். எம் துதியில் நீ அழைக்கப்பட என் வந்தனத்தை உனக்கு எதிரில் நான் செலுத்துகிறேன்.

அக்கினியே! பழைய அரசனே! வழி படும் வறட்சியோனுக்கு, நீ பாலைவன ஊற்று நீர் போலாகும். உசு. உஎ. அவன் ஒளியுடன் சோதியோடு எம்மை ஓங்கச்செய்யட்டும். உஅ. விசால சனங்களில் விளங்கும் அக்கினியான நீ, உன் எதிர்ப்பால் [3]யாது தானியர்களை எதிர்த்துவிடவும். உகூ. அறிஞன், துரிதன், சுகதரிசி, சுகத்தோற்றின் உன்னை, அறியாமலுள்ள நாங்கள் அநுசரிக்கட்டும். எல்லா வழிகளையு மறியும் அவன் யக்ஞஞ் செய்யட்டும், அவன் அமுதர்களில் [4]அவியை அறிவிக்கட்டும். ௩௦. துன்பத்தினின்று விடுதலை செய்பவனுக்கு நமஸ்காரம், ௩க-௩௫. என்னில் நுழைபவனுக்கு வணக்கம்.

---

1 சாந்தஞ் செய்யவும், 2 பகைவனை. 3 சத்துருக்களை, 4 அவிப்பை.

இந்திரனே! எங்களிடமிருந்து எதிரியைத் துரத்தவும். இந்திரனே! பலத்தைதயளிக்கவும். சதக்கிரதுவே! சத்திகள் உனக்களிக்கப்பட்டுள்ளன. உ.ரு.கஉ.

—

## அநுவாகம் கஙரு.

### செல்வஞ் ஜயிக்கவும்

க. அக்கினியே! திவ்யமாய் தேவர்களை யழைக்குங் குதிரைகளைச் சாரதியைப் போல் சேர்க்கவும். பழைய ஹோதாவைப் போல் அமரவும். உ. தேவனே! அதிக மறியும் நீ, எமக்கு தேவர்களை இங்கு அழைக்கவும். எமது விருப்பங்களை சத்தியமாக்கவும். ங. அதி இளைஞனே! பலத்தின் மகனே! ஏனெனில் யக்ஞஞ் செய்யப்படும் நீ யக்ஞாருகனுயும் சத்தியனுயுமுளாய். ச. இந்த அக்கினி, கவி, பொருள் தலைவன், நூறு ஆயிரம் வகை பலத்தின் பெருமானுகும். ரு. அங்கிரசனே [1]ரிபுக்கள், ரதக் சக்கிரச் சுற்றுத் தகட்டை வளைப்பதுபோல், சமான அழைப்பால் எமது யக்ஞத்தினருகே இங்கு அவனைக் கொண்டு வரவும்.

சு. விரூபனே! சதாகால அழைப்புடன் வேதத் துதியை திடமும் திவ்யமுள்ளவனுக்குப் பிரேரிக்கவும். எ. தூரங் காணும் இவ்வக்கினியின் சேனையால் பசுக்களில் எப்பணியை கீழே வைப்போம்? அ. தேவசனங்கள் சலம் உதைகளைப்போல் நுழைந்து ஏழையை பசுக்கள் போல் பிரியா மலாக வேண்டும். கூ. கப்பலை அலைபோல் எக்கொ

---

**கஙச. கருத்து—நாமும் நமது சனங்களும் யக்ஞத்தா லோங்க வேண்டும்.**

1 சிற்பிகள்.

டிய எதிரியின் எதிர்ப்பும் எம்மை அழிக்காமலா கட்டும்.

கய. தேவனே ! அக்கினியே ! உனக்கு நமஸ்காரம், திடத்துக்காக சனங்கள் கானஞ் செய்கிறார்கள். பலத்தால் பகைவனைப் பாழாக்கவும். கக. அக்கினியே ! எமக்குப் பொருளை பசு தாகத்துக்காக கொண்டுவரவும், விசாலஞ் செய்பவனே ! எமக்கு விரியும் நிலயமளிக்கவும். கஉ. இப்பெருஞ் சண்டையில் சுமப்பவன் சுமையைப் போல் எம்மைப் புறக்கணிக்காதே, செல்வங் குவித்து அதை ஜயிக்கவும்,

கங. அக்கினியே! எம்மைத் தவிர வேறு எவனிலாவது இப்பயம் புன்மையைப் பூட்டவும். எமது கோர பலத்தைப் பெருக்கவும். கச. அக்கினி பணிவும் பெருந்தன்மையு முள்ளவனது அளிப்பில் இன்பமானல், அவன் ஓங்கி வளரத் துணை புரிகிறான். கரு. வெகு தூரத்தினின்று இங்கு தாழ்ந்தோர்களுக்கு வரவும். நானிருக்கும் நிலையிலுள்ளோர்களுக்கு அநுகூலமாகவும். கசு. அக்கினியே ! தந்தையின் போலாகும் பழைய உன் ரட்சிப்பின்-பெருமையை நாம் அறிவதால் உன் பிரியத்தை நாங்கள் நாடுகிறோம். கஎ. அக்கினியே! அம்பால் கொல்லும் கோர பலிஷ்டன் கூருயுதமுள்ள காளை, போல், நீ, கோட்டைகளைப் பிளந் துளாய். கஅ. நண்பர்களே ! திடன், திடமகன், சனத் தலைவனான அக்கினிக்கு துதியையும் உணவை மளியுங்கள். ககூ. அக்கினியே ! பலம் மிகு பவனே ! [1]அஞரியனுக்கு உரியவற்றை யெல்லாம் நீ குவிக்கிறாய்! நீ புவியின் நிலயத்தில் நீ எழுச்சியாக்கப் பட்டுளாய். எல்லா நற் செல்வங்களையும எமக்குக் கொண்டுவரவும்.

---

1 அறிவில்லாதவனுக்கு.

உ௦.—உஉ. பிரஜாபதியே ! அவன் அறிகிருன். சோமனே, பூஷணனே ! இத்தேவர்கள் பிரசன்னமா யுளார்கள். உ. சு. கக.

---

## அநுவாகம் கஙசு.

### பிதுரு யாகம்

க. நாங்கள் ஆவலாய் உன்னை அழைக்கிரேம், நாங்கள் ஆவலாய் உன்னை எழுச்சியாக்குகிரேம். அவியைப் புசிக்க அவாவுடன் ஆவலான பிதுருக்களைக் கொண்டுவரவும். உ. சோமனே ! நீ அறிவில் சிரேஷ்டன், நீ நேர்வழியில் செல்லுகிருய், [1]இந்துவே ! எமது பிதுருக்கள் உன் வழியால் தேவர்களில் செல்வத்தைச் செம்மையாய் வகுத்துளார்கள்.

ங. சோம பாவமானனே ! நமது பழைய பிதுருக்கள் உன்ருல் அறிவுடன் செயல்களைச் செய்துளார்கள். நீ சிரம மன்னியில் ஜயித்துத் தடைகளை நீக்கவும். நீ எமக்கு வீரம், குதிரைகளில், தாராளமாகவும்.

ச. சோமனே! நீ [2]பிதுருக்களுட னிணைந்து சோதி சகத்தில் விஸ்தாரமாயுளாய், இந்துவே ! அவியுடன் உனக்கு நாங்கள் யக்ஞஞ் செய்யட்டும். நாங்கள் செல்வபதி களாகட்டும்.

ரு. பிதுருக்களே! அக்கினியால் பக்குவர்களான நீங்கள் இங்கு வாருங்கள். நீங்கள் ஒவ்வொரு ஆசனத்திலும் மேலான தலைமைகளுட னுட்காருங்கள். [3]தர்ப்பைகளில் வைக்கப்பட்டுள்ள அவிகளைப் புசியுங்கள். பலவீரர்களுடன் செல்வத்தை எமக்களியுங்கள்.

---

கஙரு. கருத்து. நீங்கள் தேவர்களைப் போல் தாழ்ந்தோர்களுக்குச் சென்று உபகாரஞ் செய்யுங்கள்.

1 சுகமளிப்பவனே, 2 பெரியார்களுடன். 3 திவ்யங்களில்

௬. யக்ஞ சம்பந்த தர்ப்பைகளி லமரும் பிதுருக்களே! உங்கள் துணையுடன் இங்கு வாருங்கள். இவ்வவிகளை உங்களுக் களித்துளோம், அவற்றை அங்கீகரியுங்கள். பிறகு மிகக் குணமளிக்குங் காப்புடன் எங்களுக்கு வாருங்கள். நீங்கள் சுகம் செல்வம் ரட்சையை எமக்களியுங்கள். ௭. விஷ்ணு பாதம் பிரிவுமான பிரிய பிதுருக்களை, நான் கண்டுளேன். யக்ஞ தர்ப்பைகளி லமரும் அவர்கள் சுவதா அழைப்பால் பொழியப்படும் பானத்தை அநுபவித்து இங்கு வர மிக்க ஆவலாயுளார்கள்.

௮. பிரியமான நிலயங்களுக்கு யக்ஞ தர்ப்பைகளில் சோமனை விரும்பும் பிதுருக்கள் அழைக்கப்பட்டுளார்கள். அவர்கள் இங்கு வரவேண்டும்; அவர்கள் எம்மை இங்கு செவியுறவேண்டும். அவர்கள் எமக்காகப் பேசவேண்டும், அவர்கள் எம்மை ரட்சிக்கவேண்டும். ௯. சோமனை விரும்பும் மேல் கீழ் நடுவிலுள்ள பிதுருக்கள் எழுச்சியாகட்டும். புன்மையற்று நன்மையில் வாழ்க்கைகளை வாழும் இப் பிதுருக்கள் நாம் அழைக்குங்கால் எம்மை ரட்சிக்க வேண்டும். க௦. முன் செல்லும் பின் செல்லும், புவி நிலயத்தி லமரும் இப் பொழுது சுக வாசங்களுடன் நிலயங்களிலுள்ள பிதுருக்களுக்கு இன்று இந் நமஸ்காரமாகும்.

கக. அக்கினியே! துதி துதித்து, சத்தியம் பெருக்கி சுத்தம் சிரத்தை நாடும் பழமையின் பூர்வ பிதுருக்களைப் போல் இவர்களும் புவியைப் பிளந்து சிகப்பானவற்றைத் திறந்துளார்கள். க௨. அக்கினியே! அவி சுமக்கும் நீ நீதியானப் பிதுருக்களுக்கு யக்ஞஞ் செய்யுங்கால், தேவர் பிதுருக்களுக்கு, அவிகளை எடுத்துச் செல்வாய். க௩. அக்கினியே! எல்லாமறியும் புகழுள்ள நீ சுகந்தஞ் செய்து அவிகளைச் சுமந்து செல்லுகிறாய். சுவதா அழைப்பில் புசிக்கும் பிதுருக்களுக்கு அவற்றை நீ அளிக்கிறாய்.

தேவனே! உன் முன் வைக்கப்பட்டுள்ள அவிகளைப் புசிக்கவும்.

கச. காவ்யர்களுடன் மாதலி, அங்கிரசர்களோடு யமன், ருக்வங்களுடன் பிரகஸ்பதி இன்பமாகிறார்கள். தேவர்களால் பெருகுபவர்களும், தேவர்களை புலனுக்குபவர்களும், இன்பமாகிறார்கள். சிலர் சுவாஹா அழைப்பிலும், சிலர் சுவதாவிலும் இன்பமாகிறார்கள்.

கரு. யமனே! பிதுரு, அங்கிரசர்களுடன் சேர்ந்து, இத்தர்ப்பைகளி லுட்காரவும். கவிகளால் இயற்றப்படும் மந்திரங்கள் உன்னை இங்கு கொண்டு வரட்டும். அரசனே! இந்த ஹவிஷால் ஆனந்தமாகவும். கசா. யக்ஞத்துக் கருகதையான அங்கிரசர்களுடன் இங்கு வரவும். யமனே! வைரூபர்களுடன் இங்கு நீ இன்பமாகவும். இந்த யக்ஞ தர்ப்பைகளில் உட்கார்ந்துகொண்டு, நான் உன் பிதாவான விவஸ்வந்தனை அழைக்கிறேன். கஎ. சோமனை விரும்பும் பிருகுக்கள் நவக்வர்கள், அதர்வர்கள், அங்கிரசர்கள் எமது பிதாக்களது நல் நினைவில், நாங்களாக வேண்டும். யக்ஞர்களது பிரியானுகூலத்தில் நாமாக வேண்டும். நாம் அவர்களது நல் மனத்தை யடைய வேண்டும். உ. சா. கஉ.

---

## அநுவாகம் கநஎ.

[காண்டம். ந.]

[சோமயாகம்-அஎ-ம் அநுவாகத் தொடர்ச்சி]

### சோம விமானம்

க. இது உனது காயத்திரியின் பாகமாகும் என சோமனுக்கு எனக்காகச் சொல்லவும். இது உனது ஜகதி

---

கநசா. கருத்து—அறிஞர்களை நாடி அறிவைப் பற்றுங்கள்

திருஷ்டுபுவின் பாகமாகும் என சோமனுக்கு எனக்காகச் சொல்லவும். சந்தோமர்களின் சாம்ராஜ்யத்தை யடையவும் என சோமனுக்கு எனக்காகச் சொல்லவும். ௩. க. உ.

---

## அநுவாகம் க௩அ.

### சோம பரிமாணம்

க. அவனுக்குப், பிரஜாபதியின் சனனப் பிரஜையையும் சனனர்களையு மறிவிக்கவும். அறிஞன் அதன் மீது ஞாபகமாகட்டும்.

உ. அக்கினியே! பசுபதியே, இன்று இப்பசுவை நான், உனக்கு நற்பணியின் நடுவில் கட்டுகிறேன். அதை அங்கீகரிக்கவும். நாங்கள் நற்துதியுடன் யக்ஞஞ் செய்யட்டும், தேவர்களுக்கு இந்த அவி திவ்யமாக வேண்டும்.

௩. பழைய தேவர்கள், அங்கங்களினின்று துரிதமாகும் பிராணனைப் பற்றுகிறார்கள். தேவர்களுக்குச் செல்லும் வழிகளால் சுவர்க்கஞ் செல்லவும். செடி கொடிகளில், உன் சரீரங்களோடு ஸ்தாபிதமாகவும்.

ச. இரு நான்கு கால் பிராணிகளின் தலைவன் பசுபதியாகும். அவன் வாங்கப்பட்டு யக்ஞத்துக்காகச் செல்ல வேண்டும். யஜமானனுன் அவனுக்குச் செல்வப் புஷ்டியாகவேண்டும். ரு. திடமானவர்கள் கண், கருத்தால், பந்தமாக்கப் படுபவனை தியானஞ் செய்கிறார்கள். பிரசையுடன் இணைந்து பிரசாபதியான அக்கினி தேவன், அவர்களை விடுதலையாக்கட்டும்.

சா. வனம், விரூபம் விசுவரூபங்களின் பிராணிகளெல்லாம், ஒரே ரூபத்தின் வடிவங்களாகும். பிரசையுடன் இணைந்து பிரஜாபதியான வாயுதேவன் அவர்களை விடுதலையாக்கட்டும். எ. தேவர்களே! புவன ரேதசை

---

விடுதலை செய்து யஜமானனைப் பெருக்குங்கள். தேவ நிலயத்துக்கு ஜீவனோடு ஊக்கம் பக்குவ மாகுபவர்கள் செல்லட்டும். அ. யஜமானனின் பிராணன் பசுவினின்று பிரிந்ததாகும், யக்ஞம் தேவர்களுடன் தேவர்களுக்குச் செல்லுகின்றது அது தேவர்களின் நிலயத்துக்கு சீவனுடன் செல்லட்டும். யஜமானனின் விருப்பங்கள் நிறைவேறட்டும். கூ. [1]பசு சத்தஞ் செய்தாலும் கால்களால் தன் மார்பை யடித்துக்கொண்டாலும், அக்கினி, அப்பாவம் எல்லாப் புன்மையினின்று, என்னை விடுதலையாக்கட்டும்.

கo. அழிப்பவர்களே! யக்ஞத்துக்கு தேவர்களால் துரிதமாகி வாருங்கள். பாசத்தினின்று பசுவை, பந்தத்தினின்று யக்ஞபதியை, விடுதலையாக்குங்கள். கக. அதிதி இந்த பாசத்தை நீக்கவேண்டும். நான் பசு, பசுபதிக்கு வணக்க மளிக்கிறேன். நான் பகைவனைக் கீழே சாய்க்கிறேன். நாங்கள் எவனில் துவேஷிக்கிறோமோ அவனில் பாசத்தைக் கட்டுகிறேன்.

கஉ. பக்குவமாக்கி அவி சுமக்க யக்ஞத்துக் கருகதையான யுன்னை சனங்கள் தரிசிக்கிறார்கள். அக்கினியே, ஜாதவேதசனே! உனது பலத்தாலும் காயத்தாலும் பிரசன்னமாகவும். எமது அவிகளை அங்கீகரிக்கவும். கங. ஜாதவேதசனே! நீ முதல் ஹோதாவானதால் வபையுடன் தேவர்களுக்குச் செல்லவும். அவர்கள் தேகங்களை நெய்யினால் திடமாக்கவும், சுவாஹா சத்தமுடன் செய்யப்பட்டுள்ள அளிப்பை தேவர்கள் புஜிக்கட்டும்.

கச. சுவாஹா தேவர்களுக்கு; தேவர்களுக்கு சுவாஹா! ௩. க. ச.

---

கஙஅ. கருத்து—சீவனோடு தேவ நிலயத்துக்குச் செல்லுங்கள்

1 புலன்

## அநுவாகம் கநக.

### சலங்கள்

க. நீங்கள் தேவர்களால் செவியுறப்படும் நிக்ராப் பியர்கள். என் ஆயுளை இன்பமாக்குங்கள், என் பிராணனை இன்பமாக்குங்கள். என் அபானனை இன்பமாக்குங்கள். என் வியானனை, இன்பமாக்குங்கள். என் கண், செவி, சொல் மனத்தை இன்பமாக்குங்கள். என் ஆத்மா அங்கங்களை இன்பமாக்குங்கள். என் வீடு, பசு, பிரஜைகளை இன்பமாக்குங்கள். என் கணங்களை இன்பமாக்குங்கள். என் எல்லா கணங்களை இன்பமாக்குங்கள். என்னை இன்பமாக்குங்கள். என் கணங்கள் தாகமாகாமலிருக்கவேண்டும். உ. நான், மூன்றுவது மூலஸ்தானத்தில் சுற்றும், புவி, வானம், இம்மூல நிலயம் பழமையாய் சாயும் மூலப் பிரதேசத்தில் விழும் துளியை, ஏழு ஹோத்துருக்களில் அளிக்கிறேன். ந. க. அ.

---

## அநுவாகம் கசம்.

### ஆஹுதிகள்

க. வைசுவாநரன், வன்மையில் விசுவ சம்புவான அக்கினி, எம்மைக் காலை யக்ஞத்தில் காக்கவேண்டும். சுத்தஞ் செய்யு மவன் எமக்குச் செல்வத்தை யளிக்கவேண்டும். [1]சகபோஜனஞ் செய்யும் நாங்கள் தீர்க்காயுசுடனாக வேண்டும்.

உ. இந்திரன் மருத்துக்கள் விசுவே தேவர்கள் நடு யக்ஞத்தில் எங்களை விட்டுவிட வேண்டாம். அவர்களுக்கு இன்பமானதைப் பேசிக்கொண்டு நீண்ட ஆயுசுடன் தேவர்களின் பிரிய நினைவை நாங்களடைய வேண்டும்.

---

கநக. கருத்து—நமக்கு வேண்டுவது இன்பங்கள்.

1 ஒருமையுடன் புசிக்கும்.

ங. இம்மூன்றாவது யக்ஞம், அமுதத்தால் கலசத்தைப் பிரேரிக்கும் ரிஷிகளுக் குரியதாகும். சுவர்க்கத்தை யடையும் இச் சௌதன்வனர்கள் எமது நலமான மேன்மையை மேலுக்குச் சுமந்து செல்லவேண்டும்.

ச. ருத்திரனே! நீ நாடிய பாகமே இது, அதில் இன்பமாகவும்; பசுக்களின் தலைமை பொருளின் மிகுதி, செல்வப் புஷ்டி, நல்ல வீரர்களுடன் வருஷக் க்ஷேமத்தை எமக்களிக்கவும். ங. க. கூ.

---

## அநுவாகம் கசுக.

### இந்திரத் துதி

க. தேவியான வாக்கே! நான் வாக்குக்குப் பிரியமுடனாக வேண்டும், வாக் பதிக்குப் பிரியமாகவேண்டும், என்னில் மதுரமான வாக்கை ஸ்தாபிக்கவும். சரஸ்வதிக்கு சுவாஹா!

உ. ருக்கினால் ஸ்தோமத்தைப் பெருக்கவும், காயத்திரியினால் இரதந்தரத்தை, காயத்திரி சந்தசால் பிரஹத் சாமனைப் பெருக்கவும்.

ங. பொழியும் சாதனத்தினின்று விழுந்து கைகளால் அசைந்து அத்வர்யுவின் பவித்திரக் கருப்பத்தினின்று புலனாகும் துளியில், நான் சுவாஹாச் சொல்லி இந்திரனுக்கு அளிக்கிறேன்.

ச. இந்திரனே திரள் தானியம் புரோடாசம் கரம்பம், சுத்தம், சேர்ப்பு, நெல்லுடனாகும் சோமனின்றும், சகத்தினின்றும் வீழ்ந்துள்ள துளி இந்துவில், நான் சுவாஹா சொல்லி, அதை இந்திரனுக்கு அளிக்கிறேன்.

---

கசுO. கருத்து—பசுச் செல்வத்துக்கு ருத்திரனை நாடுங்கள்.

ரு. இந்திரயமுடன் எம்மதுரமான இந்துவில், சுவாஹாச் சொல்லப்பட்டு எத்துளி தேவர்களுக்குச் செல்லுகின்றதோ, சோதி சகம் வானத்தினின்று எந்தத் துளி விழுகின்றதோ, அதில் நான் சுவாஹா சொல்லி, அதை இந்திரனுக் களிக்கிறேன். ௩. க. கo.

[கசங-ம் அநுவாகம் பார்க்க]

---

## அநுவாகம் கசஉ.

### யக்ஞங்கள்

க. மனிதன் தினந்தோறும் செழிப்பு, செல்வம், வீரர்கள் மிகும் புகழை, அக்கினியா லடையவேண்டும். உ. அக்கினியே! இந்த யக்ஞம், பசு மிகுந்து ஆடு அசுவம், ஆண்மையான நண்பர்களுடன் நித்தியமாகவேண்டும். அசுரனே! இந்த யக்ஞம், உணவு பிரஜை மிகுந்து மூலம் விரிந்து சபை பெருகி தீர்க்க செல்வமுடனாகவேண்டும். ௩-ச. உயரமாய்ப் பெருகவும். உனக்கு இணைந்து சேரட்டும்.

ரு. நான் முதலான, விசுவரூபத்தின் துவஷ்டாவை இங்கு அழைக்கிறேன். அவன் எமக்கே யாகவேண்டும். சு. தேவ துவஷ்டாவே! தேவர்களை விரும்பி வச்சிராயுதம் வீசும், திடம் திறச் செயல்களின் வீரன் தோன்றும் வீரிய வன்மையை எமக்கு நீ திவ்யமா யளிக்கவேண்டும். எ. துவஷ்டாவே! உன் ஆத்ம சத்தியுடன் போஷணைக்குப் பெருகி மங்களமாய் இங்கு வரவும். ஒவ்வொரு யக்ஞத்திலும் எம்மைக் காக்கவும். அ. தேவர்களை விரும்பி, ஆயுசு மிகுந்து, பலம் பொன்னிறத்தின் வீரன் புலனாகியுளான். சந்தானம், பிரஜைகளைத் துவஷ்டா எமக் களிக்கவேண்டும். தேவ வழிக்கு அவன் செல்லவேண்டும்.

---

**கசக. கருத்து—சோம பிந்து இரகசியம்.**

கூ. தேவியே! எங்களுக்கு முன்னராகவும். கO. சோதியினின்று வரவும். கக. நாங்கள், அனைவருங் காண, பெருகும் சரஸ்வதியின் ஸ்தனத்தினின்று உணவு பிரஜை யைக் கறப்போம். கஉ. சரஸ்வந்தே! நெய் சிந்தி தேன் மிகும் உன் அலைகளின் நல் மனத்தை நாங்கள், யநுபவிக்க வேண்டும். கங. எவன் விரதத்தைப் பசுக்களும் சலங் களு மநுசரித்து எவன் விரதத்தில் புஷ்டித் தலைவன் சாய்ந்துளானோ அந்த இச் சரஸ்வந்தில் ரட்சிப்புக்காக நாங்கள் அழைக்கட்டும். கச. திவ்யன், சுபர்ணன், சத்தி மான், சலகர்ப்பன், செடி கொடி விருஷபனும் அருகி னின்று மழையால் இன்பமளிப்பவனுமான இச் சரஸ் வந்தை இரட்சிப்புக்காக நாங்கள் அழைக்கட்டும். கரு. தேவியே! ஸினீவாலியே! தேவ சகோதரியான விசால தேசங்களுடனுகும் நீ, நாங்கள் செய்துள்ள அவியை அங்கீகரிக்கவும். எங்களில் பிரஜையைப் புலனுக்கவும். கசு. சுப கை, சுந்தர விரல், செழிய சந்தான சக்தி யுடன், வெகு பல பிரசவியான இராணிக்கு அவியை அளி யுங்கள்.

கஎ. எல்லாப் பக்கங்களிலும் இந்திரனை அழைக் கிறோம். கஅ. நரர்கள் இந்திரனை அழைக்கிறார்கள். ககூ. பனி அணிந்து சுந்தர சிறகுகளுடனுகும் கரு நிற குதிரை கள் சோதிக்குக் கிளம்புகின்றன. தங்கள் நிலயங்களை ஸ்தாபித்து விட்டு அவை இங்கு திரும்புகின்றன. பிறகு புவி நெய்யால் நனைகின்றது. உO. சுத்த சோதியுடன் உஷையை யறிபவனுய், சிறப்பு முயற்சி, சத்தியமுட னுகும் ஸ்திரீயைப்போலும் வீசுங் காற்று சீறும் பாம் பைப்போல், அவன் வாயுவின் விரிவில் பொன் கேசத்தை யடைந்துளான். உக. குதிரைகள் வழக்கம்போல் அவற் றை எதிர்த்து யுள்ளன. இவை யிருக்குங்கால் கருமை

யான விருஷபம் கர்ச்சனை செய்துள்ளது. பிரிய நகை புரியும் மின்னலோடு அவன் இங்கு வந்துளான். மழை பொழிகின்றன, மேகங்கள் கர்ச்சனை செய்கின்றன. உஉ. பசுவைப்போல் மின்னல் கனைக்கின்றது. மழை பொழியுங்கால் அது தாயைப்போல் கன்றை யநுசரிக்கும்.

உந. மகத்தான மலையும் அஞ்சும், உன் சத்தத்தில் சுவர்க்கத்தின் எல்லையும் நடுங்கும். மருத்துக்களே! ஈட்டிகளுடன் நீங்கள் விளையாடுங்கால் சலங்களைப்போல் நீங்கள் துரிதமாகிறீர்கள். உச. கர்ச்சனை செய்யுங்கள், இடிமுழங்குங்கள், சலம் நிறையும் உமது ரதத்துடன் எங்கும் துரிதமாகுங்கள். உச்ச நீசங்கள் சமமுடனாகட்டும்.

உரு. அக்கினியே! அமுதனே! பலமுடனான உன் சைன்னியங்கள் வனங்களைப் பிளக்குங்கால் புல்லில் பசுவைப்போல் இவ்வசையாப் பொருள்களையும் நீ புசிக்கிறாய். உசு. எல்லாமறியும் அமுதனின் சைன்னியங்கள் வெகு பலவாகும். பலமுள்ள தேவனே! உன்னில் பழைய மாயையின் மாயைகளை அவர்கள் வைத்துளார்கள். சகலந் தூண்டும் நீ, கிரேகிதர்களின் சத்தியை நாடுபவன்.

உஎ. மருத்துக்களே! எமக்குச் சோதியினின்று மழையைப் பொழியுங்கள். திட குதிரையின் தாரைகளை நீங்கள் பெருகச் செய்யுங்கள். எமது அசுரனை தந்தையாகும் நீங்கள், சலங்களைப் பொழிந்துகொண்டு இம்முழக்கத்துடன் இங்கு வாருங்கள். உஅ. யக்ஞங்களுக்கு நெய்யுடன் பாலை யளிக்கும் சலங்களை, தான சீலர்களான மருத்துக்கள், பெருகச் செய்கிறார்கள். அவர்கள் திடமான குதிரையை மழைக்குப்போல அழைத்துச் செல்லுகிறார்கள். அவர்கள் சுத்தமுடன் சாசுவதமாயுள்ள ஊற்றைக் கறக்கிறார்கள். உகூ. மருத்துக்களான நீங்கள் எல்லா வாயு கணம் மேன்மையாக்கும் மழையைப் பொழி

யச் செய்யுங்கள். அது பர்த்தாவுடன் சேரும் பெண்ணுன் மனைவியைப்போல் பலமா யழைக்கட்டும். ௩௦. தேனோடும் திவ்யத்துடனும் சோதி சகத்தை நனையுங்கள். வீரர்களான மருத்துக்களே! பலம் பிரிய மனத்தைப் பெருக்குங்கள்.

௩க. அதன் உயரத்தில் எழுச்சியாகின்றன. ௩௩. ஒளியுடனுன அவன் எழுச்சியாகியுளான். ௩௩. நான் பிருகு ஔர்வன் அப்னவானனைப்போல் கடலணியும் புனித்ராக்கினியை யழைக்கிறேன். ௩௪. நான் பகனின் பிரிய சவிதாவின் தூண்டுதலைப்போல் கடலணியு மக்கினியை யழைக்கிறேன். ௩௫. காற்றுப்போல் கர்ச்சனை செய்து பர்ஜன்னியனைப்போல் முழக்கும் பலமும் அறிவுடனுமாகி கடலணியு மக்கினியை யழைக்கிறேன். ௩. க. கக.

---

## அநுவாகம் கசங

[சோமயாகம். கசக-ம் அநுவாகத் தொடர்ச்சி]

### கடல்கள்

க. அழியாமலுள்ள இரு கடல்கள் அங்கு விரிந்துள்ளன. அவர்கள் சலத்தின் நடுவே அலைகளைப்போல் மாறிமாறிச் சுற்றுகிறார்கள். அவர்கள் நோக்கி அவற்றின் ஒன்றை கடக்கிறார்கள். நோக்காமல் சேதுவினுல் வேறொன்றின்மேல் அவர்கள் செல்லுகிறார்கள். உ. எல்லா உலகங்களையு மறிந்து, கேசங்களுடன் இரு உடைகளை—இரவு, பகல்—சதா ஒருவன், தரிக்கிறான். அவன் இருளில் இரகசிய உடையுடன் போகிறான். அவன் சீரணமானதை நீக்கி சோதி யுடை தரிக்கிறான். ௩. உ. உ.

---

கசஉ. கருத்து—மறைமுக அனல்

கசங. கருத்து—சோம இரகசியம்.

## அநுவாகம் கசச.

### சோம தரிசனம்

க. அரசனே! அக்கினியைச் சுற்றி, இந்திரனைச் சுற்றி விசுவேதேவர்களைச் சுற்றி, சோதியுடன் என்னைச் சுற்றி, பசு, மனிதன், குதிரை செடி கொடிகளுக்குச் சுகத்துடன் எமக்காப் புனிதமாகவும், செல்வத்தின் தலைவனே! தளராமலுள்ள உன் தீரதிடம் செல்வ மிகுதியை நாங்களடைய வேண்டும். அதன் பலத்தை எமக் களிக்கவும். அதன் பெருமையை நான் புசிக்கட்டும். உனது அதன் இ—வ்வீரத்தை—நான் சம்பாதிக்கிறேன். உ. ஒளி அளித்து சோதிக்காக என் பிராணனுக்குப் புனிதமாகவும். ந.—ரு. என் அபானன் என் வியானன் என் வாக்குக்குப் புனிதமாகவும். சு—எ. என் திடம் திறனுக்கு என் இரு கண்களுக்கு சோதியளித்துச் சோதிக்காக நீங்கள் சுத்தமாகுங்கள். அ-கஉ. என் காது, என் ஆத்மா அங்கங்கள், என் ஆயுசு பலத்துக்காக —நீங்கள் புனிதமாகுங்கள். கந-கரு. விஷ்ணு, இந்திரன் விசுவே தேவர்களின் உதரமே, நீயே சாதியளித்து சோதிக்காக சுத்தமாகவும்.

கசு. நீ யார்? நீ யார் என்னும் பெயருள்ளவன். எவருக்கு உன்னை எவரால் உன்னை, சோமனால் இன்பமூட்டிய உன்னை சோமனோடு இன்பமூட்டும் உன்னை-இப்படி அழைக்கிறேன். பிரசையினால் நற் பிரசை, வீரர்களால் நல் வீரர்கள் ஒளியினால் நல்லொளி புஷ்டியினால் நற் புஷ்டியின்—பெருமையை—நானடைய வேண்டும். கஎ. ஒளியளிக்கும் என் எல்லா ரூபங்களுக்கும் ஒளிக்காகப் புனிதமாகவும். அதன் சக்தியை எனக்களிக்கவும். உனது அந்த—பலத்தை—நான் சம்பாதிக்கிறேன். ந. உ. ந.

---

கசச. கருத்து—சோமன் எதற்கு?

# அநுவாகம் கசரு.

## சதஸ் நாடு

௧. வாள் சுவஸ்தியாகும், கூத்தி சுவஸ்தியாகும். கத்தி வேதி கோடரி சுவஸ்தியாகும். நீங்கள் யக்ஞ சம்பந்தமானவர்கள். யக்ஞத்தின்—சிறப்பைச்—செய்பவர்கள். நீங்கள் இந்த யக்ஞத்துக்கு என்னை யழையுங்கள்.

௨. சோதியும் சகமும் என்னை யழைக்கவேண்டும். சோமன், அக்கினி, கலசம் துதி ஸ்தலம் என்னை யழைக்க வேண்டும். தேவர், யக்ஞம், ஹோத்துருக்கள் அழைப்பில் என்னருகில் நாடவேண்டும்.

௩. நீங்கள் இருவர்கள் தனிமையாயும் திருடமாயும் மிருப்பவர்கள். இணைந்து இன்னலினின்று என்னைக் காருங்கள். ௪. தேவனான சூரியன், சோதி துன்பத்தினின்று, என்னைக் காக்கவேண்டும். வாயு, வானத்தினின்று அக்கினி புவியினின்று யமன் பிதுருக்களிடமிருந்து சரஸ்வதி மனிதர்களிடமிருந்து என்னைக் காக்கவேண்டும்.

௫. திவ்ய கவாடங்களே! என்னைத் துன்பஞ் செய்ய வேண்டாம்.

௬. சபைக்கு நமஸ்காரம், சபைத் தலைவனுக்கு நமஸ்காரம். முன் செல்லும் நண்பர்களின் கண்ணுக்கு நமஸ்காரம். சோதிக்கு நமஸ்காரம், சகத்துக்கு நமஸ்காரம். திடமான ஸ்தானத்தினின்று தோன்றுபவனே! நீ என் இடத்தினின்று எழுந்திருக்கவும். எங்களைவிட மதி கெட்டவன் நிலயத்தில் மரவும். ௮. நான் நீசம் உச்சியினின்று செல்லவேண்டும். ௯. சோதியே சகமே! இன்று இத்தினத்தினின்று எங்களைக் காருங்கள். ௩. ௨. ௪.

---

கசரு. கருத்து—க்ஷேமவழி.

## அநுவாகம் கசகூ.

### சோம பானம்

க. உணவே இங்கு வரவும். சுகம், சோதி தீர்க்காயுசு சீலப் பிரஜை செல்வச் செழிப்புக்காக என்னை பிரவே சிக்கவும். வசுவே! செல்வத்துடன் முந்திக்கொண்டு இங்கு வரவும். நீ என் இருதயத்துக்குப் பிரியனாகும். உ. நான் உன்னை அசுவினிகளின் கைகளால் பற்றவேண்டும்.

ந. மனிதர்களை நன்கு நோக்கும் தேவனான சோமனே! உன்னைக் கூறிய கண்ணால் காணவேண்டும்.

ச. யக்ஞங்களின் கொடியாய், பொருமையும் அடக்கமுமான வாக்கானது சோமனை யநுசரித்து அதில் இன்பமாகட்டும். சாந்தம், சௌம்யம் அகண்டித தலையுடனான அதிதி, மொழியாகி, ரசம் யநுசரித்து சோமனில் இன்பமாகவேண்டும்.

ரு. எல்லா மனிதர்களின் நீ, இங்கு வரவும், துணை குணம் கருணையுடன் எனக்கு வரவும். பொன்னிறனே! திடம் பலம் செல்வச் செழிப்பு சீலமான வீரர்களுக்கு நீ வரவும். கூ. அரசனே! என்னை அச்சமுறுத்தாதே! ஒளியால் என் இருதயத்தைப் பிளக்காதே. ஆயுசு சோதி வீர சத்திக்கு என்னிடம் வரவும். எ. தேவனான சோமனே! வசு கணங்களை யடைந்து, கருத்தை யறிவுடன் காலை யக்ஞத்துக்கு அருகனாய், உன் சந்தத்துக்கு காயத்திரியைச் சேர்ந்து இந்திரன் நராசம்சம், பிதுருக்களால் பருகப் படும் இனிமை மிகுந்து அழைப்பிலாகும் உனது இரசத்தை அநுக்கிருகமான நான் புசிக்கிறேன். அ. தேவனான சோமனே! இந்திர கணங்களையடைந்து கருத்தறிவுடன் நடு யக்ஞத்துக் குரியவனாய் உன் சந்தத்துக்கு திருஷ்டுபுவைச் சேர்ந்து, இந்திரன் நராசம்சன் பிதுருக்

களால் பருகப்படும் இனிமை மிகுந்து, அழைப்பிலாகும் உனது ரசத்தை அநுக்கிரகமான நான் புசிக்கிறேன். கூ. தேவனான சோமனே! உன் கணத்துக்கு ஆதித்தியர்களை யடைந்து இருதயறிவுடன் மாலை யக்ஞத்துக் குரியவனாய் உன் சந்தத்துக்கு ஜகதியை யடைந்து இந்திரன் நராசம்சன், பிதுருக்களால் பருகப்படும் இனிமை மிகுந்து அழைப்பிலாகும் உனதுஇரசத்தை அநுக்கிரகமான நான் புசிக்கிறேன். கo. சோமனே! பெருகவும், எல்லாப் பக்கங்களிலும் உன் பலம் குவியட்டும். பலத்தின் சேகரிப்பில் பலமுடனாகவும். கக. பொன் குதிரைகளுள்ள நீ, என் அங்கங்களைத் தூண்டவும். என் கணங்களைத் துன்பமுடனாக்காதே. ஏழு ரிஷிகளை எனக்காக மங்களகரமாய் நீ திருப்தி செய்யவும். என் நாபியின் கீழே செல்ல வேண்டாம்.

கஉ. நாங்கள் சோமனைப் பருகியுள்ளோம். நாங்கள் அமுதமாயுளோம். சோதியைக் கண்டுடுளோம், நாங்கள் தேவர்களைப் பார்த்துளோம். அமுதனே! மரணமடையும் மனிதனின் பகைமையும் பாதகமும் எங்களுக்கு என்ன செய்ய முடியும்?

கங. ஜாதவேதசனாய் சகலருக்கு மறிபவனான அக்கினி எனது எக்குறையையுஞ் சரி செய்துளான். அக்கினி மறுபடியுங் கண்ணை யளித்துளான். இந்திரன் பிருஹஸ்பதி அதைத் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். அசுவினிகளே! என் கண்ணை மறுபடியும் கட் குழிகளில் வையுங்கள்.

கச. தேவனான சோமனே! யஜுர், உக்தம், ஸ்தோமம், சொல்லப்பட்டும், இந்திரனால் பருகப்படும் குதிரையும் இனிமையும் நிறைந்து, அழைக்கப்படும் உனது ரசத்தை அநுக்கிரகமான நான், புசிக்கிறேன். கரு. பூரணமாக்கப்

படும் நீங்கள். பிரசைப் பொருளால் என்னைப் பூரணமாக்குங்கள்.

கசு. பிதாவே! அது உனதாகும், உனக்குப் பின்னராகுபவையும் உனதே. அது உன்னுடையது, பிதாமஹனே! பிரபிதாமஹனே! உனக்குப் பின்னராகுபவைகளு முனதே. கஎ. உங்கள் பாகங்களுக் கேற்றவாறு, பிதாக்களே! அவற்றில் சந்தோஷமாகுங்கள். கஅ. பிதாக்களே! உங்கள் சுவைக்கு நமஸ்காரம். பிதாக்களே! உங்கள் சத்திக்கு நமஸ்காரம், பிதாக்களே! உங்கள் வழக்கத்துக்கு நமஸ்காரம். பிதாக்களே! உங்கள் கோபத்துக்கு நமஸ்காரம். பிதாக்களே! உங்கள் கடுமைகளுக்கு நமஸ்காரம், பிதாக்களே! உங்களுக்கு நமஸ்காரம். கக. அவ்வுலகத்திலுள்ளவர்களே! அவர்கள் உங்களையநுசரிக்கவேண்டும். இவ்வுலகத்திலுள்ளவர்களே! அவர்கள் உங்களை யநுசரிக்க வேண்டும். உ௦. அவ்வுலகிலுள்ள நீங்கள் அவர்களின் நடுவே அதிமேன்மையுட னிருப்பவர்கள். இவ்வுலகி லுள்ளவர்களே! இவர்களின் நடுவே நான் மேன்மையாயிருக்க வேண்டும். உக. பிரஜாபதியே! உன்னைவிட வேறு எவனும் இவ்வெல்லா ஜந்துக்களையு மறிவதில்லை. உனக்கு யக்ஞஞ் செய்யுங்கால் நாங்கள் எதை நாடுகிறோமோ அது எமதாகட்டும். நாங்கள் செல்வங்களின் பதியாக வேண்டும்.

உஉ. தேவர்களால் செய்யப்படும் பருவத்தின் பரிகாரன் நீ. மனிதர்களால் செய்யப்படும் பாவத்தின் பரிகாரன் நீ. பிதுருக்களால் செய்யப்படும் பாவத்தின் பரிகாரன் நீ. உங. தேவனான சோமனே சலங்களில் சுத்தமாகி மனிதர்களால் பொழியப்பட்டு, யஜுர், ஸ்தோமம் சாஸ்திரம் சொல்லப்படுவதாயும், பசு அசுவங்களை ஜயிக்க பிதுருக்களால் உணவில் செய்யப்பட்டு அழைப்புடனுயு

மான உனது ரசத்தை, அநுக்கிருஹமான நான், புசிக்கிறேன். ந. உ. ரு.

---

## அநுவாகம் கசஎ.

### பிராணன் பற்று

க. [1]நீ மகத்துக்களின் பாலாகும், விசுவதேவ தேகமாகும், நான் இன்று பிருஷ்திகளின் கிரகத்தை நிறைவேற்றவேண்டும். நீ பிருஷ்திகளின் கிரகமாகும்; நீ விஷ்ணுவின் இருதயமாகும். திடனே! விஷ்ணு உன்னையனுசரித்து தன் பாதத்தைத் தனிமையாய் வைத்துள்ளார். தயிர் நெய்யால் திரவிய மோங்கவேண்டும். அளித்து அநுபோகமாகும் இப்பொருளினின்று செல்வம் எனக்கு வரவேண்டும். வெண் பசுவினின்று கறக்கப்படும் நீ எல்லாமனிதர்களுக்கும் சோதியாகும்.

உ. இந்திரனே! சோதியும் சகமும் எத்தனை பெரியதோ, ஏழு நதிகளின் விரிவு எத்தனை விசாலமோ அத்தனை மேன்மை மிகுவதே உனது கிரகம், அழியாமலுள்ள அதை நான் பலமுடன் கிரகிக்கிறேன். ந. உ. சு.

---

## அநுவாகம் கசஅ.

### நாங்கள் அதிபதிகள்

க. தேவனான சவிதாவே! அவன் அதை உனக்கு யறிவித்துளான். அதை நீ எழுச்சியாக்கி யறிவிக்கவும்.

உ. பிராமணனே பிரகஸ்பதியாகும்.

---

கசசு. கருத்து—சோமனால் அமுதமடைவோம்.

கசஎ. கருத்து—இந்திரன் சோம கிரஹம்.

1 பிராணன்

உ. ஆயுசளிக்கும் ரிக்கு, தேகம் காக்கும் சாம ளின்று நீங்கள் நீங்கவேண்டாம்.

ச. உங்கள் விருப்பங்கள் நிறைவேறட்டும், உங்கள் சங்கற்பங்களும் நிறைவேறட்டும். ரு. ருதம் சத்தியத்தைப் பேசுங்கள். சு. தேவ சவிதாவின் எழுச்சியில் துதியுங்கள்.

எ. துதிக்கப்பட்டவனின் துதியாகும் துதியான நீ, எனக்குப் பாலைக் கறக்கவேண்டும். துதியின் துதி எனக்கு வரவேண்டும். அ. நீ சஸ்திரத்தின் சஸ்திரமாகும். சஸ்திரம் எனக்குச் சத்தியைக் கறக்கவேண்டும். சஸ்திரத்தின் சஸ்திரம் எனக்கு வரவேண்டும். கூ. நாங்கள் பலத்தால் ஜயிக்கவேண்டும். நாங்கள் சத்தியால் பிரசை உணவைக் கறக்கவேண்டும்.

கo. தேவர்களில் என் விருப்பம் நிறைவேற வேண்டும். கக. எனக்கு ஒளி வரவேண்டும்.

கக. யக்ஞம் சம்பூர்ணமாயுளது. அது நிறைவேறியுளது. அது சனன மாக்கப்பட்டுளது. அது பெருகியுளது. அது தேவர்களின் தலைவனுகியுளது.

அது எங்களை அதிபதிகளாகச் செய்யவேண்டும். நாங்கள் செல்வபதிகளாகவேண்டும். ந. உ. எ.

---

## அநுவாகம் கசகூ.

### பிதுருக்கள்

க. பறக்குங் கருடனுக்கு சுவாஹா! வட்! தன்னையே யங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம். அறம் ஆதரவுக்கு சுவாஹா! வட்! தன்னையே தான் யங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம். சனங்களை விசாலமாக்குங் கோட்டைக்கு

கசஅ. கருத்து—நாங்கள் பலத்தால் ஜயிப்போம்

சுவாஹா! வட்! தன்னையே தான் யங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம். ஹோத்துருக்களின் பலத்துக்கு சுவாஹா! வட்! தன்னையே தான் யங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம். ஹோத்துருக்களின் பாலுக்கு சுவாஹா! வட்! தன்னையே தான் யங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம். மனு, பிரஜாபதிக்கு சுவாஹா! வட்! தன்னையே தான் யங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம். ருதம், ருதங் காப்பவன், சுவர்க்கஞ் சுமப்பவனுக்கு சுவாஹா! வட்! தன்னையே தானங்கீகரிப்பவனுக்கு நமஸ்காரம்.

உ. இனிய நெய்யில் ஹோத்துருக்கள் இன்பமாகட்டும்.

ங. ரிஷிகள் யக்ஞபதிக்குச் சொல்வதாவது—'உன் பாவத்தால் பிரஜைகள் பட்டினியாகி துன்பத்துக்குள்ளாகிறார்கள்!' அவன் தேனின் இரு துளிகளை யடையவில்லை. விசுவகர்மன் எங்களை அவர்களுடன் சேர்க்க வேண்டும்.

ச. ரிஷிகள் கோரர்களாகும். அவர்களுக்கு நமஸ்காரம். கண் கருத்துடன் சேருமவர்களில் நாங்கள் அநுகூலர் களாகவேண்டும். பெரிய புனித புகழுள்ள பிரஹஸ்பதிக்கு வணக்கம், விசுவகர்மனுக்கு நமஸ்காரம். அவன் எங்களைக் காக்கவேண்டும்.

ரு. போரில் வீரனைப்போல் பிராணனை யறிந்து சோமபானர்கள் தன்னைச் சேர்பவர்கள் என எண்ணி அவன் பெருங் கொடுமையைச செய்துளான். அப்படிச் செய்வதாலாகும் பயன்களால் அவன் கட்டப்பட்டுளான். விசுவகர்மனே! நீ அவனை க்ஷேமத்துக்காக விடுதலை யாக்கவும். சா. புசிக்குங்கால் எவர்களை அகத் தனல்கள் துன்பஞ் செய்கின்றனவோ அவர்கள் செல்வங்களுக் கருகதை யாவதில்லை. அதுவே குடில யக்ஞத்தை யொழிக்க பரி

காரமாகும். விசுவகர்மன் அதை எமக்கு நன்மையாய்ச் செய்யவேண்டும்.

எ. எங்களைச் சுற்றிலுங் காக்கும் சுதேவர்களாகி, யக்ஞஞ்செய்து யக்ஞம் விரும்பும் பிதுருக்களுக்கு நமஸ்காரம். நாங்கள் தட்சிணையை உங்களுக்கு விருப்ப சூன்னிய மாய்க் கொண்டு வரவில்லை. இக்குற்றத்துக்காக எங்களைத் துன்பஞ் செய்யவேண்டாம்.

அ. தேவர்களே! தம்பதிகள் பால் மிசிரத்தால் ஜயிக்கும் திவ்யச் செயலான இவ் வதிசயத்துக்குக் கவனமாகவும். வீரக் குழந்தை சனிக்கிறான், அவன் செல்வங்களைக் காண்கிறான். இம்மையன்னியில் அனைவரும் செழித்தோங்குகிறார்கள். கூ. பால் மிசிரமளிக்கும் தம்பதிகள் நன்மையை யடைய வேண்டும். அழியாத செல்வம் இசைந்து வாழு மவர்களை யநுசரிக்கவேண்டும். கலசத்துடன் கலந்து கறக்கப்படுவதை பொழிபவன், யக்ஞத்தால் வழியில் துன்பத்தை நீக்கவேண்டும். க0. மனைவியுடன் நல்ல யக்ஞத்தை யளிக்க அவாவுடனுகி கலசத்தால் கலந்து பால் மிசிரத்தை இந்திரனுக்குக் கொடுப்பவனின் மனைவி புஷ்டியாகி சரள மொழியுடனுவாள். அவன் மக்கட்கள் எளிமை நீங்கி பலமுட னிருப்பார்கள். கக. பால்மிசிரம் என்னில் பலம், உணவு, செல்வம் நற்பிரஜை நல்லொளியை வைக்கவேண்டும். இந்திரனே! என் சத்துருக்களைக் கீழே சாய்த்து சத்தியால் க்ஷேத்திரங்களை நான் ஜயிக்கவேண்டும்.

கஉ. நீ நித்திய சித்தனுகும், நீ என்னில் நித்திய சித்தனுய் சாய்க்கவும். நீ முகமாகும், நானும் முகமாகவேண்டும். கங. நான் உன்னை சோதி சகத்தினின்று கிரகிக்கிறேன். கச. வைசுவா நரனை விசுவேதேவர்கள் உன்னை முன் செலுத்தவேண்டும்.

கடு. சோதியில் தேவர்களை வானத்தில் பட்சிகளை, சகத்தில் நில சந்துக்களை நிலையாக்கவும். கசு. நோய் நீங்கி பிரியத்தின் எல்லா உலகமும் எமதாவதற்கு நிலையால் நிலையை யளித்து சோமனை எடுத்துச் செல்லுகிறோம்.

கஎ. இந்திரனே! எமக்கு எல்லா சனங்களை ஒரு மனத்துடனாக்கவும், எமக்கே எல்லா திசைகளை அவன் செய்வதற்கும் நாங்கள் சோமனை எடுத்துச் செல்லுகிறோம். ந. உ. அ.

---

## அநுவாகம் கடு௦.

### நான் ஓங்கவேண்டும்

க. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். நீ வாக்கில் சாய்கிறாய், மொழி, மனோ ரட்சகர்களான இந்த ஸ்தாபன யக்ஞத் தலைவர்களுக்கு, நான் உன்னை கிரகிக்கிறேன். உ. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய்; நீ ருதத்தில் சாய்கிறாய், கண், கருத்துக் காப்பாளர்களான இந்த யக்ஞ ஸ்தாபனத் தலைவர்களுக்கு நான் உன்னை கிரகிக்கிறேன். ந. நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். நீ ருதத்தில் சாய்கிறாய், காது க்ருத்தின் காப்பர்களான இந்த ஸ்தாபன யக்ஞத்தின் தலைவர்களுக்கு, நான் உன்னை கிரகிக்கிறேன். ச.—டு. தேவர்களுக்கு உன்னை, விசுவே தேவர்களுக்கு உன்னை கிரகிக்கிறேன்.

சு. எல்லா தேவர்களுக்கும் உன்னை கிரகிக்கிறேன்.

எ. விரி நடையுள்ள விஷ்ணுவே! இது உனது சோமன்; அதைக் காக்கவும்; கடுங் கண்ணன் உனது இதை காணுமலாக வேண்டும்.

---

கசக. கருத்து—புவனமெல்லாம் நமதாகவேண்டும்.

அ. மொழி காத்து பொருள் முந்தும் வசு என்னி லுளான், என் மொழியைக் காக்கவும். கூ. கண் காத்து செல்வங் காக்கும் வசு என்னிலுளான். க0. என் கண் ணைக் காக்கவும். செவி காத்து செல்வங் காக்கும் வசு என் னிடமுளான், என் செவியைக் காக்கவும்.

கக. நீ "பூ"வாகும், ரசிமிகளின் தலைவன். பிராண ரட்சகன். என் பிராணனைக் காக்கவும். க உ. நீ, துாரா ஹம். ரசிமிகளின் தலைவன், அபானரட்சகன்; என் அபா னனைக் காக்கவும்.

க௩—க௫. இந்திரனே! இந்திர வாயுவே! சோபன பதிகளே, மித்திரனே வருணனே! அசுவினிகளே! நான் உயரமாய் ஓங்க எங்களை எதிர்க்க விரும்பும் எமக்கு எதி ரான பகைவனை, என் கால் கீழே உதைத்துத் தள்ளவேண் டும். ௩. உ. க0.

[க௫உ-ம் அநுவாகம் பார்க்க]

---

## அநுவாகம் க௫க.

### யக்ஞங்கள்

க. அக்கினியே! எவன் நட்பை நீ பரிபாலனஞ் செய் கிறாயோ அவன் உன் துணையால் திடமடைந்து நல்ல வீரர்களுடன் ஜயமடைகிறான். உ. உமது பழைய பெருந் துதியை சோதி சுமக்கும் தாத்ருவாய் சொல் சோதி யளிக்கு மக்கினிக்குக் கூறுகிறார்கள். ௩. அக்கினியே! உன் பலங்கள் மூன்று, உன் நிலயங்கள் மூன்று; ருதஞ் சனிப்பவரே! உன் பழைய சுவைகள் மூன்று. தேவர்கள் இன்பங் காணும் உன் தேகங்கள் மூன்று. அவற்றால் எங் கள் துதிகளை சதாகாலங் காக்கவும்.

---

க௫0. கருத்து—என்னில் ஐசுவரிய மாகட்டும்.

ச. இந்திரனே! விஷ்ணுவே! இச் செயலின் முடிவுக்கு இவ்வுணவு முயற்சியால் உங்களைத் தூண்டுகிறேன். க்ஷேம வழிகளால் எங்களைச் செழிமையுடனுக்கி செல்வமளித்து யக்ஞத்தில் சந்தோஷமாகவும். ரு. இந்திரன் விஷ்ணு—இருவர்களும் ஜயமடைந் துளார்கள். அவர்கள் தோல்வி யாவதில்லை. விஷ்ணுவே! நீர் இந்திரனுடன் ஆயிரத்தை மூன்றுடன் வகுத்தீர்கள்.

சா. ஜாதவேதசனே! மூன்று ஆயுசுகளும் உனதாகும். அக்கினியே! உஷையில் மூன்று சன்மங்களு முனதாகும். அவற்ருல் அறிந்துகொண்டு தேவர்களை மங்களகர மாக்கவும். யஜமானனுக்கு சுகம் செல்வ மளிப்பவனுகவும்.

எ. கவியான அக்கினி, திரிமூலங்களின் மூன்று நிலயங்களில், நிலைத்துளான்; அவன் அளித்து எங்கள் பதினென்றின் மூன்று பிராணங்களை இன்பமுடனுக்கட்டும். அறிஞனை தூதன் பக்குவமாயுளான். அந்நியர்கள் அனைவரும் அழிக்கப்படட்டும். அ. இந்திரனே விஷ்ணுவே! சம்பரனின் ஒன்பது தொண்ணூறு கோட்டைகளை நீங்கள் நாசஞ் செய்வீர்கள். அசுரனை வர்சினின் நூறு ஆயிரம் வீரர்களை நீங்கள் அழிக்கிறீர்கள். கூ. 'மகனே! இத்தேவர்கள் உன்னைவிட்டு நீங்குகிருர்கள்' என அவன் அன்னை அவனை நாடித் தூண்டுங்கால் விருத்திரனைக் கொல்லப் போகும் இந்திரன் நண்பனை விஷ்ணுவே! நீ இன்னம் விசாலமாய் பாதத்தை வைக்கவுமென்ருன். ௺. உ. கக.

---

கடுக. கருத்து—நீ உலகமெல்லாம் சஞ்சரிக்கவும்.

## அநுவாகம் கரு௨.

### திருமூர்த்தி

க. அக்கினியே! நீ தேசசுள்ளவன், நீ தேவர்களின் தேச சுள்ளவனுகவும், நீ என்னை மனிதர்களில் திடம் தேசசு தீர்க்காயுசு ள்ளவனுக்கவும்; நான் உனக்கு தவம் தீட்சையின் தேசசுக்காக யாகுதி செய்கிறேன். ௨. நீ தேசசை யளிக்கிறாய், என்னைத் தேசசு நீங்காமலாக வேண்டும், நான் தேசசை நீக்கவேண்டாம், தேசசு என்னை நீங்காமலாகவேண்டும். ௩. இந்திரனே! நீ ஓஜசு நிறைபவனுகவும். நீ என்னை மனிதர்களின் திடனுக வும் தீர்க்காயுசின் வாழ்க்கையுடன் ஒளி நிறைபவனுகவும் செய்யவும். நான் உனக்குப் பிரம க்ஷத்திர ஓஜசுக்காக ஆகுதி செய்கிறேன்.

௪. நீ ஓஜசை ஜயிக்கிறாய், ஓஜசு என்னை நீங்காம லாகவேண்டும். நான் ஓஜசை நீங்காமலாமவேண்டும். ஓஜசு என்னை நீங்காமலாகவேண்டும். ரு. சூரியனே! சுவாலையாகும் நீ, தேவர்களில் சுவாலையுடனுகவும். மனி தர்களில் திடமாகவும் திர்க்காயுசின் திவ்யத்துடன் என்னைச் பிரகாசமுடனுக்கவும் நான் உனக்கு சலம் காற்றின் பிரகாசத்துக்கு ஆகுதி செய்கிறேன். சு. நீ சோதியை ஜயிக்கிறாய். என்னை சோதி நீங்காமலாக வேண்டும் நான் சோதியை நீங்காமலாகவேண்டும், சோதி என்னை நீங்காமலாகவேண்டும்.

எ. அக்கினி, என்னில் அறிவு என்னில், பிரஜை என்னில், பிரகாசத்தை யளிக்கவேண்டும். இந்திரன் என் னில் அறிவு, என்னில் பிரஜை என்னில் பலத்தையளிக்க வேண்டும். என்னில் அறிவு என்னில் பிரஜை என்னில் சூரியன் சுவாலையை யளிக்கவேண்டும். ௩. ௩. க.

---

**கரு௨. கருத்து—எனக்கு தேஜசு ஓஜசு முதலியவை வேண்டும்.**

## அநுவாகம் கநு.

### மது கோஷம்

க. ஹிங்கார சப்த கர்த்தா வாயுவாகும். பிரஸ்தோதா அக்கினியாகும், சாமன் பிரசாபதியாகும், உத்காதா பிரகஸ்பதியாகும், உபகாதா விசுவே தேவர்களாகும், பிரதி ஹார்த்தா மருத்துக்களாகும். நிதனம் இந்திரர்களாகும். பிராமணனைத் தாங்கும் இத்தேவர்கள் என்னில் பிராணனை யளிக்கவேண்டும். உ-௩. தேவர்களை யளிக்கும் இடை, யக்ஞத்தை அழைத்துச் செல்லும் மநு, பிரஹஸ்பதி சூக்தகோஷங்களைக் கூறவேண்டும். ச. விசுவே தேவர்கள் சூக்தங்களின் மொழிகளைச் சொல்பவர்களாகும்.

ரு. தாயான தரணியே! என்னை நீ இம்சிக்காதே, நான் தேனின் மொழிகளை நினைக்கவேண்டும். நான் தேனை யுற்பத்தி செய்வேன்.

நான் தேனை கோஷிப்பேன். நான் தேவர், மனிதர்களுக்கு அநுகூலமாய் தேன் மிகும் மொழியை மொழிய வேண்டும்.

சா. தேவர்கள் தேஜசுகக்காக என்னைத் துணைபுரிய வேண்டும், என்னில் பிதுருக்கள் இன்பமாக வேண்டும். ௲. ௲. உ.

---

## அநுவாகம் கநுச.

### யக்ஞசோமன்

க. வசுக்கள் காயத்திரிச் சந்தால் உன்னைச் சத்தியுடனுக்கட்டும், நீ அக்கினியின் பிரியமான ஸ்தானத்துக்குச் செல்லவும். உ. ருத்திரர்கள் திருஷ்டுபுச்சந்தால்

---

**கநு. கருத்து—தேவர்களை ஒளிக்குத் துணை புரிந்து கொள்ளவும்.**

உன்னைத் திடமுடனாக்கட்டும், நீ இந்திரனின் பிரியஸ்தானத்துக்குச் செல்லவும். ௩. ஆதித்தியர்கள் உன்னைச் ஜகதீச் சந்தால் பலமுடனாக்கட்டும், நீ விசுவேதேவர்களின் பிரியஸ்தானத்துக்குச் செல்லவும்.

௪. சுத்தனே! நான் தேனில் உனக்காக திவ்யத்தைத் தூண்டுகிறேன். ௫. சுபமானவற்றில். கோதநர்களில் நூதனங்களில், ரேசிகளில், மேசிகளில் முழக்கஞ் செய்பவைகளில், விசுவந் தரிப்பவைகளில், இனிமைகளில், உச்சிப்பொருள்களில் உரப்பொருள்களில், சுத்தமானவற்றில், உனக்காக சுத்தமானவற்றில், உனக்காக சுத்தனே! சுத்தத்தைத் தூண்டுகிறேன்.

கசு. நான், சூரிய ரசிமிகள், பகல் வடிவ சோதியோடு உனக்காகச் சுத்தத்தைக் கிரகிக்கிறேன். கஎ. இங்கு கோரமானவை, தாமே சலனமாகும் சோதியின் தாரைகளும் சேர்ந்துள்ளன.

கஅ. விருஷப வலிய வடிவம் உச்சஸ்தானத்தில் ஒளி வீசுகின்றது. சோமனை சோமன் முந்துகிறான், சுத்தனை சுத்தன் முந்துகிறான். ககூ. சோமனே! சோமனே! உனது இம்சையற்று விழிப்புடனாகும் நாமமான சோமனுக்கு சுவாஹா! உ0. தேவனான சோமனே! நீ காயத்திரி சந்தத்துடன் சந்தோஷமாய் அக்கினியின் பிரிய ஸ்தானத்துக்குச் செல்லவும். உக. தேவனான சோமனே! நீ திருஷ்டுபுச் சந்தத்துடன் இந்திரனின் பிரியஸ்தானத்துக்கு விருப்பமாய்ச் செல்லவும். உஉ. தேவனான சோமனே! எமது நண்பனான நீ ஜகதீ சந்தத்துடன் விசுவே தேவர்களின் பிரிய ஸ்தானத்துக்குச் செல்லவும். உ௩. சோதிவானம் வெகு தூரத்தினின்று, பிராணனான நீ, வரவும். புவியினின்று ஆயுசான நீ, வரவும். நீ அமுதமாகும்; நான் பிராணனுக்காக உன்னை நாடுகிறேன்.

உச. இந்திரனும் அக்கினியும் என்னில் வர்சஸை யளிக்கவேண்டும். சோமனும் பிரகஸ்பதியும் என்னில் வர்சஸை யளிக்கவேண்டும். விச்வே தேவர்கள் என்னில் வர்சஸை யளிக்கவேண்டும். அசுவினிகளே! என்னில் வர்சஸை யளியுங்கள்.

உரு. அவனை அநுசரித்தாலுஞ் சரி, அல்லது அவனுக்கு—பிர்மங்களை மொழிந்தாலுஞ் சரி, அவன் அதை அங்கீகரிக்கிறான். சக்கரத்தைச் சுற்று வளையம் போல் எல்லா அறிவையும் அவன் அணைகிறான். ந. ந. ந.

---

## அநுவாகம் கருரு

### சோம வடிவம்

க. நீ வாயுவாகும், பிராணன் என்னும் பெயருள்ளவன். சவிதாவின் தலைமையில் எனக்குப் பிராணனை யளிக்கவும். உ. நீ கண்ணாகும். செவியென்னும் பெயருள்ளவன், தாத்ருவின் தலைமையில் எனக்காயுசை யளிக்கவும். ந. நீ நிறமென்னும் பெயரால் வடிவமாகும், பிரகஸ்பதியின் தலைமையில் எனக்குப் பிரசையை யளிக்கவும். ச. சத்தியமென்னும் பெயரால் நீ ருதமாகும். இந்திரன் தலைமையில் எனக்கு க்ஷத்திரத்தை யளிக்கவும். ரு. எதிர்காலம் என்னும் நாமத்தால் நீ கடந்தவனாகும், பிதுருக்களின் தலைமையில் சலம் ஒஷதிகளின் கர்ப்பத்தைத் தரவும்.

சு-க0. ருதத்தின் வானம், ருதத்தின் வன்மை, ருதத்தின் சுற்றளவு, ருதத்தின் சத்தியம், ருதத்தின் சோதிக்கு உன்னை—நாடுகிறேன். ந. ந. ரு.

---

கருச. கருத்து - சந்தங்களை யறிந்து செல்வ மூலங்களுக்குச் செல்லுங்கள்.

கருரு. கருத்து-சோமனின் ரூபங்களே பல சொரூபங்கள்.

## அநுவாகம் கருசா.

### வருஷ சோமன்

க. அக்கினியே! ஆயுசளித்து அவியில் இன்பமாகி நெய்யின் உனது மூல நிலயத்துடன், நீ நெய்யோடெதிராகவும். இனிய நெய்யை பசுவின் இன்ப மிசிரத்துடன் பருகி மகனைத் தந்தைபோல் நீ அவனை ரட்சிக்கவும்.

உ. நான் திருப்பி யளித்திராத ருணத்துக்கும், யமன் நிமித்தம் நான் இன்னுமளிப்பதற்கான கடனுக்கும், இங்கு ஈடு செய்கிறேன். அக்கினியே! இங்கு நான் அக்கடனின்று நீங்கவேண்டுமே.

ங. விசுவலோபனே! நான் உன்னை விசுவம் எரிப்பவனது வாயில் யளிக்கிறேன். ஒருவன் புசிக்கப்படாத-பொருளைப் புசிப்பவன். அளிக்கப்படாததின் பொருளைப் புசிப்பவன், வேறு ஒருவன். குவிக்கப்படும் பொருளைப் புசிப்பவன் மற்றொருவன். அவர்கள் எமக்கு ஔஷதி, நிலயம், இனிய பலத்தைச் செய்யவேண்டும். ச. தேஜசால் பெருக்கும் அவன் எதிரில் எம்மைக் காக்கவேண்டும். தவறும லிருக்கும் கிருகங்களான பல வீடுகள் எமக்காகவேண்டும். ரு. தேசசின் தலைவனே! பிரியத்துடன் பலத்தை எம்மிலளிக்கவும். இழந்ததை எனக்குத் திருப்பவும். எமக்குச் செல்வத்தை யளிக்கவும்.

சா. செழிமையாக்குந் தேவனே! நீ ஆயிரம் போஷணையின் தலைவனுகும். நல்ல வீரர்களுடன் வர்ஷ பூரண க்ஷேமத்தையும், அழியாதச் செல்வப் புஷ்டியையும் எமக்களிக்கவும். ங. ங. அ.

---

## அநுவாகம் கருள.

### கோர சோமன்

க. நான் உங்களைச் சுற்றிலும் இந்த இளைஞனை ஸ்தாபிதஞ் செய்கிறேன். பிரியமான அவனுடன் நீங்கள் விளையாடி சலனமாகுங்கள். செல்வவான்களே! எங்களைச் சன்மத்தில் சோகமாக்க வேண்டாம். நாங்கள் உணவிலும் செல்வப் பெருக்கிலு மானந்த மாகவேண்டும்.

உ. உன் கண்ணுக்கு, உன் மகிமைக்கு நமஸ்காரம், மருத்துக்களின் பிதாவே! உன் மகிமைமையை—நான் போற்றுகிறேன். எங்களுக்குச் சுகமளிப்பவனுகவும், நாங்கள் சுப யக்ஞத்துட னளிக்கிரும். இந்த அவி தேவர்களுக்குப் பிரியமுடனுகட்டும்.

ந. இது தேவர்களின் மூட்டையாகும். சலங்களின் கர்ப்பம் ஔஷதிகளில் சேருங்கால் பூஷணன் சோமனின் துளியைப் பற்றுகிறுன். அதனுல் அவற்றிற்கு அது பெரிய மேகமாகும்.

ச. அவன் கன்றுகளின் பிதா, பசுக்களின் பதி, முழங்கும் சப்தங்களின் தந்தையாகும். கன்று, கருப்பம் நடுக்கொடி, புதுப்பால், சீப்பால், தோயும் பால், தயிர், நெய்யே, அவன் இரேதசாமகும்.

ரு. தலைமைக்காகப் பசுக்கள் உன்னைத் தேடுகின்றன. இனிய கானஞ் செய்யும் மருத்துக்கள் உன்னை ஆசி கூறுகிறுர்கள். கோரனே! க்ஷத்திரத்தின் உயரிய ஸ்தானத்தில் சாய்ந்து இனி எமக்குச் செல்வத்தை பகிர்ந்து யளிக்கவேண்டும். ந. ந. கூ.

---

**கருள. கருத்து—கோர சோமனை நாடினுல் செல்வம் தோன்றும்.**

## அநுவாகம் ௧௫௮.

### சூரிய சோமன்

௧. சூரியனுன தேவன் சோதியில் சாய்பவர்களுக்கும், தாத்ரு தலைமையான திடனுக்கும், வாயு பிரசாபதிக்கும் பிரசைக்கும், பிரகஸ்பதி பிரசாபதிக்கும் சோதியுடனுகு முன்னே யக்ஞஞ் செய்யட்டும்.

௨. நான், இம்சையாகாத அங்கங்களுடன், பொன் கருப்பாசயத்துடன் கபில கருவுடனுகு முன்னே தேவர்களுடன் சேர்க்கிறேன்.

௩. கொண்டு வருபவனே! அருகில் கொண்டுவரவும். அகற்றுபவனே! அகற்றிவிடவும். இந்திர நர்த புதனே! புவியின் நான்கு திசைகளுடன் நீ அருகில் கொண்டுவரவும். ௪. நான் உன் சலமூலம் கருப்பாசயம், இரு அரைப் பூட்டுக்கள், தாய், குழந்தை கரு, நஞ்சுக்கொடியை தனித்தனியாய்ப் பிளக்கிறேன். ௫. அது உன்னிடமிருந்து தனிமையா யிருக்கட்டும். அப்படியே யாகட்டும். ௬. தீரன், திவ்யன், விசுவரூபங்களின் அதி விசாலமான இந்து, கருவை நனைத்துளான். ௭. ஒரு பாதம் இரு பாதங்கள், மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு பாதங்களால் அவள் புவனங்களிளெல்லாம் விஸ்தாரமாகவேண்டும். சுவாஹா!

௮. இரு மேன்மைகளான சோதியும் சகமும் இந்த யக்ஞத்தை எமக்குச் சேர்க்கவேண்டும். அவை துணையுடன் எம்மைக் காக்கவேண்டும். ௩. ௩. ௧௦.

[சோம யாகம் முற்றும்]

---

௧௫௮. கருத்து—வானம் புவியிலுள்ளவற்றின் துணை கொண்டு யக்ஞத்தைப் பூரணமாக்கவும்.

## அநுவாகம் கடுகூ

### யக்ஞங்கள்

க. இந்திரனே, பிரகஸ்பதியே! உங்கள் வாயில் இந்த அவி பிரியமாகும். உக்தமும் உச்சகானமும் கோஷமா யுள்ளன. உ. இந்திரனே! பிரஹஸ்பதியே! பருகி இன்பமுடனுவதற்குப் பிரியமான, இச்சோமன் உங்களுக்குப் பொழியப்படுகிறுன். ந. இந்திரனே! பிரகஸ்பதியே! நூறு பசு, ஆயிரம் வகை குதிரைகளின் செல்வத்தை எமக்களியுங்கள். ச. பின்புறம் மேற்புறம் கீழ்புறம், புன்மை செய்பவனின்று பிரகஸ்பதி எம்மைக் காக்கவேண்டும். இந்திரன் நண்பனுக்கு நண்பனுய் முன்புறம், நடுவினின்று எங்களுக்கு விசால நிலயத்தை யளிக்க வேண்டும்.

ரு. அக்கினியே! சுத்தனே! உன் சுத்தச் சுவாலைகள் காற்றுல் எங்கும் பிரேரிதமாகி வியாபகமாகின்றன. திவ்யமான நவக்வர்கள், குரூர யழிப்புடன் திடமாய் நாசஞ் செய்து காடுகளை எதிர்க்கிறுர்கள். சு. அக்கினியே! நன்கு அறிபவன், ஹோத்ருச் செயலைத் தெரிபவனுய் மர்மமா யிருந்தும் அனைவராலுங் காணும் ஆனந்தனை உன்னை நல்ல யக்ஞனுயும் நெய்யோடு ஒளியாகும் உக்கிர உணர்வின் உயர்வோடாகும் உன்னை, மனித கூட்டங்கள் துதிக்கிறுர்கள்,

எ. சகத்தின் தலைவனுய்ப் பிரபுவான தாத்ரு எமக்குச் செல்வத்தை யளிக்கவேண்டும். அவன் பூரண அளிப்புடன் எமக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டும். அ. தாத்ரு பிரசை திரவியத்தின் தலைவனுகும். தாத்ரு இந்த எல்லா உலகத்தையுஞ் சிருட்டி செய்துளான். தாத்ரு யஜமானனுக்கு மகனை யளிக்கிறுன். நாம் நெய் மிகும் அவியை

அவனுக்களிப்போம். கூ. தாத்ரு அக்ஷயமாய் அருமையா யுள்ள ஜீவனையும் செல்வத்தையும் எமக்களிக்கவேண்டும். எவன் திரவியங்கள் சத்தியமா யுள்ளனவோ அத் தேவ னின் யநுகூலத்தை நாங்களடையவேண்டும். கo. பிரசை விரும்பி துரோணத்தில் தாராளமாயுள்ள யஜமானனுக்கு தாத்ரு திரவியத்தை யளிக்கவேண்டும். விசுவே தேவர் அதிதியுடன் சேர்ந்து எல்லா அமுத தேவர்களும் அவ னுக்காக பிரசன்னமாகவேண்டும்.

கக. தேவர்களில் அநுமதி இன்று எங்கள் யக் ஞத்தை எமக்கு யநுகூலமாக்கவேண்டும். அவனும் அவி சுமக்கும் அக்கினியும் யஜமானனுக்கு ஆனந்த மளிப்பவர் களாகவேண்டும். கஉ. அநுமதியே! உன் பிரிய மனத்தை யளிக்கவும், எமக்குச் செல்வத்தைத் தரவும். எங்களைப் பலம் பிராணனுக்குத் தூண்டவும், எமக்கு ஆயுளைத் தீர்க்க மாக்கவும். கரு. பிரசைமிகும் அழியாச் செல்வத் துடன் பிரியமாகு மவள் எமக்கு யநுகூல மாகவேண்டும், நாங்கள் அவள் பிரதிகூலத்தில் விழாம லாகவேண்டும். அழைப்பதற்கு சுலபமாகும் தேவி, எமக்குப் பாதுகாப்பை யளிக்கவேண்டும். கச. மனிதர்கள் திசையில் திவ்யமா யுள்ள அநுமதியை போற்றுகிறார்கள். எவளங்கத்தில் விரியும் வானமுளதோ அழைப்பதற்குச் சுலபமாகுமவள் எமக்குப் பாதுகாப்பை யளிக்கவேண்டும்.

கரு. நான் அழைப்பதற்குச் சுலபமான ராகையை சுபத் துதியுடன் நாடுகிறேன். சௌபாக்கியமுடனுள்ள அவள், எம்மைச் செவியுற்று, எங்கள் விஷயத்தில் சூசனை யாகவேண்டும். ஒடியாமலுள்ள ஊசியுடன் தன் செயலை அவள் பூர்த்தியாக்கவேண்டும். துதிக் கருகதையான நூறு செல்வமுள்ள வீரனை அவள் அளிக்க வேண்டும். கசு. ராகையே! சௌபாக்கிய முள்ளவளே! எந்த நல்ல

நினைவுகளுடன் யஜமானனுக்குச் செல்வத்தை யளிக்க உனக்குச் சாத்தியமாகின்றதோ அவற்ருேடு பிரியம் மிகுந்து, ஆயிரம் வகை செழிமை யளிப்பவளாய் எமக்கு வரவும். கஎ. சினீவாலியே! கஅ. பொன்கையுள்ள வளுக்குப் பொழியவும்.

கசு. நான் யக்ஞத்தில், தன்செயலை நிறைவேற்றும் அழைப்பதற்குச் சுலபமான சௌபாக்கியமுள்ள குஹூவை யழைக்கிறேன். எமது பிதுருக்களின் புகழை அவள் எமக்களிக்கவேண்டும். தேவியே! உனக்கு அவியுடன் நாங்கள் போற்றட்டும். உ௦. அமுதம், தேவர்களின் பத்தினியாயும், அழைப்பதற் கருகதையுமான குஹூ எமது அவியின் எண்ணத்துக்கு சூசனையாகவேண்டும். யஜமானனுக்கு நல்ல பாக்கியத்தை யவளளிக்கவேண்டும், அவள் அறிஞனுக்குச் செல்வச் செழிப்பை யளிக்கவேண்டும். ந. ந. கக.

---

## அநுவாகம் கசு௦

### மநுவாகவும்

க. சோதியின் சாரம் பருகும் வாயுவே! எங்களுக்கு வரவும். விசுவ வியாபகனே! உன் குதிரைகள் ஆயிரமாகும். தேவனே! எதனுல் நீ முதற் பானத்தை தரித்துளாயோ அதனுல் இவ்வினிய பானம் உனக்குப் பொழியப் பட்டுளது.

உ. சங்கற்பத்துக்கு உன்னை, விருப்பத்துக்கு, உன்னை, செழிப்புக்கு உன்னை, கிக்கடமான உன் மனத்தைப் பிரசாபதிக்கு சுவாஹா! கிக்கடம் உன் பிராணனை வாயுவுக்கு சுவாஹா! கிக்கடம், உன் கண்ணை

---

சகூக. கருத்து—அக்கினித் துதி

சூரியனுக்கு சுவாஹா! கிக்கடம். உன் செவியை சோதி சகத்துக்கு சுவாஹா! கிக்கடம்; உன் மொழியை சரஸ்வதிக்கு சுவாஹா!

௩. நீ மூன்றுக்கும் அப்பாலானவன், எல்லாம் கைவசமுள்ளவன், அவாவுள்ளவன். இதனுல் ஒரு முறை மனத்தால் கரு உன் கருப்பாசயத்தை அடைந்துளது. சுவாதீனமுள்ள நீ, தேவர்களுக்கு அவாவுடன் செல்லவும். யஜமானன் விருப்பங்கள் நிறைவேறட்டும்.

௪. நீ செல்வத்தில் சாயும் அசன்மன். சகத்தில் சாயவும், வானத்தில் உயரமாய் ஏறவும். சோதியில் உன் சிறந்த ஒளியாகட்டும். ௫. வானத்தின் இழையை விசாலமாக்கி நீ சோதியை யணுகவும். அறிவாலாகும் சோதியின் பாதைகளை நீ பாதுகாக்கவும்.

௬. நாடுபவர்களின் செயலை குறை சூன்னியமாய் நீங்கள் செய்யவெண்டும். நீ மநுவாகவும், தேவசனத்தை யுண்டாக்கவும். ௭. நீ மனத்தின் அவியாகும், பிரசாபதியின் நிறமுள்ளவன்.

உன் அங்கங்களை நாங்கள் பகிர்ந்து கொள்ளலாமோ. ௩. ௪. ௨.

---

## அநுவாகம் கசுக.

### கோரணுகவும்

க. சித்தமும் சிந்தனையும், சங்கற்பமும் சங்கற்பனையும், அறிந்ததும் அறிவும், மனமும் பலமும், பூர்ணிமையும் அமாவாசையும், பிர்ஹத்தும் இரதந்தரமும் எமக்கு நன்மையுடனுக வேண்டும்.

---

**கசுO. கருத்து—நீ மனுவைப்போல் சட்டஞ் செய்பவனுகவும்.**

உ. பிரசாபதி போர்க்களத்தில் பயங்கரனுய் பல முடனுகும் இந்திரனில் ஜயங்களை யளித்துளான். அவிக் கருகதையாய் கோரமாயவன் ஓங்குவதால் எல்லா சனங் களும் வணக்கமுடன் அவனை நமஸ்கரிக்கிருர்கள். ந. ச. ச.

---

## அநுவாகம் கசூஉ.

### பெருந் துணைகள்

க. பிராணிகளின் தலைவனுன அக்கினி என்னைக் காக்கவேண்டும். சக்திகளின் இந்திரன், சகத்தின் யமன், வானத்தின் வாயு, சோதியின் சூரியன், நட்சத்திரங்களின் சந்திரன், பிரமத்தின் பிரஹஸ்பதி, சத்தியங்களின் மித் திரன், சலங்களின் வருணன், நதிகளின் சமுத்திரன் சாம்ராஜ்யங்களின் அதிபதி அன்னம், அது, என்னைக் காக்கவேண்டும். ஔஷதிகளின் சோமன் எழுச்சிகளின் சவிதா பசுக்களின் ருத்திரன், ரூபங்களின் துவஷ்டா மலைகளின் விஷ்ணு, கணங்களின் அதிபதிகளாய் மருத் துக்களான அவர்கள் என்னைக் காக்கவேண்டும்.

உ. பிதுருக்களே! பிதாமஹர்களே! நீங்கள் தூர முள்ளவர்கள், நீங்கள் அருகிலுள்ளவர்கள், நீங்கள் பெரி யார்கள், நீங்கள் மிகப் பெரியார்கள், நீங்கள் இங்கு என்னைக் காக்கவேண்டும்.

ந. இந்த பிரமத்தில், இப்புவி பலத்தில், இந்தப் புரோஹிதத்தில் இச்செயலில் இத்தேவர்களின் அழைப் பில் எங்களை இரட்சியுங்கள். ந. ச. ரு.

---

**கசூக. கருத்து—நீ உக்கிரனுன லொழிய உயர்நிலை அடைய முடியாது.**

**கசூஉ. கருத்து—தேவர்கள் யார்?**

## அநுவாகம் கசுரு.

### கந்தர்வர்களும்—அப்ஸரஸர்களும்

க. ருதந்தாங்கி சத்தியத்தில் சாயும் அக்கினி கந்தர்வனாகும்; திடமெனக்கூறும் ஓஷதிகளே அவன் அப்சரசர்கள்; அவன் இந்த பிரமம் க்ஷத்திரத்தைக் காக்க வேண்டும். அவர்கள் இந்தப் பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும், அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

உ. எல்லா சாமன்களையு மடையும் சம்ஹிதையான சூரியன் கந்தர்வனாகும். அவனது ரசிமிகள் துரிதமெனப்படும் அப்சரஸர்கள். அவன் இந்த பிரமம் க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தைக் இரட்சிக்கவேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

ந. சுகமான சூரிய ரசிமி சந்திரன் கந்தர்வனாகும். நட்சத்திரங்கள் அவன் அப்சரஸர்களாகும், அவை ஒளியெனப்படும். அவன் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்க வேண்டும். அவர்கள் இந்த பிரமக்ஷத்திரத்தை இரட்சிக்க வேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

ச. பாலனஞ் செய்து பறக்கும் யக்ஞம் கந்தர்வனாகும், துதிகள் எனப்படும் தட்சிணைகள் அவன் அப்சரஸர்களாகும். அவன் இந்த பிரம க்ஷத்திரத்தை காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தை இரட்சிக்க வேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

ரு. மனம் விசுவ கர்மாவான பிரசாபதி கந்தர்வனாகும். துதிகள் யெனப்படும் ரிக் சாம மந்திரங்கள் அவன் அப்சரஸர்களாகும். அவன் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தை

இரட்சிக்கவேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

௬. எங்கும் வியாபகனுகும் துரிதமான காற்று கந்தர்வனுகும்; இன்பங்கள் எனப்படும் சலங்கள் அவன் அப்சரஸர்களாகும். அவன் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும், அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தை இரட்சிக்கவேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

௭. புவனபதியே! இங்கும் உயரிலும் கிரகங்களுள்ளவனே! வர்ஷ க்ஷேமம், வீரர்மிகுதி அழியாச் செல்வச் செழிப்பையும் நீ, எமக்களிக்கவேண்டும்.

௮. பரமேஷ்டியு மதிபதியுமான மிருத்யுவே கந்தர்வனுகும். சகங்கள் எனப்படும் சகலமும் அவன் அப்சரர்களாகும். அவன் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தை இரட்சிக்கவேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

௯. நலமில்லை நற் செல்வத்துடன் சுபச்செயல் கர்த்தாவாகிய சோதி, தாங்கும் பர்ஜன்னியன் கந்தர்வனுகும். ஒளியெனப்படும் மின்னல்கள் அவன் அப்சரஸர்களாகும். இந்த பிரம க்ஷத்திரத்தை அவன் காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

௧௦. துரிதமாய்ச் செல்லு மாயுதத்துடன் இரக்கமற்றுள்ள மிருத்யுவானவன் கந்தர்வனுகும், பயமெனப்படும் அவன் பிரசைகள், அப்சரஸர்களாகும். அவன் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவனுக்கு சுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

கக. இன்பமாய் இன்பத்துடன் காணும் காமன் கந்தர்வனாகும், கனல் யெனப்படும் கருத்துக்களே அவன் அப்சரஸர்களாகும். எமது இந்த பிரம க்ஷத்திரத்தை அவன் காக்கவேண்டும். அவர்கள் இந்த பிரம க்ஷத்திரத்தைக் காக்கவேண்டும். அவனுக் குசுவாஹா! அவர்களுக்கு சுவாஹா!

கஉ. புவனபதியே! இங்கும் உயரிலும் வீடுகளுள்ளவனே! இந்த பிரம க்ஷத்திரத்துக்கு மேன்மையாயும், விசாலமாயுமுள்ள காப்பை யளிக்கவும். ந. ச. எ.

---

## அநுவாகம் ககூச.

### வாஸ்தோஷ்பதி

க. வாஸ்தோஷ்பதியே! எங்களை ஏற்கவும், எமக்கு சுகா சிரயமாகவும், நோயினின்று எம்மை நீக்கவும். நாங்கள் உன்னிடமிருந்து நாடுவதை நீ, எமக்களிக்கவும். எமது துவி சதுர் பாதங்களுக்கு நீ சுகமளிப்பவனாகவும்.

உ. வாஸ்தோஷ்பதியே! சந்தோஷம் சாதன சத்தியான சிநேகிதத்துடன் சீலச் செயலோடாகும் நான் உன் தோழர்களாகவேண்டும். யோக க்ஷேமத்தில் எங்கள் விருப்பங்களைக் காருங்கள். க்ஷேமங்களுடன் சதாகாலம் எம்மை ரட்சியுங்கள். ந. ச. க௦.

---

ககூந. கருத்து-தேவ இரகசியம்.

ககூச. கருத்து—சுகவாழ்க்கை நாடு

## அநுவாகம் கக௫.

### யக்ஞங்கள்

க. தேவனே! அக்கினியே! கவி காளை கிரகபதி யான நீ, தீர்க்காயுசை யளிக்கிறாய். உ. அமுதனும் எமது பிதாவுமான அக்கினி விசாலனும் விசேஷ ஒளியுடனும் காட்சிக்குக் கனிபவனுமாகி அவிகள் சுமந்து நலமான இல்லற அனலுடன் நீ எமக்குணவைப் பிரகாசிக்கவும். எமக்குச் சிறப்பையு மளிக்கவும்.

ந. சோமனே! துதி விரும்பும் வனஸ்பதியான நீ நாங்கள் அழியாமலிருக்க சீவனைச் சித்தமாக்கவும். ச. தேவர்களின் பிரமனையும் கவிகளின் தலைவனையும் விப்பிரர்களின் ரிஷியாயும் மிருகங்களின் மகிஷனையுங் கழுகுகளின் கருடனையும், வனங்களின் கோடரியாயும் சோமன் கானஞ் செய்து சுத்தத்தில் செல்லுகிறான். ரு. சகலத்தின் தேவராயும், சத்தியத்தின் தலைவருமான உண்மையெழுச்சியின் சவிதாவை இன்று நாங்கள் சூக்தங்களால் பிரார்த்தனை செய்கிறோம்.

சா. சவிதா தேவர் சத்திய சோதியுடனணுகி, பொன் இரதத்தோடு முதன் அமுதனை ஸ்தாபித்துக் கொண்டு சகங்கள் நோக்கி முன் செல்லுகிறான்.

எ. அதிதி எமது கோக்கள், மனிதர்கள், பசுக்கள், பிரஜைகளுக்கு ருத்திரியத்தை யளிக்க அவரை நாங்கள் போற்றுகிறோம். அ. ருத்திரனே! எம்மை எமது குழந்தைகளில் இம்சை செய்யாதே. எங்கள் சந்ததி ஆயுசில் இம்சை செய்யாதே! எங்கள் பசு குதிரைகளில் இம்சிக்காதே. ருத்திரனே! எமது வீரர்களைக் கோபத்தில் கொல்லாதே. நாங்கள் மரியாதையுடன் அவிகளோடு உங்களை நமஸ்கரிக்கட்டும்.

க. துதிகள் பிரகஸ்பதியை சலத்தில் நீந்தும் கவனப்பட்சிகளைப் போலும், இடி முழக்கஞ் செய்யும் மேக சப்தத்தைப் போலும், மலைகளினின்று பிளந்து பாயும் ஆனந்த அலைகளைப் போலும் கோஷித்துள்ளன. க0. பிரகஸ்பதிப் பசுக்களை நோக்கி அம்சம் போல் ஒலிக்கும் நண்பர்களுடன் கடினஞ்செய்யுங் கட்டுக்களை நீக்கித் தள்ளி கர்ச்சனை செய்துளான். அவற்றைக் கண்டு கோஷித்து கானஞ் செய்துளான்.

கக. எல்லாஞ் சுமந்து ஜயிப்பதாயும், துணைக்குத் திவ்யமாயுமான திரமான திரவியத்தை இந்திரனே! நீ இங்கு கொண்டு வரவும். கஉ. பன்முறை அழைக்கப்படுபவனே! நீ கஷ்டங்களை எதிர்த்து சத்துருக்களை அழிக்கிறாய். உன் பலம் பெருமையுடனாகட்டும். இங்கு உன் பொருளாகவேண்டும். இந்திரனே! உன் வலது கையால் செல்வங்களைக் கொண்டு வரவும். நீ ஐசுவரிய நதிகளின் அதிபதியாகும். கந. இந்திரனே! அறிஞனே! சிரேஷ்ட நிலைக்கும் பொழியுங்கால் சோமனின் ரசத்தைப்பருகவும். நீ தோன்றும் பொழுதே திடமாகியுளாய். கச. இந்திரனே! ஒவ்வொரு யக்ஞத்திலும் துதிப்பதற் கருகதையான நீ, பிரமத்தால் பெரியவனாயுளாய். நீ சிறந்த மந்திரம், எல்லா சனத்தின் தலைவன். ஒவ்வொரு சமரிலும் சனங்களின் சத்துருவை ஜயிப்பவனாகும்.

கரு. தேவரின் மனிதரின் ஆதரவான மித்திரனின் கீர்த்தி நித்தியமானதாகும். அவன் சத்தியனும் அதிசய புகழு முள்ளவனாகும். கசு. அறிஞனான மித்திரன் மனிதர்களை எழுச்சியாக்குகிறான். மித்திரன் சோதி சகத்தைத் தாங்குகிறான். அவன் கண் கொட்டாமல் மனிதர்களை கவனிக்கிறான். சத்தியனுக்கு நெய் மிகுமவியால் நாமளிப்போம். கஎ. மித்திரனே! ஆதித்தியனே

உனது விரதத்தை நாடித் தேடுபவன் வன்மை மிகுபவனு யாகவேண்டும். உன்னாலாதரவாகி அவன் கஷ்டத்துக் குள்ளாவதில்லை. தோல்வியு மாவதில்லை. தூரம் அருகி னின்றும் துன்பம் அவனுக்குத் தோன்றுவதில்லை.

கஅ. கக. தேவனான வருணனே! மானிடர்களான நாங்கள் உன் விரதத்தை தினந்தோறும் பங்கஞ் செய்ததாலும் தேவ சனத்துக்கு விரோதமாய் நரர் களான நாங்கள் எப்பிழையைச் செய்தாலும் சித்தக் குறைவால் உனது தர்மங்களின் சட்ட பங்கத்தைச் செய்தாலும், தேவனே! அப்பாவத்துக்காக எங்களை இம் சிக்காதே, உ0. சத்தியத்திலறிவதையும் அறியாததை யும் தூர்த்தர்கள் ஏமாற்றுவதுபோல் நாங்கள் செய்தா லும்—அவற்றை யெல்லாம் தேவனே! எமக்கு இளக்க மாக்கவும். வருணனே! உனக்கு நாங்கள் பிரியமுட னாகவேண்டும். ங. ச. கக.

---

## அநுவாகம் ககூகூ.

### அக்கினி சோமன்

க. பின்புறம் பூர்ணமாயும் முன்புறம் பூர்ணமாயும் நடுவில் பூர்ணிமை தேவி ஜயித்துளாள். இங்கு உயரிய நிலயத்தில் அவனில் ஒருமையுடனாகும் தேவர்கள் சந்தோஷமாகட்டும்.

உ. அமாவாசையே! உன்னில் ஒருமையுடனாகி தேவர் கள் தங்கள் திடத்தால் எப்பாகத்தை யளித்தார்களோ அதனால், சகல வரத் தலைவனே! எங்கள் யக்ஞத்தைப் பூர் ணமாக்கவும். சௌபாக்கிய முள்ளவளே! நல்ல வீரர்களின் செல்வத்தை எமக்களிக்கவும். ங. செல்வம்சேகரித்துத்

---

ககூகூ. கருத்து—பிரார்த்தனை.

தரிப்பவளாயும், விசுவரூபங்களின் வடிவமணிந்து ஆயிரம் வகை செல்வமளிக்கும் சௌபாக்கியவதி, சோதி சேர்ந்து எமக்கு வந்துளாள்.

ச. பலத்தின் முதன்மையான அக்கினியே! சோமனே! இங்கு வசு ருத்திரர் ஆதித்தியர்களைத் துரிதமாக்குங்கள். நடுவின் பூர்ணிமையில் சந்தோஷமாகுங்கள். பிரமத்தால் பெருகுவதற்காகும் நீங்கள், நற்செயல்களால் ஜயிக்கப்படும் நீங்கள், வீரர்களுடன் செல்வத்தை எமக்களியுங்கள். ரு. ரு. க.

---

## அநுவாகம் கசஎ.

### சமர் ஜயம்

க. நான் தேவனான அக்கினியால் சண்டைகளை ஜயிக்கிறேன். நான் காயத்திரி சந்தம் திரிவிரத ஸ்தோமன் இரதந்தர சாமன், வஷட் அழைப்பு வச்சிராயுதத்தால் பூர்வத்தில் புலனான பகைவர்களைக் காலின் கீழே மிதிக்கிறேன். நான் அவர்களை வேதனை செய்கிறேன். நான் இவ் வீட்டில் புவியின் இவ் வுலகத்தில், அவர்களை நாசமாக்குகிறேன். நான் விஷ்ணுவின் பாதத்தால் எங்களை வெறுப்பவனை, நாங்கள் வெறுப்பவனை நன்கு மிதிக்கிறேன்.

உ. நான் இந்திரனான தேவனால் சண்டைகளை ஜயிக்கிறேன். நான் திருஷ்டுபு சந்தம், பஞ்சதச ஸ்தோமன் பிரஹத்சாமன் வஷட் அழைப்பு வச்சிராயுதத்தால் என்னுடன் புலனாகும் பகைவர்களை காலின் கீழே மிதிக்கிறேன். நான் அவர்களை வேதனை செய்கிறேன். நான் இவ் வீட்டில் இப் புவியின் உலகத்தில் அவர்களை நாசஞ்

---

கசுசு. கருத்து—வீரம் பொருட் செல்வத்தை நாடவும்

செய்கிறேன். எங்களை வெறுப்பவனையும் நாங்கள் வெறுப்பவனையும் விஷ்ணுவின் பாதத்தால், மிதித்துத் தள்ளுகிறேன்.

ங. நான் விசுவே தேவர்களால் சண்டைகளை ஜயிக்கிறேன். நான் ஜகதீ சந்தம், சப்ததச ஸ்தோமன், வாமதேவ்ய சாமன் வஷட் அழைப்பு வச்சிராயுதத்தால் என்பின் புலனுகும் பகைவர்களை கால் கீழே மிதிக்கிறேன். நான் அவர்களை வேதனை செய்கிறேன். நான் இவ் வீட்டில் இப் புவியின் உலகத்தில் அவர்களை நாசஞ் செய்கிறேன். எங்களை வெறுப்பவனை, நாங்கள் வெறுப்பவனை விஷ்ணுவின் பாதத்தால் நன்கு மிதிக்கிறேன்.

ச. நாங்கள் இந்திரனுடன் இசைந்து, சத்துருக்களின் கொடுமைகளைச் சகிக்கும் சக்தியுடனுகி பகைவர்களைப் பலமுடனொழிக்கவேண்டும்.

ரு. அக்கினியே! உனது தேஜசால் நான் தேஜசுடனுகவேண்டும். அக்கினியே! உனது வர்சஸால் நான் வர்சஸுடனுகவேண்டும். அக்கினியே! உனது சோதியால் நான் சோதியுடனுகவேண்டும். ங. ரு. ங.

---

## அநுவாகம் ககூஅ.

### தலைமைப் பதவி

க. அக்கினி, யக்ஞமழித்து யக்ஞந்திருடும் புவியிலமர்ந்துள்ள தேவர்களிமிடருந்து என்னைக் காக்கவேண்டும். நாங்கள் நற்செயல்கள் செய்பவர்களிடஞ் செல்லவேண்டும். உ. மித்திர வருணனே! புனிதர்களே! நாங்கள் சோதியின் ஒளிக்குயரமாய் மூன்ருவது எல்லையான

---

ககூஎ. கருத்து—நான் சத்துரு மிதித்து சமரில் சயிப்பேன்.

நற்செயல்களின் ஸ்தானத்தில் வானத்தைப் பற்றிக் கொண்டு உமது இரவுகளின் பாகத்துக்கு வந்துளோம், ங. வாயுவானவன், வானத்தி லமர்ந்துள்ள யக்ஞ சோரர் யக்ஞ நாசகரர்களான தேவர்களிட மிருந்து என்னைக் காக்கவேண்டும். நாங்கள் நற்செயல்கள் செய்பவர் களிடஞ் செல்ல வேண்டும். ச. ஸவிதாவே! சோதியும் சகத்துக்கும் நடுவே தேவர்கள் நடமாடும் உன் இரவுகளை —சனங்களறிவார்கள். அறிஞர்களே! உங்கள் வீடு பிரசையுடன் முதன்மையாய் நீங்கள் சோதியேறி திசை கள் யெல்லாஞ் செல்லுங்கள். ரு. சூரியனானவன் என்னை, சோதியிலமரும் யக்ஞசோரர் யக்ஞ நாசக்காரர்களிட மிருந்து காக்கவேண்டும். நாங்கள் நற்செயல்கள் செய் பவர்களிடஞ் செல்லவேண்டும்.

சு. அக்கினியே! ஜாத வேதசனே! இந்திரனுக்குப் பாலைக் கறக்கும் பெரிய அவியால் அவனைப் பெருக்கவும், தன் சனங்களின் தலைமைப் பதவியை அவனுக்களிக்கவும். ந. ரு. ச.

---

## அநுவாகம் ககசக.

### சோமன் சிறப்பு

க. தேவனான சூரியன் நீச தேவர் களிடமிருந்து என்னைக் காக்கவேண்டும். வாயு வானத்தினின்று என் னைக் காக்கவேண்டும். யஜமானனை அக்கினி கண்ணி னின்று என்னைக் காக்கவேண்டும். சவிதாவே! உக்கி ரனே! உரமுள்ளவனே! சகலத்தின் நீயான சொமனே! நாங்கள் இவற்றால் உன்னை நாடுவோம். சோமனே!

---

ககசஅ. கருத்து—நான் புவி வானஞ் ஜயித்து அப்பாலுஞ் செல்லுவேன்.

இந் நாமங்களால் உன்னை நாங்கள் உபாசிப்போம்.

உ. நான் கீழினின்று நான் உயரத்தினின்று சோதியால் இருளை விளக்கியுளேன். வானம் என் பிதாவாகி யுளான், நான் சூரியனை இருபக்கங்களிலுங் கண்டுளேன். நான் சமானர்களின் சிறந்தவனாக வேண்டும். ௩. பிரசாபதி கடல் வானத்தினின்று மேகத்தை விழச் செய்கிறான். இந்திரன் அதைப் புனிதமாக்கவேண்டும். மருத்துக்கள் அதை வர்ஷிக்க வேண்டும்.

ச. புவியை வெள்ளமாய்ப் பெருக்கவும். இத் திவ்ய மேகத்தைப் பிளக்கவும். எமக்கு திவ்ய சலத்தின் சத்தியை யளிக்கவும். தலைவனாகும் நீ, சலகோசத்தை விடுதலையாக்கவும்.

ரு. கவியக்ஞ வழியை சோதி ஒளிக் கப்பால் உச்சியின் எல்லையில் விஸ்தரிக்கிறான். நீ அவியை எடுத்துச் செல்வதானது தூதனைச் செல்வதாகும்; இப்படி அறிஞனைப் போவது, அப்பால் அதி ஆதாயத்துடன் செல்வதாகும். சு. அக்கினியே! புவி! சூரியன், தர்ப்பைகளிலுள்ள உனது சகல சமித்துக்களும், யஜமானனது ரட்சிப்புக்கு நெய்யினை குதியை யணுகட்டும். எ. குதிரை மிகும், வீரர் நிறையும் செல்வச் செழிப்பை யளித்து பொருளுடன் பிரஹஸ்பதி யால் துரிதமாகி யஜமானனை எனக்கு நீ, நிலையாகவும். ௩. ரு. ரு.

---

கசுகூ. கருத்து—நான் பெரியவனாகவேண்டும்.

# அநுவாகம் கஎ0

## தீட்சை

க. நான் நெய் பாலுடன் உன்னை இணைக்கிறேன்; நான் உன்னை சலம் செடி கொடிகளுடன் இணைக்கிறேன். நான் உன்னைப் பிரஜையுடன் இணைக்கிறேன். இன்று தீட்சையானபடியால் நீ எமக்கு திடத்தை ஜயிக்கவும்.

உ. பிரம பத்தினி முன் செல்லட்டும் அவள் வேதியில் நல் நிறமுடன் உட்காரட்டும். ங. இங்கு விருப்பம் குவியும் நான் அப்பால் என் சொந்த உலகத்தில் நுழையவேண்டும்.

ச. அக்கினியே! இம்சையாகாமலுள்ள நாங்கள் நற்பிரஜை நல்ல மனைவிகளுடன் இம்சையாகாமல் சத்துருவை நாசமாக்கும் உன்னிடம் வந்துளோம். ரு. பிரியமான ஸவிதா கட்டிய வருணனின் இப்பாசத்தை நான் அவிழ்க்கிறேன். மேலும் தாத்ருவின் மூலஸ்தானம், சுபச் செயலின் நிலயத்தில் புருஷனுடன் எனக்குச் சுகஞ்செய்து கொள்ளுகிறேன். சு. ருதப் பிரியர்களுக்கு முன் செல்லவும், மேலே போகவும்.

அக்கினி உன் முன் பாகத்தை அழைத்துச் செல்ல வேண்டும். அதிதி நடுப்பாகமான புவியை உனக்களிக்க வேண்டும். இளமை என்னும் பெயருடன் ருத்திரனால் விடப்பட்ட நீ, என்னை இம்சிக்கவேண்டாம்.

எ. நான் உங்கள் பாத மூலத்தை, வசு ருத்திரர் ஆதித்தியர் விசுவே தேவர்களுக்காக கிரகிக்கிறேன். அ. நான் உங்கள் பாத மூலத்தை யக்ஞத்துக்காகப் பற்றுகிறேன்.

கூ. அக்கினியே! வீரியமுள்ள எல்லாமுள்ள அனைத்துமான உன் காட்சி காமங்களில் நான் சகல ரேதசையும் வைக்கவேண்டும்.

க0. யக்ஞம் தேவர்களுக்கு வந்துளது, தேவர்களுக்காக தேவிகள் யக்ஞத்தை விட்டுளார்கள். சலங்களில் நின்று கொண்டு சுவாஹா சப்தமுடன் சேர்ந்துள்ள ஆசிகள் பொழியும் யஜமானனுக்கு, வாயுவின் பிரேரணையில் துதிப்பாகு முணவுடன் நீங்கள் கந்தர்வர்களை யநுசரியுங்கள். ங. ரு. கூ.

---

## அநுவாகம் களக.

### ததிக் கிரஹம்1

க. நீ ஆதரவுடன் கிரகிக்கப்படுகிறாய். நான் பிரசாபதிக்கு சோதியாயுள்ளவனுக்கு சோதி நிறையுமுன்னை கிரகிக்கிறேன். நான் திடம் பெருக்கும் தட்சனுக்கு தேவர்களுக் கநுகூலமாகு முன்னை அக்கினி சுவாலையுள்ள சத்திய மநுசரிப்பவர்களுக்கு உன்னை இந்திரன் தலைவனும் வருணன் அரசனும் வாதன் நண்பனும் பர்சன்னியன் பிராணனு'புமுள்ளவர்களுக்கு சோதி வானம் சகத்துக்கு உன்னை கிரகிக்கிறேன்.

உ. இந்திரனே! எங்களை வெறுத்து வீழ்த்த விரும்புவனது மனத்தை மாய்க்கவும். எமக்குத் தீமை செய்பவனை யொழித்துவிடவும்.

ங. நான் பிராணனுக்கு உன்னை, அபானனுக்கு, உன்னை, வியானனுக்கு உன்னை, இருப்புக்கு உன்னை, இல்லாமைக்கு உன்னை, சலங்களுக்கு உன்னை செடி கொடிகளுக்கு உன்னை சகலப் பொருள்களுக்கு முன்னை, இம்சையாகாத பிரஜோ மூலத்துக்கு தாராள திரவிய மளிப்பவ

---

**கள0. கருத்து—நீங்கள் இன்பமளிக்கும் பாதையைப் பற்றுங்கள்.**

1 பலம் ஆரோபமாகும் பொருள்.

னது பிரஜாபதிக்கு சோதி நிறைந்து சோதி நிறையு முன்னை அளிக்கிறேன். ந. ரு. அ.

---

## அநுவாகம் கஎஉ.

### பிராண கிரகம்

இந்த இருவர் மூவர் துணை வராகுங்கால் அனைவர் களும் தங்கள் சித்தங்களை உன் பக்கம் திருப்புகிறார்கள். இனிமையுடன் இனியதிலும் இனியதைச் சேர்க்கவும். நான் தேனை தேனோடு ஜயித்துளேன்.

நீ ஆதரவுடன் கிரகிக்கப்படுகிறாய். நான் உன்னைப் பிரஜாபதிக்கு இனிமையாய்ப் பற்றுகிறேன். இது உனது மூலஸ்தானமாகும். நான் உன்னை பிரசாபதிக்கு கிரகிக்கிறேன். ந. ரு. கо.

---

## அநுவாகம் கஎந.

[யக்ஞ மந்திரங்கள்]

### அக்கினி மகிமை

க. திவ்ய தியானத்துடன் தேவனான ஜாதவேதசனை திடமுடன் போஷியுங்கள். அவன் யுக்தமாய் எங்கள் அவி யங்களைச் சுமந்து செல்ல வேண்டும். உ. தேவ தாச ஹோதாவான அவன் யக்ஞத்துக்கு முன் செலுத்தப்படு கிறான்; மின்னும் மூடிய இரதம்போல்; தானாகவே அவன் வழியை யறிகிறான். ந. இந்த அக்கினியானவன் அமிருத மான ஜன்மத்தினின்று போல் நம்மை விடுவிக்கிறான். சீவனுக்குச் செய்யப்பட்டுள்ள தேவனான அவன் திடத்

---

கஎக. கருத்து—நீங்கள் பலத்துக்குப் பற்றுங்கள்

கஎஉ. கருத்து—நீ தேனைப் பற்றவும்.

தை விடத் திடனுகும். ச. அக்கினியே! ஜாதவேதசனே! நாங்கள் உன்னை அவி சுமந்து செல்ல புவியின் நிலயத்தில் சாய்த்துளோம். ரு. சுகதரிசா க்கினியே! சவிதாவுக்காக நெய் மிகுந்து உறையிடம் போலுள்ள கம்பள சம்பந்தமான மூலஸ்தானத்தில் நீ விசுவேதேவர்களுடன் உட்காரவும். நீ யஜமானனுக்கு யக்ஞத்தை நன்கு செலுத்தவும். சா. அறிஞனை ஹோதாவே! உனது சொந்த உலகத்தில் உட்காரவும். நற்செயல்களின் மூலஸ்தானத்தில் யக்ஞத்தை ஸ்தாபிக்கவும். தேவ அவாவுடனுகும் நீ, அவியுடன் அவர்களுக்கு யக்ஞஞ் செய்யவும். அக்கினியே! யஜமானனுக்கு மேன்மையான பலத்தை யளிக்கவும். எ. ஹோதாவானவன் அறிஞன் அதிபலன் பிரகாசமளிப்பவன், சோதி வீசுபவன் செல்வம் நிறைபவனுய் ஆயிரஞ் சுமந்து, இம்சையாகாமல் தீர்க்கதரிசம் விரதங்களுடன், சுத்த சுவாலையுடனுகு மக்கினியை ஹோதாவின் ஸ்தானத்தில் ஸ்தாபித்துளான். அ. நீ தூதன், நீ எமது பாதுகாப்பன். விருஷபனே! நீ எம்மை மேன்மையான சௌபாக்கியத்துக்கு அழைத்துச் செல்லுகிருய். அக்கினியே! எமது பிரசை சந்தானங்களின் சரீரங்களில் சாசுவதமாயும் சோதி வீசிக் கொண்டும் நீ சம்ரட்சகனுகவேண்டும்.

கூ. தேவனுன சவிதாவே! இன்பப் பொருள்களின் தலைவனே! சதாகாலத் துணைவனே! நாங்கள் செல்வத்துக்காக உன்னிடம் வந்துளோம்.

க0. மகத்துக்களான சோதியும், சகமும் இநத யக்ஞத்தை நமக்கு ஒன்று சேர்க்கவேண்டும். துணையுடன் எம்மைத் தாங்கவேண்டும். கக. அக்கினியே! அதர்வன் உன்னை வானத்தினின்றும், விசுவத்தின் தலையினின்றும் கடைந்துளான். கஉ. அதர்வன் மகனுன தத்தியங்கன்,

கவி, விருத்திர சம்ஹாரன், கோட்டைகளை இடிப்பவனுன உன்னைக்—கடைந்துளான். கங. பாத்திய விருஷன், எல்லாப் போரில் ஜயிப்பவனும் சத்துருக்களை நாசஞ் செய்பவனுமான உன்னை எழுச்சியாக்கியுளான். கச. ஒவ்வொரு யுத்தத்திலும் ஜயித்து விருத்திரனைக் கொல்லும் அக்கினி சன்மமாயுளான் யென சனங்களுஞ் சொல்லட்டும். கரு. அவர்கள் சனத்தின் சுபமான யக்ஞஞ்செய்யு மக்கினியை, பிறந்த குழந்தையைப்போலும் கைகளில் உணவு போலும் சுமந்து செல்லுகிறூர்கள். கசு. தேவர்களுக் களிக்க செல்வங்களின் சிறந்த அவசியமான தேவனை முன் கொண்டுவாருங்கள். அவனுக்குச் சொந்தமான மூல நிலயத்தில் அவன் உட்காரவேண்டும். கஎ. இனிய நிலயத்தில், ஜாதவேதசனில் கிரகபதியாயும், சன்மமுமான பிரிய அதிபதியை சாயுங்கள். கஅ. அக்கினி அக்கினியால் எழுச்சி யாக்கப்பட்டுளான். அவன் கவி, காளை, கிரகபதி, அவி சுமப்பவன். சுவாலேயே அவன் வாயாகும். ககூ. அக்கினியே! நீ அக்கினியால், கவியான நீ, கவியால், நலமான நீ, நலத்தால் நண்பனுன நீ, நண்பனூல் எழுச்சி யாக்கப்பட்டுளாய்.

உ0. தீரனுயும் தன் நிலயங்களில் திடனுயும் சமர்களில் ஜயனுயுமுள்ள அவனை, அவர்கள் சுத்தமாக்குகிறூர்கள். உக. தேவர்கள் யக்ஞத்தால் யக்ஞத்தைச் செய்துளார்கள். இவை தான் முதல் தர்மங்களாகும். இம் மகத்தான பெரியார்கள் பழைய தேவர்களான சாத்தியர்கள்—வாழும் சிறந்த—சகத்தைச் சேர்கிறூர்கள். ங. ரு. கக.

---

களங. கருத்து—தோத்திரம்

## அநுவாகம் களச.

[காண்டம் ச.]

### அக்கினி புரீஷ்யம்

க. ஸவிதா முதன்மையாய் நினைவை இணைத்து அறிவுகளை விசாலமாக்கி சோதியை நன்கறிந்து அக்கினியைப் புவியினின்று கொண்டுவந்துளான்.

உ. சவிதா பெருஞ்சோதியைச் செய்து அவர்கள் சிறப்புக்குச் செல்லும் தேவர்களை மனம் அறிவால் இணைத்து எழுச்சியாக்குகிறான். ந. நாங்கள் தேவ ஸவிதாவின் எழுச்சியில் சுவர்க்கஞ் செல்லச் சத்தியுடனாக மனத்தால் நன்கு சேர்க்கப்பட்டுளோம். ச. பெரும் புத்தியுடனாகும் விப்பிரனின் விப்பிரர்கள் தங்கள் மனங்களை இணைக்கிறார்கள். அவர்கள் தங்கள் புலன்களை பூட்டுகிறார்கள். வழியை யறியுமவனே அவர்களது செயல்களை நிர்மாணஞ் செய்கிறான். தேவ சவிதாவின் துதி சிறந்ததாகும். ரு. நான் உங்கள் பழைய பிரமத்தை வணக்கமுடன் இணைக்கிறேன். சுலோகங்கள் தங்கள் வழியில் சூரர்களைப்போல் செல்லுகின்றன. திவ்ய நிலைகளை அடைந்துள்ள எல்லா அமுத மக்கட்கள் அதைச் செவி யுறுகிறார்கள். சு. அந்நிய தேவர்கள் எந்த தேவனுடைய திட திவ்விய கமனத்தை யனுசரிக்கிறார்களோ, எந்த தேவன் புவியின் திசைகளை யளந்துளானோ, அவனே மகிமையும் மினுமினுப்புமான [1]தேவ சவிதாவாகும். எ. தேவ ஸவிதாவே! யக்ஞத்தைத் தூண்டவும். யக்ஞபதியைச் செல்வத்துக்குத் தூண்டவும். நினைவுகளைச் சுத்தமாக்கும் திவ்ய கந்தர்வன் எங்கள் நினைவைத்

---

1 திவ்ய மனம்.

தூய்மை யாக்கவேண்டும். இன்று வாசஸ்பதி எங்கள் வாக்கை இனிமையாக்கவேண்டும்.

அ. தேவஸவிதாவே! சதா ஜயமாகும் சோதி ஜயித்து செல்வங் குவிக்கும், தேவர்களை நாடி நண்பர் களைக் காணும் இந்த யக்ஞத்தை நீ, எமக்காகத் தூண்ட வும்.

௯. நீ, ரிக்கினால் ஸ்தோமத்தை பெருக்கவும், காயத்திரியினால் இரதந்தரத்தை வளர்க்கவும். காயத்திரி யில் நிகழும் பிரகத் சந்தத்தை ஜயிக்கவும். க0. தேவ ஸவிதாவின் தூண்டுதலில், [1]அசுவினிகளின் கைகளால், [2]பூஷணனின் புஜங்களால், [3]காயத்திரீ [4]சந்தமுடன் நான் உன்னை [5]அங்கிரசனைப் போல் ஜயிக்கிறேன்.

கக. நீ [6]கெல்லும் சாதனம். நீ ஸ்திரியாகும். நான் புவியின் நிலயத்தினின்று அங்கிரசனின் சுபாவம் போல [7]புரீஷ்யாக்கினியை, சுமக்கிரேன். நான் உன்னை அங்கிர சனின் சுபாவம் போல் [8]திருஷ்டுபு சந்தசால் கிரகிக் கிறேன்.

கஉ. நீ சுமப்பவன், நீ ஸ்திரியாகும். அவனது நிலயத்தில் உன்னால் புரீஷ்யாக்கினியைக் கெல்லுவதற் கான பலமுடன் நாங்களாக வேண்டும். நான் உன்னை அங்கிரசனின் சுபாவம் போல் [9]ஜகதீச் சந்தத்தால் கிரகிக் கிறேன். க௩. ஸவிதாவே! உன் கையில் தங்கப்பாரை யைத் தரித்துத் தாங்கி அதனால் அக்கினியைக் கெல்லி, அழியாத சோதியை எமக்கு நீ, கொண்டுவர வேண் டும்.

---

1 சிகித்சைகளின் 2 தேகம் 3 அறிவு 4 சக்தியால் 5 பிரா ணனை 6 சத்திய முயற்சிக் கருவி 7 பிரபஞ்சமடங்கிய அணு, புரா ஜானுகூலயனல் 8 திடம். 9 சர்வம்.

நான் அங்கிரசனின் சுபாவம் போல உன்னை [1]அநுஷ்டு
புச் சந்தத்தால் கிரகிக்கிறேன். ச. க. க.

---

## அநுவாகம் கஎ௫.

### புரீஷ்யம் நாடு

க. ரிஷிகள் முன்னர் தங்கள் சபைகளில் இந்த ருத பாசத்தைப் பற்றியுளார்கள். ருதத்தின் சாமனில் சாரத்தை கோஷஞ் செய்து சோமனை சுவாதீனஞ் செய்துளார்கள். உ. [2]குதிரையே! மிக்க [3]விரியும் வெளி வழியாய் இங்கு துரிதமாய் ஓடி வரவும். சோதியில் உன் உயரிய சன்ம மாகும். உனது நாபி வானத்திலாகும். வையகத்தில் உனது சன்ம ஸ்தான முண்டு. ந. பெருஞ் செல்வர்களே! இவ்வழியால் எம்மை நாடி அக்கினி சுமக்கும் [4]கழுதையை நீங்கள் இருவர்களும் இணையுங்கள்.

ச. நாங்கள் ஒவ்வொரு அவசியத்திலும் ஒவ்வொரு சண்டையிலும் எங்களைக் காக்க அதிசத்தியுடனுகும் [5]இந்திரனை நண்பர்கள் போல் அழைக்கிறோம். ௫. எதிரியை மிதித்துத் துரிதமாய் இங்கு வரவும். அதிசய திடத்தோடு ருத்திரத் தலைமையினின்று வரவும். அபயமளித்து க்ஷேமப் பசுமைகளுடன் விரியும் வானத்தில் செல்லவும். சு. நீ அங்கிரசனின் சுபாவம் போல், [6]பூஷணனுன நண்பனுடன் புவியின் நிலயத்தினின்று புரீஷ்யாக்கினியை யணுகவும். எ. நாங்கள் அங்கிரசனின் சுபாவம் போல்

---

கஎச. கருத்து—சவிதாவால் யழியாத சுவர்ணத்தைப் பற்றவும்.

1 மொழி. 2 பலமே. 3 புவி வழியாய். 4 பொருமையை. 5 வன்மையை. 6 சனங்களான.

புரீஷ்யத்தின் அக்கினியை யணுகுகிறோம். அ. நாங்கள் அங்கிரசனின் சுபாவம் போல் புரீஷ்யத்தி னக்கினியைச் சுமப்போம். கூ. நாங்கள் அங்கிரசனின்போல் புரிஷ்யத்தி னக்கினியைச் சுமக்கிறோம். க௦. ஜாதவேதசனை அக்கினி முதலில் தினங்களின் வழியாய் உணவுகளின் முன்னணியில் காண்கிறான். அவன் சூரிய ரசிமிகளின் பல வழிகளில் எல்லாம் சோதீ சகம் முழுவதும் விசாலமாயுளான்.

கக. [1]குதிரை வழியினின்று வந்து ஒவ்வொரு எதிரியையும் துரத்துகின்றது. அவன் பெரிய நிலயத்தில் அக்கினியை தன் கண்ணால் காண விரும்புகிறான். கஉ. குதிரையே! புவிக்கு வந்து உன் சோதியால் அக்கினியை நாடவும். புவியினின்று திரும்பி அவனை நாங்கள் எங்கு செல்லலாமென யறிவிக்கவும். கங. சோதி உனது பின் புறமாகும், சகம் உனது ஸ்தானம். வானம் உனது ஆத்மாவாகும், கடல் உனது மூல நிலயம், கண்ணால் நன்கு நோக்கி நீ எதிரியை ஜயிக்கவும். கச. குதிரையே! செல்வமளித்து இந்நிலயத்தினின்று பெருஞ் செழுமைக்கு எழுச்சியாகவும். புவியின் அங்கத்தினின்று செல்லுங்கால் புவியின் பிரிய மனத்தை நாங்கள் யநுபவிக்க வேண்டும்.

கரு. செல்வ மளிக்கும் சத்திமானை குதிரை முன் வந்துளான். அவன் புவியின் நிலயத்தை நன்கு செய்துளான். பிறகு நாங்கள் வானத்தின் உச்சியில் சோதியேறி சுக தரிசனக்கினியைக் செல்லுவோம். கசு. மனிதர்களுக்கு நோய் நீங்க, நீ இனிமை மிகும் திவ்யமான சலத்தைப் பொழியவும். செடி கொடிகள் தங்கள் ஸ்தா

---

1 பலம்

னத்தினின்று உத்தம இலைகளுடனுக வேண்டும். கஎ. நான், விசாலன் விஸ்தாரன் வெகு விரிபவன் மிகத்துரி தன் உணவு ஜயிப்பவனுய், வியாபக வயோவன்மையுடன் புவனங்களெல்லா மரசுபுரியும் அக்கினியை, மனம் ஒளி யால் பரிசிக்கிறேன். கஅ. நான் உன்னை மொழி நெய் யுடன் பரிசிக்கிறேன். நீ அதை நட்பு நினைவுடனங்கீ கரிக்கவும். மயக்கும் நிறம், மானிடமேன்மை உயிர் மிகும் உணர்வுடனுகும் அக்கினியை பரிசித்தலாகாது. கசு. கவியும் அக்கினியுமான காளைத் தலைவன் அளிப்ப வனில் செல்வங்களை யளித்து அவியங்களை யெல்லாஞ் சுற்றிச் செல்லுகிறுன். உ0. அக்கினியே! நாங்கள் காப் பனுய் நற்குணனுய் வீரநிறனுய் அழிக்கு மரக்கனை யொழிப்பவனுன உன்னை தினந்தோறும் எங்களைச் சுற்றி வைத்துத் தரிக்கிறேம். உக. அக்கினியே! நீ எங் களை சோதிகளால் பிரகாசமுடனுக்க விரும்பவும். சலம் வனம் செடி கொடி ஆயுதத்தினின்று மலரும் மனிதர் தலைவரான நீ, சுத்தமாய் சனித்துள்ளவனுகும். ச. க. உ.

---

## அநுவாகம் களசு.

### முயற்சி புரீஷ்யம்

க. நான் அங்கிரசனின் சுபாவம் போல் புரீஷ்யாக் கினியை தேவசவிதாவின் தூண்டுதலில், அசுவினி கைகளால் பூஷண புஜங்களுடன், புவியின் நிலயத்தில் கெல்லுகிறேன். உ. அக்கினியே! சுகதரிசனனுன நீ சோதி நிறைபவனுகும். நான் அங்கிரசனின் சுபாவம் போல், அழியாத ஒளியோடு பிரகாசமாகி, மங்களமாய்

---

களசு. கருத்து—புரீஷ்யமென்னும் அணுவான அனலில் அகிலமெல்லா முண்டு.

பிரசைக்கு இம்சை யன்னியிலுள்ள புரீஷ்யாக்கினியை புவியின் நிலயத்தில் கெல்லுகிறேன். ங. நீ சலங்களின் எல்லையாகும், விசாலனும் விஸ்தாரமாயு முள்ளவன். அக்கினியைச் சுகமாக்கச் செல்லும் நீ, கவனமுடன் நாடுவதற்காவாய்; பத்மம்போல் பலமுடனுக நீ பெருகி சுவர்க்கவுடன் விரிந்து விசாலமாகவும். அங்கிரசனின் சுபாவம், போல் புவியின் நிலயத்தில் நான் புரீஷ்யாக்கினியைக் கெல்லுகிறேன். ச. அழியாமல் விசாலங்களாகும், நீங்கள் இரட்சிப்பும் இரட்சகர்களுமாகும். நீங்கள் விசாலங்களாகி அவனை சுவாதீனஞ் செய்துகொள்ளுங்கள். புரீஷ்யாக்கினியை,வகியுங்கள். ரு. சதாகாலம் நிகழும் சோதி நிறையும் அக்கினியை, தங்களில் சுமப்பவர்களும் ஆன்மா இருதயமுடன் இணைந்து சுவர்க்கங் காண்பவர்களுமான நீங்கள் அவனைச் சுவாதீனஞ் செய்யுங்கள். சு. அக்கினியே ! நீ விசுவந்தாங்கும் புரீஷ்யாக்கினியாகும் ; [1]அதர்வன் உன்னை முதன்மையாகக் கடைந்தெடுத்துளான். எ. அக்கினியே ! அதர்வன் புஷ்கரன் விசுவத்தலைவனது சிரத்தினின்று உன்னை ஆய்ந்தெடுத்துளான். அ. அதர்வன் மகனை [2]தத்தியங்கரிஷி விருத்திரசம்காரனும், எதிரி வெல்லுபவனை உன்னை எழுச்சி யாக்குகிறான். கூ. [3]பாத்திய விருஷன் எதிரிகளின் தீரசம்காரனும் ஒவ்வொரு போரிலும் பொருள் சேகரிப்பவனுமான உன்னை, எழுச்சியாக்குகிறான்.

க0. [4]ஹோதாவே ! நீ அறிஞய் உன் உலகத்திலுட்காரவும். நீ யக்ஞத்தை நல்ல செயல்களின் மூலஸ்தானத்தில் ஸ்தாபிக்கவும். தேவர்களுக்கு விருப்பமான நீ, அவியுடன் அவர்களுக்கு யக்ஞஞ் செய்யவும்.

---

1 அறிஞன் 2 மொழி 3 மனோபலமுள்ளவன். 4 அக்கினியே

அக்கினியே! யஜமானனில் திடமான பலத்தை யளிக்கவும். கக. ஆயிரம் சுமப்பவனும் சோதி வீசி சீரிய சத்தியுள்ளவனும், பங்க மாகாமலுள்ள விரதங்களுடன் தீர்க்க தரிசத்தோடு, வசிஷ்டனும் சுத்த நாவுடனுகும் ஹோதாக்கினி அவனைத் தலைவனின் ஸ்தானத்தில் ஸ்தாபித்துளான். கஉ. நீ மகானுகும், நீ கீழே அமரவும், நீ சோதி வீசவும், நீ தேவர்களின் திவ்ய தாசன்; அக்கினியே! சுத்தனே! சிறப்புள்ளவனே! வெகு தூரங் காணும் நிர்மலமான சிகப்புச் சுடரை யுண்டாக்கவும்.

கரு. இதத்துக்கு இதனுய் வனங்களில் சிகப்பாய் தினங்களின் முன்னணியில் திவ்யமாய் சனிக்கவும்; அக்கினி ஒவ்வொரு வீட்டிலும் சனத்திலும் [1]ஏழு இரத்தினங்களை அளித்துக்கொண்டு அவனை ஹோதாவாக ஸ்தாபித்துளான். சு. க. ரு.

---

## அநுவாகம் களஎ.

### புரிஷ்யம் பற்று

க. [2]வாயு மாதரிசுவன் உன் முறியும் இருதயத்தை இணைக்கவேண்டும். [3]தேவியே! தேவர்களின் பிராணனேடு செல்லுபவனுக்கு உன்னுல் [4]வஷட் டாகட்டும். உ. அக்கினியே! சோதியுடன் நன்கு சனித்து காத்து ரட்சிக்கும் நீ சுவர்க்கத்தில் சாய்ந்துளாய். அதி ஒளியில் நிகழ்பவனே! நீ விசுவரூபமான உடையை தரிக்கவும்.

---

களசு. கருத்து—அனல் முயற்சி செய்து அவன் அமுதத்தை அடையவும்.

1 பஞ்சப்பிராணன், மனம், ஆத்மா 2 பிராணவாயு 3 திடமுள்ளவனே 4 ஜயமாகட்டும்

௩. நல்ல யக்ஞத்தின் அக்கினியான நீ, எழுச்சி யாகவும். நீ உனது திவ்ய கிருபையால் எம்மைக் காக்க வும். நீ திட தேசசுடன் திவ்ய தரிசன னுயுளாய். அக் கினியே! நீ எமது திவ்ய துதிகளுக்கு இங்கு வரவும்.

௪. நீ எம்மைக் காக்க தேவ சவிதாவைப்போல் எழுச்சியாகவும். போரில் நாங்கள் பெரிய தீரர்களுடன் உன்னை சமர் ஜயம் அடைய அழைக்குங்கால் நீ ஓங்கவும். ௫. அக்கினியே! நீ வானம் பூமியின் குழந்தையாய்ப் புலனாகி ஓஷதிகளில் உயரிய சிசுவாகத் தங்கியுளாய். இருளுக்கப்பால் விரியும் இனிய பாலனான நீ தாய் மார்க ளிடமிருந்து கர்ச்சனையுடன் வந்துளாய். ௬. திட அங் கங்களின்—சக்தியுடன்—நீ திடமாகவும். திட குதிரை யான நீ, துரிதமாகவும். பிரிய நிலயத்தின் நீ விசால மாகவும். நீ அக்கினிக்கு புரீஷ்யத்தி—னனலைச்—சுமப் பவனாகும்.

௭. [1]அங்கிரசனே நீ மனிதர்களின் பிரஜைக்கு மங் களகரமாகவும். நீ சோதி சகம் வானம் வனஸ்பதிகளை எரிக்காதே.

௮. குதிரை கர்ச்சித்து முன் செல்லட்டும். முழங் கிக்கொண்டு கர்தபம் துரிதமாகட்டும். அவன் புரீஷ் யத்தி னக்கினியைச் சுமந்து ஆயுசுக்கு முன்னர் விழாம லாகவேண்டும். ௯. பலவான்களே! முழங்கும் [2]கர்தபம் உங்கள் இரதத்துக்கு நன்கு இணைக்கப் பட்டுள்ளது. அவன் துரித தூதனாக புரீஷ்ய மக்கினியை இனி சுமக்க வேண்டும்.

௧௦. சக்தியுள்ளவன், சமுத்திர சம்பந்தமாய் சலங் களின் கருப்பமான பலாக்கினியைச் சுமக்கிறான். அக்

1 பிராண ரசமே 2 பொறுமை

கினியே! நீ ருதமாயும் சத்தியமாயும் இன்பத்துக்காக இங்கு வரவும். ௧௧: [1]வனஸ்பதிகளே! உங்கள் பக்கம் மங்கள கரமாய் வரும் அக்கினியை, நீங்கள் அங்கீகரியுங்கள். அவன் எல்லாப் புல் நினைவு, எல்லாப் பகைவர்களையும் நீக்கி, கீழ்ச்சாய்ந்து எங்களிடமிருந்து புன்மையை யொழிக்கவேண்டும்.

௧௨. ஓஷதிகளே! நல்ல மலர்களும் காய் கனிகளுமாகும் நீங்கள், அவனில் சந்தோஷமாகுங்கள்; ருதுவின் உங்கள் இக் கருப்பம் அவனைப் பழைய ஸ்தானத்தில் ஸ்தாபித்துளது. ச. க. ச.

---

## அநுவாகம் ௧௭அ

### உகை

க. விரியும் சுடருடன் சோதியாயுள்ள நீ சத்துருவையும் இராட்சஸ துவேஷத்தையும் எதிர்க்கவும். நான் பெருங் கர்ப்பனது காப்பை யநுபவிக்கவேண்டும். நான் அழைப்பதற்குச் சுலபமாகும் அக்கினியின் தலைமைப் பதவியை இன்புறவேண்டும். உ. [2]சலங்களே! நீங்கள் சுகமளிப்பவர்கள். மகா மகிழ்வைக் காணவும் பலத்துக்காகவும் எங்களைப் பெருக்குங்கள். ௩. நீங்கள் விருப்பமானத் தாய்மார்களைப்போல் உங்களது மிகச் சிவம் மிகும் ரசத்தை இங்கு எமக்களியுங்கள். ௪. நாங்கள் திருப்தியுடன் அவனிடஞ் செல்வோம். நீங்கள் எம்மை அவன் கிரகத்துக்குத் துரிதமாக்குங்கள். சலங்களே எங்களைப் பிரசா சக்தி யுடனாக்குங்கள்.

---

௧௭௭. கருத்து—அனல் சுமக்கவும்

1 கட்டை, கருவிகளே. 2 சனங்களே!

ரு. [1]மித்திரன் புவியையும் நிலத்தையும் பிரகாசத்தால் சேர்த்துள்ளான்: விசாலமாகி ஜாதவேதச வைசுவாநரனுய் நன்கு சனிக்கு மக்கினியை நான் சேர்க்கிறேன். சு. நான் [2]உன்னை சுகத்துக்காகவும் பிரசைக்காகவுஞ் சேர்க்கிறேன். [3]வைசுவா நரர்களான விசுவே தேவர்கள் [4]அங்கிரசனைப்போல் [5]அநுஷ்டுபுச் சந்தத்தால் உன்னைச் சேர்க்கவேண்டும். எ. [6]ருத்திரர்கள் புவியை ஒருமையுடனுக்கி பெரும் பிரகாசத்தை எழுச்சியாக்கியுளார்கள். அவர்களது அழியாத சோதி தேவர்களில் நன்கு பிரகாசமாகின்றது. அ. [7]வசுக்களோடு சேர்ந்து நீங்கள், செயலுக் கருகதையாய் புவியைச் செய்யுங்கள். சினீவாலி கைகளால் அதைக் கனியச்செய்து நன்கு செய்யட்டும்.

கூ. [8]அதிதியே, பெரியவளே! சுந்தர ரோமங்களுடன் அழகான உச்சி இரம்மிய பின்னல்களின் தோற்றமான சினீவாலி, உன் கைகளில் இத்தட்டை வைக்கவேண்டும். க0. அதிதி, திடம், அறிவு கைகளால் தட்டைச் செய்யட்டும். அவள் கருப்பத்தில், அக்கினியை சிசுவை அங்கத்தில் தரிக்கும் தாய்மார் போல் சுமக்கட்டும். கக. நீ [9]மக்களின் தலைவனுகும். கஉ. நீங்கள் யக்ஞங்களின் இருபாதங்கள். கங. வசுக்கள், அங்கிரசனைப் போல் [10]காயத்திரி சந்தத்தால் உன்னைச் செய்யவேண்டும் நீ புவியாகும். ருத்திரர்கள் அங்கிரசனைப் போல் உன்னைத் [11]திருஷ்டுபுச் சந்தத்தால் செய்யட்டும். நீ வானமாகும். [12]ஆதித்தியர்கள் அங்கிரசனைப்போல் [13]ஜகதீச்

---

1 நட்பு 2 அனலை 3 எல்லாப் பொது சனங்களும் 4 பிராணன் புலன்களிடம் போல் 5 சொல்வன்மையால் 6 நற்செயல்களுக்கு கோபமாகும் தலைவர்கள் 7 பொருள்களோடு. 8 புவியிலுள்ள சனமே 9 பெரிய செயலின் 10 அறிவுப்பலம் 11 தேக பலம் 12 அறிஞர்கள் 13 சர்வ சக்தி.

சந்தத்தால் உன்னைச் செய்யட்டும். நீ சோதியாகும், வைசுவா நரர்களான விசுவே தேவர்கள் அங்கிரசனைப் போல் அநுஷ்டுபுச் சந்தத்தால் உன்னைச் செய்யட்டும்.

நீ திசைகளாகும். நீ திடமாகும். நீ என்னில் பிரசையை ஸ்தாபிக்கவும். நீ என்னில் செல்வச் செழுமை, பசுப்பெருக்கம் வீரர் மிகுதியைச் செய்யவும். யஜமானனுக்கு சஜாதிகளைக் கீழாக்கவும். கச. நீ அதிதியின் [1]கச்சையாகும். கரு. [2]அதிதி, அங்கிரசனைப்போல் [3]பங்கதி சந்தத்தால் உன் [4]அங்கத்தைப் பற்றட்டும். கசு. அதிதி புவியால் பெரிய [5]தட்டை அக்கினியின் மூலஸ்தானமாகச் செய்து அதை அவளது [6]மக்களுக்களித்து அவர்கள் அதைப் பக்குவமாக்கட்டும் என மொழிகிறாள். ச. க. ரு,

---

## அநுவாகம் களகூ.

### உயிர் ஸ்தாபனம்

க. [7]வசுக்கள், அங்கிரசனைப்போல் காயத்திரி சந்தத்தால் [8]உன்னைச் [9]சுகந்த முடனாக்கவேண்டும்; [10]ருத்திரர்கள், அங்கிரசனைப் போல் திருஷ்டுபுச் சந்தத்தால் உன்னைச் சுகந்த முடனாக்கவேண்டும். [11]ஆதித்தியர்கள், அங்கிரசனைப்போல் ஜகதிச் சந்தத்தால் உன்னைச் சுகந்த முடனாக்கவேண்டும். வைசுவாநரர்களான விசுவேதேவர்கள் அநுஷ்டுபுச் சந்தத்தால் உன்னைச் சுகந்த முடனாக்க

---

களஅ. கருத்து—அனல் சாதன மவசியம்

1 புவியை ஒன்று சேர்ப்பவன் 2 அறிஞன் 3 செவி சக்தியுடன் 4 இருதயத்தை 5 சங்கத்தை 6 சீடர்களுக்கு 7 செல்வ புருஷர்கள் 8 சங்கம் சபையை 9 சீவனுடனாக்கட்டும் 10 ஏழைகளின் கண்ணீர் 11 சகல தினங்களும்

வேண்டும். [1]இந்திரன், அங்கிரசனைப்போல் உன்னைச் சுகந்த முடனாக்க வேண்டும். [2] விஷ்ணு, அங்கிரசனைப் போல் உன்னைச் சுகந்த முடனாக்க வேண்டும். [3]வருணன் அங்கிரசனைப்போல் உன்னைச் சுகந்த முடனாக்கவேண்டும்.

உ. சிறுவனே! விசுவே தேவர்களுடன் சேர்ந்த அதிதி தேவி புவியில் நிலயத்தில் உன்னைக்கண்டிக்க வேண்டும். ந. சாதனமே! விசுவே தேவர்களுடன் சம்பந்தமான [4]தேவிகளாகும் தேவபத்தினிகள் அங்கிரசனைப் போல் புவியின் நிலயத்தில் உன்னை ஸ்தாபிக்க வேண்டும். ச. சாதகமே! — [5]ஸ்தாபனமே!—அங்கிரசனைப்போல் விசுவே தேவ சம்பந்த தேவிகளான [6]திஷணைகள் உன்னை எழுச்சியாக்க வேண்டும். சாதகமே! விசுவதேவ சம்பந்த தேவிகளான மனைவிகள் அங்கிரசனைப்போல் புவியின் நிலயத்தில் உன்னைப் பக்குவமாக்க வேண்டும். சாதகமே! அங்கிரசனைப்போல் விசுவே தேவர்களுடன் சேரும் தேவிகளான துணைபுரியும் ஸ்திரீகள் புவியின் நிலயத்தில் உன்னைப் பக்குவமாக்க வேண்டும்.

ரு. [7]மித்திரனே! இச்சாதகத்தைச் செழிமையாக்கவும். அது சிலங் குறையாமலாகவேண்டும். சா. நான் நீ சிலங்குறையாமலிருக்க உன்னைச்சுற்றி இதை ஸ்தாபிக்கிறேன். எ. விசாலமான மித்திரன் தன் புகழால் புவியையும், பெருமையால் இச்சோதியையும் சூழ்கிறான். அ. சனங்களின் சாய்வான மித்திர தேவனது சிறப்பு சாசுவதமாகும். அவன் சத்தியனும் அதி புகழுள்ளவனுமாகும், கூ. தேவ சவிதா [8]தன் திடம் திவ்ய கை, சுந்தரபுஜம் விரல்களுடன் உன்னைத் தூண்டவேண்டும்.

---

1 பலம் 2 வியாபகத்வம் 3 மரிப்பு. 4 பலமில்லாதவர்கள் 5 சங்கமே 6 பிரசங்கமாரிகள். 7 நட்பே 8 சத்தியம்.

௧௦. 1 புவியே! நீ இம்சிக்காமல் வானம் திசைகளை நிரப்பவும், எழுச்சியாகவும், பெரியவனாகவும், நிமிர்ந்து நிற்கவும், நிலையாயிருக்கவும்.

௧௧. வசுக்கள், அங்கிரசனைப் போல் காயத்திரிச் சந்தத்தால் உன்னைப் பூர்ணமாக்கட்டும், ருத்திரர்கள் அங்கிரசனைப்போல் திருஷ்டுபுச் சந்தத்தால் உன்னைப் பூர்ணமாக்கட்டும், ஆதித்தியாகள் அங்கிரசனைப்போல் ஜகதிச் சந்தத்தால் உன்னைப் பூர்ணமாக்கட்டும், வைசுவநரர்களான விசுவதேவர்கள் அங்கிரசனைப்போல் அநுஷ்டுப்புச் சந்தத்தால் உன்னைப் பூர்ணமாக்கட்டும். ச. க. கா.

---

## அநுவாகம் ௧௨௦

### சூட்சம அனல்

௧. 2அக்கினியே! ருதுக்கள் வருஷங்கள், அரை வருஷங்கள் ரிஷிகள், நிகழும் சத்தியங்கள், உன்னைப் பெருக்கட்டும். உன் திவ்ய சோதியுடன் பிரகாசிக்கவும். புவியில் எல்லாத் திசைகளையும் ஒளியுடனாக்கவும்.

உ. அக்கினியே! நீ ஓங்கி அவனை உணர்வுடனாக்கவும். திவ்ய திட சௌபாக்கியத்துக்கு உதயமாகவும். அக்கினியே! உன்னை யணுகுபவன் இம்சையற்றாக வேண்டும். உனது பிராமணர்கள் பெருமை யுடனாக வேண்டும். அந்நியர்கள்—ஓங்கவேண்டாம்.

௩. அக்கினியே! 3பிராமணர்கள் உன்னை வரிக்கிறார்கள். அக்கினியே! எங்கள் சுப நிலயத்தில் எமக்கு மங்களகர மாகவும். நீ எதிரி ஜயித்து பகை யழித்து உனது

---

௧௭௬. கருத்து—நீங்கள் எழுச்சியாகி பெரியவ ராகுங்கள்

1 புவி யிலுள்ளவனே! 2 ஈசனே. 3 அறிஞர்கள்





7. அக்கினி

சொந்த வீட்டில் அழியாக் கவன முடனுகவும். ச. [1]அக்கினியே! நீ இங்கு செல்வத்தை யளிக்கவும், அறிஞர்கள் நித்திய செயலுடனுகு முன்னே ஜயிக்காமலாக வேண்டும். அக்கினியே! க்ஷத்திரம் உன்னுல் சுவாதீனமாக வேண்டும். உன்னை நாடுபவன் எதிர்ப்பன்னியில் ஓங்கட்டும். ரு. அக்கினியே! க்ஷத்திரத்தால் சுந்தர வாழ்க்கையைச் சேர்க்கவும். அக்கினியே! நண்படுேடு நட்பில் நாட்டமாகவும். நீ சஜாதர்களில் அதிநடுவாகவும். அக்கினியே! நீ [2]அரசர்களால் அழைக்கப்பட இங்கு ஒளிவீசவும்.

சு. அக்கினியே! நீ எதிர்ப்பு, தடுப்பு அறியாமை அளியாமையை ஜயிக்கவும், நீ எல்லாத் தடைகளையும் ஜயித்து வீரர்களுடன் செல்வத்தை எமக்களிக்கவும். எ. அக்கினியே! நீ அரசு புரிபவன். அனைத்து மறிபவன். எதிர்ப்பு சூன்னியன். ஜயிக்க முடியாதவன், நீ க்ஷத்திரந் தாங்கி இங்கு வெகு சோதி வீசவும். நீ மனிதர்களை அச்சத்தினின்று நீக்கி எல்லா திசைகளையு மாக்கிரமித்து இன்று மங்களத்துடன் செழுமைக்கு எம்மைக் காக்கவும்.

அ. [3]சவிதாவே, [4]பிரகஸ்பதியே! நீ அவனை எழுச்சியாக்கவும். கூர்மையை முழுவதும் அதி கூரியதாக்கவும். நீ அவனைப் பெரிய சௌபாக்கியத்துக்குச் செழுமையாக்கவும். எல்லா தேவர்களும் அவனில் இன்ப முடனுக்கட்டும்.

கூ. அக்கினியே! பிரகஸ்பதியே! நீ பரவாழ்க்கை யமனது பயத்தினின்று என்னை விடுதலை செய்வதுபோல் தேவ வைத்தியர்களான [5]அசுவினிகள், தங்கள் வன்மைகளால் என்னிடருந்து மரணத்தை நீக்குகிறார்கள்.

---

1 ஆயுதமே 2 பல முள்ளவர்களால். 3 அறிஞனே 4 அறிஞர் தலைவனே 5 சிகிச்சைகள்

கO. நாங்கள் இருளினின்று உயரிய சோதி கண்டு தேவர்களில் தேவனான திவ்ய சோதி [1]சூரியனுக்கு வந்தோம். சு. க. எ.

---

## அநுவாகம் கஅக.

### தலைமை யனல்

க. அவன் [2]சமித்துக்கள் உயர் செல்வனவாகும். அக்கினியின் சோதிகள் சுத்தமாகும், உயர் செல்வனவாகும். சுகதரிசன மகனது சோதிகள் மிக்கப் பிரகாசமானவை. உ. தேவன் [3]அசுரன், தன்மகன் விசுவவேதன், தேவர்களில் தேவனான-இவ்வக்கினி தேனாலும் நெய்யாலும் வழிகளை ஈரமாக்குகிறான்.

ங. அக்கினியே! நீ நராசம்சனாய் இன்பமளித்து எல்லா வரமுடன் நலஞ் செய்யும் தேவ சவிதாவாய், தேனுடன் யக்ஞத்தை யணுகுகிறாய். ச. அவன் பலம் பசையுடன் இங்கு வருகிறான். அறிஞர் வணக்கத்துடன் அவனை நாடுகிறார்கள். யக்ஞம் நிகழுங்கால் அக்கினிக்கு சாதனங்கள் செல்லுகின்றன.

ரு. அவன் அக்கினி மகிமைக்கு வணக்கமளிக்கட்டும். அவன் இன்பமளிப்பவர்களில் இணையில்லாதவன். அவன் தீரன் திரவியன், திடதிரவிய மளிப்பவன். சு. புவியால் அரசுபுரியும் புத்திமான்கள் புனித கதவுகளையும் பரவும் பெருகிய அக்கினியின் எல்லா விரதங்களையும் வுபதேசஞ் செய்கிறார்கள்.

எ. இரவும் பகலும் இம்மூல நிலயத்தில் திவ்யமான யுவதிகளைப்போல் நேர்மையான எமது யக்ஞத்

---

கஅO. கருத்து-அனலெழுச்சி மர்மம்.

1 சிறந்தாயுதத்துக்கு. 2 சோதியளிக்கும் சாதனங்கள் 3 பெரியவன்.

தைக் காக்கவேண்டும். அ. திவ்ய ஹோதாக்களே! எங்கள் அக்கினி சுவாலைக்கும் உயரிய யக்ஞத்துக்கும் கானஞ் செய்யுங்கள். எமக்கு நல்ல யக்ஞத்தைச் செய்யுங்கள்,

கூ. மகத்தாய்ப் போற்றப்படும் இடை[1] பாரதி,[2] ஸரஸ்வதியான[3] மூன்று தேவிகள் இச்சிதாகாசத்தில் உட்காரவேண்டும்.

கo. [4]துவஷ்டா, அதிசயம் அபரிமிதமான சுவீரர் களோடாகும் செல்வப் புஷ்டி ரேதசை எமது நடுவில் பொழியட்டும். கக. வனஸ்பதியே! தேவர்களில் உன்னையே நீ யளித்துக்கொண்டு நீ பொழியவும், அமைதியாக்குமக்கினி அவியைப் பக்குவமாக்கட்டும். கஉ. [5]அக்கினியே! [6]ஜாதவேதசனே! [7]இந்திரனுக்கு இந்த அவியத்தில் சுவாஹா எனச் சொல்லவும். எல்லாதேவர் களும் இந்த அவியத்தில் இன்பமுடனுகவேண்டும். கங. இரண்ணிய கருப்பன் முதன்மையாய்த் தோன்றி யுளான், தோன்றுமவன் பிராணியின் ஒரே தலைவனு யுளான். அவன் சோதியையும் சகத்தையுந் தாங்குகிறான். நாங்கள்—இப்படியுள்ள—எத்தேவனுக்கு அவியால் யளிப் போம்? கச. எவன் சுவாசித்து இமைகொட்டும் பிராணி யின் தலைவனாய் தன் பலத்தாலுளானோ, இருபாத நான்கு பாத பிராணிகளின் பதியாய் எவனுளானோ அந்த எவனை எத்தேவனுக்கு நாங்கள் அவியுடனளிப்போம்? கரு. பலமும் பிராணனுமளிக்கும் எவனது ஆக்ஞையில் தேவர் களும் இன்னும் எல்லோரும் காத்துளார்களோ எவன் சாயை மரணமும் அமுதமுமாகுமோ, அந்த எத்தேவ னுக்கு நாங்கள் அவியால் வணக்கமளிப்போம்? கசு. பலத்

---

1 துதி 2 அறிவு 3 ஞானம். 4 பலம் 5 மனிதனே
6 அறிஞனே 7 பலத்துக்கு

தால் இப்பனிமலைகள் எவனுடையதோ ரசத்தாலாகுஞ் சமுத்திரம் எவனது வெனச் சொல்லுகிறார்களோ இத் திசைகள் எவன் புஜங்களாகுமோ, அந்த எத்தேவனுக்கு நாங்கள் அவியால் வணக்கமளிப்போம்? கஎ. சனங்கள் எவன் துணையுடன், திணறும் மனத்தால் கண்டு, திரமாகிறார்களோ, சூரிய னுதயததில் எவனால் சனஞ் செல்லுகின்றதோ அந்த எத்தேவனுக்கு அவியுடன் நாங்கள் வணக்க மளிப்போம்? கஅ. எவனால் சோதியும் சகமும் திரமாகியுள்ளனவோ எவனால் சுவர்க்கமும் சீலமான உலகமும் ஸ்தாபிக்கப்பட்டுள்ளனவோ எவன் வானத்தின் திசையை யளக்கிறானோ அந்த எவனுக்கு நாங்கள் அவியால் வணக்க மளிப்போம்? கக. [1]அக்கினியைப் புலனுக்கி எல்லா பலத்தையுஞ் சுமந்து சிறப்பான சலங்கள் சென்றவுடன் தேவர்களின் ஒரே சுவாசம் தோன்றும். அந்த ஒரு சுவாசமான எத்தேவனுக்கு அவியால் நாங்கள் வணக்கமளிப் போம்? உ௦. எவன் சலங்கண்டு சத்தி சுமந்து அக்கினி புலனுக்குகிறானோ தேவர்களில் எவன் ஒரே தேவனா யுளானோ அந்த எத்தேவனுக்கு நாங்கள் அவியால் வணக்க மளிப்போம்? ச. க. அ.

---

## அநுவாகம் கஅஉ.

### சுடர் உதயம்

க. சங்கற்பம் பிரேரணையான அக்கினியை சுவாஹா! மனம், மேதை பிரேரணையான அக்கினியை சுவாஹா! சித்தம் விக்ஞானம் பிரேரணையான அக்கினியை சுவாஹா! வாக்கறிவு பிரேரணையான அக்கினியை சுவாஹா! பிரஜாபதி மநுவுக்கு சுவாஹா! வைசுவா நர

---

கஅக. கருத்து—அவியும் ஆதிபகவன் இயல்பும்.

1 தூல அனல்.

அக்கினிக்கு சுவாஹா! உ. முன் அழைத்துச் செல்லும் தேவரது நட்பை ஒவ்வொருவனும் நாடட்டும். செல்வத்துக்காக எவனும் சத்தியுடனாகிறான். அவன் புஷ்டி அடைய பிரகாசத்தை நாடட்டும், சுவாஹா! ந. நீ தளராதே, தீமைக்குள்ளாகாதே, நீ திடமாயும் தீரமாயுமிருக்கவும், [1]தாயே! உன் வீரத்தை தீரமாய்ப் புலனாக்கவும். நீ அக்கினியுடன் இச்செயலைச் செய்யவும். ச. [2] தேவி தரணியே! நீ க்ஷேமத்துக்காகத் திரமாயிருக்கவும். நீ சத்தியாலான [3]அசுர மாயையாகும். இந்த அவி [4]தேவர்களுக்கு இன்பமளிப்பதாகட்டும். நீ எமது இந்த [5]யக்ஞத்தில் இம்சை யன்னியில் வெளிவரவும். ரு. மித்திரனே! இப்பாண்டத்தைப் பக்குவமாக்கவும், அது பிளக்காமலாகவேண்டும்; சு. பிளக்காமலாக இதை உன்னைச் சுற்றிலும் வைக்கிறேன். எ. [6]வனம் புசித்து [7]நெய் பருகும் பழைய பிரிய ஹோதாவான பல மகன் அற்புதம் வாய்ந்தவன். அ. நீ வெகு தூரத்தினின்று இங்கு இத்தாழ்ந்தோர்களுக்கு வரவும். என் நிலையிலுள்ளவர்களுக்கு பிரிய முடனாகவும்.

கூ. சிகப்புக்கு குதிரைகளின் நீ, வெகு தூரத்தினின்று இங்கு வரவும். பலர் பிரியனை புரீஷ்யாக்கினியே நீ பகைவர்களை யொழிக்கவும். க0. அக்கினியே! எல்லா வழிகளையறியும் நீ, இத்தாயி னங்கத்தில் உட்காரவும். நீ சுடராலும் சூட்டாலும் அவளை எரிக்காதே, அவளகத்தில் சுத்த சோதியுடன் ஒளி வீசவும். கக. அக்கினியே! ஜாதவேதசனே! [8]பாண்டத்தின் உன் பீடத்திலுள்ளே பிரகாசமுடன் அவள் சோதியால் சேதனஞ்செய்து நீ

1 தாய் போல் தயாள குணமுள்ளவனே 2 திவ்ய புவியிலுள்ளவனே 3 பலிஷ்டனின் அதிசயம் 4 நல்ல மனிதர்களுக்கு 5 போரில் 6 இருள் 7 திருடம். 8 சங்கத்தின்.

சிவமாகவும். கஉ. அக்கினியே! எனக்கு நீ சிவமாகி சிவமாயுட்காரவும். நீ எல்லாத் திசைகளையுஞ் சிவமாய்ச் செய்து கொண்டு உனது சொந்த மூல ஸ்தானத்திலுட்காரவும். ச. க. கூ.

---

## அநுவாகம் க௲ங.

### அனல் தரி

க. அக்கினியே! நாங்கள் உன்னில் வைக்கும் எக்[1]கட்டைகளும் உனக்கு நெய் போலாகட்டும். அதி இளைஞனே! நீ அதை அங்கீகரிக்கவும். உ. எதைப் பூச்சி புசிக்கின்றதோ எதை எறும்பு ஏறுகின்றதோ அவையனைத்தும் உனக்கு நெய்யாகட்டும், அதி இளைஞனே! நீ அதை அங்கீகரிக்கவும். ங. அக்கினியே! இரவு தோறும் உணவைத் தவறாமல் லாயகுதிரைக்குச் சுமந்து செல்வது போல், உனது சகோதரர்களான நாங்கள் உணவுச் செல்வப்பெருக்கில் நித்தியம் சந்தோஷமாகி இம்சையன்னியில்—செல்ல—வேண்டும்.

ச. நாங்கள், ஜயன் சமர் சஹன், யக்ஞாருகன் பெருந் துதிபெற்று இரசத்தின்பமாகும், புவி நடு எழும் அனலான, அக்கினியை, பெருஞ் செல்வப் புஷ்டிக்கு அழைக்கிறோம்.

ரு. அக்கினியே! நான் உன் வாயில், ஒருமையுடன் எதிர்த்து அழிக்க வருங் கணங்கள் கள்வர் கொள்ளைக்காரர்களை வைக்கிறேன். சூ. பகவானே! நீ கள்வர்களைக் கொம்புகளால், பறிப்பவர்களைப் பற்களால் திருடர்களைத்

---

**க௲உ. கருத்து—அனைத்துமான அக்கினியை எழுச்சியாக்கவும்.**

**1எதிரிகளது தேகங்கள்.**

தாடைகளால் நன்கு குதப்பி மெல்லவும். எ. நான் உன் வாயினுள்ளே, மனிதர்கள் நடுவேயுள்ள திருடர்கள், வனத்திலுள்ள கள்வர், கொள்ளைக்காரர்கள், குறுங்காடு களில் எமக்குக் கடுமை செய்பவர்களை, வைக்கிறேன். அ. நீ எமக்கு வேறாயுள்ளவன், எம்மை வெறுப்பவன். எம்மை இகழ்ந்து இம்சிக்க விரும்பும் ஒவ்வொருவனையும் அணு யணுவா யழிக்கவும்.

௯. எனது பிரமத்துவம் கூர்மையா யிருக்கட்டும். என் வீரமும் பலமும் கூர்மையா யிருக்கட்டும். எவன் புரோகிதனாய் நான் உளேனோ அவனது ஜயிக்கும் க்ஷத்தி ரம் கூர்மையா யிருக்கட்டும்.

௧0. நான் அவர்கள் புஜம் பலம் பிரகாசத்தை உயர மாக்கி யுளேன். நான் பிரமத்தால் பகைவர்களைப் பாழாக்குகிறேன், நான் எனது சனங்களைத் தாங்கு கிறேன். ௧௧. அவன் பொன் போல் ஒளி வீசி, அமுத வாழ்க்கையுடன் சிரேயசுக்குப் பிரகாசமாக விரியுஞ் சோதியாயுளான். நல்ல ரேதசுடனுகுஞ் சோதி அவனைப் புலனுக்குங்கால் அக்கினி தன் பலத்துடன் அமுத மானுன். ௧௨. கவி விசுவரூபங்களைப் புலனுக்குகிறுன். அவன் இரு நான்கு கால் பிராணிகளுக்கு மங்களத்தை யுண்டு பண்ணியுளான். இதமான சவிதா உயரிய வானத் தைப் பிரகாசித்துளான். அவன் உஷோதயத்துக் கப் பால் ஒளி வீசுகிறுன்.

௧௩. பல வடிவமாகி ஒரே மனமுடனுகும் இரவு பகல்கள் ஒன்று சேர்ந்து ஒரே குழந்தையை ஊட்டுகிறுர் கள். சுந்தரன் சோதி சகத்தின் நடுவே பிரகாசிக்கிறுன். செல்வமளிக்கும் தேவர்கள் அக்கினியைத் தாங்குகிறுர் கள்.

கச. [1]நீ நல்ல சிறகுகளுடனுகும் பறவை. உன் தலை [2]திருவிருத ஸ்தோமன். உன் கண் [3]காயத்திரி. உன் சுவாசம் [4]ஸ்தோமன். உன் தேகம் [5]வாமதேவ்ய சாமனுகும், [6]பிரஹத்தும் இரதந்தரமும் உனது சிறகுகள். உன் [7]வால் யக்ஞா யக்ஞமாகும். உன் [8]அங்கங்கள் சந்தங்கள், உன் [9]குளம்புகள் யக்ஞ நிலயங்கள், [10]யஜுர் மந்திரங்கள் உனது நாமமாகும்.

கரு. நீ நல்ல சிறகுகளுள்ள பறவையாகும், நீ சோதி செல்லவும், சுவர்க்கம் பறக்கவும். ச. க. கO.

---

## அநுவாகம் கஅச.

### பிரார்த்தனை

க. அக்கினியே! நீ நன்கு சூழும் நல்ல யக்ஞம் தேவர்களுக்குச் செல்லுகின்றது.

உ. சோமனே! உனது தாராளனுக்காகும் அதிசயத் துணைகளுடன் எமது இரட்சகனுகவும்.

ஙு. அக்கினி சோதியின் தலைவனுகும். ச. நீ யக்ஞ முதல்வனுயுளாய்.

ரு. சோமனே! நீ எங்களை எங்குங் காக்கவும். சா. உனது இப்புவியின் பெருமைகளுடன் எமது அவிகளை யங்கீகரிக்கவும்.

எ. சவிதா தேவன், எங்கள் அறிவுகளைத் தூண்ட, நாங்கள் அவனது திவ்ய சோதியை தியானஞ் செய்கி

---

க அஙு. கருத்து—அனல் சொரூபத்தை யறிந்து அதைப் பற்றவும்.

1 அக்கினியே 2 முவ்வுலகம் 3 கல்வி 4 சக்தி 5 சுந்தரம் 6 மொழி, மனம் 7 நாக்கு 8 இன்பங்கள் 9 களங்கள். 10 செயல்கள்

றோம். அ. சவித்ாவே! மனித சுபாவ கர்வம்போல் தீன தரிசமுடன் சித்த சூன்னியத்தோடு நாங்கள் தேவசன விரோதம் யேதேனுஞ் செய்திருந்தால், தேவ மனிதர் களின் நடுவே நாங்கள் அத் தீமையினின்று நீங்க, எங் களைத் தூண்டவும்.

௯. சத்தியம் நற்சத்தியங்களின் பிரேரகனான சரஸ் வதி, யக்ஞத்தை ஸ்தாபனஞ் செய்துளாள். ௧0. வீர பத்தினியாய் அதிசய ஆயுசுடன் சரஸ்வதி எமது அறி வைப் பிரேரிக்கவேண்டும். அவள் காயகனுக்கு. இசை கலந்து இணையில்லாக் காப்பு இம்சையாகாதக் களிப்பை, யளிக்க வேண்டும்.

௧௧. பூஷணன் பசுக்களை எமக்காக யநுசரிக்க வேண்டும், அவன் எங்கள் அசுவங்களைக் காக்கவேண்டும். அவன் எமக்குப் போரை ஜயிக்கவேண்டும். ௧௨. சுத்த நிறம் உனது ஒரு பாகமாகும், வேறொன்று போற்றுவதற் காகும், நீ சோதிபோலும் பல நிற இரவு பகல் போலு முளாய். பலவானே! நீ எல்லா மாயைகளையும் ஓங்கச் செய்கிறாய், பூஷணனே! உன் அளிப்பு இங்கு மங்கள மளிப்பதாகட்டும்.

௧௩. அவர்கள் தங்கள் பலத்தாலேயே பெரியவர் களாகிறார்கள், அவர்கள் சோதி யேறுகிறார்கள், விரியும் சகத்தைச் செய்கிறார்கள், விஷ்ணு இன்பகாரண வன் மையை உதவி புரியும்பொழுது அவர்கள் பிரியமான தருப்பையில், பறவைகளைப் போல் அமர்கிறார்கள். ௧௪. திடகாயகனான திறம் நிகழும் மருத்துக்களுக்கு அதிசயத் துதியைச் சுமருங்கள்; அக்கினியே! பலத்தால் பலந் தாங்கி இன்பமளிப்பவர்களுக்கு புவி யலறும்.

௧௫. விசுவே தேவர்கள் சத்தியத்தை விருத்தி செய்கிறார்கள். ௧௬. விசுவே தேவர்களே! செவி சாயுங்

கள். கஎ. இன்று சோதியும் சகமும் ஒளிபரிசிக்கும் சித்தமான இந்த யக்ஞத்தை தேவர்கள் நடுவே ஸ்தாபிக்க வேண்டும். கஅ. புது கானங்களுடன் பழமையாய்ப் புலனுகும் பெற்ருேர்களை ருதநிலயத்தில் கொண்டு வாருங்கள். சோதியே, சகமே! திவ்ய சனத்துடன் இங்கு வாருங்கள். உங்கள் இரட்சை மிகப் பெரியதாகும். கக. அமுதனை எழுச்சியாக்கி அக்கினியை ஸ்தோமத்தால் எழுப்புங்கள்; அவன் நமது அவிகளை தேவர்களில் வைக்கட்டும். உ0. ஹிதன், அமுதன், ஆர்வ தூதனுன அக்கினி, அவிகளைச் சுமந்து அறிவால் எங்களைச் சேர்கிருன். உக. அவர்கள் மங்கள மளிப்பவர்களாகவேண்டும். உஉ. ஒவ்வொரு சமருக்கும் உதவி புரியுங்கள். ச. க. கக.

---

## அநுவாகம் கஅரு.

### அனல் ஸ்தாபனம்

நீ விஷ்ணு பாதமாகும், பகை ஜயித்து நீ காயத்திரிச் சந்தமேறி புவி நெடுகப் போகவும். எமது பகைவன் பக்த சூன்னியனுவான். நீ விஷ்ணு பாதமாகும். நீ தீச் சொல் லழித்து திருஷ்டுபுச் சந்தமேறி வானமெல்லாம் பாயவும், எமது பகைவன் பக்த சூன்னியனுவான். நீ சத்துரு சிதைத்து ஜகதீச் சந்தமேறவும், சோதியெல்லாம் உன் சுவாதீனமாக்கவும். எமது எதிரி பக்த சூன்னியனுவான். நீ விஷ்ணு பாதமாகும். எதிரி ஜயிப்பவன், அநுஷ்புச் சந்தமேறி திசையனைத்து மநுசரிக்கவும். எமது துவேஷி பக்த சூன்னியனுவான். உ. அக்கினி ஒஷதி புசித்து புவி பரிசமாகி மின் முழக்கம் போல் கர்ச்

---

கஅச. கருத்து—அக்கினி போற்றி மங்கள மடையுங்கள்.

சனை செய்துளான். அவன் சனனத்திலேயே சுடராய் சோதி வீசுகின்றான். அவன் வானம் புவி நடுவே ஒளியுடன் பிரகாசிக்கிறான்.

ந. அக்கினியே! திரும்புபவனே! நீ அறிவு ஆயுசு பலம் பிரசை பொருள் இலாபத்துடன் திரும்பவும். ச. அக்கினியே! அங்கிரசனே! உனது புனராகமனங்கள் நூறாகட்டும், உனது சலனங்களு மாயிரமாகட்டும். நீ போனதைப் போஷணையுடன் மேலும் இன்னுங் கொண்டு வரவும். எமக்குச் செல்வத்தை மறுபடியுங் கொண்டு வரவும். ரு. அக்கினியே! நீ உரத்துடன் திரும்பவும், நீ உணவு ஆயுசோடு திரும்பவும். மேலும் நீ எங்களை எல்லாப் பக்கங்களிலுங் காக்கவும். சு. அக்கினியே! நீ செல்வத்துடன் திரும்பவும், எங்கும் எல்லாம் ஜயித்து நீ தாரையுடன் திடமாகவும். எ. வருணனே! நீ மேல் கீழ் நடுவான பந்தத்தை எம்மிடமிருந்து நழுவச்செய்யவும். ஆதித்தியனே! நாங்கள் இனி அதிதிமுன் உன் விரதத்தில் குற்றமற்றாக வேண்டும். அ. நான் உன்னை இழுத்துளேன், நீ உள்ளே வந்துளாய். நீ அமைதி அழுத்தமாயிருக்கவும், எல்லாப் பிரசையும் உன்னை இச்சிக்கட்டும்; அவனில் இராஷ்டிரத்தை ஸ்தாபிக்கவும்.

கூ. அவன் உஷைகளின் முன்னணியில் உயரமாய் ஓங்கி உதயமாயுளான், அவன் இருட்டினின்று கிளம்பி பிரகாசமுடன் வந்துளான். சுந்தராங்கமுடன் சோதி வீச்சுடனுகு மக்கினி சனனத்திலேயே ஒவ்வொரு ஸ்தானத்தையும் பூரணஞ் செய்துளான்.

கo. எல்லா வழிகளையு மறியு மக்கினியே! நீ இத்தாயி னங்கத்தி லுட்காரவும். நீ சுடராலுஞ் சூட்டாலும் அவளைச் சாம்பலாக்காதே, நீ அவளகத்தில் சுத்தச் சோதியுடன் ஒளி வீசவும். கக. அக்கினியே! ஜாதவேதசனே!

பாண்டத்தின் உன் பீடத்தினுள்ளே, அவள் சோதியால் நீ சூடுசெய்து நீ சிவமாகவும். ௧௨. அக்கினியே! நீ எனக்குச் சிவமாகி சிவமாயுட்காரவும். நீ எல்லாத் திசைகளையுஞ் சிவமாய்ச் செய்துகொண்டு உனது சொந்த மூலஸ்தானத்திலுட்காரவும். ௧௩. அவன் புனிதத்திலிருக்கும் ஹம்சன், வானத்திலமரும் வசுவாகும். யக்ஞபீடத்திலுள்ள ஹோதா. வீட்டிலமரும் அதிதியாகும். மனிதர்களில் வசிப்பவன், மேன்மையிலிருப்பவனாகும். சத்தியத்தில் சாய்பவன். சோதியிலமைபவனாகும். சலங்களின் சத்தியால் சனிப்பவன். கோக்களின் செல்வத்தில் குணமாகும் அவன் மலையின் மலர். மேன்மையான ருதனாகும். ௪. ௨. ௧.

---

# அநுவாகம் ௧௪௬.

## அனல் மகிமை

௧. அக்கினி சோதியினின்று முதன்மையாய்த் தோன்றியுளான், அவன் எங்களிடம் அடுத்தபடி ஜாதவேதசனும் மூன்றுவது சலங்களில் மனிதனும் தோன்றியுளான். சுத்தன், சாசுவதனை எழுச்சியாக்குங்கால் அவன்-சீலத்தையும்-கானஞ்செய்கிறான். ௨. அக்கினியே! உனது முவ்வகை முந்நிலயங்களை நாங்களறிவோம். நாங்கள் பல நிலயங்களில் ஸ்தாபிதமாகும் உனது ஸ்தானத்தை யறிவோம். நாங்கள் பரம இரகசியத்திலுள்ள உனது பெரும் பெயரையு மறிவோம். நாங்கள் நீ புலனாகும் ஊற்றையு மறிவோம். ௩. அக்கினியே! வீரன் உன்னைச் சலம் சமுத்திரத்தில் எழுச்சியாக்குகிறான், மானிடறிஞன் சோதியின் நடுவில் உன்னை உதயமாக்குகிறான். பெரியார்கள் மூன்றுவ துலகில் ஸ்தாபிமாகு

---

௧௪௫. கருத்து—அக்கினி ஹம்சனுமாகும்.

முன்னை ருதத்தின் மூல ஸ்தானத்தில் பலமுடனுக்குகிறார்கள். ௪. அக்கினி ஓஷதி புசித்து புவி பரிசமாகி மின் முழக்கம் போல் கர்ச்சனை செய்துளான். அவன் சனனத்திலேயே சுடராய் சோதி வீசுகிறான். அவன் வானம் புவி நடுவே ஒளியுடன் பிரகாசிக்கிறான். ௫. தீரன் தூதன் ஆதுரன் தூய்மை செய்யுமமுதமான அக்கினி மனிதர்களில் ஸ்தாபிக்கப் பட்டுளான். அவன் சுமந்து சிவப்புச் சுவாலையை எறிகிறான். அவன் சுத்த ஒளியுடன் சோதியை யடைகிறான்.

௬. புவன கருப்பமும் விசுவத் துவஜமுமான அவன், சனனத்திலேயே சோதி சகத்தைப் பூரண மாக்கி யுளான். ஐந்து சனங்கள் அக்கினிக்கு யக்ஞஞ் செய்யும்பொழுது அவன் சலனத்தில் நிலையான மலையையுஞ் செதிக்கிறான்.

௭. ஸ்ரீ மூலனும் செல்வந் தாங்கி, சோமன் காக்கும் சித்தங்களின் தானசீலனையும், சத்தி சோதியின் மகனுமான மன்னன், உஷைகள் முன் எழுச்சியாக்கப் பட்டு சலங்களுக்குள்ளே சோதி மயமாயுளான். ௮. தேவாக்கினியே! அதிசய ஒளியுள்ளவனே! உனக்கு முதன்மையாய் நெய் மிகும் உணவு செய்பவனை மேன்மைக்குச் சுமந்து செல்லவும். இளைஞனே! அவனை தேவர்களால் மளிக்கப்படும் திவ்யத்துக்கு அழைத்துச் செல்லவும். ௯. அக்கினியே! அவனைச் சிறப்புக்களில் சேவிக்கவும். துதிப்பதற்கான ஒவ்வொரு யோக்கியப் பொருளிலினும் அவனை சேவிக்கவும். அவன் சூரியன் அக்கினிக்குப் பிரியமாவான். சனித்ததும் சனிக்கப்போவதோடும் அவன் ஜயமுடனுவான். ௧௦. அக்கினியே! யஜமானர்கள் ஒளியுடன் உன்னை யநுசரித்து விரும்பும் வெகு பல செல்வங்களை தரிக்கிறார்கள். அவர்கள் உன்னுடன் செல்வம் விரும்பி பசுமிகும் கோஸ்தானத்தைப்

புலனுக்கி யுளார்கள். கக. அவன் பொன்போல் ஒளிவீசி அமுத வாழ்க்கையுடன் சிரேயசுக்குப் பிரகாசமாக விரியுஞ் சோதியாயுளான். நல்ல இரேதசுடனுகுஞ் சோதி அவனைப் புலனுக்குங்கால் அக்கினி தன் பலத்துடன் அமுதனுவான். ச. உ. உ.

---

## அநுவாகம் கஅள

### அனல் சுமக்கவும்

க. அன்னபதியே! புன்மை பிரிந்து பலமளிப்ப தான உணவை எமக்களிக்கவும். தான மளிப்பவனைத் திருப்தியாக்கவும், எமது இரு நான்கு கால் பிராணிகளில் பலமளிக்கவும். உ. அக்கினியே! எல்லா தேவர்களும் உன்னைச் சித்தங்களுடன் உயரச் சுமக்க வேண்டும். ஒளி மிகுந்து சுகதரிசன முடன் எமக்கு மங்களமய மளிப்பவனுகவும். ந. அக்கினியே! சோதிமிகும் சிவமான சுவாலைகளுடன் இங்கு வரவும்; பெரு மொளியுடன் பிரகாசமாகி, உனது காயத்தால் எமது பிரசையை இம்சிக்காதே! ச. சமித்துக்களால் அக்கினியை சேவியுங்கள், நெய்யால் அதிதியை நினைவுடனுக்குங்கள்; அவனில் அவியை யளியுங்கள். ரு. சூரியனைப்போல் பரஞ்சோதியாய் பிரகாசிக்கும் இப்பராதாக்கினி பெரிதும் புகழ்பெற்றவனுகும். திவ்ய அதிதியான போரில் புருவை ஜயிக்குமவன் எமக்குநுகூலமாய் பிரகாசமாயுளான்.

சூ. தேவியான சலங்களே! இப் பஸ்மங்களைச் சுவீகரியுங்கள். அவற்றைச் சுக நிலயம் சுகந்த ஸ்தானத்தில் ஸ்தாபியுங்கள். தம்பதிகள் அவனுக்கு நமஸ்கரிக்கவேண்டும். மகனைத் தாய்போல் நீங்கள் அவனை ஆதரியுங்கள்.

---

கஅசு. கருத்து—அனல் பற்றி பலமடையவும்.

எ. அக்கினியே! உனது ஸ்தானம் சலங்களிலாகும், நீ ஒஷதிகளில் சேர்கிறாய், கருப்பத்திலிருக்கும் நீ, மறுபடியுங் குணமாகிறாய். அ. நீ ஒஷதிகளின் மரங்களின் கருப்பமாகும். நீ எல்லாப் பொருள்களின் கருப்பமாகும், அக்கினியே ! நீ சலங்களின் கருப்பமாகும். கூ. அக்கினியே ! சோதி மிகும் நீ,புவியில் பஸ்மங்களால் சலத்தையும் உனது சனன ஸ்தானத்தையும் திருப்தி செய்து உன் தாய் மார்களோடு ஒருமையாகி மறுபடியும் உனது ஸ்தானத்தைப் பற்றியுளாய். க௦. அக்கினியே! நீ சலம் சகம் உனது ஸ்தானத்துக்குத் திரும்பி, அன்னை பினங்கத்தில் போல் அவளகத்தில் சைவமாய்ச் சாய்ந்துளாய். கக. அக்கினியே ! உரத்துடன் திரும்பவும். நீ உணவு ஆயுசுடன் திரும்பவும். நீ எம்மை எல்லாப் பக்கங்களிலும் பார்க்கவும். க௨. அக்கினியே! நீ செல்வத்துடன் திரும்பவும்: எங்கும் எல்லாம் ஜயித்து நீ தாரையுடன் திடமாக்கவும்.

க௩. வசுருத்திரர் ஆதித்தியர்கள் உன்னை மேலும் எழுச்சியாக்க வேண்டும். செல்வங் கொண்டு வருபவனே! பிராமணர்கள் உன்னை யக்ஞங்களால் மறுபடியும் உதயமாக்குகிறார்கள். எங்கள் தேகங்களை நெய்யால் நீ விருத்தியாக்கவும், யஜமானனது விருப்பங்கள் நிறைவேற வேண்டும். க௪. இளைஞனே, பலமுள்ளவனே ! தாராளமாய் அளிப்பவனது இவ்வழைப்பைச் செவி கொடுக்கவும், ஒருவன் துதிக்கிறான், வேறொருவன் துவேஷிக்கிறான். அக்கினியே ! துதிப்பவனாய் உனது தேகத்தை நான் துதிக்கிறேன். க௫. நீ எமக்கு உதார மன்னனாகவும், செல்வபதி, செல்வ மளிப்பவனாகவும். எங்களிடமிருந்து சத்துருக்களைத் தடுக்கவும். ச. ௨. ௩.

---

க௭எ. கருத்து — அக்கினி உதவியால் பகைவர்களையொழிக்கவும்.

## அநுவாகம் ௧௮௮.

### கார்ஹபத்தியம்

௧. இங்கு பழையவர் புதியவர்களான நீங்கள் இனிப் புறப்படுங்கள், இனிப் போய்விடுங்கள். யமன் புவியின் இவ்வாதரவை யளித்துளான். பிதுருக்கள் அவனுக்கு இவ்வுலகத்தைச் செய்துளார்கள். ௨. நீ அக்கினி ப்ஸ்மமாகும், நீ அக்கினி புரீஷமாகும். ௩. நீ பூரணகல்வியாகும், காமப்பூர்த்தி! உனது காமப்பூர்த்தி என்னிலாகட்டும். ௪. உங்கள் பிரிய உடல்கள் ஒன்றாகட்டும், உங்கள் பிரிய இருதயங்கள் ஒருமையுடனாகட்டும், உங்கள் ஆத்மா ஒன்று சேரட்டும், என் தேகம் ஒன்று தோயட்டும். ௫. இந்திரன் அவாவுடன் சோமரசத்தை எவன் உதரத்தில் வைத்துளானோ அவனே இவ்வக்கினியாகும்; ஜாதவேதசனே! துரிதமான குதிரைபோல் ஆயிரம்போரை ஜயிக்க நீ போற்றப்படுகிறாய். ௬. அக்கினியே! நீ சோதியலைக்குச் செல்லுகிறாய், நீ சித்தந் தூண்டும் தேவர்களையழைக்கிறாய். சூரிய சோதிக் குயரமாயும் அதரமாயுமுள்ள சலங்கள் உன்னை நாடுகின்றன. ௭. அறிஞனே! அக்கினியே! நீ செடி, சலம் சோதி சகத்திலுள்ள உனது எந்த ஒளியால் விரியும் வானத்தை வியாபகஞ் செய்துளாயோ அவ்வலையான ஆளறியும் சுடர், சோபையுள்ளதாகும். ௮. புரீஷ்யாக்கினிகள் அலைகளின், அறிவுகளுடன், சேர்ந்து ஆஹுதமாகும் செல்வம் சுக கரமான உணவுகளை ஏற்றுக்கொள்ள வேண்டும். ௯. அக்கினியே! யக்ஞஞ் செய்பவனுக்கு அதிசய அழியாமையுடனான புவிச் செல்வத்தை யுணவாக யளிக்கவும். ஆயுசு மிகுந்து வம்ச முடனாகும் மகன் எமக்காகட்டும். அக்கினியே! இது எமக்கு உனது பிரிய மதியாகவேண்டும். ௧௦. நீ

சனித்து சோதியாகும் இது உனது உரிய சன்மஸ்தானம், அக்கினியே! நீ இதை அறிந்து ஏறவும், நீ எமது செல்வத்தைச் செழுமையாக்கவும். ௧௧. நீ செல்வங் குவிப்பவன். நீ அத்தேவதையுடன் அங்கிரசனைப்போல் நிலையாயிருக்கவும். ௧௨. எங்குங் குவிப்பவன் நீ, அத் தேவதையுடன் அங்கிரசனைப்போல் நிலையா யிருக்கவும். ௧௩. சக்கத்தைப் பூரணமாக்கவும்; சூன்னியத்தை நிரப்பவும், நீ சிவ கரமாய் கீழே யுட்காரவும், அக்கினி, இந்திரன் பிரகஸ்பதி உன்னை இந்த சனன ஸ்தானத்தில் ஸ்தாபித்துளார்கள். தேவ சன்ம ஸ்தானமான சோதியின் மூன்று நிலயங்களில் பொழியும் பாலோடாகும் சுந்தரப் பசுக்களான பிரஜைகள், சோமனைப் பக்குவ மாக்குகிறார்கள். ச. உ. ச.

---

## அநுவாகம் ௧௮௬.

### பக்குவ நிலம்

௧. நீங்கள் ஒன்று சேர்ந்து ஒரே சங்கற்பமுடனாகி பரஸ்பரம் பிரிய முடனாகுங்கள், சிநேகச் சித்தமுடன் சோதி மயமாகி உணவு உரத்தில் ஒருமை யாகுங்கள். நான் உங்கள் மனம் விரதம் இருதயங்களைச்சேர்த்துளேன்.

உ. புரீஷ்யா க்கினியே! எமக் கதிபதியாகவும், யஜமானனுக்கு உணவு பலத்தை யளிக்கவும். ௩. புரீஷ்யாக்கினியே! நீ புஷ்டி, பொருள் பூர்ணன். நீ எல்லாத் திசைகளையுஞ் சிவகரமாய்ச் செய்து உனது சொந்த மூல ஸ்தானத்திலேயே சாய்ந்துளாய்.

ச. நீங்கள் கபடங் கழிந்து வாசமொன்று கருத்து ஏகத்துடன் எமக்காகவேண்டும். ஜாதவேதசர்களே!

---

௧௮௮. கருத்து—நீங்கள் ஒருமையுடனாகுங்கள்.

நீங்கள் யக்ஞம் யக்ஞபதியை இம்சிக்காதீர்கள். இருவர் களான நீங்கள், இன்று எமக்கு மங்களகரமாகுங் கள்.

ரு. புவியான உகை புரீஷ்யாக்கினியை தனது மூலாங்கத்தில் மகனைத் தாய்போல் தரித்துளாள். விசுவ கருமாவான பிரஜாபதி, ருது விசுவே தேவர்களுடன் சேர்ந்து, அதை விடுதலை யாக்கட்டும். சு. இவ்வானத் துக் கப்பால் உதயமாகும் சுக்கிர்ச்சோதி எங்களைச் சத் துரு கடந்து சுமந்து செல்லவேண்டும். அக்கினி வைசுவா நரனே! சுவாஹா! எ. விசுவரூபமான நிர்ருதியே! உனக்கு வணக்கம். இரும்பால் செய்யப்பட்டுள்ள இப் பந்தத்தைப் பிரியுங்கள். நீ யமன் யமியுடன் இணைந்து இவ்வுயரிய உலக மேறவும். அ. தேவியான நிர்ருதி உனது கழுத்தில் ஒருவரும் நீக்காமலிருக்கக் கட்டியுள்ள பந்தத்தை நான் ஆயுசின் நடுவினின்று போல் பிரிக்கிறேன். பிறகு நீங்கி சேதனமாகி நீ உணவைப் புசிக்கவும். கூ. நான் இப்பந்தங்களின் பிரிவுக்காக உன் பயங்கர வாயில் ஆஹுதி செய்கிறேன். மனிதாகள் புவியாக உன்னை அறிகிறார்கள். நான் உன்னை எங்கும் நிர்ருதியாக யறி கிறேன். க0. பொழியாதவன் யக்ஞஞ் செய்யாதவனைப் தேடவும், நீ சோரன் கள்வனின் வழியை யநுசரிப் பவனுவாய். எமக்கு விரோதமானவர்களை யழிக்க நாட வும், அது உனது வழியாகும். தேவியே! நிர்ருதியே! உனக்கு நமஸ்காரம். கக. மகனைத் தந்தைபோல் தேவி யான நிர்ருதியை வந்தனஞ் செய்து என் சொற்களால் அவளை ஆயாச மாக்குகிறேன். சனனமாகும் சகலத்தையு மறியும் சீலமான அவள், ஒவ்வொரு சிறப்பையுங் காண் கிறாள். கஉ. செல்வக் கிரகளும் குவிப்பவளுமான அவள், சத்தியால் விசுவரூபத்தை நன்கு பார்க்கிறாள்.

அவள் இந்திரன், சத்திய தர்ம தேவ சவிதாவைப்போல் வழிகளின் நடுவே நிற்கிருள்.

கரு. கயிறுகளை உறுதியாக்குங்கள், கலசங்களைக்கட்டுங்கள்; நாம் அழியாமலும் ஒழியாமலுமுள்ள சலம் நிறையும் கிணற்றை இறைப்போம். கச. நான் மணிக் கயிறுகளால் கட்டப்பட்டுள்ள கலசங்களால் சதாகாலம் மிகுந்து அதி சல மளிக்கும் கிணற்றின் நீரை வடிக்கிறேன். கரு. கவிகள் கலப்பைகளைச் சேர்க்கிருர்கள், அவர்கள் நுகத்தடிகளை தனித்தனியாய் நெருக்குகிருர்கள், தீரர்கள் நல்ல மனத்துடன் தேவர்களில் தோய்கிருர்கள். கசு. கலப்பைகளைப் பூட்டுங்கள், நுகத்தடிகளை தனித்தனி யாய் நெருக்குங்கள். இங்கு பக்குவமான பள்ளத்தில் பீஜத்தை விதையுங்கள். எங்கள் சொல்லால் செழிமை யுடன் எமக்குச் சாந்நித்தியமாகவேண்டும். அரிவாளால் பக்குவ தானியம் கீழாகவேண்டும். கஎ. மங்களகரமாய் சுந்தரப் பிடியுடன் கூறிய தாளுடனுகுங் கலப்பையானது, பசு, ஆடு, புஷ்டி பெருகும் யுவதி, துரிதஞ் செல்லும் இரத வாகனத்தை உழுகின்றது. கஅ. எமது கலப்பை கள் நிலத்தைச் செழிப்புடன் உழவேண்டும், உழுபவர்கள் சுகத்தோடு ஏர்க்கால்களைச் சுற்றிச் செல்லவேண்டும். பர்ஜன்னியன், தேன், பாலுடன் அபிவிருத்தியை யளிக்க வேண்டும். சுனசிரர்களே! எங்களில் செழுமை யளியுங் கள். கக. காமங் கறப்பவனே! நீ அக்கினி, வருணன் பூஷணன், இந்திரன் மித்திரன், பிரஜை செடி கொடி களுக்கு காமங்களைக் கறக்கவும். உ0. பலம் மிகுந்து பாலுடன் பெருகி மருத்து, விசுவே தேவர்களால், அங்கீ காரமாகி நெய் தேனேடு நனையும், உழுத நிலமான பள் ளமே! சத்தோடு எமக்குத் திரும்பவும். ச. உ. ௫.

கஅக. கருத்து — உழுது உயரிய செல்வத்தை அடையவும்.

# அநுவாகம் கக௰.

## வனஸ்பதிகள்

க. நான் தேவர்களின் மூன்று யுகங்கள் முன்னர் தோன்றிய பிங்களநிற ஓஷதிகளின் நூறும் ஏழுமான நிலயங்களை புகழ்கிறேன். உ. தாயே! உங்கள் கிரகங்கள் நூறாகும், உங்கள் கிளைகளு மாயிரமாகும்; ஆதலால் நூறு சக்திகளுடனுன நீங்கள் அவனை எனக்கு அசுகமன்னியில் செய்யுங்கள். ந. மலர் அரும்பு பழம் பழமன்னியிலுள்ள ஓஷதிகள் ஜயமாகுங் குதிரைகளைப் போல் உதவிக்கு உரமானவைகள். ச. தேவிகளே! தாய்மார்களே! நான் உங்களை ஓஷதிகள் எனச் சொல்லுகிறேன். தீமை யழிக்கும் நீங்கள் தாழ்மை நீக்குங்கள். ரு. அசுவத்தம் உங்கள் ஸ்தானமாகும், பர்ணத்தில் உங்கள் வாசம் செய்யப்பட்டுள்ளது. நீங்கள் இப்புருஷனை அடைந்தால் புவிகளை ஜயிப்பவர் களாவீர்கள். சு. நான் என் கைக்கட்டில் இந்த ஓஷதிகளைப் பற்றுகிறேன். அவை சீவனைப் பற்றுவதற்கு முன், நோயின் மூலம் நாசமாகின்றது.

எ. சபையில் அரசர்களைப் போல், ஒன்று சேரும் ஓஷதிகளை அறியும் வைத்தியன் விப்பிரன் எனப்படுவுன். அவன் அரக்கரழித்து நோய் நீக்குபவனுகும். அ. தணிப்பவள் என்பது உங்கள் தாய் நாமமாகும், நீங்கள் துணை புரிபவர்கள், நீங்கள் பாயும் நதிகளாகும், நீங்கள் நல சூன்னியத்தை யெல்லாம் நீக்குங்கள். கூ. ஒருவன் மற்றொருவனை யாதரிக்கட்டும், ஒருவன் மற்றொருவனுக்குத் துணை புரியட்டும். ஒன்று சேரும் சகல ஓஷதிகளான நீங்கள் எனது இச்சொல்லைச் செழுமையாக்குங்கள். க௰. புருஷனே! செழுந்தரைப் பசுக்களைப் போல் செல்வம் பற்ற சாதகமாகும் செடிகொடி சத்து உன் ஆத்மாவுக்கு

எழுச்சியாயுளது. கக. ஓஷதிகள், திருடன் கோச் சாலையைப்போல், எல்லாத் தடை கடந்து வியாபகமாகி தேகத்தின் ஒவ்வொரு தீமையையும் உதறித் தள்ளியுள்ளன. கஉ. உனது தேகஞ் சேர்ந்து அங்கமெலல்லா மணுகு, மவை, கோர நீதிமானைப்போல் உன்நோயை நீக்க வேண்டும்.

க௩. நோயே! பித்தம் சிலேஷ்மம் வேகவாதம் பெருங்காற்றோடு நீ, பறந்துவிடவும், நீ பாழாகவும். கச. நான் திடம் துரிதம் மிகும் சக்தி, சோமன் நிறையும் செடி கொடிகளை யெல்லாம் அவன் க்ஷேமத்துக்காகக் கண்டுளேன். கரு. மலர் மலரின்மை, பழம் பழ மற்றவையான செடி கொடிகள், பிரகஸ்பதியா லுதயமாகி எம்மைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும். கசு. புவி சேர்ந்து சோமனை யரசனுயுள்ள செடி கொடிகளின் உத்தமனை நீ எம்மைச் சிராயுசுக்குத் தூண்டவும். கஎ. நாங்கள் எந்த சீவனை அடைகிறோமோ அவன் வியாதிக்குள்ளாக மாட்டான் என சோதியினின்று சாயும் செடி கொடிகள் சொல்லுகின்றன. கஅ. இப்பொழுது செவியுறுபவர்களும் வெகு தூரஞ் சென்றுள்ளவர்களுமான நீங்கள் இங்கு ஒருமையுடன் தோன்றி இவனுக்குச் சிகிச்சை யளியுங்கள். கக. உங்களைக் கெல்லுபவன் இம்சை யாகாமலிருக்கவேண்டும். எவனுக்காக நாங்கள் உங்களை எடுக்கிறோமோ அவனும் நோயற்றுகவேண்டும். எமது இருநான்கு கால் பிராணிகள் நோயினின்று நீங்கவேண்டும். உ௦. அரசனே! பிராமணர்கள் எங்களை எவனுக்குப் பக்குவ மாக்குகிறார்களோ அவனை நாங்கள் க்ஷேமத்துக்குக் கொண்டுவருகிறோம் என மன்னனை சோமனோடு செடி கொடிகள் சொல்லுகின்றன. ச. உ. கூ.

---

க௧௦. கருத்து—ஒஷதி மகிமை.

## அநுவாகம் ௧௯௧.

### பல முடனுகவும்

௧. சத்திய தர்மனுன எவன் சோதியைச் செய்தும் புவியின் பிதாவாயும், எவன் பெரிய சந்திர சலங்களைச் செய்துளானே அவன் எங்களை இம்சியாமலிருக்க வேண்டும், அவியுடன் எத் தேவனுக் களிப்போம் ?

௨. புவியே! பாலுடன் யக்ஞத்தோடு எங்கள் பக்கம் திரும்பவும். உனது எழுச்சியாகு மக்கினி செழுமையை அநுசரிக்கட்டும்.

௩. அக்கினியே! உனது சுந்திர செம்மையான யக்ஞாருகப் பொருள் எது உண்டோ அதை தேவர்களுக்குச் சுமந்து செல்லுகிறேம். ௪. இனி யக்ஞ ஸ்தானம் அமுத மூல நிலயத்தினின்று, நான் உணவையும் உரத்தையுங் கிரகிக்கிறேன். அது பசு செடி கொடிகளில் எம்மைப் பிரவேசிக்க வேண்டும். நான் சுக சூன்னியம் உணவுக்குறைவை நன்கு நீக்குகிறேன். ௫. அக்கினியே; பலமும் பெருமையும் உனதாகும். சொதி மிகுபவனே! உனதுவர் சஸ‾கள் வன்மையாய் விளங்குகின்றன. கவியே! விசால காந்தனே! துதிப்பதற் கருகதையாகும் திடமான உன் திறனுடன் தான சிலனுக்களிக்கிறுய். ௬. அக்கினியே! அமுதனே! நீ எமக்குச் செல்வ மளித்து ஜந்துக்களில் விசாலமாகவும். நீ திவ்ய ரூபத்தலைவனுகும், நீ திடதிரவியத்தை நிரப்புகிறுய். ௭. சக்தி மகனே! ஜாதவேதசனே! எமது துதிகளில் போற்றப்படும் நீ, சுந்தர சொற்களில் சந்தோஷமாகவும்; நல்ல துணை நல் சனனமுடனுகும் சனங்கள் ரேதசுமிகும் உணவை உன்னில் ஸ்தாபித்துளார்கள். ௮. தூய திடம் திவ்ய பூரண திடமான நீ உன் சோதியுடன் வருகிறுய். நீ இரு உலகங்களையும் நிரப்பு

பவன். ௯. திரளான மானிட சனங்கள் தங்கள் முன்னிலையில் திடன் திவ்யன் சத்தியன் விசுவதரிசனனாய்ச் செவியுறத் துரிதனாகும் வெகு விசாலாக்கினியை அவன் பிரிய மனத்துக்காக யுக்த மொழியுடன் தரித்துளார்கள். ௧0. தீரன் யக்ஞசேதனன் திடதிரவிய காரணனாய் யக்ஞந் தேர்ந்து அவாவுடன் பிருகுக்களின் நடுவே தானமளிப்பவனான உன்னை நாடுகிறோம். ¹நீ திவ்ய செல்வத்தை நிரப்புகிறாய். ௧௧. நீங்கள் செல்வங் குவிப்பவர்கள். நீங்கள் எங்கும் குவிப்பவர்கள். நீங்கள் ஆதரவாய் உயரக்குவியுங்கள். அத்தேவதையுடன் அங்கிரசனைப்போல் நிலையாயுட் காருங்கள். ௧௨. சோமனே! பெருகவும்; எல்லாப் பக்கங்களிலும் உன் பலங் குவியட்டும். பலத்தின் சேகரிப்பில் பலமுடனாகவும். ௧௩. எதிரி ஜயிக்கும் சக்திகளுடனாகும் உனது பால் பலம் ஒருமையுடனாகட்டும். சோமனே! நீ அமுதத்துக்குப் பெருகி சோதியில் சிறந்த புகழ்களை ஸ்தாபிக்கவும். ௪. ௨. எ.

---

## அநுவாகம் ௧௯௨

### சர்ப்பங்கள்

௧. அவன் எல்லா எதிரி பகைவனையுஞ் ஜயித்துளான், அக்கினி அதைச் சொல்லுகிறான், அதைத் தான் சோமனுஞ் சொல்லுகிறான். சவிதா, பிரகஸ்பதி இதை எனக்குச் சொல்லுகிறார்கள். பூஷணன் என்னை நற் செயலின் சகத்தில் ஸ்தாபித்துளான். ௨. குதிரையே! நீ முதல் மலர்ந்து அணு அகாதத்தினின்று உதயமாகி கனைப்பதானது, மான்கால் கழுகுச் சிறகு சப்தம்போல் எமக்குத் தோன்றுகிறது. இது புகழ்வதற்கான உனது

---

௧௧௧. கருத்து—பலம் பெருகி ஓங்குங்கள்.

பெரிய சன்மமாகும். ௩. நீ அக்கினியின் மூல நிலயம், நீ சலங்களின் சார்பாகும். நீ இருபக்கம் பொங்கும் கடலாகும். நீ பத்மம்போல் பலத்துக்குப் பெருகி சோதியினளவோடு விரிந்து விசாலமாகவும். ௪. பிரமம் கீழ்த் திசையில் முதன்மையாய் பிறந்துளான். வேனன் ஒளிவீசும் எல்லையினின்று அனைத்தையும் திறந்துளான். அவன் சத்து அசத்தின் மூலம், அருகிலுள்ள அதன் அடிப்படையான மூல வடிவங்களையெல்லாம் வெளியாக்கி யுளான். ௫. இரண்ணிய கருப்பன் முதலில் தோன்றினன். தோன்றுமவன் சிருட்டியின் ஒரே தலைவனுகும். அவன் சோதி சகத்தைத் தாங்குகிறுன். நாங்கள் அவியுடன் எத்தேவனுக்களிப்போம்? ௬. நான் மூன்ருவது மூலஸ்தானத்தில் சுற்றும் புவிவானம் இம்மூல நிலயம் பழமையாய் சாயும் மூலப்பிரதேசத்தில் விழும் துளியை ஏழு ஹோத்துருக்களில் அளிக்கிறேன். சகத்திலுள்ள சர்ப்பங்களுக்கு நமஸ்காரம். சோதி வானத்திலுள்ள சர்ப்பங்களுக்கு நமஸ்காரம். ௭. சோதியின் நிலயம் சூரியனின் ஒளி சலங்களில் ஸ்தாபனமாகி சாய்ந்துள்ள சர்ப்பங்களுக்கு நமஸ்காரம். ௮. யாது தன்னியர்களின் அம்புகளாகவும் வனஸ்பதிகளின் நடுவிலும் சலத் தேக்கங்களிலும் சாய்பவையுமான சர்ப்பங்களுக்கும் நமஸ்காரம். ச. உ. அ.

## அநுவாகம் ௧௧௩.

### வைசுவா நரன்

௧. விசுவகர்மாவால் நன்கு செய்யப்பட்டுள்ள நீ திடனுய் தாங்குபவனுய் தள்ளப் படாதவனுயுளாய். கட

௧௧௨. கருத்து—புவியிலுள்ள பிராணிகளை யெல்லாம் பயன் செய்யுங்கள்.

னும் கருடனும் உன்னை இம்சியாமலிருக்கட்டும். தளராத நீ தரணியை திருடமாக்கவும். உ. பிரஜாபதி; விரியும் விசாலமான உன்னை புவியின் எல்லையில் ஸ்தாபிக்கவேண்டும், நீ புவியாகும், பரந்தவன், பூமியாகும். புவனன். விசுவதாரக அதிதியான நீ, எல்லா புவனம் தரிப்பவன். புவியைத் தாங்கவும். நீ எல்லாப் பிராணன் அபானன் வியானன் உதானன் உறுதி உறுத்துக்கு, புவியை நிலையாக்கவும், அதை இம்சிக்காதே. அக்கினி மேலான சுவஸ்தி அதிமங்களக் காப்புடன் உன்னைத் துணை புரியவேண்டும். நீ அங்கிரச சுபாவம் போல் அத்தேவதையுடன் நிலையாயுட்காரவும். ௩. தூர்வனே! ஒவ்வொரு தண்டு தண்டினின்று தோன்றி நூறு ஆயிரத்துடன் எம்மை விசாலமாக்கவும். ௪. தேவியே! திடமுள்ளவளே! நூறேடு விரிந்து ஆயிரமுடன் எழும் உனக்கு நாங்கள் அவியோடு உபசரிப்போம். ௫. நீ மற்றவரால் ஜயிக்க முடியாதவள், நீ ஆக்கிரமித்து எதிரிகளை ஜயிக்கவும். எதிர்ப்புச் செய்பவர்களையு மொழிக்கவும். ௬. நீ சத்துருவை ஜயிக்கவும், சத்துரு சைன்னியங்களை யொழிக்கவும். நீ ஆயிரம் வீரிய வன்மையுடன் யுளாய். என்னை வேகமுடனுக்கவும். ௭. வாயுக்கள் தேனை நதிகள் மதுவை சத்தியனுக்குப் பொழிகின்றன. எமக்கு ஒஷதிகள் தேனுக வேண்டும். ௮. இரவு தேனுகும், உஷையில் புவியின் காற்றும் தேன் தான். எங்கள் பிதாவான சோதி தேனுகட்டும். ௯. வனஸ்பதி எமக்குத் தேனுகவேண்டும். சூரியன் தேனுகவும், பசுக்கள் மதுவாகவும் எமக்காகவேண்டும். ௧௦. மகான்களான சோதியும் சகமும் எமக்கு இந்த யக்ஞத்தைச் சேர்க்கவேண்டும். அவர்கள் ஆதரவோடு எம்மைத் தாங்கவேண்டும். ௧௧. அறிஞர்கள் விஷ்ணு பரமபதத்தை சோதியில் நிறையுங் கண்ணைப்போல், சதா

காலங் காண்கிறார்கள். ௧௨. புவியே! நீ நிலையாயிருப்பவன், பகைவர்களை ஜயிக்கவும். நீ தேவர்களால் பூரணமான அமுதத்தோடு வந்துளாய். ௧௩. அக்கினியே! சூரியனில் கிரணங்களோடான உனது சோதிகள் ஒளியுலகத்தை வியாபகமாகின்றன. மனிதர்களான எமக்கு அவற்றின் எல்லாச் சுடர்களை திவ்யத்தைக் கொண்டு வரவும்.

௧௪. தேவர்களே! இந்திரனே! அக்கினியே! பிரகஸ்பதியே! பசு, குதிரை சூரியனிலுள்ள உங்கள் சுடர்களுடன் எங்களுக்குச் சோதியை யளியுங்கள். ௧௫. விராடன் சோதியைத் தரித்துளான். சம்ராடன் சோதியை தரித்துளான். சுவராடன் சோதியைத் தரித்துளான். ௧௬. தேவனே! அக்கினியே! சுருக்கச் சுமக்கும் உன் துரித திவ்ய குதிரைகளைச் சேர்க்கவும். ௧௭. அக்கினியே! திவ்யமாய் தேவர்களை யழைக்கும் குதிரைகளை சாரதியைப் போல் சேர்க்கவும். பழைய ஹோதாவாயுட்காரவும். ௧௮. நான் மூன்றுவது மூலஸ்தானத்தில், சுற்றும் புவி வானம் இம்மூல நிலயம் பழமையாய் சாயும் மூலப் பிரதேசத்தில் விழும் துளியை ஏழு ஹோத்துருக்களி லளிக்கிறேன். ௧௯. புவனம் அக்கினி வைசுவாநரத்தின் பலம் புலனாகியுளது; சோதியுடன் சோதி மிகும் அக்கினி ஒளியோடு ஒளி சந்திரனின் சக்தி தோன்றியுளது. ௨௦. ருக்குக்கு உன்னை இரம்மியத்துக்கு உன்னை நாடுகிறேன். ௨௧. மொழிகள் மனம் இருதயத்துடன் அகத்தில் சுத்தமாகி தாரைகளைப்போல ஒன்று சேர்ந்து பொழிகின்றன. நான் நெய் நதிகளைக் காண்கிறேன், அவற்றின் நடுவே பொன்னன னுளான். ௨௨. தேவர்களுக்குத் தேனைப் பகிர்ந்து, நிலயமுள்ள தேன் செய்யும் சுபர்ணன் உட்கார்ந்துளான். அதனருகில் அமுத தாரையை இஷ்டம்

போல் கறப்பவைகளாய் ஏழு பொன் குதிரைகள் அமர்ந்துளார்கள். ச. உ. கூ.

---

## அநுவாகம் கக௯ச.

### காய இரட்சை

க. ஆயிரம் விசுவரூப பிரதிமை கருப்பமான ஆதித்தியனை பாலினால் நனைத்து, சூட்டால் இம்சிக்காமல் விட்டுவிடவும். நீ குவிக்குங்கால் அவனை நூறு வயதுடனாக்கவும். உ. நூறு கண்ணுள்ளவனே! யக்ஞத்துக்குக் குவியும் நீ, பசுக்களின் இவ் விருகால் பிராணியை இம்சிக்காதே. நான் உனக்காக வனத்தில் சப்தஞ் செய்பவனை ஸ்தாபிக்கிறேன். அதனால் உனது காயங்களைக் குவித்து நீ உட்காரவும். ந. அக்கினியே! உத்தம நிலயத்தில் நதிசிசு, பொன் நிறன், வருண நாபி, வாயுவேகன், மலையில் நிலைத்து கடல் நடுவில் தோன்றுங் குதிரையை இம்சிக்காதே. ச. வேகத்தில் வேகமாயும் முழங்கிக் கொண்டுமுள்ள இந்த ஒரு குளம்புப் பசுவை இம்சிக்காதே. நான் உனக்கு வனத்தின் சிங்கத்தை நிலையாக்குகிறேன். அதனால் உன் தேகங்களைத் திடமாக்கிக் கொண்டு அமரவும். ரு. துரிதம் சிகப்பு சாசுவத துளியான அக்கினியை, நான் பூர்வ சித்த நமஸ்காரங்களுடன் துதிக்கிறேன். ருதுக் காலத்தில் நீ பர்வங்களுடன் ஒன்று பொருந்தி பிரகாசமான அதிதி பசுவை இம்சிக்காதே. கூ. அக்கினியே! புவன நடுவில் பரவியும் சனத்துக்கு நெய் கறந்து, நூறு தாரைகளின் ஊற்றுமான இக்கட்லாகு மதிதியை இம்சிக்காதே. நான் உனக்கு வனத்தின் பசுவை நிலையாக்குகிறேன். அதனால் உன்

---

கக௯ந. கருத்து—எங்கும் தேன்தான். அத் தேனை அமுத தாரையைப் பற்றவும்.

தேகங்களை ஒன்று குவித்து உட்காரவும். எ. அக்கினியே! துவஷ்டாவின் காப்பாயும் வருண நடுவாயும் வெகு தூரத்தினின்று சோதியாய் புலனுகும் அசுரனின் ஆயிரம் அதிமர்மங்களை உத்தம நிலயத்தில் இம்சிக்காதே. அ. அக்கினியே! உத்தம நிலயத்தில் வருணனின் இக் கபட மாயை இருநான்கு கால் பசு சர்மம் துவஷ்டாப் பிரஜையின் முதல் மூல ஸ்தானத்தை இம்சிக்காதே. நான் உனக்கு வனத்தின் ஒட்டகத்தை ஸ்தாபிக்கிறேன். அதனுல் உன் வடிவங்களை ஒன்று குவித்து உட்காரவும், கூ. அக்கினியே! சோதி சகத்தின் சுவாலையினின்று அனல் சோதியின் உதயமான எச்சுடரால் விசுவகருமன் பிரஜைகளை யடைகிருனே, அவனை உன் கோபம் நீக்கட்டும். கo. எவனுல் யக்ஞார்கர்கள் மேன்மையடைந்து, தேவர்கள் முதன்மையாய் தேவத்துவ மடைகிருர்களோ அந்த அஜன் அக்கினியின் கருப்பத்தினின்று தோன்றியுளான். அறிஞன் தன் முன்னிலையில் தன் மூலமான இதைக் காண்கிருன். நான் உனக்கு வனத்தின் குரூர மிருகத்தை ஸ்தாபிக்கிறேன். அதனுல் உன் தேகங்களை ஒன்று குவித்து உட்காரவும். ச. உ. கo.

## அநுவாகம் கக௫.

### கோஷாக்கை

க. இந்திரனே ! அக்கினியே ! உங்கள் போர்களில் சோதியின் திசைகளை யலங்காரஞ்செய்கிறீர்கள். சமருக்காகும் உங்களது அச்சக்தி பிரியமானவையாகும். உ. சக்திமான்களாகி அதி செல்வ மரசு புரியும், சக்தியால் சக்தி புலனுக்கி அதிபலமுடனுகும் இந்திராக்கினியை நாடுபவன் சத்துரு ஜயித்து செல்வ மடைவான். ங இந்தி

கக௪. கருத்து—அஜன் மகிமை.

ராக்கினியே! நீங்கள் சமர்கோஷங்களில் வீரர் தலைவர்களாகும். நீங்கள் சகம் சோதி மீறியவர்கள். நீங்கள் மலை நதி சகல மற்றபுவனங்களுக் கதிகமானவர்கள்.

ச. மருத்துக்களே! சோதியின் சந்தோஷர்களே! நீங்கள் எவன் வீட்டில் பானஞ் செய்கிறீர்களோ அவன் நற்பாதுகாப்பை யடைகிறான். ரு. மருத்துக்களே! யக்ஞஞ் சுமக்கும் நீங்கள் நற்செயல் சீலசித்தங் களோடாகும் எமது அழைப்புக்குச் செவி கொடுங்கள். சு. அவர்கள் சுவாலைகளுடன் சூழ்ந்துளார்கள். அவர்கள் சூரியஇரஸ்மி களுடன் கானர்களோடு சேருமவர்கள் சோதிகளால் சுந்தரமாயுளார்கள். அவர்கள் கோஷித்து உக்கிரமுடன் அச்சமன்னியிலுளார்கள். இங்கு நாடுவோர் மருத்துக்களின் பிரிய கிரகத்தைக் கண்டுளார்கள். எ. உன் கோபத்தைக் கழிக்கிறோம். அ. நாங்கள் உயரிய வருணனை நாடுகிறோம். கூ. சதா வளரும் எங்கள் அதிசய நண்பன் எமக்கு எத்துணை எத்திடக் காப்புடன் வருவான்?

க0. அம்புகளோடாகும் தங்கள் நாக்களில் சுகமளித்து சித்தஞ் சேதிப்பதும் வேகம் வன்மை விருப்பமுடனாகும் மொழிகளை ருத ஸ்தம்பத்துக்குச் சேர்ப்பவர்களின் சேவையை யடைபவன் இங்கு வெகு காலஞ் சீவிப்பான். கக. அக்கினியே! நல்வழிக்கு அழைத்துச் செல்லவும். கஉ. தேவர்களின் பாதைக்கு வந்துளோம். கங. எமக்கு அவர்கள் அநுலமாகவேண்டும். கச. ஒவ்வொரு போரிலும் பாதுகாப்பளியுங்கள். கரு. அக்கினியே! உனது ஸ்தானம் சலங்களிலாகும். நீ ஒஷதிகளில் சேர்கிறாய். கருப்பத்திலிருக்கும் நீ மறுபடியுங் குணமாகிறாய்.

கசு. சோமனே! நீ பலனும் பிரகாசனுமாகும், தேவனே! நீ சக்திமான். நீ சக்தி விரதன். நீ சக்தியுடனாகும் தர்மங்களை ஸ்தாபிக்கிறாய்.

௧௭. வருணனே! இது எனக்கு வேண்டும். ௧௮. நான் உன் துணையை நாடுகிறேன். ௧௯. அக்கினியே! நீ எமக்கு வருண கோபத்தைத் தணிக்கவும். ௨௦. அக்கினியே! நீ எமக் கருகிலாகவும். ௪. ௨. ௧௧.

## அநுவாகம் ௧௯௩.

### சல சேனே

௧. நான் சலசலனத்தில் உன்னை ஸ்தாபிக்கிறேன்; நான் சல எழுச்சியில் உன்னை ஸ்தாபிக்கிறேன்; நான் சல பஸ்மங்களில் உன்னை ஸ்தாபிக்கிறேன். நான் சல சோதியில் உன்னை ஸ்தாபிக்கிறேன். நான் சலவழியில் உன்னை ஸ்தாபிக்கிறேன்.

௨. அலைகளில் உன் ஸ்தானமாக நீ அமரவும், கடலில் உன் ஸ்தானமாக அமரவும், சல ஓட்டத்தில் உன் ஸ்தானமா யமரவும்; சல ஸ்தானத்தி லமரவும். சலாஸனத்திலுட்காரவும்.

௩. நான் உன்னை சலாஸனத்தில் ஸ்தாபிக்கிறேன்; நான் உன்னை சலக் கிரகத்தில் ஸ்தாபிக்கிறேன். நான் உன்னை சல துளியில் ஸ்தாபிக்கிறேன்; நான் உன்னை சலக்கருப்பத்தில் ஸ்தாபிக்கிறேன்; நான் உன்னை சல மூல நிலயத்தில் ஸ்தாபிக்கிறேன்.

௪. நான் உன்னை காயத்திரிச் சந்தம், திருஷ்டுபுச் சந்தம் ஜகதீச் சந்தம், அநுஷ்டுபுச் சந்தம், பங்க்தி சந்தத்தில் ஸ்தாபிக்கிறேன். ௪. ௩. ௧.

---

௧௯௨. கருத்து—வெகுகாலஞ் சீவிக்க வழி.
௧௯௩. கருத்து—ஐந்து பிரிவுகள்.

## அநுவாகம் ககஎ.

### பிராண பிருதம்.

க. முன்னிலையிலுள்ள இது புவமாகும். அவனது பிராணன் பௌவாயனன். வசந்தன் பிராணாயனன், காயத்திரீ வாசந்தியாகும். காயத்திரியினின்று காயத்திரன்; காயத்தரத்தினின்று உபாம்சுவாகும், உபாம்சுவினின்று திருவிருதன்; திருவிருதத்தினின்று ரதந்தரன். ரதந்தரத்தினின்று ரிஷி வசிஷ்டன்-புலஹுகிருன். நான் பிரஜைகளுக்காக பிராணனை பிரசாபதியால் பற்றப்படும் உன்னோடு கிரகிக்கிறேன். உ. வலது பக்கத்திலுள்ள இது விசுவ கர்மாவாகும்; அவன் மனம் வைசுவ கர்மணம்; மனத்தின்று கிரீஷ்மம், கிரீஷ்மத்தின்று திருஷ்டுபு, திருஷ்டுபுவினின்று சுவரம், சுவரத்தினின்று அந்தர்யாமன், அந்தர்யாமத்தினின்று பஞ்சதசம், பஞ்சதசத்தினின்று பிரஹத்து. பிரஹத்தினின்று ரிஷி பரத்வாஜன். நான் பிரஜைகளுக்காக பிரசாபதியால் பற்றப்பட்ட உன்னோடு, மனத்தை கிரகிக்கிறேன்.

ந. மேற்புறமுள்ள இது விசுவ வியாபகனாகும், அவனது கண் வைசுவ வியசஸம், மழைகளினின்று ஜகதீச்சந்தம், ஜகதீயினின்றி ரிக்ஷமம், ரிக்ஷமத்தினின்று சுக்கிரன், சுக்கிரத்தினின்று சப்த தசஸ்தோமன், சப்த தசத்தினின்று வைரூபன், வைரூபனின்று ரிஷி விசுவாமித்திரனாகும். நான் என் பிரஜைகளுக்கு பிரசாபதியால் கிரகிக்கப்படும், உன்னோடு, கண்ணைக் கிரகிக்கிறேன்.

ச. வட பக்கமுள்ள இது சோதியாகும். அவனது செவி சோதி-மகனாகும். செவியினின்று சரத்ருது, சரத்துடன் சேர்வது அநுஷ்டுபு, அநுஷ்டுபுவினின்று சுவரம், சுவரத்தினின்று மந்தினியாகும், மந்தினியினின்று இரு

பத்து ஒன்றான ஸ்தோமன்; இருபத்து ஒன்றான ஸ்தோமத்தினின்று வைராஜன்; வைராஜனின்று ஜமதக்கினி ரிஷி; பிரஜாபதியால் பற்றப்படும் உன்னோடு பிரசைகளுக்காக நான் செவியைக் கிரகிக்கிறேன்.

ரு. உய்ரமாயிருக்கும் இது அறிவாகும். அவனது அறிவில் தோன்றுவது மொழியாகும். மொழியின் பிறப்பு ஏமந்தம். ஏமந்தத்தினின்று பங்க்தி, பங்க்தியினின்று நிதனங்கள், நிதனங்களினின்று ஆக்ரயணம், ஆக்கிரயணத்தினின்று உஎ—நடு-ஆன ஸ்தோமங்கள். உஎ—நடு-ஆன ஸ்தோமங்களினின்று சாக்வரம் ரைவதமாகும். சாக்வரம் ரைவதத்தினின்று ரிஷி விசுவகர்மனுகும். பிரசாபதியால் பற்றப்படும் உன்னோடு பிரசைகளுக்காக மொழியை கிரகிக்கிறேன். ச. ந. உ.

---

## அநுவாகம் கக அ.

### அபான ஸ்தம்பம்.

க. திசைகளின் கிழக்கு ருதுக்களின் வசந்தம். அக்கினி தேவதை; பிரம செல்வம்; திருவிருத ஸ்தோமன், பதினைந்து ஸ்தோமனைச் செய்யுஞ் சத்தி; பதினெட்டு மாத—கன்று—பலம், காலங்களின் கிருதன். பூர்வ காற்று காற்று. ரிஷி ஸானகனுகும்.

உ. திசைகளின் தெற்கு, ருதுக்களின் கிரீஷ்மம், இந்திரதேவதை. க்ஷத்திர செல்வம், கரு ஸ்தோமன். கஎ, ஸ்தோமத்தின் வழி செய்யுஞ் சக்தி. இரண்டு வயது பலம். காலங்களின் திரேதன், தென் காற்று காற்று, சநாதன ரிஷி.

---

கக்ஷள். கருத்து—பத்து பிரிவுகள்.

௩. திசைகளின் மேற்கு. ருதுக்களின் மழை; விசுவே தேவர்கள் தேவதை, குடியானவர்கள் பொருள்களாகும். ௧எ ஸ்தோமன். உ௧ ஸ்தோம வழி செய்யுஞ் சக்தி; மூன்று வயது, பலம். காலங்களின் துவாபரன். மேற் காற்று காற்ருகும், அஹபூன ரிஷியாகும்.

௪. திசைகளின் வடக்கு, ருதுக்களின் சரத்து; மித்திர வருணதேவதை; புஷ்டி ஐசுவரியம்; உ௧ ஸ்தோமன்; உஎ ஸ்தோம நெறி செய்யுங் சக்தி; நான்கு வருஷ பலம், காலங்களின் கலி. வட காற்று காற்று. பிரத்ன ரிஷியாகும்.

௫. திசைகளின் உச்சி, ருதுக்களின் ஏமந்தமும் சிசிருது வுமாகும். பிரஹஸ்பதி தேவதை; வர்சஸ செல் வம், உஎ ஸ்தோமன். ௩௩. ஸ்தோம நெறி செய்யுஞ் சக்தி; சுமைகாளை சக்தி; காலங்களின் பின் கலியாகும். எங்குஞ் சஞ்சரிக்குங் காற்று காற்ருகும். சுபர்ண ரிஷி யாகும்.

௬. பிதுருக்கள், பிதாமகர்கள், அருகிலும் தூரத் திலு முள்ளவர்கள் எம்மைக் காக்க வேண்டும். அவர்கள் இப்பணி, பலம் பிரமம், புரோகிதம் விருப்பம் தேவ அழைப்பில் எம்மை ரட்சிக்க வேண்டும். ௪. ௩. ௩.

---

## அநுவாகம் ௧௧௧.

### அசுவினி காப்பு.

௧. உனது நிலயம் நிலையாகும். உன் மூல ஸ்தா னம் நிலையாகும். நீ நிலையாகும், உனது நிலையான மூலஸ் தானத்தில் சரியா யுட்காரவும். அத்வர்யுக்களான இரு அசு வினிகள் முதன்மையாய் கீழ்த்திசையின் புவியில் அனல்

---

௧௧அ. ௧ருத்து—பத்து பிரிவுள்ள பலசொரூப அபானங்கள்.

கொடியான உன்னை ஸ்தாபிக்கட்டும். உ. தேவர்களில் திறனுள்ள தாராள தரணியைப்போல் திட பிதாவுடனும் நீ உன் சொந்த பலத்துட னுட்காரவும், மகனுக்குத் தந்தை பிரியமாயிருப்பது போல் சுகதரிசமோடு உன் தேகத்துடன்-அன்பாய்-வரவும். அத்வர்யுக்களான இரு அசுவினிகள் உன்னை இங்கு ஸ்தாபிக்கட்டும்.

ந. குவித்து சக்தியளிக்கும் செல்வம் மிகுந்த நீ, அதிவீரர் அபரிமித செல்வங்களை எமக்குப் பொழியவும். எதிர்ப்பு பகைமை யொழித்து செல்வச் செழிப்பில் யஜமானனை யக்ஞபதிக்குப் பாகத்தையும் அவன் ஓங்கச் சிறப்பையு மளிக்கவும். அத்வர்யுக்களான இரு அசுவினிகள் உன்னை இங்கு ஸ்தாபிக்க வேண்டும். ச. நீ அக்கினி புரீஷமார்கும், தேவர்களின் தலைவன், விசுவே தேவர்கள் அந்த உன்னை, அநுகூலமாக்கவேண்டும். உனது சாய்வுக்கு ஸ்தோமன்களோடு நெய் மிகும் நீ இங்கு உட்காரவும். எமக்குப் பிரஜையுடன் செல்வத்தை யக்ஞத்தாலளிக்கவும். இரு அத்வர்யுக்களான அசுவினிகள் உன்னை இங்கு ஸ்தாபிக்கட்டும்.

ரு. நீ சோதியின் தலைவன். சகத்தின் நடுவர்கும். திசைகளின் தாரகன், புவனங்களின் பெரிய இராணியாகும். நீ சல துளி அலையாகும், உனது ரிஷி விசுவகர்மன், அத்வர்யுக்களான இரு அசுவினிகள் உன்னை இங்கு ஸ்தாபிக்கட்டும். சு. ருதுக்களுடன் இணைந்து விதிப்பவர்களுடன் இணைந்து, வசுக்களுடன் இணைந்து ருத்திரர்களுடன் இணைந்து ஆதித்தியர்களுடன் இணைந்து, விசுவே தேவர்களுடன் இணைந்து தேவர்களுடன் இணைந்து திடம் ஸ்தாபிக்கும் தேவர்களுடன் இணையவும். அத்வர்யுக்களான அசுவினிகள், அக்கினி வைசுவாநரனுக்கு உன்னை இங்கு ஸ்தாபிக்கட்டும்.

எ. என் பிராணன், அபானன், வியானனைக் காக்கவும், என் கண்ணை விசால ஒளியுடனாக்கவும்; என் செவியைத் துரிதமாக்கவும்.

அ. சலங்களைப் பெருக்கவும், செடி கொடிகளைத் துரிதமாக்கவும், சந்து சனங்களைக் காக்கவும், சோதியினின்று மழையை வர்ஷிக்கச் செய்யவும். ச. ந. ச.

## அநுவாகம் உ00.

### சக்தி சேனை

க. பதினெட்டு பிரிவின் பலமுடனாகும் நீ, திருஷ்டுபுச் சந்தம்; இரண்டு வகை பலமுடனாகும் விராஜசந்தம்; இரண்டரை பிரிவு பலமுடனாகும் காயத்திரிச் சந்தம்; மூன்று பிரிவு பலமுடனாகும் உஷ்ணீச் சந்தம்; நான்கு வகை பலமுடனாகும் அநுஷ்டுபுச் சந்தம்; சுமை காளை பலமுடனாகும் பிருஹதீச்சந்தம்; திடகாளை பலமுடனாகும் சதோபிரகதீச் சந்தம்; ரிஷப பலமுடனாகும் ககுபுச்சந்தம்; பசு பலமுடனாகும் ஜகதீச்சந்தம்; பொதி மாடு பலமுடனாகும் பங்க்தீ சந்தம்; ஆடு பலமுடனாகும் விசால சந்தன்; மேஷ பலமுடனாகு மெது சந்தம்; புருஷ பலமுடனாகும் ஒருமைச்சந்தம், புலி பலமுடனாகும் பகைமையற்ற சந்தம். சிங்க பலமுடனாகும் உறை சந்தம், ஆதார பலமுடனாகும் அதிபதி சந்தம். க்ஷத்திர பலமுடனாகும் இன்பமளி சந்தம்; விசுவகர்ம பலமுடனாகும் பரமேஷ்டி சந்தம்; தலைமைப் பலமுடனாகும் பிரஜாபதிச் சந்தம். ச. ந. ரு.

---

கககூ. கருத்து—அசுவினி, பருவம், பிராணன்களுடன் இணைந்து வாழவும்.

உ00. கருத்து—சந்த இரகசியம்.

## அநுவாகம் உ0க.

### வாயு சேனை

க. இந்திராக்கினியே! அசையா ஆதரவை நீங்கள் அழுத்தமாக்குங்கள். அது தன் பின் பாகத்தால் புவி சோதி வானத்தை எதிர்க்கட்டும்.

உ. விசுவகர்மன் வானத்தின் எல்லையில் விரிந்து விசாலனாய் ஒளி வீசி, சூரியன் சேர்ந்து சகம் சோதி பெரும் வானத்தை வெளிச்சமுடனுக்கு முன்னை ஸ்தாபிக்கட்டும். வானத்தைத் தாங்கவும், வானத்தைத் திடமாக்கவும். ஒவ்வொரு பிராணன் அபானன் வியானன் உதானன் உதவி உறுத்துக்கு வானத்தை இம்சிக்காதே. வாயு வானவன் அதி க்ஷேமம் அதி சுகமளிக்கு மாதரவுடன் உன்னைக் காக்கட்டும். அங்கிரசனைப்போல் அத் தேவதையுடன் நீ திடமா யுட்காரவும்.

ங. நீ கீழ்த்திசை; இராணியாகும். நீ தென் திசை; விராடனாகும்; நீ மேற்திசை; சம்ராடனாகும். நீ வடதிசை; சுவராடனாகும்; நீ உயரிய திசை; அதிபத்தினியாகும்.

ச. என் ஆயுசைக் காக்கவும், என் பிராணனைக் காக்கவும், என் அபானனைக் காக்கவும், என் வியானனைக் காக்கவும், என் கண்ணைக் காக்கவும், என் காதைக் காக்கவும், என் மனத்தைத் தூண்டவும்; என் மொழியைத் திடமாக்கவும்; என் ஆத்மாவைக் காக்கவும்; எனக்கு சோதியை யளிக்கவும். ச. ங. சு.

---

உ0க. கருத்து—நீங்கள் மூவ்வுலகிலும் வியாபகமாகி காய பலமுடனாகுங்கள்.

## அநுவாகம். உ0உ.

### தேவ சந்த சேனை

க. நீ மாச்சந்தம், பிரமாச்சந்தம், பிரதிமாச் சந்தம், அசிரிவிச் சந்தம், பந்திச்சந்ம், உஷ்ணிச் சந்தம், பிரஹதீச் சந்தம், அநுஷ்டுபுச்சந்தம், விராஜ சந்தம், காயத்திரீச் சந்தம், திருஷ்டுபு சந்தம், சகதீச் சந்தம். நீ புவிச் சந்தம், வானசந்தம், சோதிச் சந்தம், ருது சந்தம், நட்சத்திரச் சந்தம், மனச் சந்தம். மொழிச் சந்தம். கிருஷிச் சந்தம், பொன் சந்தம், பசுச் சந்தம், பெண் ஆடுச் சந்தம், அசுவச் சந்தம். நீ அக்கினி தேவதை. வாத தேவதை, சூரிய் தேவதை, சந்திர தேவதை, வசுக்கள் தேவதை, ருத்திரர்கள் தேவதை ஆதித்தியர்கள் தேவதை; விசுவ தேவர்கள் தேவதை; மருத்துக்கள் தேவதை. பிரகஸ்பதி தேவதை, இந்திர தேவதை. வருண தேவதை.

உ. நீ தலையாகும், தலைமை வகிப்பவன்; நீ திடன் தாங்குபவனாகும்; நீ தூண், தடுப்பவனாகும்; உணவுக்கு உன்னை, உரத்துக்கு உன்னை, உழவுக்கு உன்னை க்ஷேமத்துக்கு உன்னை, நாடுகிறோம். நீ அரசு புரியு மாதரவாகும். தாங்கும் திடனாகும், துணைபுரிந்து தரிப்பவனாகும். ஆயுசு வர்சஸ வன்மை வீர்யத்துக்கு உன்னை நாடுகிறோம்.

ச. ந. எ.

---

## அநுவாகம் உ0ந.

### ஸ்தோம படை

க. நீ சீக்கிரன். திருவிருத ஸ்தோமன். சோதி வீச்சு பதினைந்து; சோதி பதினேழு. விரைவு கஅ; வன்மை

---

உ0உ. கருத்து—சந்தங்களும் தேவதைகளும்.

கக, எதிர்ப்பு உ0; தாரகன் உக; திடன் உஉ, செழுமை உங. அங்கம் உச, கருப்பம் உரு, ஓஜசு உஎ, உயர் அறிவு நக, உறுதி நங. ஒளி ஸ்தானம் நச, ஓங்கும் நிலயம் நசு; சுழல் சஅ; சாய்வு நான்கு பிரிவு ஸ்தோமன். ச. ங. அ.

---

## அநுவாகம் உ0ச.

### காப்புப் படை

க. நீ அக்கினி பாகமாகும், தீட்சையின் தலைமைத்துவம், தோன்றும் திவ்யன். திரிவிருத ஸ்தோமன். உ. நீ இந்திரனின் பாகமாகும், விஷ்ணுவின் தலைமைத்துவம், விளங்கும் வலிமை, கரு பிரிவு ஸ்தோமன் ங. மனிதர் காண்போர்களின் பாகமாகும், தாத்ருவின் தலைமைத்துவம், தோன்றும் மூல நிலயம். கஎ பிரிவு ஸ்தோமன். ச. நீ மித்திரனின் பாகமாகும், வருணனின் தலைமைத்துவம், சோதியின் மழை. தோன்றுங் காற்று. உக பிரிவு ஸ்தோமன். ரு. நீ அதிதியின் பாகமாகும், பூஷணனின் தலைமைத்துவம், புலனுகும் பெரும் பலம். உஎ பிரிவு ஸ்தோமன். சு. நீ வசுக்களின் பாகமாகும், ருத்திரர்களின் தலைமைத்துவம். புலனுகும் பிராணியாகும். உச பிரிவு ஸ்தோமன். எ. நீ ஆதித்தியர்களின் பாகமாகும், மருத்துக்களின் தலைமைத்துவம். புலனுகும் பிரஜை, உரு பிரிவு ஸ்தோமன். அ. நீ தேவ சவிதாவின் பாகமாகும், பிரகஸ்பதியின் தலைமைத்துவம், தோன்றும் திசைகளாகும், நான்கு பிரிவு ஸ்தோமனுகும். கூ. நீ மாசங்களின் பாகமாகும். பட்சங்களின் தலைமைத்துவம், புலனுகும் பிரஜை, சச பிரிவு ஸ்தோமன். க0. நீ ரிபுக்களின் பாக

---

உ0ங. கருத்து—பலவகை ஸ்தோமங்கள்.

மாகும். விசுவேதேவர்களின் தலைமைத்துவம், சாந்தம் செம்மையாகும் பொருள்கள். ௩௩-பிரிவு-ஸ்தோமன். ௬. ௩. ௯.

---

## அநுவாகம் உ0ரு.

### சிருஷ்டி சேனை

க. அவர்கள் ஒருமையுடன் போற்றுகிறார்கள், பிரஜைகள் ஸ்தாபிதமாகும், பிரஜாபதி அதிபதியாவான். மூன்றால் போற்றுகிறார்கள். பிரமம் புலனாகும். பிரமணஸ்பதி அதிபதியாவான். ஐந்துகளால் போற்றுகிறார்கள், பொருள்கள் தோன்றும்; பொருள் தலைவனே அதிபதியாவான். ஏழால் துதிசெய்கிறார்கள், சப்தரிஷிகள் தோன்றுவார்கள், தாத்ரு அதிபதியாவான். ஒன்பதால் போற்றுகிறார்கள், பிதுருக்கள் புலனாவார்கள். அதிதி இராணியாகும். அவர்கள் பதினொன்றால் போற்றுகிறார்கள், ருதுக்கள் புலனாகும், ருது பாலகன் அதிபதியாவான். அவர்கள் பத்தும் மூன்றால் போற்றுகிறார்கள், மாதங்கள் புலனாகும். வருஷம் தலைமையாவான். அவர்கள் பதினைந்தால் போற்றுகிறார்கள், க்ஷத்திரம் புலனாகும், இந்திரன் தலைமையாவான். அவர்கள் பதினேழால் போற்றுகிறார்கள். பசு புலனாகும் பிரகஸ்பதி தலைமையாவான். அவர்கள் பத்தொன்பதால் போற்றுகிறார்கள், ஆரியன் சூத்திரன் புலனாவார்கள். இரவும் பகலும் அதிபதிகள். அவர்கள் இருபத்தொன்றால் போற்றுகிறார்கள், முழுக்குளம்புள்ள பசு புலனாகும், வருணன் அதிபதியாவான். அவர்கள் உ௩ ஆல் போற்றுகிறார்கள். சிறு பசு புலனாகும். பூஷணன் அதிபதி. அவர்கள் உரு ஆல் போற்றுகிறார்கள், வனப் பசுபுலனாகும். வாயு தலை

---

உ0௪. கருத்து—நீ யார்?

வன். அவர்கள் உ௭ ஆல் போற்றுகிறார்கள், சோதியும் நிலமும் தனிமையாயிற்று, வசு ருத்திர ஆதித்தியர்கள் அவற்றை யநுசரிக்கும். ஆதிபத்தியமவர்களதே. அவர்கள் உக ஆல் போற்றுகிறார்கள், செடி கொடிகள் தோன்றும். சோமன் அதிபதி. அவர்கள் ௩௧ ஆல் போற்றுகிறார்கள். பிரசைகள் புலனுகும், மாதமும் பட்சமும் அதிபதிகள். அவர்கள் ௩௩ ஆல் போற்றுகிறார்கள், பிரசைகள் சாந்தயாகும். பிரஜாபதி தலைவனும் அதிபதியுமாவான். ச. ௩. ௧௦.

---

## அநுவாகம் உ௦௬.

### உஷைப் படை

௧. இவள்தான் முதன்மையாய் உதயமாகுபவள். அவள் இவளகத்தில் நுழைந்து அசைகிறாள். அன்னை போல் நவீன மணப் பெண் தாய்மார்களைச் சுமக்கிறாள். மூன்று மகிமைகள் அவளை யநுசரிக்கின்றன. உ. சிறப்பு சுந்தரம் சாசுவதம் சீலசித்தம் சுரேதச மிகும் சூரிய பத்தினிகளான உஷைகள், சமான மூலநிலயத்தில் அசைந்து சோதியின் கொடி செய்துகொண்டு செல்லுகிறார்கள்.

௩. மூன்று ருதவழியை யநுசரிக்கும் முவ்வனல்கள் சோதியுடன் வந்துள்ளன; ஒன்று பலத்தைக் காக்கும். வேறொன்று பிரசையை இரட்சிக்கும். மற்றொன்று புனிதனின் விரதத்தைத் துணைபுரியும்.

௪. நான்காவது யக்ஞ இரு சிறகுகளாகி சதுர்ஸ்தோமங்களின் அம்சாகும். ரிஷிகளே ஜகதி பிரகதீ காயத்திரி திருஷ்டுபு அநுஷ்டுபானத் துதியைச் சேர்த்து இச்சுவர்க்கத்தைப் போஷிக்கிறார்கள்.

---

உ௦௬. கருத்து—தலைவன் பிரஜாபதியாகும்.

௫. பிரஜாபதி ஐந்தால் இவ்வுலகத்தையும் ஐந்து ஐந்தால் அவற்றின் யநுசரணைகளையுஞ் செய்துளான். அச்சேர்க்கையினால் ஐபலங்கள் அதிசய வடிவமணிந்து செல்லுகின்றன. ௬. சமான சகோதரிகள் சமான சின்ன மணிந்து குறிப்பிட்ட நிலயஞ் செல்லுகிறார்கள். ௭. அறியுங் கவிகள் ருதுக்களை விஸ்தரிக்கிறார்கள். அவர்கள் தம் நடுவே சந்தங்களுடனாகி திவ்ய சோதிகளில் சேர்கிறார்கள். ௭. சோதி வீசும் இருள் தேவி வானங்களில் சூரிய வழிகளை சுவீகரிக்கிறாள். புலனாகும் பல ரூப பசுக்கள் தாயினங் கத்தில் எங்கும் சுற்றிப் பார்க்கின்றன. ௮. ஏகாஷ்டகன் தவமுடனாகி திடமான இந்திரனைத் தோற்றுவித்துளான். அவனால் தேவர்கள் அசுரர்களை ஜயித்துளார்கள். அவன் பலத்தால் அசுர காதகனானான்.

௯. நீங்கள் இளமையில்லாத என்னை இளமையுடனாக்கினீர்கள். நான் சத்தியம்பேசி இதை விரும்புகிறேன். நாங்கள் நீங்கள் செய்வது போலாகும் அவனது பிரிய மனத்தை, அநுபவிக்கவேண்டும். உங்களில் ஒருவன் மற்றொருவனை ஏமாற்றவேண்டாம்.

௧௦. எல்லா மறிபவன் என் நல்மனத்தை யநுபவித்துளான். அவன் ஆதரவை அடைந்துளான். ஏனெனில் அவன் அறிவின்மையை ஜயித்தவனாகும். நீங்கள் செய்வதுபோல் அவன் பிரிய மனத்தை நாங்களநுபவிக்க வேண்டும். உங்களின் ஒருவன் மற்றொருவனை ஏமாற்றாமலாக வேண்டும்.

௧௧. ஐந்து அழைப்புகள் ஐந்து உஷைகளில் ஐந்து ருதுக்கள் பஞ்ச நாமங்களோடு பசுக்களில் யநுசரிக்கின்றன. ஒரே உலகத்தில் ஐந்து திசைகள் சமான சிரம் பஞ்சதசங்களுடன் ஸ்தாபிதமாயுள்ளன.

கஉ. முதன்மையாய் ஒளிவீசுபவள் ருதக்குழந்தை யாகும். சல சக்தியை ஒருவள் தாங்குவாள், சூரியனின் நிலயங்களில் வேறொருவள் அசைவாள். உஷ்ணத்தின் ஸ்தலங்களில் மற்றொருவள் செல்வாள். சவிதா ஒருவளை நியமனஞ் செய்வாள். கங. முதன்மையாய் ஒளி வீசியவள் யமனோடு பசுவாவாள். பால்மிகும் நீ வருஷந்தோறும் எமக்குக் கறக்கவும். கச. அனல் கொடியுடன், பலநிற பலவடிவ, சுக்கிர ரிஷபத்தின் சோதியான அவள் ஒளிகளுடன் வந்துளாள். அழியாத உஷையே! உனது சமானச் செயலை செய்து கொண்டு மூப்பையளிப்பவளாய் நீ வந்துளாய். கரு. ருதுக்களின் பத்தினியான அவள் முதன்மையாயும், பிரசை தரிப்பவளாயும் தினங்களை வகித்துச் செல்லுபவளாய் இங்கு வந்துளாள். உஷையே! நீ ஒன்றானாலும் பல இடங்களில் பிரகாசிக்கிறாய். மூப்பற்ற நீ அந்நியமான அனைத்தையும் முதுமையாக்குகிறாய். ச. ங. கக.

---

## அநுவாகம் உ0எ.

### பகை பிரி படை

க. அக்கினியே! சனனமாயுள்ள எங்கள் எதிரிகளைத் துரத்தவும். ஜாதவேதசனே! சனனமாகாத எங்கள் சத்துருக்களைச் சிதைக்கவும். கோபமின்னியில் பிரியமனமுடன் எமக்குப் பிரகாசிக்கவும். உனது காப்பில் நான் முச்சுகம் ஜயமுடனாக வேண்டும். உ. அக்கினியே! பலமுடன் பிறந்துள்ள எமது பகைவர்களைத் துரத்தவும்; ஜாதவேதசனே! ஜனனமாகாத சத்துருக்களை யொழிக்கவும்.

---

உ0சு. கருத்து. இருளும் சோதியுமுள்ள உஷையையுங் காடவும்.

எமக்குப் பிரியமுடனாகவும். உன் சுகத்தை நாங்களநுப விக்க வேண்டும்; எமது எதிரிகளை நீக்கவும். ௩. நீ ௪௪. எண்களான ஸ்தோமன், செல்வம் சக்தியாகும். ௪. நீ ௧௬ எண்களான ஸ்தோமன். செல்வம் சக்தியாகும்: ௫. நீ அப்சன் என்னும் பெயருள்ள புவியி னணுவாகும். ௬. நீ நடை சந்தம், நீ விரி சந்தம். சுகமளிச்சந்தம், ஜயிக் குஞ் சந்தம், சூழுஞ் சந்தம். மனச் சந்தம், பரவு சந்தம். நதி சந்தம், கடல் சந்தம்; சலசந்தம். சேர்க்குஞ் சந்தம், பிரிக்குஞ் சந்தம். பிரஹத் சந்தம்; இரதந்தர சந்தம், சமூ கச் சந்தம், தனித்தனிச் சந்தம், வாக்குச் சந்தம், வெளிச் சந்தம், சஷ்டுபுச் சந்தம், அநுஷ்டுபுச் சந்தம். ககுப்புச் சந்தம், திரிககுப்புச் சந்தம், காவ்ய சந்தம், கனிச் சந்தம், பதபங்திச் சந்தம். அட்சரபங்திச் சந்தம், விஷ்டாரப ங்க்திச் சந்தம், சாணை சேர் க்ஷௌரக் கத்திச் சந்தம் சூழுஞ் சந்தம். பட்ச சந்தம், கமன சந்தம் வான சந்தம் வன்மை சந்தம். வன்மை செய் சந்தம், விசால சந்தம், சமர் சந்தம், ஜய சந்தம், கிட்டக் கடினமாகுஞ் சந்தம், மந்தச் சந்தம், அங்காங்கச் சந்தம். ௪. ௩. ௧௨.

---

## அநுவாகம் உ௦அ.

### அக்கினி

க. எழுச்சியாகி ஆகுதமான சுத்தாக்கினி சந் தோஷமாய் செல்வம் நாட சத்துருவை யொழிக்கட்டும்.

உ. சோமனுன நீசத்தான செயல்களின் பதியாகும். நீ அரசன், எதிரிக ளொழிப்பவன். நீ சிறப்பளிக்குஞ் சக்தியாகும்.

௩. சுகதரிச னக்கினியே! உன் காட்சி மங்கள மளிப்பதாகும். நீ உக்கிரன். வியாபகன் உல்லாசன்;

---

உ௦௭. கருத்து,—இன்னும் வேறு சந்தங்களுமுண்டு.

அவர்கள் இருளால் உன் ஒளியை மறைப்பதில்லை. குற்றம் உன் காயத்தில் பற்றிப் படிவதில்லை. ௪. திடாக்கினியே! உன் தரிசனம் மங்கள மளிப்பதாகும், அது சூரியனருகிலும் சோதியாயுள்ளது. பார்க்கப் பிரகாச மாகுமது, இரவிலுங் காணும்; உன் ரூபத்தில் உணவு கண்ணுக்கு இனிமையாகும். ௫. யக்ஞத்தால் எமக்குச் செல்வஞ் ஜயிக்க பிரியமுடனுகு மவன் சுக தோற்றத்துடன் எங்கள் நிமித்தம் தேவர்களுக்கு யக்ஞஞ் செய்வான். அக்கினியே! இம்சையற்ற காப்பும் எமது ரட்சகனுமான நீ சோதியுடன் செல்வத்தோடு பிரகாசமாகவும். ௬. தேவனே! அக்கினியே! உன்னை நாட நாங்கள் எமக்கு சோதி சகத்தினின்று பூரண ஆயுசுடன் க்ஷேமத்தை யளிக்கவும், சோதி சன்மனே!சிறப்பாய் சோதிமிகும் எச்செல்வத்தை நாங்கள் நாடுகிறோமோ அதை எங்களில் வழங்கவும்.

௭. ஹோதாவே! பலத்தின் மகனே! மனிதரின் யக்ஞத்தில் நீ யக்ஞங்களால் யஜிப்பதுபோல் ஒருமையுடன் சேர்துள்ள இன்ப தேவர்களுக்கு இன்று நீ மகிழ்வுடன் யக்ஞஞ்செய்யவும். ௮. நான் தேவன் ஹோதா, புரோகிதன் யக்ஞ ரித்விக்கு, இரத்தின மளிப்பவனான அக்கினியை துதிக்கிறேன்.

௯. சோமனே! நீ பலனும் பிரகாசனுமாகும்; தேவனே! நீ சக்திமான், நீ சக்தி விரதன். நீ சக்தி மிகும் தர்மங்களை ஸ்தாபிக்கிறாய்.

௧௦. எரிக்கும் மருத்துக்களே! இந்த அவி உங்களுடையதாகும். எதிரி யழிப்பவர்களே! நீங்கள் எமது இரட்சணைக்கு அதில் இன்பமாகுங்கள். ௧௧. வசுக்களே! மருத்துக்களே! சத்திய விரோதமாய் எம்மை இம்சிக்க விரும்பும் இழிசித்தமுள்ளவன் நாச பாசத்தில் பிடிபட வேண்டும், உங்களது அதி எரி சுடரால் அவனை யொழி

யுங்கள். கஉ. இன்பர்களாய் இன்பமளித்து, எரித்து திட காயகர்களான வர்ஷ மருத்துக்கள் மனிதர்களில் கணம் விசால கிரகங்களுடன் புன்மை பாசங்களை எம்மிட மிருந்து நீக்கவேண்டும்.

கந. அதி இளைஞனே! அவாவுள்ள தேவர்களை இன்பமுடனழைக்கவும், ருதுபதியே! ருதுக்களை யறிந்து நீ திவ்ய தேவர்களுடன் இங்கு யக்ஞஞ் செய்யவும். அக் கினியே! நீ ஹோத்துருக்களின் திவ்ய ஹோதாவாகும். கச. சுத்தனே! அக்கினியே! சோதி வீசுபவனே! அத்வர மனித சமூக அவியான நீ இன்று அளிப்பதை யெல் லாம் யநுபவிக்கிறாய். ஏனெனில் நீ யக்ஞஞ்செய்பவன். நீ ருதத்துடன் யக்ஞஞ் செய்வாய். அதனால் பலமுடன் பெரு கியுளாய். அதி இளைஞனே! உன்து அவிகளைஇன்று வகித் துச்செல்லவும். கரு. மனிதன் தினந்தோறும் செல்வம் செ ழிப்பு வீரர் மிகும் புகழை அக்கினியா லடையவேண்டும்.

கசு. சோமனே! செல்வங்கண்டு செழுமைசெய்யும் நோய் சிதைக்கும் நீ, செழிப்புச் செழித்து எமக்கு சில நண்பனுகவும்.

கஎ. வீடு காப்பவர்களே! இங்கு வாருங்கள். மருத் துக்களே! எம்மைப் புன்மையினின்று பிரித்து நீங்கள் போகாமலிருங்கள். கஅ. ஏனெனில் மருத்துக்களே! நாங்கள் மனித சக்தியுடன் பூர்வ சரத் ருதுக்களினின்று உங்களை நாடியுளோம். கக. உங்கள் மகிமை அகாத்தி னின்று கிளம்புகின்றன. துரிதர்களே! உங்கள் நாமங் களைப் பிரகாச மாக்குங்கள். மருத்துக்களே! கிரகபதி யளிப்பு கிரகத்தின் ஆயிரம் பாகமான இதை யங்கீகரியுங் கள்.

உ0. காலை மாலையில் அவி மிகுந்து நெய் சுமக்கும் யுவதி எந்த சக்தி மானை நாடுகிறளோ, அவனுக்கு

தனது சோதியே செல்வம் விரும்பி வருவது போலாகும். உக. அக்கினியே ! அமுதனே ! மிக்க இசையும் இவ்வவி களை திவ்ய யஜனத்துக்குச் சுமந்து செல்லவும். அவர்கள் இச்சுகந்தங்களை யங்கீகரிக்கட்டும்.

உஉ. கண்வர்களே! சரசமாய் இரத சுபமுடனுகும் மருத்துக் கிரீடா கணங்களைப் புகழுங்கள். உங. மருத் துக்கள் குதிரைகளைப்போல் துரிதமாகி இனிய பசுக்கள் போல் பாலளித்து சுந்தர பாலர்கள் போல் கிரகத்தில் ஸ்திரமாகி காட்சி காணுங் காளைகளைப்போல் தாங்களே விளையாடுகிறார்கள். உச. அவர்கள் பிரயாணம் பெருமைக்கு, தங்கள் கணங்களைச் சேர்த்து, முன் செல்லுங் கால் புவி நடுங்கி யலறுகின்றது. குலுக்குமவர்கள் கலக்கிக் கிரீடைசெய்து கனலாயுதங்களுடன் தங்கள் சக்தியைப் புலனுக்குகிறார்கள். உரு. மருத்துக்களே ! நீங்கள் உச்சியிலுள்ள எவ்வழிகளிலும் அசையும் திரள்களை பறவைகள் போல் ஒன்று சேர்க்குங்கால், மேகங்கள் உங்கள் இரதங்களில் சலத்தைச் சிந்தும். துதிப்பவனுக்கு மது நிற நெய்யைப் பொழியுங்கள்.

உசு. அவர்கள் பலர் பிரியன், சனத் தலைவன் அவி சுமக்கும் அக்கினியை அவிகளுடன் சதா கால மழைக்கிகள். உஎ. அவர்கள் நெய் சிந்து சாதனத்துடன் தேவாக்கினியை அவி சுமக்க சதா காலம் துதி செய்கிறார்கள்.

உஅ. இந்திரனே. அக்கினியே ! சோதியின் திரைகளை யலங்கரியுங்கள். உகூ. அவன் விருத்திரனைக் கொல்லுகிறான்.

நO. நாங்கள் எல்லாப் பக்கங்களிலு மிந்திரனை யழைக்கிறோம். நக. மனிதர்கள் இந்திரனை யழைக்கிறார்கள்.

கூக. விசுவ கர்மனே ! நீ அவியால் ஓங்கி வளர்ந்து யக்ஞஞ் செய்யவும். கூகூ. விசுவகர்மனே ! பலஞ்செய்யும் மவியுடன் நீ, இந்திரனைச் செய்துளாய். ச. கூ. ககூ.

---

## அநுவாகம் உ௦கூ.

### ஸ்தோம பாகம்

க. நீ கதிராகும், கிரகத்துக்கு நான் உன்னை பற்று கிறேன். நீ கிரகத்தைத் தூண்டவும். நீ ஆதரவாகும், அறத்துக்கு நான் உன்னைப் பற்றுகிறேன், நீ அறத்தைத் தூண்டவும். நீ அநுசரிப்பாகும். சோதிக்கு நான் உன்னை பற்றுகிறேன், நீ சோதியைத் தூண்டவும். நீ சந்தியாகும், வானத்துக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். வானத்தைத் தூண்டவும். நீ தூணாகும். தரணிக்கு நான் உன்னைப் பற்றுகிறேன. நீ தரணியைத் தூண்டவும். நீ முட்டாகும், மழைக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். மழையைத் தூண்டவும். நீ முன் வீச்சாகும். பகலுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். பகலைத் தூண்டவும்.

உ. நீ பின் வீச்சாகும். இரவுக்கு நான் உன்னை நாடுகிறேன், இரவைத் தூண்டவும். நீ ஆர்வன், வசுக்களுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன், நீ வசுக்களைத் தூண்டவும். நீ அறிவாகும். ருத்திரர்களுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன். ருத்திரர்களைத் தூண்டவும். நீ சோதியாகும். நான் ஆதித்தியர்களுக்கு உன்னைப் பற்று கிறேன். ஆதித்தியர்களைத் துரிதமாக்கவும். நீ ஓஜசாகும். நான் பிதுருக்களுக்கு உன்னைப் பற்றுகிறேன், பிதுருக்களைத் தூண்டவும். நீ இழையாகும். நான் பிரசைகளுக்கு உன்னைப் பற்றுகிறேன். பிரசைகளைத்

---

உ௦அ. கருத்து—அக்கினி போற்று.

தூண்டவும். நீ சமர் சகிப்பவன். பசுக்களுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன்: பசுக்களைத் தூண்டவும்.

௩. நீ செல்வவான். நான் செடி கொடிகளுக்கு உன்னைப் பற்றுகிறேன். நீ செடி கொடிகளைத் தூண்டவும். நீ யுக்தாயுதத்தால் ஜயமாகுபவன். நான் இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இந்திரனைத் தூண்டவும். நீ அதிபதியாகும். நான் பிராணனுக்கு உன்னைப் பற்றுகிறேன். பிராணனைத் தூண்டவும். நீ அபானனாகும். நான் அபானனுக்கு உன்னைப் பற்றுகிறேன். நீ அபானனைத் தூண்டவும். நீ அசைபவனாகும். கண்ணுக்கு நான் உன்னைப் பற்றுகிறேன்; கண்ணைத் துரிதமாக்கவும். நீ சக்தி யளிப்பவன், செவிக்கு நான் உன்னைப் பற்றுகிறேன், நீ திரிவிருதமாகும்.

௪. நீ பிரவிருத்து, நீ சம்விருத்து, நீ விவிருத்து, நீ ஏறுபவன், நீ இறங்குபவன், நீ முன்னேறுபவன், நீ பின்னேறுபவன்.

௫. நீ செல்வவான். நீ சோதியுள்ளவன், நீ நலஞ் ஜயிப்பவன். ச. ச. க.

---

## அநுவாகம் உ௧௦.

### சுவர்க்கப் படை

க. நீ இராணியாகும், கீழ்த்திசை; திவ்ய வசுக்கள் உன் அதிபதிகளாகும்; அக்கினி உன்னிடமிருந்து ஆயுதங்களைத் தடுக்கிறான். திருவிருத ஸ்தோமன் தரணியில் உன்னைத் தாங்கவேண்டும். ஆஜ்யத் துதி உன்னை திடத்தில் ஸ்தாபிக்கட்டும். இரதந்தர ஸாமன் உனது ஆதரவாகட்டும்.

---

உ௦க. கருத்து—நீ யார்? உனக்கு வேண்டுவதென்ன?

உ. நீ விராட்ஞகும், தென் திசை; திவ்ய ருத்திரர்கள் உனது அதிபதிகளாகும், இந்திரன் உன்னிடமிருந்து ஆயுதங்களைத் தடுக்கிருன். பஞ்சதச ஸ்தோமன் உன்னைப் புவியில் தாங்கவேண்டும். பிரௌகத் துதி உன்னை திரத்தில் ஸ்தாபிக்கட்டும். பிரகத் சாமன் உனது ஆதரவாக வேண்டும்.

ங. நீ சம்ராடஞகும், மேற் திசை; திவ்யாதித்தியர்கள் உனது அதிபதிகள். சோமன் ஆயுதங்களை உன்னிடமிருந்து தடுக்கவேண்டும். சப்த தச ஸ்தோமன் உன்னை சகத்தில் தாங்கட்டும். மருத் வாதீய துதி உன்னைத் திடத்தில் ஸ்தாபிக்கவேண்டும், வைரூப சாமன் உன் ஆதரவாகட்டும்.

ச. நீ சுவராடஞகும். வடதிசை, விசுவே தேவர்கள் உனது அதிபதிகள். வருணன் உன்னிடமிருந்து ஆயுதங்களைத் தடுக்கிருன். ஏகவிம்ச ஸ்தோமன் உன்னை புவியில் தாங்கவேண்டும், நிஷ்கேவல்ய யுக்தன், உன்னை திடத்தில் ஸ்தாபிக்கட்டும், வைராஜா சாமன் உன் ஆதரவாக வேண்டும்.

ரு. நீ அதி பத்தினியாகும், பெருந்திசை. திவ்ய மருத்துக்கள் உனது அதிபதிகள். பிரகஸ்பதி உன்னிடமிருந்து ஆயுதங்களைத் தடுக்கிருன். உஎ, ஙங ஸ்தோமங்கள் புவியில் உன்னைத் தாங்கட்டும் வைசுவதேவ அக்கினி, மாருத உக்தங்கள் திடத்தில் உன்னை ஸ்தாபிக்கவேண்டும். சக்வரம் ரைவத ஸாமன்கள் உனது ஆதரவாகட்டும்.

சா. தேவர்களில் முதன்மையாய் தோன்றும் ரிஷிகள் உன்னை சோதியினளவு விரிவுடன் வானத்துக்காக வியாபகமாக்கட்டும். அதிபதியும், விதாத்ருவும் உன்னை விசாலமாக்க வேண்டும். அவர்களெல்லா மிணைந்து உன்

னேயும் யஜமானனேயும் சுவர்க்க உலகமான உயர்வின் எல்லேயில் உன்னே ஸ்தாபிக்கட்டும். ச. ச. உ.

---

## அநுவாகம் உகக.

### திசைப் படை

க. இவன் சிகப்பு ரோமம் சூரிய கிரணங்களுடன் பூர்வத்திலுளான். இரத கிருத்ஸம், இரௌதஜசம்,—அவனது கணம் கூட்டங்களின் தலேவர்களாகும். கிருதஸ்தலே புஞ்சிகஸ்தலே—அவனது அப்சரசுகளாகும், யாதுதானர்களே அவனது அம்பு, அரக்கர்கள் அவனது ஆயுதமாகும்.

உ. வலது பக்கமுள்ள இவன் விசுவகர்மாவாகும்;இரதசுவனம் இரேத சித்திரம் அவனது கணம் கூட்டங்களின் தலேவர்களாகும். மேனகை, சஹஜன்யை, அவனது அப்சரசுகளாகும்; நடிக்கும் பிராணிகள் அவனம்பு; மனிதர் மரிப்பே அவனுயுதம்.

ங. பின் புறமுள்ள இவன் விசுவ வியாபகனுகும். இரதப் பிரோதமும் அஸ்மரதமும் அவனது கணம் கூட்டத்தலேவர்கள். பிரமலோசந்தீயும் அநும்லோசந்தீயும் அவனது.அப்சரசுகளாகும், சர்ப்பங்கள் அவனம்பு, புலிகள் அவனுயுதம்.

ச. இடது பக்கமுள்ள இவன் செல்வஞ் சேகரிப்பவன், சுசேனனும், சேனஜித்தும் அவனது கணம் கூட்டங்களின் தலேவர்களாகும். விசுவாசியும் கிருதாஜியும் அவனது அப்சரசுகள், சலங்கள் அவனது அம்பு, காற்று அவனது ஆயுதமாகும்.

ரு. உயரிலுள்ள இவன். செல்வங் கொண்டு வருபவன். தார்க்ஷியன் அரிஷ்டநேமியும் அவனது கணம்

---

உ௪0. கருத்து—நீங்கள் எங்கும் ஸ்தாபிதமாக வேண்டும்

கூட்டங்களின் தலைவர்களாகும்; ஊர்வசியும் பூர்வசித்தியும் அவனது அப்சரசுகள். மின்னல் அவனது அம்பு, அவன் ஆயுதம் இடி முழக்கமாகும். சு. அவர்களுக்கு நமஸ்காரம், அவர்கள் எமக்கு சுகமளிப்பவர்களாகட்டும்; எமது துவேஷியையும் எம்மை துவேஷிப்பவனையும் உங்கள் வாய்களில் நான் வைக்கிறேன்.

எ. நான் உன்னை ஆயுசு நிலயம் ஆதரவின் நிழலில் அமைக்கிறேன்; கடலுக்கு நமஸ்காரம். கடல் சோதிக்கு நமஸ்காரம்.

அ. பரமேஷ்டி வான எல்லையில் விரிந்து விசாலனாய், வன்மை வலிமையுடனாகி வெற்றி பெரு முன்னை ஸ்தாபிக்க வேண்டும். சோதியைத் தாங்கவும், சோதியை திடமாக்கவும், ஒவ்வொரு பிராணன் அபானன் வியானன் உதானன் ஆதரவு அசைவுக்கு சோதியை இம்சிக்காதே: சூரியன் அதி சுவஸ்தி அதிசுகமளி கவசத்துடன் உன்னைக் காக்கட்டும். அங்கிரசர்களைப் போல் அத்தேவதையுடன் நீ திடமாயுட்காரவும். கூ. பவனன் பெரிய அடைப்பினின்றுத் தப்பி புற்றரை விருப்பமாகி கனைக்கும் குதிரையைப்போல், அவனது சுடர் பின்னர், முழங்குவான். அப்பால் உனது பாதை கருமையுடனாகும். ச. ச. ந.

---

## அநுவாகம் உசுஉ.

### அக்கினி

க. அக்கினி சோதியின் சிரம் சிகரமாகும். புவியின் பதியாகும், அவன் இங்கு சல ரேதசைத் துரிதமாக்குகிறான். உ. அதர்வன் புஷ்கரம் விசுவத் தலைவனது சிரத்

---

உசுக கருத்து. சேனையும் சேனாபதியும்.

தினின்று உன்னைக் கடைந்தெடுத்துள்ளான். ௩. இந்த அக்கினி, கவி, பொருள் தலைவன், நூறு ஆயிரம் பலத்தின் பெருமானுகும். ௪. நீ யக்ஞம் வானத்தின் தலைவனுகும். நீ மங்களமான குதிரைகளுடன் சோதி-செல்லுகிறய். நீ சிறப்பளிக்குஞ் சிரத்தை, சோதியில் ஸ்தாபிக்கிறய். அக்கினியே! உனது சுவாலையை யவி சுமக்கச் செய்கிறய். ௫. மனித சமித்துக்களால் பசுவைப்போல் வரும் உஷையைக் காண அக்கினி எழுச்சியாக்கப்பட்டுளான். கிரணங்கள் கிளையேறும் சிறு கொடிகளைப்போல் சோதி நோக்கிச் செல்லுகின்றன.

௬. நாங்கள் எமது துதிமொழியை, கவி யக்ஞாருகன் காளையான விருஷபனுக்குச் சொல்லியுளோம். கவிஷ்டரன் வணக்கமுடன் அக்கினிக்கு சோதியில் சுந்தரம் போல் விரிந்து விசாலமாகும் இந்த ஸ்தோமத்தை எழுச்சி யாக்கியுளான்.

௭. விழிப்பு வன்மை, தேஜசு விளங்கும் அக்கினி பெருஞ் சோதி சேர் சுவாலையோடு புதிய க்ஷேமத்துக்காக மனிதர் காப்பாகப் புலனுக்கப் பட்டுளான். அவன் பரதர்களுக்குப் புனிதமாகிக் கொண்டு அதி ஒளி வீசுகிறன். ௮. அக்கினியே! நீ, ஒவ்வொருவனுஞ் சாய்ந்து மறைவில் ஒளியுங்கால், அங்கிரசர் உன்னைக் கண்டுளார். நீ தேய்க்கப்பட்டால் ஓங்கும் பலமுடனுவாய். அங்கிரசனே! அவர்கள் உன்னை திடமகன் எனச் சொல்லுகிறர்கள். ௯. மானிடர்கள் யக்ஞக் கொடி முதல் புரோகிதனை அக்கினியை முந்நிலைகளில் எழுச்சியாக்குகிறர்கள். அவன் தர்ப்பையில் இந்திரன் தேவர்களுடன் தோய்ந்து அதிதிடன் ஹோதாவா யமரட்டும். ௧௦. அக்கினியே! பலர்பிரியனே! ஜந்துக்கள் பிரசைகளில அதிசோதி, சுடர் கேசங்களுடனுகு முன்னை அவி வகிக்க யழைக்கிறர்கள்.

கக. நண்பர்களே! திடன் திடமகன் சனத்தலைவனை அக்கினிக்கு ஒருமையுடன் அருகதையான துதியையும் உணவையு மளியுங்கள்.

கஉ. அக்கினியே! பலம் மிகுபவனே! நீ அரியனுக்கு உரியவற்றை யெல்லாம் ஒன்று சேர்க்கிறாய். நீ புவியின் நிலயத்தில் எழுச்சியாக்கப் பட்டுளாய். நீ எமக்கு எல்லா நற்பொருள்களையுங் கொண்டு வரவும். கஙு. நான் இவ்வணக்கத்துடன் அன்பன் அமுதன் திடமகன் அநுகூலயக்ஞன் அறிவு புலனுக்கும் அனைத்தின் தூதனை அக்கினியை அழைக்கிறேன். கச. ஒளியுள்ள அவன் உலகங் காக்கும் பொருள்களைச் சேர்ப்பான். யக்ஞம் சனங்களின் திவ்ய செல்வத்தையும் வசுக்களின் நல்லறிவு நற்காப்பை யடைந்துள்ளது. அவன் நன்கு அழைக்கபட்டால் துரிதமாவான். கரு. தாராளமாய் அளிப்பவனது திவ்ய யக்ஞ ஒளி உச்சியில் எழுச்சியாகியுள்ளது. சிகப்புக்கிரணம் சோதி பரிசித்துச் செல்லுகின்றது. மனிதர்கள் ஒன்று சேர்ந்து அக்கினியைப் புலனுக்குகிறார்கள். கசு. அக்கினியே! ஜாதவேதசனே! பசுமிகுந்து பல மகனும் பொருள் தலைவனும் நீ, எங்களில் பெரும்புகழை யளிக்கவும். கஎ. வசு, கவி, மொழிக்கருகனும் மலரும் பல தோற்றமுடனும் நீ எமக்குப் பொருள்களுடன் பிரகாசிக்கவும். கஅ. இரவு பகல் உஷையின் தலைவனை அனலே! அக்கினியே! கூறிய சுவாலைகளால் அரக்கர்களை எரிக்கவும். கசு. தேவனே! அக்கினியே! நாங்கள் அழியா ஒளியுடனுகு முன்னை பிரகாசமாக்குகிறோம். உனக்கு இவ்வதிசய விருப்பச் சமித்து சோதியில் ஒளியைச் செய்யுங்கால், நீ துதி செய்பவர்களுக்கு உணவைச் சுமக்கவும். உ0. அக்கினியே! சனத்தலைவனே! சுத்த சந்திரனே! அவி சுமப்பவனே, பிரஜாபாலகனே, சுத்தச் சோதியின திபதியே! உனக்கு இவ்வவி

ருக்குடன் யளிக்கப்பட்டுளது. நீ துதிப்போர்களுக்கு உணவைச் சுமக்கவும். உக. நல்ல சந்திரனே! நீ உன் வாயில் நெய்யின் இருசாதனங்களைப் பக்குவ மாக்கு கிறாய்! பலபதியே! நீ எமது துதிகளுக்கு எம்மைப் பூரணமாக்கவும். நீ உணவைத் துதிப்பவர்களுக்குச் சுமக்கவும். உஉ. அக்கினியே! நாங்கள் மங்களமான உன்னை இருதயம் பரிசிக்கும் இனியதுரித சங்கற்பம் போல், துதி மொழிகளால் உனக்கு இதை குதிரைபோல் நன்கு செய்யட்டும். உங. அக்கினியே! நீ திடருதம் தூயப் பிரேரணை, திவ்ய சங்கற்பத்தின் தலைவனுகியுளாய். உச. அக்கினியே! நாங்கள் உனக்கு இன்று இம்மந்திரங் களால் கானஞ்செய்து உபாசனை யளிக்கட்டும், உன் சக் திகள் சோதியினின்றுபோல் முழக்க மாகின்றன. உரு. அக்கினியே! உனது எல்லா முகங்களோடு மேன்மை யளித்துக்கொண்டு சுவர்க்கச் சோதியைப்போல் எங்கள் இத்துதி மொழிகளில் நீ மங்கள மளிப்பவனுகவும். உசு. நான் சக்திமகன் ஜாதவேதசன் செல்வமளித்து விப்பிர னைப்போல் சகலமறியும் அக்கினியை ஹோதாவாக எண்ணுகிறேன். உஎ. தேவனை அக்கினி, நன்கு ஆகு தம் செய்யுங்கால் சுத்த ஒளி சுந்தரநெய் யநுசரித்து தேவர் பக்கம் கிருபையுடன் உச்சியிலாகி நேர்மை யாயுளான். உஅ. அக்கினியே! நீ எமது பக்கமாகி பிரிய காப்பனும் இரட்சகனுகவும். உகூ. ஒளிவீசி உயரிய சோதியுள்ளவனே! நாங்கள் உன்னை நண்பர் நல் மனத் துக்கு நாடுகிறோம். ஙo. ஒளி சோதியின் பிரகாசமான அக்கினியே! உன் அதி சோபையுடன் வந்து எமக்குச் செல்வத்தை யளிக்கவும். ச. ச. ச.

---

உகஉ. கருத்து—அக்கினியைப் பற்றவும்.

## அநுவாகம் உகரு.

### சாயுஜ்யம்

௧. நான் துதி திடம் தேசசு சந்தம் ஸ்தோமம் இணங்கு மிசை நெய்துளி இந்திராக்கினியுடன், சிறப்புச் செல்வச் செழுமைக்கு உன் உடன் பிறப்பார் நடுவே உன்னைப் பக்குவமாக்குகிறேன்; நான் உன்னை என்னுடன் இணங்கு மிசைகளோடு ஒன்று சேர்க்கிறேன்.

௨. நீ துலை அம்பை நிதந்தி சுபுணிகை மேகயந்தீ வர்ஷயந்தீ அப்பிரயந்தீ என்னும் நாமமுள்ளவன், நான் பிரசாபதி விசுவப் புலன்களுடன் உன்னை வைக்கிறேன்.

௩. உணவு பூரண, புவியான நீ, சலத்தின் ஊற்றுகும். மனிதர்கள் உனது இரட்சகர்கள். இங்கு அக்கினி வைக்கப்பட்டுளான்; அதை நான் நாடுகிறேன்; அது எனது காப்பும் கவசமுமாக வேண்டும். ௪. பிரமத்தால் பூரணமாகும் அதிசோதியான நீ, வானமாகும்; மருத்துக்கள் உனது இரட்சகர்கள், வாயு இங்கு வைக்கப்பட்டுளான். அதை நான் நாடுகிறேன், அது எனது காப்பும் கவசமுமாக வேண்டும். ரு. அமுதத்தால் பூரணமாகும் சோதியான நீ, ஜயிக்கப்படாதவன்; ஆதித்தியர்கள் உனது இரட்சகர்கள், இங்கு சூரியன் வைக்கப்பட்டுளான், அதை நான் நாடுகிறேன், அது எனது காப்பும் கவசமுமாகவேண்டும். ச. ச. ரு.

---

## அநுவாகம் உகச.

### விசுவ சோதி

௧. பிரகஸ்பதி புவியினுயரத்தில் சோதி மிகு முன்னை, விசுவமான பிராணனபானனுக்கு ஸ்தாபிக்கட்

---

உகரு. கருத்து. நமது துணைவர்கள்.

டும். விசுவச் சோதியைத் தாங்கவும். அக்கினி உனது அதிபதியாகும். உ. விசுவகர்மன் வான உயர்வில் சோதிமிகு முன்னை விசுவமான பிராணனபானனுக்கு ஸ்தாபிக்கட்டும், நீ விசுவச் சோதியைத் தாங்கவும், வாயு உனது அதிபதியாகும். ௩. பிரசாபதி சோதியின் எல்லையில் சோதிமிகும் உன்னை எல்லா பிராணன் அபானனுக்கு ஸ்தாபிக்கட்டும். நீ விசுவசோதியைத் தாங்கவும், பரமேஷ்டி உனது அதிபதியாகும்.

ச. நீ பூர்வ காற்றளிப்பவன், நீ மழை கொடுப்பவன், நீ மின்னல் அருள்பவன். இடி முழங்குபவன், சலம் பொழிபவன். ரு. நீ அக்கினி வழியாகும்; நீ தேவர்களின் அக்கினி வழியாகும். சு. நீ வாயு வழியாகும், நீ தேவர்களின் வாயு வழியாகவும். எ. நீ வான வழியாகும் நீ தேவர்களின் வான வழியாகும். அ. நீ வானமாகும்; வானத்துக்கு உன்னை நாடுகிறேன். கூ. நான், ஒளி கடல் சலம் எழுச்சி நீர்த்தன்மை ஆதித்தியர்கள் சோதியின் சோபைக்கு உன்னை நாடுகிறேன். க0. நான் ரிக்கு சோதி சுவாலை ஒளி வீச்சு பிரகாசத்துக்கு உன்னை நாடுகிறேன். கக. நான் பாலளிக்கு முன்னைப்பாலில், தேசளிக்கு முன்னை தேசசில், புகழளிக்கு முன்னைப் புகழில் பொருள் அளிக்கு முன்னைப் பொருளில் பிரகாசமளிக்கு முன்னைப் பிரகாசத்தில், ஸ்தாபிக்கிறேன்; நீ அங்கிரசனைப் போல், இந்த ரிஷி தேவதை பிரமத்துடன் திடமாயுட்காரவும்.

---

## அநுவாகம் உகரு.

### பூயாசுகிருதம்

க. நீ விருத்தி செய்பவன், நீ விசால நிலயஞ்செய்பவன், நீ பூர்வத்திலுள்ளவன், நீ உச்சியாகும், நீ வானம

---

உகச. கருத்து. எல்லா சோதியையும் நாடவும்.

மருபவன், வானத்தில் அமையவும். உ. நீ சலஞ்சாய்பவன் பட்சி சாய்பவன், பறவையிலுட்காருபவன். கருடனில மை பவன், ஒங்கு முச்சியிலுட்கார்பவன்.

ங. நான் உன்னை புவியின் பொருளில் ஸ்தாபிக்கிறேன். நான் உன்னை வானச் செல்வத்தில் ஸ்தாபிக்கிறேன். நான் உன்னைச் சோதிச் செல்வத்தில் ஸ்தாபிக்கிறேன், நான் உன்னை திசைச் செல்வத்தில் ஸ்தாபிக்கிறேன். நான் செல்வமளிக்கு முன்னை செல்வத்தில் ஸ்தாபிக்கிறேன்.

ச. என் பிராணனைக் காக்கவும், என் அபானனைக் காக்கவும், என் வியானனைக் காக்கவும், என் ஆயுளைசக் காக்கவும். என் விசுவாயுளைசக் காக்கவும். என் பூரணு யளைசக்காகவும்

ரு. அக்கினியே! இருதயம் என்பது உனது பெரிய நாமமாகும், நீ வரவும், நாம் ஒன்று சேர்வோம். அனலே! நீ பஞ்ச சனங்களின் நடுவே யுளாய். சு. நீ திடம், கடல் யாவர், அயாவர், ஸப்தம், வழிகள், துணைகளாகும். ச. ஈ. எ.

---

## அநுவாகம் உகசு.

### இந்திர தனு

க. நீ அக்கினியினுல் விசுவஞ் ஜயிப்பவன், சூரியனுல் சுவராடன், சக்தியால் சக்திபதி. விருஷபத்தால் துவஷ்டா. யக்ஞத்தால் மகவான். தட்சிணையால் சுவர்கம், கோபத்தால் விருத்திரன் கொல்பவன். பிரியத்தால் தேகந் தாங்குபவன், உணவால் செல்வம்; அவன் புவியால் ஜயித்துளான்; நீ ரிக்குக்களுடன் உணவு புசிப்பவன். வஷட் சப்தத்தால் வளர்பவன். சாமத்தால் காய

உகரு. கருத்து—செல்வம் நாடி நீண்ட சீவனையடையவும்

காப்பன். விராஜனோடு சோதி மிகுபவன். பிரமத்தால் சோமபானஞ் செய்பவன்; அவன் யக்ஞத்தைப் பசுக்களால் தாங்குகிறான். அவன் க்ஷத்திரத்தால் மானிடர்களைத் தாங்குகிறான். இரதம் குதிரையுடன் ஆயுதந்தரிப்பவன். அவன் ருதுக்களுடன் பிரபுவாகும். வருஷத்தோடு வியாபிப்பவன். தவத்தால் எதிர்க்க முடியாதவன். தேகங்களோடு சூரியனாகும். ச. ச. அ,

---

## அநுவாகம் உகஎ.

### யக்ஞ தனு

க. நீ சோமனுக்கு வரும் பொழுது மனத்தால் பிரஜாபதியாகும்; நீ தீட்சையில் தாத்ரு, தரிப்பதில் சவிதாவாகும்; சோமன் வாங்க பசுவில் பூஷணன், பந்தத்தில் வருணன், வாங்கப்படுவதில் அசுரனாகும், வாங்கியவுடன் மித்திரன்; ஸ்தாபிதத்தில் சிபிவிஷடன். முன் செலுத்தப்படுங்கால் மானிட இன்பனாகும், வரவில் அதிபதி, தலைமைச் செயலில் பிரஜாபதியாகும்; அனல் பீடத்திலக்கினி. அக்கினி பீடத்தினின்று போகுங்கால் பிரகஸ்பதி, அவி சுமப்பதில் இந்திரன்; ஸ்தாபிதமாகுங்கால் அதிதியாகும். கீழ் எடுத்துச்செல்லுங்கால் நீ விஷ்ணுவாகும், நனையுங்கால் அதர்வன், பொழியுங்கால் யமன், புனிதமாகுங்கால் புனித பூஜ்யம் பருகுபவன். சுத்தமாகுங்கால் வாயு; பாலுடன் சேருங்கால் மித்திரன், துணுக்குத் தானியங்களில் மந்தினன்; புறமெடுக்குங்கால் விசுவே தேவர்கள்; ஆகுதத்தில் ருத்திரன். நிறைவில் வாயுவாகும்; புலனாகுங்கால் மனிதர் நோக்குபவனாகும், வருங்கால் உணவு, பிதுரு புகழன்; பற்றுங்கால் பிராணன்

---

உகசு. கருத்து. எதனால் எது?

கடைச் ஸ்னனம் செல்லுங்கால் நதியாகும்; சென்றபிறகு சமுத்திரம், மூழ்குங்கால் சலம்; பூரண மணுகிய வுடன் பரமாகும். ச. ச. க.

---

## அநுவாகம் உக அ.

### நட்சத்திர சேனை

க. நீ கார்த்திகை நட்சத்திரம், அக்கினி தேவதை; நீங்கள் சோமன் தாத்ரு அக்கினி பிரஜாபதியின் பிரகாசங்களாகும்; நான் ஒளிக்கு உன்னை சுடருக்கு உன்னை சோதிக்கு உன்னை ரிக்குக்கு உன்னை சுவாலைக்கு உன்னை நாடுகிறேன்.

உ. நீ ரோஹிணீ நட்சத்திரம், பிரஜாபதி தேவதை, மிருக சீர்ஷ நட்சத்திரம். சோமதேவதை; திருவாதிரை நட்சத்திரம், ருத்திர தேவதை; இரு புனர்பூச நட்சத்திரம் அதிதி தேவதை; பூசம் பிரகஸ்பதி தேவதை. ஆயில்ய நட்சத்திரம் பாம்புகள் தேவதை; மக நட்சத்திரம் பிதுருக்கள் தேவதை. இரு பூர நட்சத்திரம் அரியமான் தேவதை; இரு பூர நட்சத்திரம் பகதேவதை. ஹஸ்த நட்சத்திரம் சவிதா தேவதை; சித்திரை நட்சத்திரம், இந்திர தேவதை; சுவாதி நட்சத்திரம் வாயுதேவதை, இரண்டு விசாக நட்சத்திரம் இந்திராக்கினி தேவதை; அநுஷ நட்சத்திரம் மித்திரன் தேவதை; ரோஹிணீ நட்சத்திரம் இந்திரன் தேவதை; இரு விசுருத நட்சத்திரம். பிதுருக்கள் தேவதை; அஷாட நட்சத்திரம் சலங்கள் தேவதை. அஷாட நட்சத்திரம் விசுவே தேவர்கள் தேவதை; சிரோண நட்சத்திரம் விஷ்ணு தேவதை: சிரவிஷ்டா நட்சத்திரம் வசுக்கள் தேவதை; சதய நட்சத்தி

---

உகஎ கருத்து,—ஒருவன் பலரூபமாகு முண்மை.

ரும் இந்திரன் தேவதை; பிரோஷ்டபத நட்சத்திரம். ஒரு பாத அஜதேவதை. பிரோஷ்டபத நட்சத்திரம் ஆழப்பாம்பு தேவதை; ரேவதீ நட்சத்திரம் பூஷண தேவதை; இரு அசுவ -யுஜ நட்சத்திரம், அசுவினி தேவதை; அப பரணி நட்சத்திரம் யமன் தேவதை.

௩. தேவர்கள் எதை ஸ்தாபித்தார்களோ அதனுல் மேற்புறம் பூரணமாயுள்ளது. ௪. ௪. ௧௦.

## அநுவாகம் உ௧௧.

### ருதுப் படை

௧. நீங்கள் வசந்தத்தின் மது மாதவங்கள்; உ. நீங்கள் கிரீஷ்மத்தின் சுக்கிரன் சுசிகள்; ௩. நீங்கள் மழையின் நபன் நபஸ்யர்கள். ௪. நீங்கள் சரத்தின் இஷன் ஊர்ஜன்கள். ரு. நீங்கள் ஏமந்தத்தின் சஹன் சஹஸியர்கள். ௬. நீங்கள் சசியின் தபன் தபசியர்கள். எ. நீ அனலின் அக நட்பாகும்; சோதியும் புவியும், சலமும் ஓஷதிகளும், தனித் தனியா யனல்களும், எனது மேன்மைக்கு, ஒன்று சேர்ந்து சுகம் சக்தி செல்வ மளிப் பவை யாகட்டும்.

புவி சோதி நடுவிலுள்ள ஒரே மனமுடனுகும் அனல்கள் சசி ருது சம்பந்தங்களை யெல்லாம் சம்பாதித் துக்கொண்டு இந்திரனில் தேவர்களைப் போல்—அச் செயல்களில்—சூழவேண்டும்.

அ. நீ சோமன் சூரியன் அக்கினியின் முன் சித்த னும் சேர்ப்பவனுமாகும். ௯. நீ பித்ரு யமன், இந்திரனின் கோரம் கடூர வன்மையாகும். ௧௦. நீ மருத்து வருணன் தேவசவிதாவின் திடம் தரணியுமாகும். ௧௧. நீ மித்தி ரன் வருணன் மித்திரன் தார்த்துருவின் தாணும் தரிப்பு

---

உ௧அ. கருத்து—வான சாஸ்திர பீஜம்.

மாகும். கஉ. நீ வசுருத்திர ஆதித்தியர்களின் கீழ்மேற் திசையாகும்.

கங. அவர்கள் உன்து அதிபதிகள், அவர்களுக்கு நமஸ்காரம். அவர்கள் எமக்குப் பிரிய முள்ளவர்களாகட்டும். நான் எங்களை வெறுப்பவனையும் நாங்கள் வெறுப்பவனையும் உங்கள் வாய்களில் வைக்கிறோம். கச. நீ ஆயிரத்தினளவாகும், நீ ஆயிரத்தின் வண்ணமாகும். நீ ஆயிரத்தின் பருமனாகும். நீ ஆயிரத்தின் நகலாகும். நீ ஆயிரத்தின் சாரமாகும். நான் ஆயிரத்துக்கு உன்னை நாடுகிறேன்.

கரு. அக்கினியே! இவ்விருப்பங்கள் எனக்கு கறக்கும் பசுக்களாகவேண்டும். ஒன்று நூறு, ஆயிரம் பதினாயிரம் இலட்சம் பத்துலட்சம் கோடி பத்து கோடி நூறுகோடி ஆயிரங் கோடி பதினாயிரங்கோடி இலட்சங்கோடி பத்து லட்சங்கோடி பசுக்கள் எமக்காக வேண்டும்; அக்கினியே! இவ்விருப்பங்கள் எனக்கு அறுபது ஆயிரம் அழியாத பதினாயிரம் பசுக்களாக வேண்டும். நீங்கள் பலம் மிகுந்து வன்மை நிறைந்து மது சிந்தி நெய் சொட்டி பிரமம் பெருக்கி ருதத்தில் நிற்பவர்கள். அக்கினியே! எனக்கு தூரமுள்ள உலகில் திவ்யலோகமெனப் படும் இன்பங் கறப்பவர்களாகவேண்டும். ச. ச. கக.

---

## அநுவாகம் உஉ௦

[அசுவமேதம்].

**அசுவம்.**

க. சுவர்க்கம் காணும் திசைச் சமித்து, நாங்கள் விரும்புவதை யளிக்கவேண்டும்; மாதவன் மதுவினின்று

---

உகக. கருத்து—பன்னிரண்டு மாதம் முதலிய வற்றால் நான் பெரியவனாகவேண்டும்.

எம்மைக் காக்கவேண்டும் ; ஜயனும் இம்சையற்ற தேவ ஞான அக்கினி எங்கள் க்ஷத்திரத்தைக் காக்கட்டும். அவன் எங்களை ரட்சிக்கவேண்டும்.

உ. சாமன்களோடு இரதந்திரம், சந்தங்களின் விசுவ ரூபத்துடன் காயத்திரீ, தினங்களின் நிலையால், திருவிருத ஸ்தோமன் எம்மைக் காக்கவேண்டும். கடல் காற்று இப்பலத்தைப் பூரணமாக்கட்டும்

ங. சுத்தன் ஜயசீலன் சக்தி மிகுபவன் சக்தியளிக்கும் திசைகளின் கோரன், மலரும் தினத்தில் எம்மைக் காக்கவேண்டும். இந்திரனே ! அதிபதியான நீ, இதை பூரணமாக்கவும். நீ எமக்கு எங்கும் இப்பெரும் க்ஷத்திரத்தைச் பாது காக்கவேண்டும்.

ச. சுந்தரம், அதிபலம், சக்திமிகும் உக்கிர வீரமாய் க்ஷத்திரந்தாங்கும் பிரஹத் சாமன் திருஷ்டுபோடு எம்மைக் காக்கட்டும். இந்திரனே ! நீ கடல் காற்று பஞ்ச தச ஸ்தோமனோடு, நடுவில் இதைக் காக்கவேண்டும்.

ரு. திவ்யமும் தூய்மையுமான திசைகளின் நடுவிலுள்ள கீழ்ப்பாகம், எம்மைக்காக்கட்டும், விசுவேதேவர்களே ! தின மழையோடு திவ்யர்களான நீங்கள் எம்மை ரட்சியுங்கள் ; இந்த க்ஷத்திரம் சக்தியாயும் சஹஸ்ரமாயும் எதிர்ப்பு சூன்னிய ஜயிக்க முடியாத பலமுடனுகவேண்டும்.

சு. நாங்கள் இங்கு வைரூப சாமனில் இதற்கு வன்மையுடனுகவேண்டும். நாங்கள் அவனை சனங்களில் ஜகதீயுடன் ஸ்தாபிக்கிறோம். விசுவேதேவர்களே ! இச்சோதி இக்ஷக்ஷத்திரம், கடல், காற்று சப்த தச ஸ்தோமனோடு உக்கிர முடனுகட்டும்.

எ. திசைத்தர்த்தா திசை ஸ்தம்பன் இச்க்ஷத்திரத்தைத் தாங்குகிறன் ; அதி நண்பர்களுடன் வன்மை எமக்

காகவேண்டும்; மித்திரனே, வருணனே! அறிஞர்களான நீங்கள் தினங்களின் சாத்காலமுடன் பெருங்காப்பை இந்த இராஷ்டிரத்துக் களியுங்கள்.

அ. என் மனம் வைராஜ சாமனிலாகும். எனது வீரபலம் யநுஷ்டுபுனல் ஒருமையாகவேண்டும்; மித்திரனே, வருணனே! உங்கள் தலைமைத்துவங்களால் இச் க்ஷத்திரத்தை நனைந்து சிந்தும், நண்பர் நிறைவதாய் செய்து ரட்சியுங்கள். கூ. ஏமந்தம், சக்திமான், சம்ராடன் திசைகளின் நடுவே ஜய சிலர் சாமனால் எம்மைப் பூரணமாக்கவேண்டும். பெரிய சக்வரீக்கள் அநுகூல பவனங்களுடன் நெய் மிகும் இந்த யக்ஞத்தை இரட்சிக்கவேண்டும்.

க0. நெய், பால் மிகுந்து சுலப கறவையான திசைத் திவ்ய தேவி எம்மைக் காக்கட்டும். முன்பின் செல்லும் நீ ரட்சகனாகும்; பிரகஸ் பதியே! யம மய மொழியை இணைக்கவும்.

கக. சவிதா திசையுச்சி, ஓஷதிப் பிரீதி காரணன், தினசமூக வருஷத்துடன் எம்மை காக்கவேண்டும் அதிச் சந்தம் ரேவதிசாமன் எம்மை பகையன்னியில் செய்து எமக்குப் பிரிய முடனாகவேண்டும்.

கஉ. புவன பத்தினியே, விவசுவந்த சுவாசியே, முப்பது மூன்று ஸ்தோமமுள்ள நீ எமக்குப் பிரியமுடனாகவும். ஸவிதாவே! உனது தலைமையில் எமக்கு உதார திசை பால் மிகுந்து பிரீதி யுடனாகட்டும். கங. இனியசாந்தமான இச்சக்தியின் ஈசனாய் திசைகளின் நடுவே திடமான விஷ்ணு பத்தினி, பிரகஸ்பதி மாதரிசுவன் ஒன்று வீசும் காற்றுக்களுடனான வாயு எமக்குப்பிரியமுடனாகவேண்டும்.

கச. உணவு நிரப்பி செழிப்புடன் எங்கும் விரியும் புவி தாரக புவன ஈசனாய் சோதி ஸ்தம்பனாகும் விஷ்ணு

பத்தினியான அதிதி தனது அங்கத்திலுள்ள எமக்கு மங்களகரமுடனாகட்டும்.

கரு. வைசுவாநரன் எங்கள் ரட்சிப்புக்கு வரவேண்டும். கசா. சோதியின் எல்லையில், இன்று அநுமதி எங்களுக்கு வரட்டும் அநுமதியே! நீ பிரசன்னமாகவும். அவன் எந்த ஒளியுடன் எமக்காவான்? இன்று எவன் இணைக்கிறான்? ச. ச. கஉ.

[அசுவமேதத் தொடர்ச்சிக்கு உ௩௭-ம் அநுவாகம் பார்க்கவும்.]

---

## அநுவாகம். உஉக.

[உருத்திரம். உஉக—உ௩உ]

### வில்

க. ருத்திரனே! உன் கோபத்துக்கு நமஸ்காரம், உனது அம்புக்கும் நமஸ்காரம்; உனது வில்லுக்கு நமஸ்காரம், உனது கைகளுக்கும் நமஸ்காரம். உ. ருத்திரனே! சிவமான வில் சிவமான சரம் அதி சிவ அம்புடன் நீ எமக்குப் பிரியமுடனாகவும். ௩. ருத்திரனே! மலை சுற்றுபவனே! சிவமாய் கோரங்கழிந்து குற்றமற்ற காட்சியுடன் அதிசய சுகமளிக்கும் உன் காயத்தால் நீ எங்களைக் காணவும். ச. மலை திரிபவனே! மலை ரட்சகனே! உன் கையில், எய்வதற்குத் தரிக்கும் அம்பை நீ சிவமாக்கவும்; புருஷனின் புவியை இம்சிக்காதே. ரு. மலை வசிப்பவனே! புவிப் பிராணிகளான நாங்கள், அனைவரும் நோய் நீங்கி நல்நினைவுடனாக மங்கள மொழியோடு உன்னை நாடுகிறோம்.

சா. நீதி பேசும் மேன்மையான முதல் வைத்தியன், சர்வ சர்ப்பங்கள் யாது தான்னியர்களை யெல்லாம் சீர

---

உஉ0 கருத்து—நாங்கள் புவியால் மங்களமுடனாகவேண்டும்.

ழித்து நியாயம் மொழிந்துளான். எ. நாங்கள் மப்பு சிகப்பு பழுப்பு மங்கள மானவனின் கோபத்தை, திசைகளின் இத் தரணியைச் சுற்றிச் சூழும் ஆயிர ருத்திரர்களின் குரோதத்தை மறுத்துரைக்கிறோம். அ. அவன், சிகப்பன், நீலகண்டன், சரிந்து செல்பவன்; கோபாலர்கள் அவனைக் கண்டுளார்கள், எல்லாப் பிராணிகளும் சலஞ் சுமப்பவர்களும் அவனைப் பார்த்துளார்கள்; காணுமவன் எங்களைச் சுகமுடனாக்கவேண்டும். கூ. தயாளன் நீலகண்டன் ஆயிரங் கண்ணுள்ளவனுக்கு நமஸ்காரம். நான் அவனுடைய வீரர்களுக்கு வணக்கத்தையளித்துளேன். க0. பகவானே! நீ வில்லின் இரு பக்கங்களிலுள்ள வின்னாணை அறுக்கவும். உன் கையிலுள்ள ஆயுதத்தால் பகைவ ரம்புகளைக் கீழே சாய்க்கவும்.

கக. நூறுச் சரக்கூடும் ஆயிரங் கண்களுமுள்ள நீ உன் வில்லவிழ்த்து சரமுனைக் களைந்து எமக்குப் பிரியம் பட்சமுடனாகவும். கஉ. சடையனது வில்லவிழ்ந்துள்ளது, அவன் சரக்கூடும் சரமற்றதாகும். அவன் அம்புகள் பறந்து விட்டன. அவன் சரக்கூடு காலியாகும். கஙு. அதி தயாளனே! உன் கையிலுள்ள நோய் நீக்கும் வில்லாயுதத்தால் எங்கும் எம்மைக் காக்கவும். கச. தளர்ந்துள்ள உனது பயங்கராயுதத்துக்கு நமஸ்காரம்; உனது வில், இரு கைகளுக்கும் நமஸ்காரம். கரு. உனது வில்லினின்று வரும் அம்பு எம்மை எங்கும் விலகிச் செல்லட்டும்; உன் சரக்கூட்டை எம்மிடமிருந்து வெகு தூரத்தில் வைக்கவும். ச, ரு. க.

---

உஉக. கருத்து—வில்மகிமை.

## அநுவாகம் உஉஉ.

### சேனாதிபதி

க. பொன்கை சேனாதிபதிக்கு நமஸ்காரம், திசைகளின் தலைவனுக்கும் நமஸ்காரம். உ. பசுமை ரோமங்களுடனாகும் மரங்களுக்கு நமஸ்காரம்; பசுக்களின் பதிக்கு நமஸ்காரம். ந. பசும் புல் பிரகாசமுள்ளவனுக்கு நமஸ்காரம்; ஒளி வீசும் வழிகள் தலைவனுக்கு நமஸ்காரம். ச. பழுப்பன் பாழாக்குபவனுக்கு நமஸ்காரம், அன்னங்களின் பதிக்கு நமஸ்காரம். ரு. பொன்கேசன், புனித நூல் தரிக்கும் புஷ்டித் தலைவனுக்கு நமஸ்காரம்.

சு. பவனது ஆயுதத்துக்கு நமஸ்காரம். சகத்தின் பதிக்கு நமஸ்காரம். எ. வளையும் வில்லுள்ள ருத்திரனுக்கு நமஸ்காரம்; நிலபதிக்கு நமஸ்காரம். அ. சாரதி, சிதைப்பு சூன்னியனுக்கு நமஸ்காரம்;சோலைத் தலைவனுக்கு நமஸ்காரம். கூ. சிகப்பன் சிறந்தவனுக்கு நமஸ்காரம்; செடி கொடி தலைவனுக்கு நமஸ்காரம். க0. மந்திரி வணிகனுக்கு நமஸ்காரம். மர்மங்களின் தலைவனுக்கு நமஸ்காரம். கக. புவி பரப்பும் பொருள்செய்யும் பிரசைக்கு நமஸ்காரம்; ஒஷதி பதிக்கு நமஸ்காரம். உச்ச கோஷம் உயர் கர்ச்சனை செய்பவனுக்கு நமஸ்காரம்; காலாட் காப்பவனுக்கு நமஸ்காரம். கந. பூரணம் பற்றி ஓடுபவனுக்கு நமஸ்காரம்; வீரர் தலைவனுக்கு நமஸ்காரம். ச. ரு. உ.

---

உஉஉ. கருத்து—பலவித ருத்திரர்களை பயன்செய்து கொள்ளுங்கள்.

# அநுவாகம் உ௨௩.

**கள்வன்**

க. பலன், பாழாக்குபவனுக்கு நமஸ்காரம்; எதிர்ப்புத் தலைவனுக்கு நமஸ்காரம். உ. தலைவன் கத்தி தரிப்பவனுக்கு நமஸ்காரம்; திருடர் தலைவனுக்கு நமஸ்காரம். ௩. ஆயுதந் தரித்து அம்புறாக் கூடு உரியவனுக்கு நமஸ்காரம்; கள்வர் தலைவனுக்கு நமஸ்காரம். ச. வஞ்சகன் பெரும் வஞ்சகனுக்கு நமஸ்காரம்; சோரர் தலைவனுக்கு நமஸ்காரம். ௫. சலனன் சுற்றுபவனுக்கு நமஸ்காரம். பெருஞ் சோலைத் தலைவனுக்கு நமஸ்காரம்.

௬. அழிக்கும் வச்சிராயுதம் தரிப்பவர்களுக்கு நமஸ்காரம்; பறிப்பவர் பதிக்கு நமஸ்காரம். எ. கத்தி சுமந்து இருள் சுற்றுபவர்களுக்கு நமஸ்காரம்; வழிபறி தலைவனுக்கு நமஸ்காரம். அ. மலைகளில் தலை கவச மணிபவனுக்கு நமஸ்காரம்: நிலம் பறி பதிக்கு நமஸ்காரம்.

௯. அம்பு தரிக்கு முங்களுக்கு நமஸ்காரம்; வில்லாளர்களான உங்களுக்கும் நமஸ்காரம். க0. வின்னாண் பூட்டு முங்களுக்கு நமஸ்காரம்: நாணேற்று முங்களுக்கும் நமஸ்காரம்.

கக. வில் வளைப்பவர்களுக்கு நமஸ்காரம்; அம்பு எறியு முங்களுக்கும் நமஸ்காரம். க௨. வீசுபவர்களுக்கு நமஸ்காரம்! வீழ்த்து முங்களுக்கும் நமஸ்காரம். க௩. உட்காருபவர்களுக்கு நமஸ்காரம்; சாயுமுங்களுக்கும் நமஸ்காரம். கச. உறங்குபவர்களுக்கு நமஸ்காரம்; விழிக்கும் உங்களுக்கும் நமஸ்காரம். க௫. நிற்பவர்களுக்கு நமஸ்காரம்; ஓடும் உங்களுக்கும் நமஸ்காரம்.

க௬. சபைகளுக்கு நமஸ்காரம்; சபைத் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். கஎ. குதிரைகளுக்கு

நமஸ்காரம்; குதிரைத் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். ச. ரு. ந.

---

## அநுவாகம் உஉச.

### துன்பஞ்செய்பவர்

க. துன்பஞ் செய்பவர்களுக்கு[1] நமஸ்காரம்; துவம்சஞ்செய்யுமுங்களுக்கும் நமஸ்காரம். உ. உக்கிர கணங்களுக்கு நமஸ்காரம், உயிர்கொல்லு முங்களுக்கும் நமஸ்காரம். ந. அறிஞர்களுக்கு நமஸ்காரம், அறிஞர் பதிகளான உங்களுக்கும் நமஸ்காரம். ச. பல சனங்களுக்கு நமஸ்காரம், பலசனபதிகளான உங்களுக்கும் நமஸ்காரம். ரு. கணங்களுக்கு நமஸ்காரம், கணத்தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். சு. விரூபர்களுக்கு நமஸ்காரம்; விசுவரூபர்களான உங்களுக்கும் நமஸ்காரம். எ. சிறந்தவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். சிறியவர்களுக்கு நமஸ்காரம். அ. இரதமுள்ளவர்களுக்கு நமஸ்காரம்; இரதமில்லாத உங்களுக்கும் நமஸ்காரம்.

கூ. இரதங்களுக்கு நமஸ்காரம்; இரதத் தலைவர்களான உங்களுக்கு நமஸ்காரம் க0. சேனைகளுக்கு நமஸ்காரம்; சேனைத் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம்.

கக. சக்தி யுள்ளவர்களுக்கு நமஸ்காரம்; ஒன்று சேர்க்கு முங்களுக்கும் நமஸ்காரம். கஉ. தச்சர்களுக்கு நமஸ்காரம், இரதஞ்செய்யு முங்களுக்கும் நமஸ்காரம். கந. குயவர்களுக்கு நமஸ்காரம். கருமார்களான உங்

---

உஉந. கருத்து—சோரர் தலைவனுக்கு, நமஸ்காரம் என்னும் தண்டனையை யளிக்கவும்.

1 துன்பஞ் செய்யுமுங்களுக்கு

களுக்கும் நமஸ்காரம். கச. புஞ்சிஷ்டர்களுக்கு நமஸ்காரம், நிஷாதர்களான உங்களுக்கும் நமஸ்காரம். கரு. அம்பு செய்பவர்களுக்கு நமஸ்காரம்; விற் செய்யுமுங்களுக்கும் நமஸ்காரம். கசு. வேடர்களுக்கு நமஸ்காரம்; நாய்த் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். கள. நாய்களுக்கு நமஸ்காரம்; நாய் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். ச. ரு. ச.

---

## அநுவாகம் உ௨ரு.

### பவன்

க. பவன் ருத்திரனுக்கும் நமஸ்காரம். உ. சர்வன் பசுபதிக்கும் நமஸ்காரம். ங. நீலகண்டன் வெண் கழுத்தனுக்கும் நமஸ்காரம். ச. சடையன் கேசம் நீங்கியவனுக்கும் நமஸ்காரம். ரு. ஆயிரங் கண்ணன், நூறு விற்களுள்ளவனுக்கும் நமஸ்காரம். சு. சிபிவிஷ்டன் மலைசுற்றுபவனுக்கும் நமஸ்காரம். எ. அதிதாராளன் அம்பு வகிப்பவனுக்கும் நமஸ்காரம். அ. சிறுவன் குள்ளனுக்கும் நமஸ்காரம். கூ. பெரியவன் பலமுள்ளவனுக்கும் நமஸ்காரம். க0. விருத்தன் வளர்பவனுக்கும் நமஸ்காரம். கக. தலைவன் முதல்வனுக்கும் நமஸ்காரம். க௨. வேகன் துரிதனுக்கும் நமஸ்காரம். கங. சீக்கிரன் அவசரனுக்கும் நமஸ்காரம். கச அலை அலறுஞ் சலத்தினுள்ளவனுக்கும் நமஸ்காரம். கரு. த்வீபன் பிரவாஹனுக்கும் நமஸ்காரம். ச. ரு. ரு.

---

உ௨ச. கருத்து—நாய்களும் நாய்த்தலைவர் முதலியவர்கள் நமது மரியாதைக் குரியர்.

உ௨ரு. கருத்து—எங்கு முள்ள ருத்திரர்களை யறியவும்.

## அநுவாகம் உஉசு.

### ஜேஷ்டன்

க. ஜேஷ்டன் கனிஷ்டனுக்கும் நமஸ்காரம். உ. ஆதி அந்த சனனனுக்கும் நமஸ்காரம். ௩. மத்தியமன் அபக்குவனுக்கும் நமஸ்காரம். ச. பின்புறம் கீழ் மூலத்தி லுள்ளவனுக்கும் நமஸ்காரம். ரு. திவ்யன் துணையருக னுக்கும் நமஸ்காரம். சு. க்ஷேமம் யமனுட னிருப்பவ னுக்கும் நமஸ்காரம். எ. பக்குவம் போரடி நிலத்தின் தலைவனுக்கு நமஸ்காரம். அ. வேதன் வேதாந்தனுக்கும் நமஸ்காரம். கூ. வனம் சோலையின் தலைவனுக்கும் நமஸ் காரம். க0. ஒலி எதிரொலிக்கும் நமஸ்காரம். கக. துரித சேனை துரித இரதத்தின் தலைவனுக்கும் நமஸ்காரம். கஉ. வீரன் வீழ்த்துபவனுக்கும் நமஸ்காரம், க௩. உறை கவச மணிபவனுக்கும் நமஸ்காரம். கச. மெய் மார்த் துணை யணிபவனுக்கும் நமஸ்காரம். கரு. பெரியவன் பெரிய சேனைத் தலைவனுக்கும் நமஸ்காரம். ச. ரு. சு.

---

## அநுவாகம் உஉஎ

### துந்துபி

க. துந்துபி தண்டத்வனியி லுள்ளவனுக்கும் நமஸ் காரம். உ. வீரன் கவனனுக்கும் நமஸ்காரம். ௩. தூதன் தொண்டனுக்கும் நமஸ்காரம். ச. ஆயுதம் அம்புறுத் துணி வகிப்பவனுக்கும் நமஸ்காரம். ரு. கத்திக் கூறிய யம்புள்ளவனுக்கும் நமஸ்காரம். சு. நல் வில் நல்லாயுத முள்ளவனுக்கும் நமஸ்காரம். எ. நதி, வழியி லுள் ளவனுக்கும் நமஸ்காரம். அ. கடல் தேக்கத்திலுள் ளவனுக்கும் நமஸ்காரம். கூ. ஏரி மடுவிலுள்ளவனுக்கும்

நமஸ்காரம். க0. நதி குளத்திலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கக. கிணறு, குட்டையிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கஉ. மழை, மழை யின்மை யிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கங. மேகம், மின்னலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கச. வானம், வெம்மை யிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கரு. புசல், காற்றிலிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கசா. கிரகவாசி கிரகபதிக்கும் நமஸ்காரம். ச. ரு. எ.

---

## அநுவாகம் உஉஅ.

### சோமன்

க. சோமன் ருத்திரனுக்கும் நமஸ்காரம். உ. பழுப்பன் சிகப்பனுக்கும் நமஸ்காரம். ங. பசுபதி சுகமளிப்பவனுக்கும் நமஸ்காரம், ச. உக்கிரன் பயங்கரனுக்கும் நமஸ்காரம். ரு. முன் கொல்பவன், தூரங் கொல்பவனுக்கும் நமஸ்காரம். சா. அழிப்பவன் அதியழிப்பவனுக்கும் நமஸ்காரம். எ. பொன் கேசங்களுள்ள மரங்களுக்கும் நமஸ்காரம்.

அ. விடுதலை செய்பவனுக்கு நமஸ்காரம். கூ. சுகம் இன்ப மூலனுக்கும் நமஸ்காரம். க0. சங்கரன் சந்தோஷகரனுக்கும் நமஸ்காரம். கக. சிவன் சிவஞ் செய்பவனுக்கும் நமஸ்காரம். கஉ. சலம் கரையிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். கங. இங்கு அங்கு முள்ளவனுக்கும் நமஸ்காரம். கச. முன் பின் தாண்டுபவனுக்கு நமஸ்காரம். கரு. கடல் கடப்பிலு ள்ளவனுக்கு நமஸ்காரம். கசா. நுரை இளம்புல்லி லுள்ளவனுக்கு நமஸ்காரம். கஎ. மணல் பிரவாகத்திலுள்ளவனுக்கு நமஸ்காரம். ச. ரு. அ.

---

## அநுவாகம் ௨௨௯.

### எங்குமுள்ள ருத்திரன்

௧. வெடிப்பில், விசாலப்பாதையி லுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௨. கல் நிலம் கிரகங்களில் வசிப்பவனுக்கும் நமஸ்காரம். ௩. சடையன் சாதா ரோமமுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௪. வீடு பசு நிலத்திலுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௫. சயனம் சார்பிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௬. ஆழம் அகாதத்தி லுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௭. சலம் சுழலிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௮. பனி புழுதியி லுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௯. பச்சைப் பசுமையிலுள்ளவனுக்கும் நமஸ்காரம். ௧௦. புல் பாறையி லுள்ளவனுக்கும் நமஸ்காரம்.

௧௧. கதி நிலத்தி லிருப்பவனுக்கும் நமஸ்காரம். ௧௨. இலை சரகி லிருப்பவனுக்கும் நமஸ்காரம். ௧௩. அச்சமளித்து அழிப்பவனுக்கும் நமஸ்காரம். ௧௪. இழுத்து அழுத்துபவனுக்கு நமஸ்காரம். ௧௫. தேவ திவ்ய இருதயங்களான உங்களுக்கு நமஸ்காரம். ௧௬. அழிப்பவர்களுக்கு நமஸ்காரம். ௧௭. அறிஞர்களுக்கு நமஸ்காரம். ௧௮. அழிவற்றவர்களுக்கு நமஸ்காரம். ௧௯. ஒழிப்பவர்களுக்கு நமஸ்காரம். ச. ரு. ௯.

---

## அநுவாகம் ௨௩௦.

### தரித்திரனே

௧. தரித்திரனே! துரத்துபவனே! சோமத் தலைவனே! நீலமும் சிகப்புமுள்ளவனே இப் பசு புருஷ சமூகத்தை பயமுறுத்தாதே, பாழாக்காதே. இவர்களில் எவனையும் இம்சை செய்யாதே. ௨. ருத்திரனே! சதா

இகிச்சை செய்யும் சந்தோஷகரமான உனது மங்கள வடிவம் ருத்திர பரிகார பாலனத்தோடு எங்கள் சீவனுக்குப் பிரிய மளிக்கவும். ௩. சத்துரு சிதைக்கும், சடையுடன் சக்தியுள்ள ருத்திரனுக்கு நாங்கள் எங்கள் பசு பிரஜை சுகமுடனாகி இக்கிராமத்திலுள்ள அனைவரும் நோய் நீங்கி செழுமையுடனாக இந் நல் மொழியை யளிக்கிறோம். ௪. ருத்திரனே! எங்களைச் சுகமுடனாக்கவும், எமக்குச் சந்தோஷ மளிக்கவும். சத்துரு சம்ஹாரனே! நாங்கள் மரியாதையுடன் உன்னை அநுசரிக்கட்டும். ருத்திரனே! நாங்கள் உன் தலைமையில், பிதா மநு யக்ஞத்தாலனுகும், சுகம் செல்வத்தை யடையவேண்டும். ௫. ருத்திரனே! தாய் தந்தை எமது பெரியவன் சிறியவன் வளர்பவன் வளர்ந்துள்ளவனை வீழ்த்தாதே! எமது தேகங்களையும் இம்சிக்காதே.

௬. எம்மை எமது குழந்தைகளில் இம்சை செய்யாதே, எங்கள் சீவன், சந்ததியில் இம்சிக்காதே. எங்கள் பசு குதிரைகளில் இம்சைவேண்டாம். ருத்திரனே! கோபத்தில் எமது வீரர்களைக் கொல்லாதே! நாங்கள் உங்களை அவி, வணக்கமுடன் நமஸ்கரிக்கட்டும். ௭. பசு புருஷன் பகைவர் கொல்பவனே! உனது கோபம் தூர மிருக்கட்டும். சுக மனம் எங்களிலாகட்டும். எங்களைக் காத்து இரட்சிக்கவும், எமக்கு அதி சுகத்தை யளிக்கவும். ௮. அச்சமளிக்கும் மிருகத்தைப்போல் அலறச்செய்து யழிப்பவனாய் மனோ பீடத்திலமரும் மேன்மையான இளைஞனைத் துதிக்கவும். ருத்திரனே! துதியாகும் நீ, நாடுபவனுக்குச் சுகமளிக்கவும். உன்னாயுதங்கள் எங்களைத் தவிர அந்நியனை அழிக்கட்டும். ௯. ருத்திராயுதம் எம்மை விடுவிக்க வேண்டும், ஓங்கும் காதகனது கோபம் எம்மை நீங்க வேண்டும். நீ உன் திட விற்களை தாராளர்களுக் கவிழ்த்து

விடவும். வர்ஷிப்பவனே! எமது மக்கள் சந்தானங்களுக்குப் பிரியமாகவும். கo. பொழிபவனே! மங்கள மளிப்பவனே! எமக்குப் பிரியமாய் மங்கள மளிப்பவனுயகவும். சர்மம் தரிக்கும் நீ பரமமான மரத்தில் உன் ஆயுதத்தை வைத்து விட்டு வரவும். பிநாகந்தரித்து எம்மை யணுகவும். கக. அதிசிகப்பனே! செழுமை பொழிபவனே! பகவானுன உனக்கு நமஸ்காரம். எம்மைத் தவிர மற்றவனை உன்னுயிர மம்புகள் அழிக்கட்டும். கஉ. பகவானே! உன் கைகளில் ஆயிர மாயிரமா யம்புகள் உண்டு; உன் கைவசமுள்ள அக் கூறி யம்புகளை வேறு பக்கம் திருப்பவும். ச. ரு. கo.

---

## அநுவாகம் உகக

### யுக்தமாக்த

க. நாங்கள் புவியின்மேல் ஆயிரமாயிரமான ருத்திரர்களது விற்களை ஆயிரம் யோசனைக்கு யுக்தமாக்குகிறோம். உ. வானம் இவ்விரிகடல் மேலுள்ள பவர்களது விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு யுக்தமாக்குகிறோம். ௩. நாங்கள் புவி கீழ் சுற்றும் நீலம் வெள்ளைக் கழுத்துக்களுள்ள சர்வர்களது விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு யுக்தமாக்குகிறோம். ச. நாங்கள் சோதியில் சாயும் வெண் கருங் கண்டங்களுள்ள ருத்திர விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு யுக்தமாக்குகிறோம். ரு. நாங்கள் மரங்களில் நீலஞ் சிகப்பு பசும்புல் கண்டங்களுள்ள ருத்திர விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு யுக்தமாக்குகிறோம். சூ. சடை அதி சிகை சனபதிகளான ருத்திர விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு யுக்தமாக்குகிறோம். எ. உணவு, பாத்திரங்களில் பருகுங்கால் பகை

சனங்களை எதிர்க்கும் ருத்திர விற்களை ஆயிரம் யோசனை களுக்கு யுக்த மாக்குகிறோம்.

அ. வழி காத்து உணவு வகிக்கும் வீரர்களான ருத்திர விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு யுக்தமாக்குகிறோம். கூ. தீர்த்தங்கள் சென்று ஈட்டி கத்திகளுடனுகும் ருத்திரர்களின் விற்களை யுக்தமாக்குகிறோம். கo. திசைகளைக் காக்கும் திரள் திரளான ருத்திரர்களின் விற்களை ஆயிரம் யோசனைகளுக்கு நாங்கள் யுக்த மாக்குகிறோம். கக. புவி வானம் சோதியில் உணவு காற்று மழையை அம்புகளா யடைந்துள்ள ருத்திரர்களுக்கு நமஸ்காரம். கிழக்கி லுள்ள பத்து, தெற்கிலுள்ள பத்து மேற்கிலுள்ள பத்து வடக்கிலுள்ள பத்து உச்சியிலுள்ள பத்து, ருத்திரர் களுக்கு நமஸ்காரம். அவர்கள் எமக்குச் சுகமளிப்பவர் களாகட்டும். நான் உங்கள் வாய்களில் நாங்கள் வெறுப்ப வனை எங்களை வெறுப்பவனை வைக்கிறோம். ச. ரு. கக.

[ருத்திரன்—முற்றும்]

---

## அநுவாகம் உ௬உ.

### அக்கினி

க. மருத்துக்களே! கல் குன்று காற்று பர்ஜன்யன் வருண பலத்தில் சாயும் சாரமான உணவையும், சலம்மரம்

---

உஉகூ—உ௬கூ. கருத்து—நமஸ்காரமென்றால் வணக்கம். சில சந்தர்ப்பங்களில் சுவாகதம் பரஸ்பரம் மரியாதைக்கு முதன் முறை மொழியும் பதமாகும். சில சமயங்களில் உன்னை நான் தண்டிக்கிறேன், என்பதைக் குறிக்கும். இப்படிப் பல உரைகளைக் குறிக்கும் இப் பதத்தால் எல்லா ருத்திரர்களையும் நாடவும்.

செடி கொடிகளினின்று ஒன்று சேரும் சக்தியையும் தாராளமாய் எமக்களியுங்கள்.

உ. உன் பசி கல்லிலாகும், எமது துவேஷியை உன் துன்பமணுகட்டும். ௩. அக்கினியே! நாங்கள் கடல் காற்ரோடு உன்னைச் சூழ்கிறோம். நீ எமக்குச் சுத்தம் சுகமளிப்பவனாகவும். ௪. அக்கினியே! நாங்கள் பனிப் போர்வையுடன் உன்னைச்சூழ்கிறோம். நீ எமக்குச் சுத்தம் சுகமளிப்பவனாகவும். ௫. சலம் நிலம் நாணல் மேல் நீ கீழ் நோக்கிச் சாய்ந்துளாய். அக்கினியே! நீ சல பித்தமாகும்.

௬. பண்டிதையே! இப் பாக்களுடன் இங்கு வரவும், நீ எமது இந்த யக்ஞத்தை புனித ஒளியுடன் மங்கள கரமாய்ச் செய்யவும்.

௭. அவன் உஷவின் ஒளியைப்போல் அதிசய சோதியுடன் புவியில் சுத்தமாய் பிரகாசித்துளான். ௮. அவன் ஏதசனின் வேகம்போல் துரிதமாய் திவ்யப் போருக்கு அவாவுடன் அழியாதவனாய் செல்லுகிறான். ௯. தேவனே! அக்கினியே! உன் சோதி இனிய சுவாலையால் சுத்தஞ் செய்து யக்ஞம் தேவர்களை இங்கு கொண்டு வரவும். க௦. அக்கினியே! சுத்தஞ்செய்யும் சோதி வீசுபவனே! எங்கள் அவி யக்ஞத்துக்கு தேவர்களைக் கொண்டு வரவும். கக. இது சமுத்திர நிலயமான சலஞ் சேருமிடம்; உனதா யுதங்கள் எங்களைத் தவிர அந்நியனைத் துன்பமாக்கட்டும், நீ எமக்குச் சுகம் சுத்தஞ் செய்பவனாகவும். கஉ. உனது சூடு சுடருக்கு நமஸ்காரம், உன் சோதிக்கு நமஸ்காரம். உன்னாயுதங்கள் எம்மைத் தவிர அந்நியனைத் துன்பமாக்கவேண்டும். நீ எமக்குச் சுகம் சுத்தஞ் செய்பவனாகவும்.

க௩. மனிதரில் உட்காரும்—ஜாடராக்கினிக்கு வட்! சலத்தில் சாயும்—வாடவாக்கினிக்கு—வட்! வனத்திலமை

யும்—தாவாக்கினிக்கு—வட்! தர்ப்பையில் தோயும்—ஆஹவனீயாக்கினிக்கு—வட்! சுவர்க்கங் காணும் சூரியனுக்கு வட்!

கச. தேவர்களில் தேவர்களாயும் பூஜ்யர்களில் பூஜ்யர்களுமான வருஷபாகம் நாடி அவி புசிக்காத நீங்கள், நெய் தேனுடன் இந்த யக்ஞத்தில் நீங்களே இன்பமாகுங்கள். கரு. எவர்களில்லையேல் எப்பொருளும் சுத்தமாவதில்லையோ, அவர்கள் இப்பிரமத்துக்கு வழிகாட்டி, தேவர்களுக் கதிகமான திவ்ய பதவியில் தேவர்களாயுளார்கள். அவர்கள் சகம் சோதியின் உச்சிகளிலுமில்லை.

கசு. நீ பிராணன் அபானன் வியானனை யளிப்பவன்; நீ கண் கதிர் அகண்ட நிலயமளிப்பவன், உனதாயுங்கள் எங்களைத் தவிர அந்நியனைத் துன்பமாக்கட்டும். எமக்குச் சுகம் சுத்தஞ் செய்பவனாகவும். கஎ. அக்கினி தன் சுடர் சுவாலையுடன் ஒவ்வொரு சத்துருவையும் கீழே சாய்க்கட்டும். அக்கினி எமக்குச் செல்வத்தை ஜயிக்க வேண்டும். கஅ. யக்ஞத்தால் எமக்குச் செல்வஞ் ஜயிக்க பிரியமுடனணுகுபவன் சுகத் தோற்றத்துடன் எங்கள் நிமித்தம் தேவர்களுக்கு யக்ஞஞ் செய்வான். அக்கினியே! இம்சையற்ற காப்பும் எமது ரட்சகனுமான நீ சோதியுடன் செல்வத்தோடு பிரகாசமாகவும். ச. சு. க.

---

## அநுவாகம் உ௬௬.

### விசுவ கருமன்

க. இவ்வெல்லாப் புவனங்களையு மாகுதி செய்து ஹோதாவா யமரும் ரிஷியான எங்கள் பிதா நல் நினைவால் நலம் நாடி பரம உறையின் புனித ஸ்தானத்தில்

---

உ௬உ. கருத்து—சத்துரு ஜயித்து செல்வங்களைப் பற்றவும்.

நுழைந்துளான். உ. விசுவ கருமன் பலமுள்ள மனத்தாலேயே கண்டு காத்து கழித்து காண்பவனாகும். ஏழு ரிஷிகளுக் கப்பால் ஒன்று மெனச் சொல்லப்படும் அங்கே மானிடர்கள் தாங்கள் விரும்புவதுபோல் நாடும் நிலயங்களை யடைந்து இன்பமாகிறார்கள். ௩. அவன் எங்கள் பிதா எங்களைப் புலனாக்குபவன், பாதுகாப்பவனு மவனே, சத்தினின்று சத்துக்கு எம்மைக் காக்குமவன் தேவர்களுக்கு நாமங்களைத் தரிக்கிறான்! எல்லாப் புவனங்களும் அவனையே பெரும் அறிவுக்குக் கணுகுவார்கள். ௪. ஆதி ரிஷிகள் திரள் திரளான துதிக் கர்த்தாக்களைப்போல், பிராணன் பிராணனற்ற இப்பொருள்களைப் விரிவானத்தில் புலனாக்குபவனுக்கு மனமளித்து திரவியத்தை யடைந்துளார்கள். ௫. நீங்கள் இவ்வுலகம் புலனாக்குபவனைப் பார்க்க இயலாது, உங்கள் நடுவே அந்நியப் பொருள் ஒன்று உண்டு! ஏனெனில் துதிசெய்பவர்கள் அறிவின்மை அகங்காரத்தால் சூழ்ந்து சீவனை யனுபவிப்பதி லாகிறார்கள்.

௬. சோதிதேவர் அசுரர் இச்சகத்துக்கப்பாலுள்ள இரகசியப் பொருள் எது? தேவர்களெல்லாம் ஒன்று தோயுங்கால் சலங்கள் முதன்மையாய் எக்கருப்பத்தைத் தரித்தன?

௭. எல்லா தேவர்களும் ஒன்று சேர்ந்தவுடன், சலங்கள் இக்கருப்பதையே ஆதியில் தரித்தன. அஜனது நாபியிலேயே—அக்கருப்பமான—ஒன்று வைக்கப்பட்டுள்ளது! இவ்வெல்லா உலகமும் அவ்வொன்றிலேயே சாய்ந்துள்ளது.

௮.—ஆதியில்—விசுவகருமனான தேவன் தோன்றினான். அப்பால் கந்தர்வன் இரண்டாவதாகும், மூன்றாவது ஒஷதீகளைப் புலனாக்கும் பிதா புலனானான்: அவன்

வெகு பல இடத்தில் சலங்களின் கருப்பத்தை ஸ்தாபித்தான். ௯. கண்ணின் தந்தையான தீரன் மனத்தால் நெய்மிகும் இவ்விரு உலகங்களை யுண்டு பண்ணினான். அவனால் பூர்வ எல்லைப்பாகங்கள் நிலையாக்கப்பட்டவுடன், புவியும் சோதியும் விசாலமாயிற்று. ௧௦. எங்கும் கண் கை கால் முகமுள்ள ஒரே தேவன் புவியையும் சோதியையும் புலனாக்கி கைகளான—தர்மா தர்மம்—சிறகுகளான—பஞ்சபூதங்களால்—அவற்றை சுவாதீன மாக்குகிறான்.

௧௧. எல்லாங் காணும் விசுவ கருமன் புவியைச் செய்து பலத்தால் சோதியைப் புலனாக்குங்கால் அவன் மூலம் எது? அவனாதரவு என்ன? யாதாகும்? ௧௨. மரமென்பதென்ன? வனம் யாது? எங்கிருந்து சோதி சகத்தை அவன் செய்தான்? அறிஞர்களே! உங்கள் மனங்களால் சிந்தனை செய்யுங்கள்? அவன் புவனங்களைத் தாங்குங்கால் எங்கு நிற்கிறான்? ௧௩. விசுவகருமனே! உன் நண்பர்களுக்கு அவியில் உனது உச்ச நீச நடு நிலயங்களை இங்கு விளக்கவும். யக்ஞனே! நீ இன்பமாகி உனக்கே உன்னை யக்ஞஞ் செய்து கொள்ளவும். ௧௪. நாம் இன்று பலம் பாதுகாப்புக்கு வாசஸ்பதியான மனஞ் சேர்க்கும் விசுவகருமனை யழைப்போம்; விசுவசம்புவும் சாதுச்செயல்களுடனான அவன் எமது ரட்சைக்கு அருகிலுள்ள அவிகளைச் சேவிக்கவேண்டும். ௧௫. விசுவகருமனே! நீ அவியால் பெருகி இன்பமாகி நீயே உனக்கு யக்ஞஞ் செய்து கொள்ளவும். எம்மைச் சூழும் அந்நியர்கள் பகைவர்கள் கலங்கவேண்டும். எமது துணைவர்கள் திரவியங்களுடனாகட்டும். ௧௬. விசுவ கருமனே! அவியால் திடமாகும் நீ, இந்திரனை இரட்சகனாய் செய்து இம்சையினின்று நீக்குவாய். பழைய சனங்

கள் அவனுக்கு வணக்க மளிப்பார்கள். பல சனங்களால் அழைக்கப்பட அவன் உக்கிரனுமாகவேண்டும். ௧௭. நதிகளின் பதியான அறிவுக் கடலுக்கு நமஸ்காரம்; நீங்கள் எல்லாத் தினங்களிலும் அமுதமான அவியை எல்லா தாரைகளின் தலைவனான விசுவகருமனுக் களியுங்கள். ௪. ௬. ௨.

---

## அநுவாகம் உ௩௪.

### அனல் தாங்கு

௧. அக்கினியே! நெய்யளிக்கப்படும் நீ அவனை முன் செலுத்தி பிரஜை பொருள் செல்வப் பெருக்குடன் சேர்க்கவும்.

௨. இந்திரனே! சனங்களில் தலைமைப் பதவியை வகிக்க அவனை முன்னுக்கவும். தேவர்களுக்கு பாகங்களை யளிக்க அவனை பலத்துட னிணைக்கவும்.

௩. அக்கினியே! எவன் வீட்டில் நாங்கள் அவியை அளிக்கிறோமோ அவனை நீ அபிவிருத்தி செய்யவும். தேவ துணை அவனுக்காகட்டும். அவன் பிரகஸ்பதியாக வேண்டும். ௪. அக்கினியே! எல்லா தேவர்களும் சித்தங்களால் உன்னை உயரச் சுமக்க வேண்டும். நீ சோதி மிகுந்து பிரியமுகமுடன் எமக்கு அதிமங்கள மளிப்பவனாகவும்.

௫. ஐந்து திவ்ய திசைகளான தேவிகள் பாழறிவு புத்தி சூன்னியந் துரத்தி யக்ஞபதிக்குச் செல்வப் புஷ்டியை யளித்து யக்ஞத்தைக் காக்க வேண்டும். ௬. துதியருகனான யக்ஞன் பாக்கள் என்னும் சிறகுகளால்

---

உ௩௩. கருத்து—உங்கள் மனங்களால் ஆராய்ச்சி செய்யுங்கள்.

பற்றப்பட்டு ஓங்கு மனவில் வளர்ந்து பெருகி புஷ்டிப் பொருளில் ஸ்தாபிக்கப்பட்டுளான்; அவர்கள் சோதி மிகும் அனலைச் சேர்ந்து யக்ஞஞ் செய்கிறார்கள். எ. தேவர்கள் இன்ப மநுபவித்து திவ்ய தாரகனா யுள்ள அக்கினிக்கு யக்ஞத்தில் திடத்துடன் பூரணமாக்குங்கால் தாராளனாயுள்ள அவ்வனல் திவ்யம் நாடி நூறு அமுதங்களுடனாகிறான். தேவர்கள் இவ்வனலை கிரகித்து யக்ஞத்தை அடைகிறார்கள்.

அ. ஸவிதா தன் அமுத சோதியை பொன் கேசம் சூரியக் கதிர்களுடன் எங்கள் முன் எழுச்சியாகி யுளான். அவன் தூண்டுதலில் சகலங் கண்டு துணைபுரியுந் தேவனான பூஷணன் செல்லுகிறான். கூ. தேவர்கள் தேவர்களுக்கு யக்ஞஞ் செய்யும் விருப்பமுடன் அத்வர் யுக்களாக நிற்கிறார்கள். அது சாந்த மளிப்பவனுக் காயத்தமாகும்; அமைதி யளிப்பவன் யக்ஞஞ் செய்யட்டும். எங்கள் புனித யக்ஞம் அவிக்குச் செல்வதால் எமது நற்சொற்கள் அங்கீகரிக்கப்படட்டும்.

க0. அவன் சோதியின் நடுவே, வானம் இரு உலகங்களையும் நிரப்பி அளப்பவனாய் நின்றுளான். மேல், கீழுள்ள கொடி நடுவே, நெய் சேர்ந்து விசுவ மனுருமவன் எதையும், விளக்குகிறான். கக. கடல் காளை சிகப்புப் பறவையான அவன் பழைய பிதாவின் மூலஸ்தானத்தில் பிரவேசித்துளான். சோதி நடுவே சுந்தராயுதம் ஸ்தாபிக்கப்பட்டுளது. அவன் விரிந்து சென்று வெளி எல்லைகளைக் காக்கிறான்.

கஉ. எல்லா சொற்களும், சாரதிகளின் சிறந்த சாரதியாய் சத்திய பதியாகி சக்திகளின் பதியுமான இந்திரனைப் பெருக்கி கடல் சூழச் செய்துள்ளன. கங. யக்ஞம் நல் மனத்தை யழைக்கட்டும், தேவர்களைக் கொண்டு வரட்டும்,

தேவாக்கினி அளித்து திவ்யங்களை இங்கு கொண்டுவரட்டும். கச. அவன் என்னை பலோதயம் எழுச்சியுடன் பற்றியுள்ளான். இனி இந்திரன் என் பகைவர்களை சோர்வினுல் தாழ்மையாக்குவான். கரு. தேவர்கள் எழுச்சி வீழ்ச்சியான என் விருப்பத்தை வளர்த்துளார்கள். இந்திரனே, அக்கினியே! இனி என் பகைவர்களை எங்குஞ் சிதறடியுங்கள். ச. கூ. ந.

---

## அநுவாகம் உநரு.

### அபிராதிரதப் புகழ்

க. ஒரே தீர வீரனுய் பகை கலக்கி பாழ் விரும்பி கர்ச்சிக்கும் இமை கொட்டாத இந்திரன் கொம்பு கூர்மையாக்குங் காளைபோல் துரிதமாகி ஒரே மூச்சில் நூறு சத்துரு சேனைகளை ஜயிக்கிறுன்.

உ. வீரர்களே! சதா விழித்து ஜயமுடன் கர்ச்சனை செய்பவனுயும் சத்துருவால் ஜயிக்க முடியாமல் கைகளில் அம்பு தரிப்பவனுமான சமர் செய்பவனுய் சக்தியுடனுகும் தீரனை இந்திரனேடு இணைந்து பகை எதிர்த்து சத்துருவை வெல்லுங்கள். ந. வில் தூக்கி நன்கு எறியு மம்புகளோடு சமர் ஜயித்து பல கணங்களுடன் சோமபானஞ் செய்யு மிந்திரன் தன் சனத்துடன் சேனைகளைச் சேர்த்து கத்தி ஆயுத முள்ளவர்களுடன் சக்தி மிகுந்தவனு யுளான்.

ச. பிரகஸ்பதியே! எதிரி துரத்தி பகை யழித்து இரதமுடன் எங்குஞ் செல்லவும். போரில் ஜயித்து ஜயமுடனுகும் நீ சத்துரு சேனைகளைக்கொன்று எங்கள் இரத காப்பாகவும்.

---

உநச. கருத்து—அனல் ரகசியம்.

ரு. சகோதரர்களே! கையில் வச்சிராயுதமுடன் மலை பிளந்து சக்தியால் சத்துரு சேனை யழித்து புவிகள் பற்றும் ஜய சீலனான இந்திரனைப்போல் வீரர்களா யிருங் கள். நண்பர்களே! இந்திரனது செயல்களை யநுசரியுங் கள். சு. இந்திரனே! நீ திடன் தீரனாய் கோரன் கடு மையாய் திரன் தாங்குபவனாய் திடத்தால் தெளிவாகும் திடமக்களான வீரதீரர்களைக் கடந்து தரணி ஜயித்து ஜய இரதத்திலேறவும்.

எ சதகோபங்களுடனான இந்திரன் வீரன் உக் கிரனாய் எதிர்ப்பற்று வெல்ல முடியாதவனாய் பலத் தால் புவிகள் எல்லாம் புகுந்து போர் தாங்கி சமர்களில் எங்கள் சேனைகளைக் காக்கவேண்டும்.

அ. அவர்களது தலைவன் இந்திரனாகி சோமன் யக் ஞம் தட்சிணை பிரகஸ்பதி, முன் பக்கஞ்சென்று, மருத்துக் கள் சிதறடித்துச் ஜயிக்கும் சிறந்தசேனைகள் முன்னர் செல்லட்டும். கூ. ஜயிக்குங்கால், சகங்களை யலறச் செய் யும், ஆதித்தியர் திட இந்திரர், பெரிய சேனையுடனாகும் மருத்துக்கள் வருண இராஜனது மனமோங்கும் திவ்ய உச்ச கோஷம் கிளம்பியுள்ளது.

கo. கொடிகள் ஒன்று சேருங்கால் இந்திரன் எமது பக்கமாகட்டும், ஜயிக்கும் அம்புகள் எமதாகவேண்டும். எமது வீரர்கள் ஜயசாலிகளாகட்டும். தேவர்களே! நீங் கள் போர்க்களங்களில் எங்களை இரட்சியுங்கள். கக. மகவானே! எங்கள் சத்திகளை உயரமாக்கவும், என் வீரர் களின் சக்தியை எழுச்சியாக்கவும், விருத்திர சம்ஹா ரனே! குதிரை பலத்தை உச்சமாக்கவும், ஜயரதங்களின் கோஷம் உயரமாகட்டும்.

கஉ. வீரர்களே! முன் செல்லுங்கள், வெல்லுங்கள், உங்கள் புஜங்கள் பலமுடனிருக்கட்டும். இந்திரன் நீங்கள் எதிர்ப்பற்றுக, காப்பளிக்கவேண்டும்.

கந. அம்பே! பிரமத்தால் பாயும் நீ, வில் பிரிந்து முன் பக்கம் பாய்ந்து பறக்கவும். பகைவர்களைச் சேர்ந்து அவர்களது காயங்களைப் பிரவேசிக்கவும். அவர்களில் ஒருவனையும் விட்டுவிடாதே.

கச. நான் கவசங்களால் உன் மர்மஸ்தானங்களை மறைக்கிறேன். சோமராஜன் உன்னை அமுதத்தால் மூடட்டும். விரிவிலும் விசாலமாகும் வையகம் உனதாகவேண்டும். தேவர்கள், ஜயிக்கு முன்னை இன்பமாக்கட்டும்.

கரு. பகைவரழிக்கும் இந்திரன், அம்புகள் அதிசிகை பாலர்கள் போல் ஒன்று பாய்ந்தவுடன் எமக்குச் சதாகால இரட்சிப்பை யளிக்கவேண்டும். ச. கூ. ச.

---

## அநுவாகம் உநகூ.

### அனல் ஸ்தாபனம்

க. அறிஞனே! நீ கீழ்த்திசை வழியாய் முன் செல்லவும், அக்கினியினக்கினியே! நீ இங்கு பூர்வானலாகவும். உன் ஒளியால் எல்லா திசைகளையும் பிரகாச மாக்கவும். எங்கள் பசு, சனங்களில் பலத்தை யளிக்கவும்.

உ. உங்கள் கைகளில் உக்கியானலைத் தரித்து அக்கினியுடன் உயரிய நிலைக் கேறுங்கள். சோதி சுவர்க எல்லைக்குச் சென்றவுடன் தேவர்களோடு சேர்ந்து புசியுங்கள்.

ந. நான் நிலத்தினின்று வானமேறியுளேன், நான் வானத்தினின்று சோதி ஏறியுளேன். நான் சோதியின்

---

உநரு. கருத்து—போர் முழக்கம்.

உயரிய எல்லையினின்று சுவர்க்கச் சோதியை யடைந்துளேன்.

௪. எங்கும் பொழியும் யக்ஞத்தை விசாலமாக்கும் அறிஞர்கள் புவி வானம் சோதி ஏறி சுவர்க்கஞ் சென்றவுடன் எதையும் அபேக்ஷிப்பதில்லை.

௫. அக்கினியே! திவ்யம் நாடுபவர்களிற் முதன்மையாயும் தேவர் மனிதர்களின் கண்ணுமான நீ முன் செல்லவும். யஜமானர்கள் பிருகுக்களுடன் இணைந்து யக்ஞம் நாடி செழுமை சுவர்க்கத்துக்குச் செல்லட்டும். ௬. பலவடிவமாகி ஒரேமனமுடனுகும் இரவு பகல்கள் ஒன்று சேர்ந்து ஒரே குழந்தையை ஊட்டுகிறார்கள்! சந்திரன் சோதி சகத்தின் நடுவே பிரகாசிக்கிறான். செல்வமளிக்கும் தேவர்கள் அக்கினியைத் தாங்குகிறார்கள். ௭. அக்கினியே! நீ நூறு தலை ஆயிரங் கண்களுள்ளவன். உன் பிராணன் நூறு, உனது அபானங்கள் ஆயிரமாகும். நீ சஹஸ்ர செல்வபதியாகும். நாங்கள் சக்திக்காக இப்படிப்பட்ட உனக்கு வணக்கமளிப்போம், சுவாஹா!

௮. நீ நற் சிறகுள்ள பறவை, நிலத்தி லுட்காரவும்; புவியின் எல்லையி லமரவும், உன் சுடரால் வானத்தை நிரப்பவும், ஒளியால் சோதியை ஸ்தாபிக்கவும், தேஜசால் திசைகளைத் திடமாக்கவும். ௯. அக்கினியே அழைக்கப்பட்டுள்ள சுமுகனை நீ, பூர்வத்திலுள்ள உனது புனித மூலஸ்தானத்தில் அமரவும்; விசுவேதேவர்களே! இவ்வுயரிய ஸ்தானத்தில் யஜமானனுடன் உட்காருங்கள். ௧௦. அக்கினியே! அதி இளைஞனே! எழுச்சியாகும் நீ அழியாத சோதியுடன் எங்கள் பக்கம் பிரகாசிக்கவும். பலம் உன்னைச் சதாகாலம் அநுசரிக்கும். ௧௧. அக்கினியே! நாங்கள் உனது பெரிய சனன ஸ்தானத்தில் உனக்கு வணக்கமளிக்கட்டும். நாங்கள் உனது சிறிய

நிலயத்தில் உனக்குத் துதிகளுடன் நமஸ்கரிக்கட்டும். நான் நீ தோன்றும் நிலயத்துக்கு அளிப்பேன். அவர்கள் எழுச்சியாக்கு முன்னில் அவிகளை அளிக்கிறார்கள்.

கஉ. பெருகி புஷ்டியாகி ஆயிரம் பால் தாரைகளோடாகும் கண்வர் கறக்கும் பசுவான, எல்லா மானிடர்களுக்கு மளிக்கப்பட்டு மேன்மையுடனுள்ள சவிதாவின் சீலமான அதிசய மனத்தை நான் நாடுகிறேன். கங. அக்கினியே! உன் சமித்துக்கள் ஏழு. உன் நாக்கள் ஏழு. ஏழு ரிஷிகள், ஏழு யக்ஞங்கள், ஏழு ஹோத்துருக்கள் ஏழு பிரிய நிலயங்கள், உன்னை நாடுகின்றன. நீ நெய்யால் ஏழு மூலஸ்தானங்களை நிரப்புகிறாய்.

கச. இதுபோல், அதுபோல், இப்படிப் போல் சமமாய், சமானமாய், சரியாய் சம இசையாய்—ஒரு மருத்து கணமுண்டு. கரு. சோதி, சுத்தச் சோதி, அதிசய சோதி, சத்திய சோதி சத்தியம் ருது காப்பாய் துன்பத்துக் கப்பால் — வேறொரு கணம் செல்லும். கசு. ஒரு மருத்து கணம், அருகிலும் தூரத்திலுமுள்ள எதிரிகளில் நல்ல சேனையுடன் ருதம் சத்தியம் சத்துரு ஜயித்துச் செல்லும். கஎ. வேறொரு கணம் துணை, தூண்திரம், ருதம், தரிப்பு தாங்கும் சத்தியமாய் நிற்கும். கஅ. நீங்கள் இதுபோல் அதுபோல் சரியாயும் சமானமாயும் எங்களிடம் வாருங்கள். ககூ. மருத்துக்களே! நீங்கள் இந்த யக்ஞத்தில், சரி, சமம் சமானமாய், துணை யளிக்க வாருங்கள். உ0. மருத்துக்களான தேவ ஜனங்கள் இந்திரனை நாடுகிறார்கள். தேவசனத்தைப்போல் மருத்துக்கள் இந்திரனை அநுசரிக்கிறார்கள். அப்படியே தேவர்களும் மனிதர்களும் இந்த யஜமானனை யநுசரிக்க வேண்டும். ச. சு. ரு.

---

உ௩சு- கருத்து—தேவ துணை.

# அநுவாகம் உ௩எ.

[அசுவமேதம்—உ௨0-வது அநுவாகத் தொடர்ச்சி]

## போர் முழக்கம்

க. போர்க்களஞ் செல்லுங்கால் வீரனது முகம் இடி மேகம்போல் விளங்கும். நீ இம்சையாகா காயத்தோடு ஜயமுடனாகவும். உன் கவச பலம் உன்னைக் காக்கட்டும்.

உ. நாங்கள் வில்லால் புவிகள் போரை ஜயிக்க வேண்டும். நாங்கள் வில்லால் கோரமான யுத்தங்களையும் ஜயிப்போம். வில் எதிரிக்கு துன்பத்தை விளைவிக்கும். நாங்கள் எல்லாத் திசைகளையும் வில்லினால் ஜயிப்போமாக. ௩. சமரில் காக்கும் இவ் வின்னாண் பேச விரும்பி செவியினருகே சென்று பிரிய நண்பனைத் தழுவும் வனிதைபோல் வில்லில் சத்திக்கின்றது. ச. யுவதி சபைக்குப் போல் வில்லின் இரு முனைகள் ஒன்று பொருந்தி அம்பை, அங்கத்தில் பாலனைத் தரிக்கும் தாய்மார் போல் சுமக்கின்றன. இவ்விரு பக்கங்களும் இசைந்து தனித் தனிக் குதித்து எதிரிகளழித்து எதிர்க்கும் பகைவர்களைக் கொல்லும்.

ரு. சரக்கூடு பல பெண் பிள்ளைகளின் பிதாவாகும். அவன் போர்க்களஞ் செல்லுங்கால் விண்ணிடுகிறான்; முதுகில் சாய்ந்து சரமளிக்குமவன் எல்லாப் பகைகணம் கூட்டத்தை ஜயிக்கிறான். சு. அறியும் சாரதி இரதத்தில் நின்று தன் முன் உள்ள குதிரைகளை விருப்பம் போல் எங்குஞ் செலுத்துகிறான். நீங்கள் குதிரை வார்களின் கீர்த்தியை நன்கு முழங்குகிறீர்கள், அவை மனத்தைத் தொடர்ந்து செல்லும்.

எ. இரதங்களுடன் வேகமாய்ப் பாயும் பலம் மிகும் குளம்புகளோடாடுங் குதிரைகள் அதி கோஷஞ் செய்கின்

றன. அவை எதிரிகளை முன்காலால் மிதித்துக் கூசாமல் கொல்லும்.

அ. ஆயுதம், கவசம், வைக்கப்பட்டுள்ள தேர் வாகனமே அவனது அவிப் பெயராகும். நாம் எப்பொழுதும் அப்பலமானத் தேரில் நல்ல மனங்களோடு ஏறுவோம்.

௯. அகாத அறிவு வலிமையுடன் ஆபத்திலாதரவுமான பல மளிக்கும் பிதுருக்கள் இனிய ஆசனங்களுடன் உளார்கள்; அவர்கள் சர பலம், சத்தான வீரர், அதிசய தீரர்களுடன், சத்துருவால் ஜயிக்க முடியாமல் எதிரி சேனைகளின் விசால ஜயசீலர் களா யுளார்கள். ௧௦. சோதி புவியிலுள்ள பிராமணர் பிதுருக்கள் சோமாருகர்களான அதிச் சிறப்பு வாய்ந்தோர்கள் எமக்கு மங்கள மளிப்பவர்களாகட்டும். ருதம் வளர்க்கும் பூஷணன் எம்மைப் புன்மையினின்று காக்க வேண்டும். நீ என்னை ரட்சிக்கவும்; எந்த எதிரியும் எம்மை ஜயிக்காமலாகவேண்டும்.

௧௧. இறகே அவளது ஆடை, அவள் பல் மிருகமாகும். கோக்களால் கட்டப்படுமவள் எய்தவுடன் பறக்கிறாள். வீரர் இங்கு மங்கு மாகு மிடத்தில் சரங்கள் எமக்கு இரட்சையை யளிக்கவேண்டும். ௧௨. நேர் செல்பவனே! எம்மைக் கணையினின்று நீக்கவும், எங்கள் காயம் கல் போலாகவேண்டும், சோமன் எமக்கு அநுகூலமாய்—பொழியட்டும். அதிதி எமக்குச் சுகத்தை யளிக்கவேண்டும்.

௧௩. அது அவர்களின் பின்புறங்களை யடிக்கும், அது கால்களையும் வாங்கும். சாட்டையே! சமர்களில் சித்தமறியும் குதிரைகளைத் தூண்டவும்.

௧௪. புஜ கவசம், பாம்பு சுற்றுவதுபோல் அவன் புஜத்தைக் கவர்ந்து வின்ஞாணின் தேய்ப்பை விலக்கும்.

அது எல்லாத் தந்திர மறிந்து எங்கும் ஆண்மையாய் மனி தனைக் காக்கட்டும்.

கரு. தேரே! வீரத்துடன் சாதகனுயுள்ள எமது நண்பனுன நீ திராங்கமுடனுகவும். கோக்களால் கட்டப் பட்டுள்ள நீ பலமுடனுகவும். உன்னை ஏற்றுபவன் ஜயிக்க வேண்டுவதை ஜயிக்கட்டும்.. கசு. புவி சோதியினின்று ஓஜசு ஒன்று குவியும், மரங்களினின்று பலஞ்சேரும்; நீ நிலத்தால் சூழும் சலசக்தியான இந்திரனது தேர், வச்சி ராயுதத்தை அவியால் நாடவும். கஎ. தேவ இரதமே! வருண நடுவு மருத்துமுகம் மித்திர கருப்பம் இந்திர வச் சிராயுதமான நீ எமது இந்த யக்ஞத்தை யங்கீகரித்து அவிகளைக் கிரகிக்கவும்.

கஅ. முரசே! வானம் வையகத்துக்கு கர்ச்சனை செய்யவும், வியாபகமான உலகம் உன்னைப் பல நிலயங் களி லறியட்டும், நீ இந்திரன் தேவர்களுடன் கலந்து எதிரியை வெகுதூரந் துரத்தவும்.

கக. முரசே! நீ முழங்கவும், எமக்கு ஓஜசு உறு தியை யளிக்கவும்; தடை நீக்கி முழக்கஞ்செய்யவும், இங் கிருந்து துன்பத்தைத் துரத்தவும் நீ இந்திர முட்டியா கும். உன் பலத்தைப் புலனுக்கவும். உ0. எதிரிகளைத் துரத்தவும். இவர்களை எமக்கு அங்கு கொண்டு வரவும், முரசு துவஜத்துக்காக உச்சகோஷம் முழங்குகின்றது. குதிரைகளோடு வேகமாகும் எமது வீரர்கள் ஒன்று சேர் கிருர்கள்; இந்திரனே! எமது தேர் தீரர்கள் ஜயமுடனு கட்டும். ச. சா. சா.

---

உ௩எ. கருத்து—ஆயுதந்தாங்கி அமர்க்களஞ் செல்வது அமராகும் வழி.

# அநுவாகம் உரு அ.

## துதிரை

க. [1]குதிரையே! நீ முதல் மலர்ந்து அனல் அகாதத்தினின்று உதயமாகி, முழக்கஞ் செய்யுங்கால் மான் கால் கருடனின் சிறகு சத்தம் போல் அத்தனை துரிதம் திடமாய் தோன்றுகிறது. இது உனது புகழுவதற்குரிய பெருஞ் சன்மமாகும்.

உ. [2]திரிதன் [3]யமனுல் யளிக்கப்படுங் [4]குதிரையைச் சேர்த்துளான், [5]இந்திரன் அவனில் முதல்வனுய் ஏறியுளான், [6]கந்தர்வன் அவனது வாய்த்தொடர்களைப் பற்றுகிறுன், [7]வசுக்களே! நீங்கள் [8]சூரியனிடமிருந்து குதிரையைக் குணமாக்குகிறீர்கள்.

ங. [9]அசுவமே! நீ யமனுகும், நீ ஆதித்தியன், நீ இரகசிய விரதத்தால் திரிதனுகும். நீ [10]சோமனிலிருந்து பூரணமாய் பிரிந்துளாய். [11]சோதியில் உன் [12]பந்தங்கள் மூன்று யெனச் சொல்லுகிறுாகள். [13]ஒளியில் மூன்று [14]கடலில் மூன்று [15]சலத்தில் மூன்று. [16]பந்தங்கள் உனக்கு உண்டுயெனக் கூறுகிறுாகள்; குதிரையே! உனது பெரிய சனனஸ்தானமெனப்படும் நிலயத்தில் நீ எனக்கு [17]வருணன் போல் விளங்குகிறுய். ரு. [18]துரிதனே! [19]இவை உனது சுத்த சாதனங்கள், இவை உனது [20]ஜயத்திலான கால் சுவடுகளாகும். இங்கு நான் ருத ரட்சகர் காக்கும் உனது சுந்தரக் [21]கயிறுகளைக் கண்டுளேன்.

---

1 வீரனே 2 மூவ்வுலகம் 3 மரணத்தால் 4 வீரனை 5 பலிஷ்டன் 6 சுகஜீவி 7 பிரபுக்களே! 8 அறிவிலிருந்து. 9 தீரனே 10 பானத்தினின்று 11 அறிவுலகத்தில் 12 கடன்கள்—தேவ கடன்கள் தேச கடன் தீரர்கடன் 13 முக்கால அறிவு 14 மனம் கடல் வானம் 15 பிராணனில் 16 கடமைகள் 17 நிலை 18 வீரனே 19 இக்கடமைகள் 20 ஜயமளிக்கும் 21 சாதனங்களை

௬. நான் புவியினின்று சோதி வழியில் சிறகுகளால் பறக்கும் துரிதமாகும், உன்[1] ஆன்மாவைப் என் மனத்தால் வெகு தூரத்தினின்று பார்த்துளேன். நான் இறகுகளுடன் பறக்கும் உனது சிரத்தை புழுதியற்று பலமுடனுகும் வழிகளில் காண்கிறேன். ௭. [2]பசுவின் பாதத்தில் உணவை யடைய விருப்பமாகும் உனது உயரிய உருவத்தை நான் கண்டுளேன். மனிதன் உன் சுவையை இன்பமாக்குங்கால் நீ [3]ஔஷதிகளை அதி சுவையுடன் புசிக்கிறாய். ௮. குதிரையே! உன்னைத் தேர் தொடரும், உன்னைப் பசுக்கள் உன்னை மணுளன், மணப்பெண் பாக்கிய மநுசரிக்கும். சேனைகள் உன் நட்பை நாடும், தேவர்கள் உன் பலத்தைப் பின் பற்றுகிறார்கள்.

௯. [4]அவன் கொம்புகள் பொன்மயம், அவன் கால்கள் இரும்பாகும். அவன் மனம்போல் துரிதனுவான். இந்திரன் அவனுக்குத் தாழ்ந்தவனே. தேவர்கள் குதிரையை முதன்மையாய் சுவாதீனஞ் செய்பவனது, அவியைப் புசிக்க வருகிறார்கள். ௧௦. துரகங்கள் திவ்ய கமனஸ்தானத்தைச் சேருங்கால், இடைசிறுத்து பருமனுயுள்ள தேவதீர குதிரைகள் ஹம்சங்களைப்போல் இனம் இனங்களாய் ஒன்றிசைந்து செல்லும். ௧௧. [5]குதிரையே! உன்காயம் பறக்கும் சுபாவமுள்ளது, உன் மனம் வீசுங் காற்றைப் போலாகும், உன் கொம்புகள்[6] பல இடங்களில் வியாபகங்களாகும். அவை [7]வனங்களில் துரிதமாய் சுற்றும்.

௧௨. துரித குதிரை திவ்ய மனத்தில் தோய்ந்து போர்க்களத்துக்கு வந்துளான். அவனது அழியாச் சின்னம் முன்வருகின்றது, கவிகள் அவனைத் தொடர்ந்து

1 வீரனே 2 புவியின் 3 சத்தான உணவுகளை 4 வீரன்தலை 5 தீரனே 6 சேனைகள் 7 சத்துருசேனைகளில்

கானஞ் செய்யச் செல்லுகிறார்கள். ௩. [1]குதிரை தனது [2]தாய் [3]தந்தை திவ்ய ஸ்தானத்துக்கு வந்துளான், நீ இன்று நல்ல சுவாகதமுடன் [4]தேவர்களுக்குச் செல்லவும். அங்கு அவன் [5]அளிப்பவனுக்கு வரங்களை யளிப்பான். ௪. ௬. ௭.

---

## அநுவாகம் ௨௩௧.

### குதிரை யறிவு

௧. நாங்கள் போரில் தேவஜாத திட [6]குதிரையின் பலத்தைப் புகழுங்கால், [7]ஆயு [8]ரிபுக்ஷன் வருணன் இந்திரன் மித்திரன் அரியமான் மருத்துக்கள் எங்களை நிந்திக்காமலிருக்கட்டும். ௨. [9]அவர்கள் ஆடை ஆபரண மணியும் வியாபக [10]செல்வத்தை [11]அவனது முன்னர் சுமக்குங்கால் கோஷிக்கும் விசுவரூபமான [12]அஜன் [13]இந்திர பூஷணனது பிரியமான நிலயத்துக்கு நேர்மையாய் செல்வான்.

௩. [14]துவஷ்டாவானவன் யக்ஞாருகமான [15]அஜத்தை துரகத்துடன் ஐசுவரிய‌த்துக்காக முன் செலுத்துங்கால் [16]விசுவேதேவர்களுடன் சேரும் [17]பூஷணபாகமான [18]இவன் துரித [19]குதிரையின் முன் செலுத்தப்படுகிறான். ௪. ருது காலத்தில் மானிடர்கள் [20]அவனை [21]மூன்று

---

௨௩௮. கருத்து—மர்ம குதிரை

1 தீரம் 2 தரணி 3 வானம் 4 திவ்யப் பொருள்களுக்கு 5 தாராளனுக்கு 6 வீரனின் 7 வைத்தியன் 8 பெரியவன் 9 சனங்கள் 10 சித்தத்தை 11 வீரத்தின் 12 பிரசாபதியான சனத்தலைவன் 13 பலமான புவியின் 14 மனம் 15 சனத்தலைவனை 16 மகாசனங்களுடன் 17 புஷ்டி 18 சேனைத் தலைவ 19 பலத்தின் 20 வீரனை 21 முவ்வுலகம்

முறை சுற்றிச் செலுத்தும் பொழுது பூஷணபாகமான [1]அஜன் அறிஞர்களுக்கு முதன்மையாய் [2]யக்ஞம்றிவித்துச்செல்வான்; அப்பால் [3]தேவர்களுக்கு யக்ஞாருகமான குதிரை செல்லும். ரு. ஹோதா [4]அத்வர்யு நல்லறிஞர் யக்ஞத்துரிதர் நன்கு சொல்பவர் அனல் மூட்டுபவர் ஆயுதந் தரிப்பவரான நீங்கள், நன்களிக்கப்பட்ட நலபக்குவமான இந்த யக்ஞத்துடன் அனல்களை நிரப்புங்கள்.

சா. [5]யூபஞ்சுமப்பவர், யூபம் வெட்டுபவர், குதிரைக்குப் [6]பக்குவப் பாண்டத்தைச் சேகரிப்பவர், துரகயூபத்துக்கு உச்சத் துண்டை திடமாக்குபவர்களது சம்மதம் எங்களைத் துரிதமாக்கட்டும். எ. [7]அவன் சுந்தர முதுகோடு தேவர்களின் திசைகளுக்கு வந்துளான். என் விருப்பம் நிறைவேறி விட்டது; அறிஞர்களான ரிஷிகள் அவனை இன்பமாக்குகிறார்கள். நாங்கள் தேவ க்ஷேமத்துக்காக திவ்ய நண்பனைச் செய்துளோம். அ. உனது முகவார், சிரப்பட்டை குதிரைக்கட்டு துரக பூஷணம் வாயில்வைக்கப்படும் புல்லான இவை யாவும் தேவர்களோடாகட்டும். கூ. ஈ புசிக்கும் குதிரை மாமிசம் கம்பு கோடரி கைகள் கொல்லுபவன் நகங்களில் பற்றியுள்ள உனது யாவும் தேவர்களிலாகட்டும்.[8]

க0. [9]சாந்தமளிப்பவர்கள் உதரத்தினின்று வீசும் அரை மலம் பச்சைமாமிச கந்தத்தைச் சரியாக்கட்டும். அவர்கள் கொழுப்பைச் சரிபக்குவமாக்கட்டும். கக. [10]நீ குத்தப்பட்டுக் [11]கனலில் பக்குவமாகுங்கால் உன் அங்

1 சனத்தலைவன் 2 போர் 3 திவ்யங்களுக்கு 4 போர்த்தலைவர்கள். 5 குதிரை கட்டுங்கம்பம் 6கொள்ளு பக்குவஞ்செய்யும் 7 குதிரை 8 நீங்கட்டும். 9 வைத்தியர்கள் 10மனிதனே உன் மதியின்மை 11அறிவில்

கத்தினின்று கிளம்பும் [1]எத்துண்டும் [2]புஷ்பி புல்லில் விழாமலாகட்டும். அது அவாவுடனாகும் [3]தேவர்களுக்கு அளிக்கப்படட்டும். ச.கூ.அ.

---

## அநுவாகம் உச௦.

### துதி.

க. [4]குதிரைப் பக்குவம் பார்த்து அவன் சுகந்தனைய் விட்டான், அவனைக் கிளப்பவும் எனக் கூறுபவர்களதும், [5]துரக மாமிசம் கேட்கக் காத்திருப்பவர்களதும் சங்கற் எம்மைத் தூரிதமாக்க வேண்டும்.

உ. இரசந் தாங்கும் [6]கலசங்கள் சூடு செய் பாண்ட [7]மூடிகள் [8]மாமிச பக்குவ பாண்டத்தின் மாதிரி [9]யகப்பை [10]அசுவத்தை யலங்கரிக்கும்.

௩. நீ புரண்டு சாய்ந்து புறப்படு மிடங்கள் துரகாபரணங்கள் பருகி புசிக்கும் உணவு இவை யாவும் உனதனைத்தும் தேவர்களுடன் சேரட்டும்.

ச. கந்தப் புகையுடனாகுங் கனல் உன்னைக் கணகண வென்றாக்க வேண்டாம். சோதி சுகந்தம் வீசும் [11]பாண்டம் உடையாமலாக வேண்டும். தேவர்கள், அளித்து அங்கீகரமாகி, [12]வஷட் சத்தமுடன் சேரும் ஆனந்தமளி குதிரையை, சுவிகரிக்கிறார்கள். ரு. அவர்கள் மேல்விரி, வாய்வார் பாத பூஷணம் குதிரை ஆடை பொன்னாபரணங்களை தேவர்களுக்குப் பிரியமா யளிக்கிறார்கள். சூ. உன்னை வேகச் சவாரி செய்து துரத்தி கசை குதி

---

உ௩௧, கருத்து,—அசுவ இரகசியம்.

1 செயல் 2 சின்ன விஷயத்தில் 3 திவ்யச் செயல்களுக்கு 4 சத்தியின் 5 திடத்தின் 6 புலன்கள் 7 தூலப் புலன்கள் 8 சித்தம் 9 சுவாசம் 10 சீவனை 11 இச்சரீரம் 12 போர்.

காலால அடித்துண்டாகும் வேதனைகளை—நான் [1]பிரமத்தால் யக்ஞாகுதியை அகப்பையால்போல் உனது இவ்வனைத்தையும் நன்கு விலக்குகிறேன். எ. [2]கோடரி தேவப் பிரியமான குதிரையின்[3] ௩௪ [4]விலா எனும் புகளைச் சேரும். நீங்கள் கணுக்களைக் குற்றமன்னியில் நன்கு செய்து ஒவ்வொரு அங்கத்தையும் விளக்கி வெட்டுங்கள். அ. துவஷ்டாவின்[5] குதிரையைத்[6] தெளி வாக்குபவன் ஒருவனுண்டு, அங்கு அமைதியளிப்பவர் [7]இருவராகும், இதுதான் சகஜம்; நான் [8] அனலில், [9]பிண்டங்களின் நடுவே யுள்ள உனது அங்கப் பிரிவுகளை நன்கு பிரித்தளிக்கிறேன். கூ. நீ, வரும்பொழுது உனது பிரிய ஆன்மா உன்னைத் துன்பஞ் செய்யாம லிருக்கட்டும். கோடரி உன் காயத்தில் நிற்கவேண்டாம். அறிவற்று ஆத்திரமுடன் அமைதி யளிக்கும் எவனும் கணுக்கள் தவறி மத்தியில் உன்னைக் கத்தியால் சின்னபின்னஞ் செய்யாமலாகவேண்டும். க0. நீ சாவதில்லை, நீ இம்சையாவதில்லை. நீ சுலப வழிகளில் தேவர்களுக்குச் செல்லுகிறாய். பொன் குதிரைகள் உனது சோடிகளாயுள. குதிரை கர்தபச் சுமையின் கீழே, நின்றுள்ளது. கக. துரகம் எமக்கு புருஷர் புத்திரர் நற்குதிரை பசுச் செல்வம் விசுவந்தரிப் பொருளை யளிக்க வேண்டும். அதிதி எமக்குப் பாப சூன்னியத்தைத் தர வேண்டும். அவியோடாகு மசுவம் எமக்குச் க்ஷத்திரத்தைச் செய்ய வேண்டும். ச. சு. கூ.

[இதன் தொடர்ச்சியை உகுகுவது அநுவாகத்தில் காணவும்.]

---

உச0. கருத்து:—க்ஷத்திரியனாக வேண்டும்.

1 என் வன்மையால் 2 மனோ ஆராய்ச்சி 3 சோதி யுலகத்தின் 4 சூரியன், சந்திரன், ஐந்து கிருகங்கள், உஎ நட்சத்திரங்கள் ஆக ௩௪. 5 மனத்தின் 6 பலத்தை 7 பிராணன், அபானன். 8 ஆத்மானலில் 9 புலன்களின்.

## அநுவாகம் உசக.

[யக்ஞத்தாலாகும் பயன்கள்]

### எனக்கு

க. விஷ்ணுவே, அக்கினியே! இக்கானங்கள் ஒன்று குவிந்து உங்களை இன்ப முடனுக்கவேண்டும், நீங்கள் சோதி சக்திகளுடன் வாருங்கள். உ. எனக்குச் சக்தி எழுச்சியும் முயற்சி, மேன்மையும், எனக்குச் சித்தம், சங்கற்பமும், சுவரம் சுலோகமும், எனக்குக் கீர்த்தி செல்வாக்கும், சோதி சுவர்க்கமும், எனக்குப் பிராணன் அபானனும், வியானன் அசுப்பிராணனும், எனக்குச் சித்தம், சிந்தனையும், மொழி மனதும், எனக்குக் கண் காதும் திடம் திறமும், எனக்கு வன்மை வலிமையும், சீவன், மூப்பும், எனக்கு ஆத்மா தேகமும், காப்பு கவசமும், எனக்கு அங்கங்கள் எலும்புகளும், கணுக்கள் காயங்களும்—யக்ஞத்தா லோங்க வேண்டும். ச. எ. க.

---

## அநுவாகம் உசஉ.

### வேண்டும்

க. எனக்குத் தலைமை தலைமைப் பதவியும், கோபம் கடுமையும் எனக்கு கோரம் கொடுமையும், சிறப்பு, ஜயபலமும், எனக்கு விரிவு விசாலமும், நீளம் உச்சியும், எனக்குச் சத்தியம் செழுமையும், சகம் சிரத்தையும், எனக்குச் சக்தி, செல்வமும், வன்மை, விளையாட்டும், எனக்குக் களிப்பு, குழந்தைகளும், சந்ததிகள், சீலச் சொற்களும், எனக்கு நற்செயல்கள், காட்சியும், கண்டது காண்பதும், எனக்கு நல்வழி நன்னெறியும், சித்தி செழிப்பும், எனக்

குப் பொருத்தம் பொருந்துவதும், புத்தி நற்புத்தியும், யக்ஞத்தா லோங்க வேண்டும். ௪. ௭. ௨.

---

## அநுவாகம் ௨௪௩.

### சுகம்

௧. எனக்குச் சுகம் செல்வமும், பிரியம் விருப்பமும் எனக்கு ஆசை அன்பும், மங்களம் அதி மங்களமும், எனக்குப் புகழ், மேன்மையும், கீர்த்தி பொருள்களும், எனக்குத் தாங்குபவன் தடை செய்பவனும், க்ஷேமம், திரமும்; எனக்கு அனைத்தும் அகண்டமும், கல்வி, காணலும், எனக்கு பிரசவிப்பதும் புலனுக்குவதும், கலப்பை கருத்தும், எனக்கு ருதம் அமுதமும், பிணி நீக்கம், நோய் பிரிவும், எனக்கு சீவனும் நீண்ட சீவனும், பகை பிரிவு பய சூனியமும், எனக்கு சயனம் சுகயாத்திரையும் சீல உஷை சீல தினமும் யக்ஞத்தா லோங்க வேண்டும். ௪. ௭. ௩.

---

## அநுவாகம் ௨௪௪.

### உணவு

௧. எனக்கு உணவு, உண்மையும், பால், இரசமும், எனக்கு நெய், தேனும், ஒன்று புசித்து பருகுவதும் எனக்குக் கிருஷி, மழையும், விளைவு, வெற்றியும், எனக்குப் பொருள் பொன்னும் செல்வம் செழுமையும், எனக்குப் புஷ்டி பிரபுத்வமும், பலவும் வெகு பலவும், எனக்குப் பூரணம் அதிபூரணமும் அழியாமை அதம விளைவுகளும், எனக்கு ஊட்டம் பசிப்பிரிவும், நெல் யவ தானியமும், எனக்கு உளுந்து எள்ளும் பயறு கடலையும், எனக்கு

கோதுமை, துவரையும், தினையரிசி சிறுமணியும், எனக்குச் சமை யரிசி சோலை தானியமும்—யக்ஞத்தா லோங்க வேண்டும். ச. எ. ச.

---

## அநுவாகம் உசரு.

### கல்

க. எனக்குக் கல் களிமண்ணும் குன்று மலைகளும் எனக்கு மணல் மரங்களும் பொன் இரும்பும், எனக்கு ஈயம் தகரமும், தாமிரம் தணலும், எனக்கு சலம் செடி கொடிகளும், எனக்குப் பயிர் பயிரிடாத விளைவுகளும், எனக்குக் கிராமம், காட்டுப் பசுக்களும், யக்ஞத்தா லோங்கவேண்டும்: எனக்குச் செல்வம் செல்வ ஐயமும் சித்தி, சித்திச் செயலும், எனக்கு சகம் செல்வமும் செயல் சக்தியும் எனக்கு நெறி நோக்கமும், எனக்கு கதி, கமனமும், யக்ஞத்தா லோங்கவேண்டும். ச. எ. ரு.

---

## அநுவாகம் உசசா.

### தேவர்கள்

க. எனக்கு அக்கினி இந்திரனும், சோமன் இந்திரனும், எனக்கு சவிதா இந்திரனும் சரஸ்வதி இந்திரனும் எனக்குப் பூஷணன் இந்திரனும், பிரகஸ்பதி இந்திரனும் எனக்கு மித்திரன் இந்திரனும் வருணன் இந்திரனும் எனக்குத் துவஷ்டா இந்திரனும், தாத்ரு இந்திரனும் எனக்கு விஷ்ணு இந்திரனும் அசுவினிகள் இந்திரனும் எனக்கு மருத்துக்கள் இந்திரனும் விசுவே தேவர்களு மிந்திரனும், எனக்குப் புவியு மிந்திரனும் வானம் இந்திரனும் எனக்குச் சோதி இந்திரனும் திசைகள் இந்திரனும்

எனக்குச் சிரமும் இந்திரனும் பிரசாபதியு மிந்திரனும் யக்ஞத்தா லோங்கவேண்டும். ௪. ௭. ௬.

## அநுவாகம் ௨௪௭.

### கிரகங்கள்

எனக்கு சூரியன் இரசிமி, சிறப்பும் சாசுவதமும், எனக்கு மனம், அந்தக்கரணமும், எனக்கு ஐந்திரவாயவமும், மைத்திர வருணக் கிரகங்களும், எனக்கு சுக்கர, மந்தின, பிரதிப் பிரஸ்தானக் கிரகங்களும் எனக்கு துருவம், விசுவேதேவர், ஆக்கிரயணக் கிரகங்களும் எனக்கு ருதுக்கிரகம், வைசுவாநரம் அதிகிராஹ்யங்களும், எனக்கு இந்திரன், அக்கினி விசுவேதேவக் கிரகங்களும் எனக்கு மருத்து, மகேந்திரன் ஆதித்திய கிரகங்களும், எனக்கு சவிதா, சரஸ்வதி, பூஷணக் கிரகங்களும், எனக்கு மனைவிகளுடனுகும் துவஷ்டாக் கிரகம் ஹாரி யோஜனக்கிரகம் யக்ஞத்தா லோங்க வேண்டும். ௪. ௭. ௭.

## அநுவாகம் ௨௪௮.

### யக்ஞ சாதனம்

௧. எனக்குச் சமித்து தருப்பை வேதி உபவேதிகளும், எனக்குப் பாண்டம் பொழியுங் கல் அகப்பைகளும், எனக்குத் துண்டு துவனி சாதனம் மேல் கீழ் பலகைகளும், எனக்குத் துரோண கலசம் வாயுக்கிரகம் சோமக் கிரகமும்; எனக்கு கலக்குங் கலசம், அனல் வேதி, அவிதரிப்பும், எனக்கு கிரகம், சதசு, புரோடாசமும் எனக்குப் பக்குவமானவைகளும் அவ பிருதமும் சித்தி முழக்கமும் யக்ஞத்தா லோங்கவேண்டும். ௪. ௭. ௮.

## அநுவாகம் உசக.

**அக்கினி**

க. எனக்கு அக்கினி அனல் ஒளி சூரியனும், எனக்குப் பிராணன் அசுவமேதமும், எனக்கு புவி, திதி, அதிதி சோதியும், எனக்கு விரல், திசை, சக்வரிகளும் யக்ஞத்தால் பெருகவேண்டும்; எனக்கு ருக்கு, சாமன் ஸ்தோமன், யஜுர் வேதமும் எனக்கு தவம் ருதம், விரதம் தீட்சை இரவு பகல் மழையுட ேனோங்கவேண்டும், எனக்கு பிரஹத்தும் இரதந்தரமும் யக்ஞத்தா லோங்கவேண்டும். ச. எ. க.

---

## அநுவாகம் உ௫ο.

**பலம்**

க. எனக்குக் கருப்பம் கன்றுகளும், எனக்கு பதினெட்டு மாத காளையும் பசுவும், இரண்டு வருஷ, இரண்டு அரை வருஷ, மூன்று வருஷ, நான்கு வருஷ காளைகளும் பசுக்களும், எனக்குச் சுமைக் காளையும், சுமைப் பசுவும் வறட்டுக்காளையும் மலட்டுப் பசுவும், விருஷபம், சினைசிதறும் கோவும், காளையும் பசுவும் யக்ஞத்தா லோங்கவேண்டும். ஆயுசு யக்ஞத்தாலோங்கவேண்டும், யக்ஞத்தால் பிராணன் ஓங்கவேண்டும். யக்ஞத்தால் அபானன் ஓங்கவேண்டும். யக்ஞத்தால் வியானன் ஓங்கவேண்டும். யக்ஞத்தால் கண், ஓங்கவேண்டும். யக்ஞத்தால் காது ஓங்கவேண்டும். யக்ஞத்தால் மனம் ஓங்கவேண்டும், யக்ஞத்தால் வாக்கு ஓங்கவேண்டும், யக்ஞத்தால் ஆத்மா ஓங்கவேண்டும், யக்ஞத்தால் யக்ஞ மோங்கவேண்டும். ச. எ. கο.

## அநுவாகம் உ௫க.

### அதிபதி

க. எனக்கு ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்தொன்று, இருபத்து மூன்று, இருபத்தைந்து, இருபத்தேழு, இருபத்து ஒன்பது, முப்பத்து ஒன்று, முப்பத்து மூன்றும்; எனக்கு நான்கு, எட்டு, பன்னிரெண்டு, பதினாறு, இருபது இருபத்து நான்கு, இருபத்தெட்டு, முப்பத்து இரண்டு, முப்பத்தாறு, நாற்பது, நாற்பத்து நான்கு, நாற்பத்தெட்டும், எனக்கு பலம், எழுச்சி, புனருதயமும், எனக்கு சங்கற்பம், சுவர்க்கம் சிறப்பு, வியஸ்சினியமும், எனக்கு அந்தம் அந்தத் தோற்றமும், புவனம் புவனத் தோற்றமும், எனக்கு அதிபதியும் யக்ஞத்தா லோங்க வேண்டும். ச. எ. கக.

---

## அநுவாகம் உ௫உ.

### பலத்தை நாடுங்கள்

க. சக்தி எங்களை நான்கு துருவங்கள் ஏழுதிசைகளில் காக்கவேண்டும். சக்தி இங்கு விசுவே தேவர்களுடன் செல்வமடைய எம்மை இரட்சிக்கவேண்டும்.

உ. எல்லா மருத்துக்களும் எம்மைக்காக்க அனைவரும் பிரசன்ன மாகவேண்டும். எல்லா அனல்களும் நல்ல எழுச்சியுடனாகட்டும். விசுவேதேவர்கள் எமக்குத் துணையுடன் வரட்டும். சகல செல்வம் சகலசக்தி எமக்காகட்டும். ந. தேவர்களே! அக்கினி இந்திரன், பிரகஸ்பதி

---

உசக—உ௫க. கருத்து—நமக்கு அவசியமானவை.

மருத்துக்களுடன் சோமனைப் பருகி சக்தியைப் புலனுக்க உங்கள் பொன் இரதங்களில் வாருங்கள்.

௪. குதிரைகளே! ஒவ்வொரு சமரிலும் எம்மைக் காருங்கள்; சத்தியர்களே, சித்தமறியும் சாசுவதமானவர்களே! செல்வத்துக்காக, எம்மை இரட்சியுங்கள். இத் தேனின் இரசத்தை பருகி அதில் இன்பமாகுங்கள். இன்பமாகி தேவர்கள் செல்லும் வழிகளால் செல்லுங்கள்.

௫. எங்கள் முன் பலமுண்டு. எங்கள் நடுவில் சக்தியுண்டு. திடம் தேவர்களை சம்பாதிக்கும். பலத்தினுதயம் மங்களமளிப்பதாகும். நான் எல்லா திசைகளிலும் பலபதியாகவேண்டும். ௬. நான் புவியில் பாலை ஸ்தாபிக்க வேண்டும், நான் செடிகொடிகளில் பாலை, சோதியில் பாலை, வானத்தில் பாலை ஸ்தாபிக்கவேண்டும். எனக்கு திசைகள் பால் மிகுந்தனவாகட்டும். ௭. நான் நெய்பாலுடன் இணைகிறேன். நான் சலம் செடிகொடிகளுடன் சேர்ந்துளேன். அக்கினியே! நான் பலத்தை ஜயிக்க வேண்டும்.

௮. பல வடிவமாகி ஒரே மனமுடனுகும் இரவுபகல்கள் ஒன்று சேர்ந்து ஒரே குழந்தையை ஊட்டுகிறார்கள். சுந்தரன் சோதி சகத்தின் நடுவே பிரகாசிக்கிறான், செல்வமளிக்கும் தேவர்கள் அக்கினியைத் தாங்குகிறார்கள்.

௯. நீ நீர் நிறையும் சலமளிக்கும் கடல்; சுகம் அதிசய செயலுடன் என்னை யணுகவும்; சுவாஹா; நீ மருத்துக்களின் தலைவனாகும், நீ மருத்துக்களின் கணமாகும், சுகம் அதிசய செயலுடன் என்னை யணுகவும், சுவாஹா! நீ இரட்சகன் இரம்மியமானவன், சுகம் அதிசய செயலுடன் என்னை யணுகவும்; சுவாஹா ௪. ௭. ௧௨.

---

௨௫௨. கருத்து—பலந்தான் பெரியது.

## அநுவாகம் உ௫௩.

### அக்கினி போற்று

க. நான் திடத்தில் திண்மையாய் திவ்ய சுபர்ணனுயுள்ள அக்கினியை, செயல் சக்தியுடன் சேர்க்கிறேன். நாம் அவனுல் உயரிய உலகத்துக் கப்பாலுள்ள சுவர்க்கமேறி சூரியனது சோதி ஸ்தானத்துக்குச் செல்வோம்.

உ. அக்கினியே! பறவை போலுள்ள உனது இச்சிறகுகள் அழியாதவை யாகும். அவற்றுல் நீ அரக்கர்களை யழிக்கிருய். எங்கு முதற் புலனுகும் பழைய ரிஷிகள் உளார்களோ அந்த நல்ல மனிதர்களது லகத்துக்கு, நாங்கள் இவற்றுல் துரிதமாவோம். ௩. நீ ருதன், இந்து, கழுகு, கருடன் பொன் சிறகுள்ள துரிதன் குசலன், பலிஷ்டன் புத்திமான் கடல்போல் மூலன், மகத்தான அதன் ஸ்தானத்தில் திடமாயுட் கார்பவனுகும். ச. உனக்கு நமஸ்காரம், என்னை இம்சிக்காதே. நீ விசுவத்தின் சிரத்தில் சாய்ந்துபிரசன்னமாயுளாய்; கடலில் உனது இருதயமாகும்; உனது இருதயநடுவில் ஆயுஸாகும்; உன்னுல் உலகங்களில் சோதியும் சகமும் ஸ்தாபிக்கப் பட்டுள்ளன.

௫. நீ சலமளிப்பவன், மேகம் பிளப்பவன்; புவி, சோதி வானம் பர்சன்னியம் அப்பாலிருந்தும் மழையினுல் எம்மை இரட்சிக்கவும்; நீ சோதி சிரமாகும், நீ புவி நடுவு; நீ சலம் செடி கொடிகளின் சக்தியாகும்; நீ விசுவாயுசு நீ விசாலன்; நல்வழியான உனக்கு நமஸ்காரம்.

௬. சுவர்க்கஞ் ஜயித்து அனலெழுப்பும் ரிஷிகள் எந்த தவத்தால் யக்ஞ ஸதனைச் செய்தார்களோ அதனுல், இவ்வுயரிய உலகத்தில், மனிதர்களால் அழைக்கப்

பட்டு ஆகாச வியாபகமாகும் அக்கினியை ஸ்தாபிக்கிறேன். எ. தேவர்களே! நாம் மூன்றுவது உலகத்துக்கப்பால் சோதியின் சிறப்பான சுகிருத ஜகத்திலுள்ள உலகத்தைப்பற்றி, பெண் பிள்ளை மனைவி சகோதரர்களோடு அவனை யநுசரிப்போம். அ. அறிஞன் சத்துப்பதி போஷிப்பவன் இங்கு வாக்கின் நடுவில் உதயமாயுளான். சோதியான யவன் புவியின் மேல் ஸ்தாபிதமாகி எதிரிகளைத் தன் பாதங்களின் கீழே தள்ளுகிறான். கூ. வீரம் மிகுந்து வன்மை யளிக்கும் ஆயிரம் தீரர்போலுள்ள அக்கினி இங்கு அழியாமல் பிரகாசிக்கட்டும். அவன் கடல் நடுவே ஒளிவீசுகிறான்; நீங்கள் திவ்ய ஸ்தானங்களை யடையுங்கள்.

க0. நீங்கள் முன் செல்லுங்கள்; ஒருமையுடன் உத்தமமாய் செல்லுங்கள்; அக்கினியே! தேவவழியைத் தயாராக்குங்கள்; விசுவேதேவர்களே! இந்த அதி உத்தம ஸ்தானத்தில் யஜமானனோடு உட்காருங்கள். கக. அக்கினியே! நீ எதனால் செல்வம், சஹஸிரத்தைச் சுமக்குகிறாயோ அதனால் தேவர்களை யடைய உத்தமமாயுள்ள இந்த யக்ஞத்தை எமக்காக வகிக்கவும். கஉ. அக்கினியே! நீ உதயமாகவும், அவனை விழிப்புள்ளவனாக்கவும். நாம் இருவரும் இஷ்டிப் பூர்த்தியைச் செய்வோம். உன்னில் பிதாவான பாலனைச் செய்து இந்த இழையை அவன் அநுசரித்துளான். கஙு. நீ சனித்து சோதியாகும் இது உனது உரிய சன்மஸ்தானம்; அக்கினியே! நீ இதை அறிந்து ஏறவும்; நீ எமது செல்வத்தைச் செழுமை யாக்கவும். ச. எ. கஙு.

---

உ௰ங. கருத்து—நீங்கள் செல்வமுடனாகுங்கள்

## அநுவாகம் உருச.

### விசுவே தேவர்கள்

க. அக்கினியே! பெரிய போர்களில் பிரகாசம் எமக்காக வேண்டும். நாங்கள் உன்னை எழுச்சியாக்கி எமது தேகங்களைப் புஷ்டியாக்கிக் கொள்வோம். எனக்கு நான்கு திசைகளும் நமஸ்கரிக்கட்டும். நாங்கள் உன் தலைமையினால் சத்துருக்களை ஜயிக்கவேண்டும்.

உ. விஷ்ணு அக்கினி, இந்திரனுடன் மருத்துக்களுடனான எல்லா தேவர்களும் என் போரில் பிரசன்னமாகட்டும். விரியும் வானம் எனது இரட்சகனாகட்டும். காற்று இவ்விருப்பத்தில் எனக்கு வீசவேண்டும். ங. தேவர்கள் அவியால் என்னில் ஐசுவரியத்தை யளிக்கவேண்டும். என்னில் ஹிதமாகட்டும்; தேவ அழைப்பு என்னிலாகவேண்டும். பழைய புனித ஹோத்துருக்கள் எமக்கு ஜயிப்பார்கள்; வீரர் மிகுந்து நாங்கள் இம்சையன்னியிலாக வேண்டும்.

ச. அவர்கள் எனது அவிகளை யெல்லாம் யக்ஞஞ் செய்யட்டும்; என் மனத்தின் சங்கற்பம் பூரணமாகட்டும். நான் எப்பாவத்தையுஞ் செய்யலாகாது; விசுவே தேவர்கள் என்னைப்பற்றி அதிகமாயுரைக்கட்டும்.

ரு. திவ்யமான ஷட் விசாலர்களே! எனக்கு விரிவு நிலயத்தைச் செய்யுங்கள், விசுவேதேவர்களே! இங்கு உங்கள் வீரங்களைப் புலனுக்குங்கள். நாங்கள் எம்மை எமது பிரசையை இழக்காமலாக வேண்டும். சோம இராஜனே! நாங்கள் எமது சத்துருக் கிரையாகவேண்டாம். சா. அக்கினியே! நீ கடுமையைக் கழித்து அழியாத காப்பாய் நீ முன்பக்கஞ் செல்லவும். எங்களை எங்கும் இரட்சிக்கவும், எதிரிகள் மறுபடியும் திரும்பிச் செல்

லட்டும். அவர்களது கெட்ட சித்தம் உன் அறிவால் அழி யட்டும்.

எ. சிருட்டிகளின் தலைவன், புவனங்களின் பதி, இரு அசுவினிகள், பிரகஸ்பதி தேவர்கள், எதிரி ஜயிக்கும் திவ்ய சவிதாவானவன் இந்த யக்ஞத்தையும் யஜமானனையும் பல சூன்னியத்தினின்று காக்கவேண்டும். அ. இவ்வழைப் பில் அதிகமாயழைக்கப்படும் மேன்மை மகாவிசாலமான இந்திரன் எமக்கு உணவு காப்பை யளிக்கவேண்டும். ஹரியசுவமே எமது பிரசைக்குச் சுகமளிக்கவும். எங்களை இம்சிக்காதே, எங்களை விட்டுவிடாதே.

௯. எங்கள் எதிரிகள் நீங்கவேண்டும், நாங்கள் இந் திரன் அக்கினியோடு அவர்களை ஜயிப்போம். வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள் என்னை உக்கிரத் துவம்சனை யும் சோதி சேரும் அதி இராஜனுகவும் செய்யட்டும். ௧0. நாங்கள் நிலம் செல்வம் அசுவஞ் ஜயிக்கும் இந்திரனை இங்கு வெகு தூரத்தினின்று அழைப்போம். நீ எமது போரில் இந்த யக்ஞத்தை நாடவும். அசுவத் தலைவனே நாங்கள் உன்னை யஜமானனுக்கு நண்பனு யாக்குவோம். ச. எ. கச.

---

## அநுவாகம் உ௫௫.

### தேவ துணை

[அசுவமேதம். உச0 வது அநுவாகத் தொடர்ச்சி]

க. நான் முதன்மையாயும் பலர் புலனுக்கும் அறி ஞர்களாயும் [1]பஞ்ச சனங்களுக்கு ஹிதமுமான அக்கினி யின் [2]சோதியை தியானஞ் செய்கிறேன். நாங்கள் எல்லா

உ௫ச. கருத்து—எல்லா திசைகளும் எனக்குவணங்கட்டும்.

1 பஞ்சப் பிராணன்களுக்கு; 2 ஈசனின்.

சனத்திலும் நுழைந்துள்ள—ஜாடராக்கினியை—நாடுகி றேம். அவன் எங்களைப் பாவத்தினின்று பிரிக்கட்டும். ௨. சுவாசித்து கண்ணுடனுகி அசையும் பிராணிகளெல்லாம் எவனுடைய சுவாதீனத்திலுளதோ சனித்தும் சன்மமான தும் எவனுக்குப் பிரத்தியேகமா யுரியதோ அந்த அக்கி னியை நான் துதிசெய்கிறேன். நான் துணைநாடி அவனை யழைக்கிறேன். அவன் எங்களைப் பாவத்தினின்று பிரிக் கட்டும்.

௩. நான் முதன்மையாய் அறிஞனுயுள்ள [1]இந்திர னின் சோதியை—மனனஞ் செய்கிறேன். விருத்திர சம் காரனது துதிகள் என்னை யணுகியுள; நற்செயல் செய்யும் தாராளனது அழைப்புக்கு வரும் அவன் எங்களைப் [2]புன் மையினின்றும் பிரிக்கட்டும். ௪. சமருக்குச் சக்தியால் சைன்னியத்தை யழைத்துச் சென்று மூன்று [3]புஷ்டிகளை ஒருமையுடனுக்கும் இந்திரனை, நான் துதிக்கிறேன். நான் அவனைத் துணை நாடி அழைக்கிறேன். அவன் என்னைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும்.

௫. [4]மித்திர வருணனே! நான் உங்கள் உண் மையை மனனஞ்செய்கிறேன். சக்திமான்களே! சத்திய பல முள்ளவர்களே! நீங்கள் துன்பமாக்கும் எதிரியின் துஷ்டபுத்தியை யறியுங்கள். இரதமுடனுள்ள இரா ஜாவை உக்கிரத்தோடணுகும் நீங்கள் புன்மை யினின்று எம்மைப் பிரிக்கவேண்டும். ௬. மித்திர வருணர்களே! நான், சத்திய வழிசென்று நேர் கயிறு களுடன் அசத்தியர்களை யழிக்கப்போகும் இரதமுள்ள உங்களைத் துதிக்கிறேன். நான் துணைநாடி உங்களை யழைக்கிறேன்; நீங்கள் எங்களைப் புன்மையினின்றுப்

---

[1]பலத்தின் [2] பலஈனத்தினின்று [3] உலகங்களை [4] நண் பனே நிலையாயுள்ளவனே.

பிரிக்கவேண்டும். எ. நாங்கள் எல்லாப் பொருள்களையும் சூழ்ந்து சீவனுள்ளதைத் தாங்கிக் காக்கும் வாயு[1] சவிதாவின் விதிகளைப் போற்றுகிறோம். நீங்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும். அ. இருதேவர்களின் தருமத்தில் திவ்ய ஆசிகள் எமக்கு வந்துள; நான் வாயு சவிதாவைப் போற்றுகிறேன், நான் துணைநாடி உங்களை அழைக்கிறேன். நீங்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும்.

௯. சுகவழி செல்வங்களுடன் நான், அதிசுபமாய் செல்லும் இரதிகர்களின் அதியுத்தம சாரதிகளை[2] இரட்சிப்புக்கு அழைக்கிறேன். தேவர்களே! தேவர்களில் அந்நியரால் அழிவாகாத பலமுடனுள்ள நீங்கள் [3]புன்மையினின்று எம்மைப் பிரிக்கவேண்டும். ௧0. [4]முச்சக்கர இரதத்தில் ஒருமையுடன் ஒரே ஆசனம் விரும்பி சூரியையின் [5]விவாஹத்துக்கு நீங்கள் வருஞ்சமயத்தில், தேவாசுவினிகளாகும் உங்களை நான் [6]துதிக்கிறேன். நான் துணை நாடி உங்களை அழைக்கிறேன். நீங்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும்.

௧௧. நான் [7]மருத்துக்களின் மேன்மையை தியானஞ் செய்கிறேன். அவர்கள் எம்மைக் காக்கவேண்டும். அவர்கள் அனைவரும் இவ்வெல்லா மொழியையும் துணை புரிய வேண்டும். நான் சுக சுவாதீனமாகும் துரிதர்களை உதவிக்கழைக்கிறேன். அவர்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்க வேண்டும்.

௧௨. நான் செழுஞ்சுடர் திடம் சக்தியுடனாகி சமர்

---

1 வியாபகன், மனோவன்மை யுள்ளவன். 2 அசுவினிகளான வைத்தியர்களை 3 படுகாயத்தினின்று 4 மனம், காயம் ஆத்மாவோடான இச்சீவன் 5 அறிவின் 6 நாடுகிறேன். 7 பாமரர்களின்.

களில் ஜய சீலர்களான திவ்ய சேனையாகும் மருத்து தேவர்களை துதி செய்கிறேன். நான் துணைநாடி அவர்களை அழைக்கிறேன். அவர்கள் என்னைப் புன்மையினின்று பிரிக்க வேண்டும். ௧௩. நான் [1]தேவர்களை நாடுகிறேன், அவர்கள் எம்மை இரட்சிக்க வேண்டும். அவர்கள் அனைவரும் இவ்வெல்லா மொழியையும் துணைபுரிய வேண்டும். நான் சுக சுவாதீனமாகும் துரிதர்களை துணைக்கழைக்கிறேன். அவர்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும்.

௧௪. தேவர் மனிதராலுண்டாகும் துக்கத்தால் அழியும் நான், அது நீங்க விசுவே தேவர்களைத் துதிக்கிறேன். நான் துணை நாடி அவர்களை யழைக்கிறேன். அவர்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்கவேண்டும்.

௧௫. [2]அநுமதி இன்று எமக்கு யக்ஞத்தை யநுகூலமாக்க வேண்டும். ௧௬. அநுமதியே! நீ உன் பிரிய மனத்தை யளிக்கவும். ௧௭. [3]வைசுவா நராக்கினி எமக்கு துணை புரிய வரட்டும். ௧௮. சோதியில் நிகழுமவன் வர வேண்டும். ௧௯. எல்லையற்ற பலத்தோடு பரந்து பொருள்களின் ஸ்தம்பங்களான [4]நிலம் சோதியை நான் [5]துதிக்கிறேன். துணைநாடி அவற்றை அழைக்கிறேன். நீங்கள் புன்மையினின்று எம்மைப் பிரிக்க வேண்டும்.

௨௦. விசால சோதியே! புவியே! எமக்குச் செல்வத்தைச் செய்யுங்கள். க்ஷேத்திரப் பத்தினிகளே! எம்மை இரட்சியுங்கள். நான் சோதி சகத்தைப் புகழ்கிறேன். நான் துணைநாடி அவற்றை அழைக்கிறேன். நீங்கள் எம்மைப் புன்மையினின்று பிரிக்க வேண்டும்.

---

1 அறிஞர்களை 2 அநுகூலஞ் செய்பவன் 3 சமூகசக்தி 4 நிலம் சோதியிலுள்ள அனைத்தையும் 5 பற்றுகிறேன்.

௨௧. அதிதி இளைஞனே! நரர்களான நாங்கள் அறியாமையால் எப்பிழை செய்திருந்த போதிலும் அதிதியின்[1] முன் எங்களைக் குற்ற மன்னியிலாக்கவும். அக்கினியே! எங்கும் எமது புன்மைகளை நீக்கவும்.

௨௨. சோதி புருஷர்களே! யக்ஞாருகர்களே! காலில் கட்டப்பட்டுள்ள வெண்பசுவை விடுவிப்பதுபோல் எம்மிடருந்து புன்மையை நீக்குங்கள். அக்கினியே! எமது ஆயுசு பெருகி ஓங்கட்டும். ௪. ௭. ௧௫.

## அநுவாகம் ௨௫௬.

அசுவம்

[காண்டம். ௫.]

௧. [2]அக்கினியே! [3]ஜாதவேதசனே! எழுச்சியாக்கப்பட்ட பலம் மிகும் நீ மனிதர் நிலயத்தை மேன்மையாக்கி இனிய [4]நெய் பெருக்கி பலம் சுமந்து தேவப்பிரிய ஸ்தானத்துக்குச் செல்லவும். ௨. பலமுள்ள புத்திமான் தேஜசால் தேவவழிகளை யலங்காரமாக்கி தேவர்களுக்குச் செல்லட்டும்; பலிஷ்டனே! திசைகள் உன்னை யநுசரிக்கட்டும். இந்த [5]யஜமானனுக்குப் பலத்தை யளிக்கவும்.

௩. [6]குதிரையே! நீ துதிப்பதற்கும் போற்றுவதற்கும் அருகதையாகும். வேகனே! நீ தூயனும் தூரிதனுமாகும். ஜாதவேதசனான [7]அக்கினி [8]தேவர்கள் [9]வசுக்களுடன் சேர்ந்து இன்பம் வகிக்கும் உன்னைச் சுமந்து செல்லட்டும். ௪. [10]அதிதி ஒருமையுடன் தேவர்களோடு இணைந்து தரணியில் விரிந்து விசாலமாய் நன்கு பரவி

---

௨௫௫. கருத்து நீங்கள் புன்மை பிரியுங்கள்.

1 புவி சனங்களின் முன். 2 அறிஞனே 3 எல்லாமறிபவனே 4 அமுதம் 5 ஆத்மாவுக்கு 6 அறிஞனே 7 ஞானம் 8 திவ்யங்கள் 9 திரவியங்களுடன் 1 புவியிலுள்ளவர்கள்

யுள்ள விரிவானத்தில் இன்பமாகி சுகமளித்து அதைச்[1] செழுமை யாக்கட்டும். ரு. சுபகமாயும் உச்சமாயும் விசுவ ரூபமாயும் கோஷிப்ப வையாயும் வழி வாசங்களுடன் விரிந்து சுந்தர சுபமுடங்களான இச்சிறந்த [2]கவாடங்கள் இனிய மார்க்கங்க ளுடனுகை வேண்டும்.

சா. நான் இங்கு ருதத்தின் மூலஸ்தானத்தில், யக்ஞ முகத்தை நன்கறிவனவாயும் மித்திரவருண னின் நடுவில் செல்வனவாயும் அதி சுந்தரம் செல்வம் மிகும் இரு [3]உஷைகளை உங்களுக்கு ஸ்தாபிக்கிறேன். எ. முதன்மையாய் நான் உங்களுக்காக [4]ஒரே இரதமேறி சுந்தர நிறமுடன் உலகங்களையெல்லாங் கண்டு உங்கள் நெறிகளைத் தூண்டி, சோதியையறிவிக்கும் தேவர்களான [5]இரு ஹோத்துருக்களை இன்பமாக்கியுளேன். அ. [6]பாரதி [7]ஆதித்தியர்களுடன் எங்கள் [8]யக்ஞத்தை விரும் பட்டும், [9]சரஸ்வதி ருத்திரர்களுடன் [10]எங்களைக் காக்க வேண்டும்; [11]வசுக்களுடன் ஒருமையாய் அழைக்கப்படும் [12]இடை-எம்மைக் காக்கட்டும். [13]தேவிகளே! அமுதங்க ளில் எங்கள் யக்ஞத்தை ஸ்தாபியுங்கள்.

கூ. [14]துவஷ்டா தேவர் விரும்பும் வீரனைப் புல ணுக்கியுளான், துவஷ்டாவினின்று துரித குதிரையான திடன் தோன்றுகிறுன். துவஷ்டா இவ்வெல்லா உல கத்தையு முண்டாக்குகிறுன். மனிதனே! இங்கு பலவற் றைச் செய்யும் துவஷ்டாவை பூஜிக்கவும். க௦. தேஜ சோடு தோயுங் [15]குதிரை தானுகவே ருதுக்காலத்தில் தேவர் நிலயத்துக்கு செல்லட்டும். [16]வனஸ்பதி தேவ

---

1 அறிஞனை 2 புலன்கள் 3 அறிவு, அழிவு 4 ஒரே ஆத்மா 5 மனம் ஆத்மாவை 6 அறிஞர் 7 ஞானிகளுடன், 8 போரை 9 மொழி 10 கோபிகளுடன் 11 பொருள்களுடன் 12 புவியிலு ள்ளோர், 13 அறிஞர்களே! 14 மனம் 15 பலம் 16 பல புருஷன்

லோகத்தை, யறிந்து அக்கினியால் பக்குவமாகும் [1]அவி களைச் சுமக்க வேண்டும். ௧௧. [2]அக்கினியே! நீ [3]பிரஜா பதி தவத்தால் பெருகி புலனுகும் சமயத்திலேயே யக்ஞத் தைத் தாங்குகிறுய்; சுவாஹா கிருத அவியுடன் முன் செல்லும் நீ போகவும்; [4]சாத்தியர்களான தேவர்கள் [5]அவியைப் புசிக்கட்டும். ௫. ௧. ௧௧.

---

## அநுவாகம் ௨௫௭.

### சம்ஹாரம்

௧. [6]உன்னை ஜகதீ உஷ்ணீ ககுப்பு திருஷ்டுப்பு, பிரஹத்து காயத்திரீ அநுஷ்டுபுச் சந்தங்கள் [7]ஊசிகளால் குத்தல் வேண்டும். ௨. உன்னை இரண்டு மூன்று நான்கு, ஆறு பாதங்களுடனுன சந்தங்களும், சந்த சூன்னியங்கள் ஊசிகளால்[8] குத்தல் வேண்டும். ௩. உன்னை மொழிகள் ரேவதிகள் மகாநாம்னிகள், மேக மின்னல்கள் மேன்மை பொழியும் திசைகள் தங்கள் சேனைகளால் யழிக்கட்டும். ௪. பொன் வெள்ளி ஈயமான—பொருள்கள், செயல்களுடன் செய்பவர்களாக ஒன்று சேர்க்கப்பட்டுள்ளன; அவை ஊசிகளால் உறுதியான [9]குதிரையின் காயத்தில் உன்னை குத்தல் வேண்டும்.

௫. ஸ்திரீகளும் மனைவிகளும் அறிவால் உன் [10]ரோமத்தை நீக்கட்டும். திசைகளும் தேவ பத்தினிகளும் ஊசிகளால் உன்னை யழிக்கவேண்டும். ௬. இனியென்ன?

---

௨௫௬. கருத்து—தோத்திரம்.

1 செயல்களை 2 அறிவே 3 பல புருஷன் 4 எதையும் சாதிப்பவர்கள் 5 அளிப்பதை. 6 வியாபக சத்துருவை 7 மகா சனங்களால் 8 ஆயுதங்களால் 9 வியாபக பகைவனின். 10 சத்துரு தலையை

புல் நீக்கிய யவ தான்னியத்தை யவக் கதிராளர் அறுப்பது போல் [1]தருப்பையின் திவ்யச் செயலுக்கு செல்லாதவர்களது உணவுகளை [2]இங்கு கொண்டு வரவும். ரு. உ. கக.

---

## அநுவாகம் உ௫அ.

### சாந்தம்

க. [3]உன்னை யார் அறுக்கிறான்? உன்னை யார் துண்டம் துண்டமாக்குகிறான்? உன் அங்கங்களை யார் சாந்தமாக்குகிறான்; உனக்கு சாந்த மளிக்கும் கவியார்? உ. ருதுக்கள் பருவகாலத்தில் தூரிதர்கள் உன்சேர்க்கைகளைப் பிரிக்கட்டும்; அவர்கள் வருஷ தேஜ சுவாலைகளுடன் உன்னை ஊசிகளால் சாந்தமாக்கவேண்டும். ௩. திவ்யமான அத்வர்யுக்கள்[4] உன்னை யறுக்கட்டும்; உன்னைப் பிரிக்கவேண்டும். தூரிதர்கள் சாந்தமாக்கி உன தங்கங்களை ஒன்று சேர்க்கட்டும்.

ச. பட்சங்கள் மாதங்கள் அமைதியாக்கி உன் சந்திகளைச் சேதிக்கட்டும். இரவு பகல்கள் மருத்துக்கள் உன் சேதங்களைப் பூரணமாக்கவேண்டும். ரு. நிலம் வானத்துடன், வாயுவும் உன் பிளப்பை சுகமுடனுக்கட்டும். சோதி நட்சத்திரங்களுடன் சிறப்பாய் உன் ரூபத்தைச் செய்யவேண்டும்; உன் மேலான அங்கங்களுக்கு சுகம், உன் கீழான அங்கங்களுக்கும் சுகமாகட்டும். எலும்புகள் மச்சைகளுக்கு சுகமாகவேண்டும்; உன் காயத்துக்குச் சுகமாகட்டும். ரு. உ. கஉ.

[இனி உசுரு வது அநுவாகத்தில் இதன் தொடர்ச்சி உண்டு.]

---

உ௫எ. கருத்து—போர் முழக்கம்.

உ௫அ. கருத்து—சிகிச்சை குதிரை.

1 போரின் மூலமான 2 அவர்களிடமிருந்து நீக்கிவிடவும். 3 சத்துருவை 4 போர் புருஷர்கள்.

# அநுவாகம் உருகூ.

## ருத்திராக்கினி

க. ருத்திரனே! காற்று கீழ்த்திசையிலுள்ள உன் வில்லை யநுசரித்து உனக்கு வீசட்டும்; ருத்திரனே! உனக்கு வருஷத்தால் நமஸ்கரிக்கிறேன். ருத்திரனே! காற்று தென் திசையிலுள்ள உன் வில்லை யநுசரித்து உனக்கு வீசட்டும்; ருத்திரனே! நான் உனக்கு பூரண வருஷத்துடன் நமஸ்கரிக்கிறேன். ருத்திரனே! மேற்றிசையிலுள்ள உன் வில்லை யநுசரித்து உனக்குக் காற்று வீசட்டும். ருத்திரனே! நான் இதை வருஷத்துடன் உனக்கு நமஸ்கரிக்கிறேன். ருத்திரனே! காற்று வட திசையிலுள்ள உன் வில்லை யநுசரித்து உனக்கு வீசட்டும்; ருத்திரனே! நான் உனக்கு இது வருஷத்தோடு நமஸ்கரிக்கிறேன். ருத்திரனே! காற்று உன் வில்லை யநுசரித்து உனக்கு வீசட்டும்; ருத்திரனே! வருஷத்துடன் உனக்கு நமஸ்கரிக்கிறேன்.

உ. புவியில் நுழைந்துள்ள புரீஷ்யானல்களில் நீ உத்தமனுகும்; நீ எம்மை சீவ வாழ்க்கைக்குப் பிரேரிக்கவும். ரு ரு. எ.

---

# அநுவாகம் உகூO.

## அக்கினி மகிமை

க. நான் உன்னை கீழ்த்திசை காயத்திரீச் சந்தம் அக்கினி தேவதையுடன் ஸ்தாபிக்கிறேன்; நான் இங்கு அக்கினியால் அக்கினி சிரத்தை ஸ்தாபிக்கிறேன். நான் உன்னை தென் திசை, திருஷ்டுபுச் சந்தம் இந்திரதேவதை

---

உருகூ. கருத்து—ருத்திர வில்.

யுடன் ஸ்தாபிக்கிறேன்; நான் இங்கு அக்கினி சிறகால் அக்கினி சிறகை ஸ்தாபிக்கிறேன். நான் உன்னை மேற்றிசை ஜகதீச்சந்தம் சாவித்திரி தேவதையுடன் ஸ்தாபிக்கிறென். நான் இங்கு அக்கினி புச்சத்தை அக்கினி புச்சத்தால் ஸ்தாபிக்கிறேன். நான் உன்னை வடதிசை அநுஷ்டுச் சந்தம் மித்திரவருண தேவதையுடன் ஸ்தாபிக்கிறேன். நான் இங்கு அக்கினி பக்கத்தால் அக்கினி பக்கத்தை ஸ்தாபிக்கிறேன். நான் உச்சி பாகம் பந்தி சந்தம் பிரஹஸ்பதீ தேவதையுடன் உன்னை ஸ்தாபிக்கிறேன். நான் இங்கு அக்கினி பிருஷ்டத்தால் அக்கினியை ஸ்தாபிக்கிறேன். ரு. ரு. அ.

---

## அநுவாகம் ௨௬௧.

### அனல்

௧. அக்கினிக் கடலே! இளமை என்னும் உனது அம்பால் எமக்குச் சுகமளிக்கவும், உனது இதற்கு நமஸ்காரம். உனது இவ்வம்பில் சீவித்து நாங்கள் செழுமையாக வேண்டும்.

௨. முழங்கு மனலே! ஆழம், உறுதி, இதமான இளமை யெனப்படும் உனது அம்பால் எமக்குச் சுகமளிக்கவும்; உனது இவ்வம்பிற்கு நமஸ்காரம்; உனது இவ்வம்பில் வசித்து நாங்கள் செழுமையாகட்டும். ௩. என் வாயில் மொழி, நாசிகளில் சுவாசம், கண்களில் காட்சி, காதுகளில் கேள்வி, கைகளில் பலம், தொடைகளில் திடம் எனக்கு வேண்டும்; எனது எல்லா அங்கங்களும் இம்சையற்றாக வேண்டும். என் காயத்தோடு உன் காயமாகட்டும். உனக்கு நமஸ்காரம், என்னை இம்சிக்காதே. ச. அக்கினி

---

௨௬0. கருத்து—அனல் ஸதாபனம்.

சலம் ஓஷதிகளி லுள்ளவும், எல்லாப் பொருள்களிலும் நுழைபவனுமான ருத்திரனுக்கு நமஸ்காரம். ரு. வசுக்கள் ருத்திரர்களுடன் உன்னைக் கீழ்த்திசையில் காக்க வேண்டும், யமன் அரசனுயுள்ள பிதுருக்கள், பிதுருக்களுடன் உன்னைத் தென் திசையில் காக்கட்டும்; ஆதித்தியர்கள் விசுவே தேவர்களுடன் உன்னை மேற்திசையில் காக்க வேண்டும். தியுதான மருத்து மருத்துக்களுடன் உன்னை வடதிசையில் காக்கட்டும், இந்திரன் தலைவனுன யுள்ள தேவர்கள் கீழ்புறம் மேற்புறத்திலும் உன்னைக் காக்க வேண்டும். ரு.ரு.கூ.

---

## அநுவாகம் உகூஉ

### அனல் கருப்பம்

க. நீ கீழ்த்திசையாகும், சத்தியம் என்னும் பெயருள்ளவன், அப்படிப்பட்ட உனக்கு அக்கினி அதிபதியும் கருமை காப்புமாகும்: அதிபதிக்கும் இரட்சகனுக்கும் நமஸ்காரம். அவர்கள் எங்களுக்குச் சுகமளிப்பவர்களாகட்டும். நான் உங்கள் இருவர் வாய்களில் நாங்கள் துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை யளிக்கிறேன்.

நீ தென்திசையாகும். திடம் என்னும் பெயருள்ளவன்; அப்படிப்பட்ட உனக்கு இந்திரன் அதிபதியாகும்; தேள் காப்பாகும். அதிபதிக்கும் இரட்சகனுக்கும் நமஸ்காரம். அவர்கள் எமக்கு சுகமளிப்பவர்களாக வேண்டும். நான் உங்கள் இருவர் வாய்களில் நாங்கள் துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை யளிக்கிறேன்.

நீ மேற்திசையாகும், முன்னுள்ளவன் யென யழைக்கப்படுபவன். அப்படிப்பட்ட உனக்கு சோமன் அதிபதி

---

உசுக கருத்து —உன் துணை புருடர்கள்.

யாகும்; பாம்பு காப்பாகும். அதிபதிக்கும் இரட்சகனுக்கும் நமஸ்காரம்; அவர்கள் எங்களுக்குச் சுகமளிப்பவர்களாகவேண்டும். நான் உங்கள் இருவர் வாய்களில் நாங்கள் துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை யளிக்கிறேன்.

நீ வடதிசையாகும், திரமென்னும் நாமமுள்ளவன். அப்படிப்பட்ட உனக்கு வருணன் அதிபதியாகும்; வீரியன் காப்பு; அதிபதிக்கும் இரட்சகனுக்கும் நமஸ்காரம். அவர்கள் எங்களுக்குச் சுக மளிப்பவர்களாகட்டும். நான் நாங்கள் துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை உங்கள் இருவர் வாய்களில் அளிக்கிறேன்.

நீ பெருந்திசையாகும்; அதிபத்தினீ என்னும் நாமமுள்ளவள், அப்படிப்பட்ட உனக்கு பிரகஸ்பதி அதிபதியாகும். வெண்மை காப்பாகும். அதிபதியும் இரட்சகனுமான அவர்களுக்கு நமஸ்காரம், நான் நாங்கள் துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை உங்கள் இருவர் வாய்களில் யளிக்கிறேன்.

நீ இத்திசையாகும், பெயரால் சக்தி என்றும் யழைக்கப்படுபவன்; அப்படிப்பட்ட உனக்கு யமன் அதிபதியாகும். பலநிறக் கழுத்துப்-பாம்பு-இரட்சகனாகும். அதிபதிக்கும் இரட்சகனுக்கும் நமஸ்காரம். அவர்கள் எங்களுக்குச் சுக மளிப்பவர்களாக வேண்டும், நான் நாங்கள் துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை உங்கள் இரு வாய்களில் யளிக்கிறேன்.

௨. நீங்கள் ஆயுதங்கள் என்னும் பெயரால் அழைக்கப்படுகிறீர்கள்; உங்கள் கிரகங்கள் கீழ்த் திசையிலாகும்; உங்கள் அம்புகள் அக்கினி; சலம்—காற்றின் பெயர்—உங்களுக்கு நமஸ்காரம், நீங்கள் எங்களுக்கு சுகமளிப்பவர்களாகுங்கள்; உங்களுக்கு நமஸ்காரம்; நான் நாங்கள்

துவேஷித்து எங்களை துவேஷிப்பவனை உங்கள் வாய்களி லளிக்கிறேன்.

நீங்கள் நனைப்பவர்கள் என்னும் பெயருள்ளவர்கள். உங்கள் கிரகங்கள் தென் திசையிலாகும். உங்கள் அம்பு கள் பிதுருக்கள். கடல்—காற்றின் பெயர்—உங்களுக்கு நமஸ்காரம். நீங்கள் எமக்குச் சுகமளியுங்கள். நான் எங் களை துவேஷித்து எங்களால் துவேஷிக்கப் படுபவனை உங் கள் வாய்களில் யளிக்கிறோம்.

நீங்கள் வச்சிராயுதம் தரிப்பவர்கள் யென யழைக் கப்படுபவர்கள்; மேற் திசையில் உங்கள் கிரகங்கள்; தூக்கம் உங்கள் அம்புகள், சேதனம்—காற்றின் பெயர்— உங்களுக்கு நமஸ்காரம், நீங்கள் எங்களுக்குச் சுகமளியுங் கள். எங்களை துவேஷித்து எங்களால் துவேஷிக்கப் படு பவனை நான் உங்கள் வாய்களில் யளிக்கிறேன்.

நீங்கள் திரம் என்னும் நாமத்தால் அழைக்கப்படுப வர்கள்; உங்கள் கிரகங்கள் வட திசையிலாகும், சலங் கள்உங்கள் அம்புகளாகும், சமுத்திரம்—காற்றின் பெயர் —உங்களுக்கு நமஸ்காரம். நீங்கள் எங்களுக்குச் சுகமளி யுங்கள். எங்களை துவேஷித்து எங்களால் துவேஷிக் கப்படுபவனை நான் உங்கள் வாய்களில் அளிக்கிறேன்.

நீங்கள் அதிபதிகள் என்னும் நாமமுள்ளவர்கள்; உங்கள் கிரகங்கள் உயரத்திலாகும், மழை உங்கள் அம்பு கள்—காற்றின் பெயர்—இரட்சகன். உங்களுக்கு நமஸ்கா ரம். நீங்கள் எங்களுக்குச் சுகமளியுங்கள். எங்களை துவே ஷித்து எங்களால் துவேஷிக்கப் படுபவனை நான் உங்கள் வாய்களில் யளிக்கிறேன்.

நீங்கள் புவியின் அபக்குவம் புசிப்பவர்களென அழைக்கப் படுபவர்கள்; இங்கு உங்கள் கிரகங்கள்; உங் கள் உணவு அம்புகளாகும்—காற்றின் பெயர்—காட்சியா

கும். உங்களுக்கு நமஸ்காரம். நீங்கள் எங்களுக்குச் சுக மளியுங்கள். எங்களை துவேஷித்து எங்களால் துவேஷிக் கப் படுபவனை நான் உங்கள் வாய்களில் யளிக்கிறேன்.

௩. அக்கினியே! வெள்ளத்தின் நடுவே நிறையும் சலத்தின் சிறந்த ஸ்தானத்தை யூட்டவும்; கடலே! இனி மையின் ஊற்றில் இன்பமாகவும், சமுத்திரத்தின் உனது ஸ்தானத்தைப் பிரவேசிக்கவும். ௫. ௫. ௧௦.

---

## அநுவாகங்கள் ௨௬௩—௨௭௬.

### பரஸ்பரங்கள்

[அசுவமேதம்: உ௫அ-வது அநுவாகத் தொடர்ச்சி]

௨௬௩. 1இந்திரனை அரசனுக்குப் பன்றி; 2வருணனை மன்னனுக்குக் கருப்பு மான்; 3யம இராஜனுக்கு அரிணம். ரிஷப தலைவனுக்குக் காளை, புலி பூபாலனுக்கு வெண் மான், புருஷ பூபனுக்குக் குரங்கு. துரிதக் கழுகுக்கு காடை. நீலங்குக்குக் கிருமி. 4சோமப் பிரபுவுக்கு கரும் மான், கடலுக்கு முதலை, பனிமலைக்கு யானையாகும். ௫. ௫. ௧௧.

---

௨௬௨. கருத்து—நீங்கள் த்வேஷிகளைத் தொலைத்து அதிபதிகளாகவும்.

கருத்து. ௨௬௩—௨௭௬. இம்மிருகங்களினின்று அவற்றிற்கான குணங்களை யறிந்து பரஸ்பரம் பயன் செய்து கொள்ளுங்கள். இப்படி பரஸ்பர சம்பந்தங்களை அநுவாகம் ௨௭௬. வரை யறியவும்.

1 பெரும்பலத்துக்கு 2 பெரிய நிலைக்கு 3 புலனடக்கும் பெரியவனுக்கு 4 சித்தத் தலைமைக்கு

உ௬௪. பிரஜாபதிக்குக் கின்னரன், [1]தாத்ருவுக்கு ஆந்தை சிங்கம் பூனை; [2]சரஸ்வதிக்கு புருஷ வாக்கு வெண் பறவை; [3]பூஷணனுக்கு காட்டாடு கீரிப்பிள்ளை சகை, வாக்குக்கு நாரையாகும். ரு. ரு. ௧௨.

உ௬௫. மீன் சலப் பிரசைக்கு, முதலை மகரமீன் குலீகயம், கடலுக்கு, பேச்சு பைங்க இராஜனுக்கு. கடல் காக்கை பகனுக்கு. ஹம்சம் வாஹசம் மரங் கொத்தி, வாயுவுக்கு. சக்கரவாகம் திசைகளுக்காகும். ரு. ரு. ௧௩.

உ௬௬. பலத்துக்கு மலைப்பாம்பு, மித்திரனுக்கு மண் எலி சிருஜ்யை, பல்லி. மிருத்தியுவுக்குக் கருமை, கோபத்துக்குப் பாம்பு, [4]துவஷ்டாவுக்கு கும்பமூக்கு கமலாசனன், சிகப்புப் பாம்பு. எதிரொலிக்கு வாஹச மாகும். ரு. ரு. ௧௪.

உ௬௭. புருஷமிருகம் சந்திரனுக்கு, பல்லி, காலகை, மரம் பொளி மரங்களுக்கு, புள்ளிமான் தினத்துக்கு, கரும்மான் இரவுக்கு; குயில், க்ஷவிங்கை, கருந்தலை [5]அரியமானுக்கு; நண்டு [6]தாத்ருவுக்காகும். ரு. ரு. ௧௫.

உ௬௮. சூரியனுக்கு நாரை, மான் மாயில் கழுகு கந்தர்வர்களுக்கு [7]; வான்கோழி, கவுதாரி, வசுக்களுக்கு. ருத்திரர்களுக்கு கவுதாரி; வெண் பெட்டைமான், குண்டர நாசி, கோலாத்திகை அப்சரசர்களுக்கு, சருமரை அரண்ணியத்துக்காகும். ரு. ரு. ௧௬.

உ௬௯. பல நிறமான் [8]விசுவேதேவர்களுக்கு. பித்துவம், நியங்குவம் கசன் [9]அநுமதிக்கு. குயில் பட்சங்களுக்கு. ஆமை மாதங்களுக்கு; குவயி கோழி சாதகம் [10] சினீவாலிக்கு, பூனை [11]பிரகஸ்பதிக்காகும். ரு. ரு. ௧௭.

---

1 சிருஷ்டிக்கு 2 சொல்லுக்கு 3 புஷ்டிக்கு 4 உற்பத்திக்கு. 5 வானத்துக்கு 6 சோதிக்கு. 7 இன்பங்களுக்கு 8 மகா சனங்களுக்கு 9 ஆக்ஞைக்கு 10 பெண்மைக்கு 11 அறிவுக்கு.

உ௭௦. சகை பூமிக்கு; நில எலி, கசம், துரித நரி [1] பிதுருக்களுக்கு; இராஜகிரி ருதுக்களுக்கு; காடை வருஷத்துக்கு; புரு ஆந்தை முயல் [2] நிர்ருதிக்கு; சேவல் [3] சவிதாவுக்காகும். ரு. ரு. க௯.

உ௭க. கலைமான் [4]ருத்திரனுக்கு, பச்சோந்தி, பறவை, பிப் பகை, சரவ்யத்துக்கு, அரிணம் மருத்துக்களுக்கு, சார்கம் பிராமணனுக்கு, கழுதைப்புலி கரிமான், சுந்தரக்கண் உள்ள நாய், கழுதை, மனிதர்களுக்கு, காக்கை அக்கினிக்காகும். ரு. ரு. கக.

உ௭உ. அலஜம் வானத்துக்கு, சலப்பிராணி, சலமூழ்கி சலஞ் செல்லுபவை சலங்களுக்கு; ஹம்ச சசாகி அதிதிக்கு. கீர்சை இந்திராணிக்கு, கழுகு, வெண்வக்ஷம், வார்த்த ராணஸம் சோதிக்கு, முட்பன்றி சோதி புவிக்காகும். ரு. ரு. உ௦.

உ௭௩. கருடன் பார்ச்சன்னியனுக்கு; ஹம்சம், ஓநாய், பூனை, இந்திரனுக்கு; நீர்ஜந்து சலங்களுக்கு, நரி அரிய மானுக்கு, சிங்கம் நகுலன், புலி, பெரிய இந்திரனுக்கு, காமத்துக்கு காண்டா மிருகமாகும். ரு. ரு. உக.

உ௭௪. [5]அக்கினிக்கு கருங்கண்டன். சரஸ்வதிக்குச் செம்மறியாடு; சோமனுக்குச் சிகப்பு. கருப்பு பூஷணனுக்கு. வெண் கழுத்து பிரகஸ்பதிக்கு. பல நிறம் விசுவே தேவர்களுக்கு. சென்னிறம் இந்திரனுக்கு. புள்ளி நிறம் மருத்துக்களுக்கு. கலப்பு நிறம் இந்திரன் அக்கினிக்கு. கீழ் சுந்தரம் சவிதாவுக்கு, ஆட்டுக்கடா வருணனுக்காகும். ரு. ரு. உஉ.

---

1 அறிஞர்களுக்கு 2 தீமைக்கு 3 சித்தத்துக்கு. 4 ருத்திரனுக்குச் சம்பந்தமானது: அப்படியே மற்றவைகளை யறியுங்கள். 5 அக்கினி குணமறிவதற்கு, கருங்கண்டனை யறியவும்.

௨எரு. குதிரை, கொம்பு சூன்னியன், கோமிருகம் பிரஜாபதிக்கு. கருங்கண்டங்களுடனான இரண்டுகள் அக்கினிக்கு. ரோமத்தொடைகளுடனான இரண்டு துவஷ்டாவுக்கு; வெண்முதுகுகளுடனான இரண்டு, பிரஹஸ்பதிக்கு, சுந்தர உதரன் தாத்ருவுக்கு, வெள்ளாடு சூரியனுக்காகும். ரு ரு. உ௩.

௨எ௬. சிகப்பாங்கக் காலை முன்னுள்ள அக்கினிக்கு; சுந்தர அதோ பாகமுள்ளவை சவிதாவுக்கு; இருச்சிகப்பு நடுவுள்ளவை பூஷணனுக்கு; கொம்பு சூன்னிய இரண்டு, மாநிறம் விசுவேதேவர்களுக்கு. புள்ளியுள்ளது மருத்துக்களுக்கு. கரும் ஆடு அக்கினிக்கு; பெண் ஆடு சரஸ்வதிக்கு; வெண் பாதமுள்ள கரும் ஆடு வருணனுக்காகும். ரு. ரு. உச.

[அசுவமேதத் தொடர்ச்சியை உஎக வது அநுவாகத்தில் பார்க்கவும்.]

---

## அநுவாகம் ௨எஎ

### சல ரகசியம்

க. இந்திரனும் கசியபனும் சன்மமாகி விருபாக்கினியைக் கருப்பந்தரித்து புனிதஞ் செய்யும் பவித்திரமான இப் பொன்னிற ஜலம் எமக்குச் சாந்தம் சுகமளிப்பவர்களாகட்டும். உ. மனிதர்களின் சத்தி யாசத்தியத்தைக் காணும் வருணன் எவர் நடுவே செல்லுகிறனோ அந்தப் புனிதஞ் செய்யும் பவித்திரமான தேன்பாயும் இச்சலம் எமக்குச் சாந்தம் சுகமளிப்பவர்களாகவேண்டும். ௩. சோதியில் தேவர்கள் உணவாகச் செய்துகொள்ளும் சோதியின் பல நிலயங்களிலுள்ள இச்சலம் ரசத்தோடு இப்புவி பாயும் புனிதமான நீங்கள் எமக்குச் சாந்தம் சுக

மளிப்பவர்களாகவேண்டும். ௪. சலமே! மங்களக் கண்ணுல் என்னை நோக்குங்கள்; நீங்கள் சிவமான காயத்தால் என் தேகத்தைப் பரிசியுங்கள். நான் சலத்தி லமரும் அக்கினியான உங்கள் அனைவரையும் அழைக்கிறேன். நீங்கள் என்னில் வர்சஸ— வன்மை வலிமையை யளியுங்கள்.

௫. நீங்கள் மேகத்தைக் கொன்று ஒருமையுடன் பொழியுங்கால் நாதஞ் செய்கிறீர்கள். அதனுல் நதி என்னும் நாமத்தால் அழைக்கப்படுகிறீர்கள்; சிந்துக்களே! இவை உங்கள் பெயர்களாகும். ௬. வருணனுல் தூண்டப்பட்டு துரிதமாய் புரண்டு நீங்கள் சென்றவுடன் இந்திரன் உங்களை அடைந்தபடியால்—ஆப்நோத்—நீங்கள் ஆப: என்னும் பெயருள்ளவர்களாகும். ௭. தேவிகளே! நீங்கள் இந்திரன் விருப்பத்துக்கு மாருய் சென்றதும் அவன் தன் சக்திகளால் உங்கள் வழிகளை மறித்தான். அதனுல் நீங்கள் வாஹம் என்னும் நாம முள்ளவர்கள். ௮. அவர்கள் செல்லுங்கால் ஒரு தேவன் அவர்களில் ஸ்தாபிதமானுன்; அப்பொழுது அவர்கள் உயரமாய் எழுந்தார்கள். அதனுல் அவர்கள் உதகம், உயர்ந்தவர்கள் எனப்படுகிறுர்கள்.

௯. சலம் பிரியமுள்ளவர்கள் பசையுள்ளவர்களாகும்; இச்சலம் அக்கினியையும் சோமனையும் வகிக்கும்; இன்ப மளித்து இனிமைதரும் துரித இரசம் எனக்குப் பிராணன் பலத்துடன் வந்துளான். ௧௦. நான் காண்கிறேன், நான் கேட்கிறேன், எனக்கு முழக்கம் வருகின்றது; எமக்கு அவர்கள் வாக்கு வருகின்றது; பொன்நிறர்களே! நான் உங்களை அடையுங்கால் அமுதத்தை யநுபவிப்பதாக எண்ணுகிறேன்.

௧௧. சலமே! நீங்கள் சுகமளிப்பவர்கள்; நாங்கள் மகா மகிழ்வைக் காணவும் பலத்துக்காகவும் எங்களைப் பெருக்

குங்கள். ௧௨. நீங்கள் விருப்பமானத் தாய்மார்களைப் போல உங்களது மிகச் சிவம் மிகும் இரசத்தை இங்கு எமக்களியுங்கள். ௧௩. நாங்கள் திருப்தியுடன் அவனிடஞ் செல்வோம். நீங்கள் எம்மை அவன் கிரகத்துக்குத் துரிதமாக்குங்கள். சலமே! எங்களைப் பிரஜா சக்தியுடனாக்குங்கள்.

௧௪. சோதிக்கு எழுச்சியாகவும், வானத்தில் நோக்கமாகவும், புவியுடன் ஒன்று சேரவும். நீ பிரம வர்சஸாகும்; நான் பிரம வர்சஸுக்கு உன்னை நாடுகிறேன். ரு. சு. ௧.

---

## அநுவாகம் ௨௭அ.

வருஷம் மாதங்களுடன் ஒருமை சேர்ந்து, உஷை அருணங்களுடன் இசைந்து, சூரியன் அசுவத்துடன் கலந்து, அசுவினி அதிசயச் செயல்களுடன் அணைந்து, அக்கினி வைசுவாநரன் உணவுகளுடன் ஒருமையாகி நெய்யோடு இணையட்டும். சுவாஹா! ரு. சு. ௪.

---

## அநுவாகங்கள் ௨௭௯—௨௯௧

[அசுவமேதம், ௨௭௬-வது அநுவாகத் தொடர்ச்சி]

### தேவசுபாவம்

௨௭௯ சிகப்பு கருஞ்சிகப்பு இலந்தைச் சிகப்பு-இவைப் பிரஜாபதிக்காகும், பழுப்பு செம்பழுப்பு கிளிப்பழுப்பு—இவை ருத்திரனுக்காகும்; வெண்மை, வெண் கண் உள்

---

௨௭௭. கருத்து—நீ சோதிக்கு எழுச்சியாகவும்.

௨௭அ. கருத்து—அனைவரும் இணையுங்கள்.

ளது. வெண்கழுத்துள்ளது—இவை பிதுருக்களை தேவதைகளாகயடைந்துள்ளவை. மூன்று மலட்டுக் கரும் பசுக்கள் வருணனுக்கு; மூன்று மலட்டு வெண் பசுக்கள் சூரியனுக்கு. கொம்பற்று சாம்பல் குறியுள்ளவை மித்திரன் பிரஹஸ்பதிக்காகும். ரு. சு. கக.

உ௮௦. பல நிறமுள்ளது, குறுக்குப் புள்ளிகளுள்ளது, மேற் செல்லும் புள்ளிகளுள்ளது-இவை [1]மருத்துக்களுக்காகும். ஒளியுள்ளது சிகப்பு ரோம மயம், வெண்மை நிறம்-இவை சரஸ்வதிக்காகும், வெகு பல நிறம், வெகு பல சாம்பல் நிறம்-இவை விசுவே தேவர்களுக்காகும்; மூன்று கரும் மலட்டுப் பசுக்கள் பூஷணனுக்கு; மூன்று சிகப்பு மலட்டுப் பசுக்கள் மித்திரனுக்கு; சிகப்புப் புள்ளி கொம்புகளற்றவை இந்திரன் பிரகஸ்பதிக்காகும். ரு. சு. கஉ.

உ௮க. வெண் அங்கமுள்ளது, ஒரு பக்கம் வெண் அங்கங்களுள்ளது, இரு பக்கங்கள் வெண் அங்கங்களுள்ளவை இவை இந்திரன் வாயுவுக்காகும். வெண் செவித் துவாரங்களுள்ளது, ஒரு வெண் செவித் துவாரமுள்ளது இரு வெண் செவித் துவாரங்களுள்ளது—இவை மித்திர வருணனுக்காகும்; சுத்தவாலுள்ளது, பூரண சுத்தவாலுள்ளது ரோமங் குவியும் வாலுள்ளது—இவை அசுவினிகளுக்காகும்; பல நிறமுள்ள மலட்டுப் பசுக்கள் விசுவே தேவர்களுக்கு, மூன்று வெண்ணிறப் பசுக்கள் பரமேஷ்டிக்கு; கொம்பற்ற வெண் புள்ளிகளுள்ளவை சோமனுக்கும் பூஷணனுக்கு மாகும். ரு. சு. க௩.

உ௮உ. உன்னத ரிஷபம் ஒடுங்கிய ரிஷபம் இந்திரன் வருணனுக்கு; வெண் முசுப்பு, வெண் கழுத்து வெண்

1 மருத்துக்களின் சுபாவங்களுக் கொப்பாகும்.

கீழங்க முள்ளது—இவை இந்திரன் பிரகஸ்பதிக்காகும்; வெண்பாதம், வெண் உதடு, வெண் நெற்றியுள்ளவை இந்திரன் விஷ்ணுவுக்கு; மூன்று வெண் புள்ளியுடனுன மலட்டுப் பசுக்கள் விசுவகர்மனுக்கு; பலநிற உதர முள்ளவை தாத்ருவுக்கு. கொம்பற்று வெண் புள்ளி யுள்ளவை இந்திரன் பூஷணனுக்காகும். ரு. கூ. கச.

உ௮௩. தீர்க்க செவிகளுள்ள மூன்று யமனுக்கு, வெண் பாதமுள்ள மூன்று சோமனுக்கு, மூன்று கீரிகள் காளையான அக்கினிக்கு; சிகப்பான பதினெட்டு மாத மூன்று—ஆடுகள்—வசுக்களுக்கு; மூன்று சிகப்பு மான்கள் ருத்திரர்களுக்கு, கொம்பற்ற சிகப்புப் புள்ளிகளுள்ளவை சோமன் இந்திரனுக்காகும். ரு. கூ. கரு.

உ௮௪. சிறு செவிகளுள்ள மூன்று விஷ்ணுவுக்கு; சிகப்பு நுனி செவிகளுடனுகும் மூன்று விசாலமாய் ஆக்கிரமிக்கும் விஷ்ணுவுக்கு. இரண்டறை வருஷ முள்ள மூன்று ஆதித்தியர்களுக்கு; மூன்று வருஷங்களுள்ள மூன்று அங்கிரசர்களுக்கு; கொம்பற்ற மஞ்சள் புள்ளிகளுள்ளவை இந்திரன் விஷ்ணுவுக்காகும். ரு. கூ. ககூ.

உ௮ரு. இந்திரனை மன்னனுக்கு வெண் முதுகுள்ள மூன்று; அதிபதியான இந்திரனுக்கு வெள்ளை முசுப்புக்கள் உள்ள மூன்று சுய இராஜனை இந்திரனுக்கு வெண் பின் பாகங்களுள்ள மூன்று; சாத்தியர்களுக்கு நான்கு வருஷங்களான பசுக்கள்; மூன்று விசுவே தேவர்களுக்கு வளர்ந்த மூன்று பசுக்களாகும்; அக்கினி இந்திரனுக்கு கொம்புகளற்று கருங் குறிகளுள்ளவை: ரு. கூ. கஎ.

உ௮கூ. அதிதிக்கு மூன்று சிகப்புமுகக் குறிகளுள்ளவை; இந்திராணிக்கு மூன்று கரும்புள்ளிகளுள்ளவை; குஹூவுக்கு முகச் செங்குறியுள்ள மூன்று; இராகைக்கு மூன்று கன்றுகள். சீனிவாலிக்கு இளங்கன்றுகள் மூன்று

கொம்புகளற்ற செங்குறி களுள்ளவை அக்கினி விஷ்ணு வுக்காகும். ரு. சு. கஅ.

உஅஎ. சோமனுக்குச் செம்பழுப்பான மூன்று; சோம ராஜனுக்கு பல நிறமுள்ள மூன்று; பர்ஜன்னிய னுக்கு மேக சொரூபமானவை, இந்திராணிக்கு களகம்பள மூன்று ஆடுகள்; அதிதிக்கு மூன்று பெண் ஆடுகள்; சோதி வானத்துக்கு கொம்புகளற்று மங்களக் குறிக ளுள்ளவையாகும். ரு. சு. கசு.

உஅஅ. வருணனுக்கு கரும்புள்ளியுள்ள மூன்று; செம்புள்ளியுள்ள மூன்று வருணனை மன்னனுக்கு, அரு ணப் புள்ளியுள்ள மூன்று பகையழிக்கும் வருணனுக்கு; பல நிறமுள்ள மூன்று விசுவே தேவர்களுக்கு; சுந்தரமான மூன்று எல்லா தேவர்களுக்கு; கொம்பு சூன்னிய வெண் புள்ளிகளுள்ளவை இந்திரன் சூரியனுக்காகும். ரு. சு. உ0.

உஅசு. சுவராஜனை சோமனுக்கு வண்டியிழுக்கும் இருகாளைகள்; ஓஜசளிக்கும் இந்திராக்கினிக்கு இரு ஒட் டகங்கள். உறுதியளிக்கும் இந்திராக்கினிக்கு கலப்பை இழுக்கும் இரு ஆடுகள்; புவிக்கு இருகாளைகள்; திசைக ளுக்கு இரு பெண் குதிரைகள்; நிலத்துக்கு இரு எருது கள்; விராஜனுக்கு இரு ஸ்திரீகள். பூமிக்கு இரு மாடுகள், வாயுவுக்கு வண்டியிழுக்கும் இருகாளைகள்; வருணனுக்கு இரு கரும் மலட்டுப் பசுக்கள். சோதிக்கு சம்ஹரிக்கும் சிலக்கொம்புகளுடனுகுங் காளைகள் இரண்டாகும். ரு. சு. உக.

உகூ0. காலையில் பசுக்களின் பதினொன்று கோக் கள் சாய்ந்துள்ளன. புள்ளிகளுள்ள ஆடு, நீலப்பட்சி, விதீ கயம் துவஷ்டாவுக்காகும்; ஒன்பது வெண் மலட்டுப் பசுக்கள் சூரியனுக்கு; பெரிய யூபத்தில் யளிப்பவை

யெல்லாம், அக்கினி, இந்திரன் அக்கினி, அசுவினிகளுக்காகும். ரு. சு. உஉ.

உ௬௧. செம்பழுப்பு மூன்று வசந்தத்துக்குள்ளன; சந்தரமான மூன்று கிரீஷ்மத்துக்கு, சாம்பல் நிற மூன்று மழைகளுக்கு. அழகான மூன்று சரத்துக்கு; சுந்தரத் தொடைகளுள்ள மூன்று ஏமந்தத்துக்கு. பசையுள்ள மூன்று சிசிருதுவுக்கு, உயரிய மார்புள்ளவை வருஷத்துக்காகும். ரு. சு. உ௩.

[அசுவமேதத் தொடர்ச்சி ௩௦௦ம் அநுவாகம் பார்க்கவும்.]

## அநுவாகம் உ௬உ.

### விருப்பம்

௧. அக்கினியே! விருஷபனும் அறிஞனுமான உன்னை, சதாகாலம் நவமாய் உதயஞ் செய்து யணுகியுளேன். எமது கிரகச் செயல்கள் நிற்காமலாகட்டும். உன் கூறிய பிரமத்தால் எம்மை கூர்மையாக்கவும். உ. இரவே! உன்னில் மனிதர் உபாசிக்கும் வருஷப் பிரதிமை அவன் பிரசையை சுவீரர்களாகச்செய்து அவனைப் பூரண ஆயுசு அடையச் செய்யவும். ௩. எந்தச் சோதியால் தேவர்கள், ஆதித்தியர்கள் வசுக்கள் ருத்திரர்கள் உயரச் செல்லுகிறார்களோ அதனால் அங்கிரசர்கள் மகிமையையடைகிறார்களோ அதனால் யஜமானன் சுவஸ்தியில் செல்லட்டும்.

௪. தவறாமல் நூறு சரத் ருதுக்களோடு எல்லாத் தடைகளையும் கடத்திச் செல்லுபவனும் எதிர்ப்பு நீக்கி, நூறு துணை நூறு சக்தி நூறு ஆயுதங்களுள்ள இந்திரனுக்கு நமஸ்காரம். ரு. தேவர்களே! புவி சோதிக்கு

உ௭௧—உ௬௬. கருத்து—தேவ பிராணி உறவு.

நடுவே விரிந்துள்ள நான்கு தேவ பாதைகளில் செழிப்பு செழுமையைச் சுமந்து செல்லும் நெறியை யடைவதற்களி யுங்கள். ௬. கிரீஷ்மம், ஏமந்தம், வசந்தம் சரத் மழைக் காலங்கள் எமக்கு மங்களகரமாகட்டும். நாங்கள் ருதுக் களது பிரியம் பாதுகாப்பை நூறு சரத்துக்களால் அநு பவிக்க வேண்டும். ௭. நீங்கள் பெரிய நமஸ்காரத்தை வருஷம் பூரண வருஷம் இது வருஷத்துக்குச் செய்மின்; நாங்கள் யக்ஞாருகமான அவர்களது பிரியமதியில் தீர்க்க காலம் அழியாமலும் அழிக்கப்படாமலு மாகவேண்டும். ௮. தேவர்கள் சிரேயசுக்குச் சிரேயசானதை ஒன்று சேர்த்துளார்கள்; நாங்கள் உன் இரட்சையால் உன்னை யடையவேண்டும். பிதாவே! சுகஞ் செய்யும் நீ எங்களைப் பிரவேசிக்கவும். எங்கள் மக்கள் சந்ததிகளுக்கு பிரியம் மங்களமளிப்பவனுகவும். ரு. எ. உ.

---

## அநுவாகம் உ௬௩.

### அக்கினி விஷ்ணு

௧. எங்கள் காயங்களைக் காத்து சதா நோக்கும் நீ இந்திரனின் வச்சிராயுதம், பகைவர்களைக் கொல்பவன். அவன், கிழக்கு தெற்கு மேற்கு வடக்கில் எமக்குத் தீமை செய்ய விரும்புபவனை இவ் வாயுதத்தால் இந்த நிலயத்தில் யழிக்கட்டும். உ. அக்கினியே, விஷ்ணுவே! இம் மொழி கள் ஒன்று சேர்ந்து உங்களை இன்பமாக்கவேண்டும். நீங் கள் பலம் பிரகாசத்துடன் வாருங்கள். ரு. எ. ௩.

---

உ௬உ. கருத்து—வருஷப் பிரஜாபதியால் எல்லாம் வேண்டும்.

உ௬௩. கருத்து—வச்சிராயுதம்.

## அநுவாகம் உ௲௪.

### ஆஹவனீயம்

க. கீர்த்தியுள்ள அக்கினியே! அவனைப் புகழைக் குச் செலுத்தவும்; இந்திரனின் புகழை இங்கு கொண்டு வரவும் அவன் தலைவன் பரமேஷ்டி, சுவர்சஸன் சமானர்களின் சிறந்த சீலமுள்ளவனாகவேண்டும். சுவர்க்கச் சோதியைக் காணும் ரிஷிகள் மங்களக் காட்சியுடன், முதன்மையாய் தவம் தீட்சையில் தோய்ந்தார்கள். அப்பால் க்ஷத்திரம் சக்தி ஓஜசு பிறந்தன. ஒருமையுடனாகும் தேவர்கள் அச் சுவர்க்கச் சோதியை எமக்களிக்கட்டும். தாத்ரு, விதாத்ரு, பரமன், பார்ப்பவன், பிரஜாபதி பரமேஷ்டி, விராஜன் இவை அவன் பெயராகும். அவனுக்கு என் கவனத்தை செலுத்த ஸ்தோமம் சந்தசு சொற்கள் என் மனத்தை யழைக்கின்றன. அவனுக்கு இராஜ்யத்தை உரிமை யாக்குகிறோம். என் பக்கம் நோக்கவும், என்னை யணுகவும்; அவன் உங்கள் தலைவன் அதிபதியாயிருக்கவேண்டும்; நீங்கள் அவன் விக்ஞானத்தை யநுசரிக்கிறீர்கள்; இனி நீங்கள் எல்லீரும் அவனில் சாய்ந்துளீர்கள். ரு. எ. ச.

---

## அநுவாகம் உ௲ரு.

### கார்ஹபத்தியம்

க. சோதிபோல் சுடர் சுவாஹா! சோதிபோல் அர்க்கன் சுவாஹா! சோதிபோல் பிரகாசம் சுவாஹா! சோதி போல் வெளிச்சம் சுவாஹா! சோதி போல் சூரியன் சுவாஹா! ரு. எ. ரு.

---

உ௲௪. கருத்து—நான் தலைவனாகவேண்டும்.

உ௲ரு. கருத்து—எல்லாஞ் சோதி.

## அநுவாகம் உகூசு.

### சோதிநாடு

க. அக்கினியே! சூரியனில் கிரணங்களோடாகும் உன் சுடர்கள் ஒளி யுலகத்தை வியாபக மாகின்றன; மனிதர்களான எமக்கு அவ் வெல்லாச் சுடர்களுடன் சிறப்பைக் கொண்டுவரவும்.

இந்திரனே! அக்கினியே! பிரகஸ்பதியே! பசு, குதிரைகளிலுள்ள எல்லா சுவாலைகளோடு எமக்குச் சக்தியை யளிக்கவும். எமது பிராமணர்களில் புனிதத்தை யளிக்கவும், எங்கள் அரசர்களில் திடத்தை யளிக்கவும்; வைசிய சூத்திரர்களில் திறத்தைக் கொடுக்கவும்; உன் சுடரால் எனக்குச் சோதியை யளிக்கவும். ரு. எ. சு.

---

## அநுவாகம் உகூஎ.

### முன் செல்லுங்கள்

க. சங்கற்பம் சித்தத்தினின்று எது பாய்கின்றதோ அல்லது மனம் கண்ணினின்று எது குவிக்கப்படுகின்றதோ அத்துடன் நீங்கள் பழமையாய் முதல் தோன்றும் ரிஷிகளுள்ள சுகிருத உலகத்துக்குச் செல்லுங்கள். உ. கிரகத்திலுள்ளவனே! ஜாதவேதசன் இங்கு கொண்டு வரும் இச் செல்வத்தை உன்னைச் சுற்றிலும் ஸ்தாபிக்கிறேன்; யக்ஞபதி உங்களை யனுசரித்துச் செல்வான்; உயரிய வானத்தில் நீங்கள் அவனை யறியுங்கள்.

ங. உயரிய வானத்தில் நீங்கள் அவனை யறியுங்கள், தேவ நண்பர்களே! நீங்கள் அவன் சொரூபத்தை யறிகிறீர்கள்; தேவ வழி நெறிகளால் அவன் வரும்

---

உகூசு. கருத்து—எனக்கு சோதிவேண்டும்.

பொழுது இஷ்டப் பூர்த்திச் செயல்களை அவனுக்குப் புலனாக்குங்கள்.

௪. நீங்கள் முன் செல்லுங்கள்; நீங்கள் ஒருமையுடன் செல்லுங்கள்; அக்கினியே! தேவ வழியான பாதைகளைச் செய்யுங்கள்; விசுவே தேவர்களே! யஜமானனோடு இவ்வுயரிய ஸ்தானத்திலமருங்கள்.

௫. இக் கட்டு, சமித்து சாதனம் வேதி தருப்பை ருக்குக்களுடன் எமக்காக இந்த யக்ஞத்தை திவ்யம் தேவர்களுக்குச் செல்ல சுமக்கவும். ௬. அக்கினி வைசுவாநரன் சோதியில் தேவர்களின் நடுவே எமக்காக, ஈகை, தானம், அளிப்பு, தட்சிணையை ஸ்தாபிக்கட்டும். ௭. அக்கினியே! எல்லாச் செல்வ சகஸிரத்தை எதனால் நீ சுமக்கிறாயோ அதனால் சோதியில் தேவர்களுக்குச செல்ல எமது யக்ஞத்தைச் சுமக்கவும். ௮. அக்கினியே! எதனால் துரித ருத்விக்குக்கள் யக்ஞம் தட்சிணையைச் சுமக்கிறார்களோ அதனால் எமது யக்ஞத்தை சோதியில் தேவர்களுக்குச் செல்ல வகிக்கவும். ௯. அக்கினி வைசுவாநரன் சோதியில் தேவர்களின் நடுவே எங்கு நெய் தேன் தவறாத தாரைகளுண்டோ அங்கு எம்மை ஸ்தாபிக்க வேண்டும். ௫. ௭. ௭.

---

## அநுவாகம் ௨௧௮.

### பிரம மகிமை

௧. அக்கினியே! ஜாதவேதசனே! உன் சமித்து, உன் ஸ்தானம், உன் நாக்கு, உன் சோதி, உன் பொறி உன் பஸ்மங்களுடன் நன்கறிந்து நீ யாகவே ஒன்றா குவி

---

**௨௧௭. கருதது—தேனும், மையும், நிறையும் திவ்ய உலகத்தில் நான் தோயவேண்டும்.**

யவும். உ. அக்கினி நான்கு திசைகளுக்குச் செல்லட்டும்; நன்கறிந்து எமக்கு இந்த யக்ஞத்தை அவன் சுமக்க வேண்டும் அவன் நெய் அமுதம் சுவீரனை மிகுதி யாக்கட்டும், பிரமம் ஆஹுதிகளின் சமித்தாகும். ரு. எ. அ.

---

## அநுவாகம் உகூகூ.

### அமுதாக்கினி

க. நான் என்னில் முதன்மையாய், செல்வச் செழுமை, சுவீரர்களுடனான நற்பிரசைக்கு அக்கினியை கிரகிக்கிறேன்; நான் என்னில் பிரசை, பிரகாசத்தை ஸ்தாபிக்கிறேன். சுவீரர்களுடன் எமது காயத்தில் நாங்கள் இம்சை யற்றுகவேண்டும். உ. பிதுருக்களே! மனிதர்களான எமது இருதயத்தில் பிரவேசித்துள்ள அமுதமான அக்கினியை எங்களில் அடைக்க வேண்டும்; அவன் எங்களை நீங்கி தூரஞ் செல்லாமலிருக்கவேண்டும். ரு. எ. கூ.

---

## அநுவாகங்கள் ௩00—௩கஉ.

### மர்ம குதிரை

[அசுவமேதம்—உகூக-வது அநுவாகத் தொடர்ச்சி]

௩00. ஈக்களைப் பற்களுடன் தவளைகளை நெரிப்பவர்களோடு; புசிப்பவனைத் தின்பவனுடன், சக்தியைச் சீரணஞ் செய்பவனோடு, வனத்தை முட்டு வளவுடன், மண்ணைப் பசைகளோடு, அவகங்களை கடைவாய் பற்களுடன், புற்களோடு உட்பல்லை, மேலண்ணத்துடன் நாக்கை, சப்தமுடன் அண்ணத்தை, நுனி நாக்குடன் சரஸ்வதியை யறியவும். ரு. எ. கக.

---

உகூஅ—உகூகூ கருத்து—நாங்கள் வீரர்களுடனுகவேண்டும்.

௩௦க. திடத்தைத் தாடைகளுடன், சலத்தை வாயோடு ; ஆதித்தியர்களை ரோமங்களுடன் ; ஆதரவை கீழ் அதரத்தோடு, இருப்பை மேலுதட்டுடன், தெளிவை நடுவிலிருப்பதோடு, புறத்தைப் பளபளப்பால், முழக்கத்தை நிர்மலத்துடன், சூரியன் அக்கினியை கண்களால், கண்மணிகளால் இரு சோதிகளை, மூளையால் மின்னல் தாடனத்தை மச்சைகளால் பலத்தை-யறியவும். ரு. எ. க. உ.

௩௦உ. ஆமைகளைக் குளம்புகளால், புறுக்களைக் குளம்பு மாமிசத்துடன், சாமனைக் குஷ்டிகங்களோடு, துரிதத்தைக் கால்களால், சுகத்தை இரு முழங்கால்களுடன், சக்தியை இருகூகங்களோடு, பயத்தை இருசேதனங்களால், இரகசியத்தை இருபக்கங்களுடன், அசுவினிகளை இருதோள்களுடன், அதிதியை சிரத்தால், ரோமசூனிய தலையோடு நிர்ருதியை யறியவும். ரு. எ. க௩.

௩௦௩. கால் குழிகளுடன் இணைப்பையும், வளைவோடு சேர்ப்பையும், கழுத்தால் கருத்தையும், சத்தங்களுடன் பிராணன்களையும், சோதியுடன் சர்மத்தையும், பராகாசத்தோடு அகத்தையும், ரோமத்தோடு ஈக்களையும், கடின வேலைசெய்து சுமக்கும் பாசத்துடன் இந்திரனையும், பறவையின் ஸ்தானத்தோடு பிரகஸ்பதியையும் கண்டெலும்போடு இரதத்தையும் - அறியவும். ரு. எ. க௪.

௩௦௪. இரு சுரோணிகளுடன் மித்திர வருணனை ; சுரோணிகளின் கீழ் மாமிசத்தோடு இந்திராக்கினியை, இரு தொடைகளால் இந்திர பிரஹஸ்பதியை ; முழங்கால்களோடு இந்திரன் விஷ்ணுவை ; வாலுடன் சவிதாவை ; மர்மாங்கத்தோடு கந்தர்வர்களையும் ; முஷ்கங்களுடன் அப்சரஸர்களையும் ; குதத்தோடு சுத்தஞ் செய்வதையும், போத்திரங்களுடன் புனிதஞ் செய்வதையும், இரு ஸ்தூ





8. இந்திரன்

ரங்களோடு சலனத்தையும்: இடைகளின் இரு நிலைக ளோடு செல்வதையு மறியவும். ரு. எ. கரு.

௩0௫. இந்திரனுக்கு மார்பை; அதிதிக்கு விலாக் களை; திசைகளுக்கு கண்ட குருத்தெலும்புகளை, இருத யம் அதன் கோசத்துடன் மேகங்களை, இருதய சவ்வுடன், வானத்தை, உதர மாமிசத்து பனியை, ஈரல்களுடன், இந் திராணியை, ஈரற் குலையோடு எலும்புகளை; குடல்களுடன் குன்றுகளை, கடலோடு வயிற்றை பஸ்மத்துடன், வைசுவா நரத்தை - யறியவும். ரு. எ. க. சு.

௩0சு. பூஷணனுக்குக் குதத்தை, குருட்டுப் பாம் புக்கு பெருங் குடல்களை குடல்களுடன் பாம்புகளை, பிருஷ் டிகளோடு ருதுக்களை; முதுகுடன் சோதியை; வசுக்க ளுக்குமுதல் முதுகெலும்பை; ருத்திரர்களுக்கு இரண்டா வதை, ஆதித்தியர்களுக்கு மூன்றுவதை, அங்கிரசர்களு க்கு நான்காவதை சாத்தியர்களுக்கு ஐந்தாவதை விசுவே தேவர்களுக்கு ஆறுவதை-யறியவும். ரு. எ. கஎ.

௩0எ. கண்டத்துடன் ஓஜஸை, எலும்புகளோடு நிர் ருதியை, சுமந்து கஷ்டஞ்செய்யும் பாபத்தை இந்திர னுடன்; ருத்திரனுக்கு சலனத்தோளை; இரவு பகலுக்கு இரண்டாவது பாகத்தை; பட்சங்களுக்கு மூன்றுவது பாகத்தை, மாதங்களுக்கு நான்காவது பாகத்தை, ருதுக் களுக்கு ஐந்தாவது பாகத்தை, வருஷத்துக்கு ஆறுவது பாகத்தை யறியவும். ரு. எ. கஅ.

௩0அ. இன்பத்தை இன்பமளிப்பவனேடு காமத் தைப் பிரத்தியாசர்களுடன், பயத்தை சிதீமன்களோடு, ஆக்ஞையைப் பிர சாசங்களுடன், சூரிய சந்திரனை இரு நீர்ப்பை பாகங்களோடு, கருப்பு வெளுப்பை மலநீர்ப்பை களுடன், உருவத்தோடு உருவத்தை அறியவும். அரு வத்தை அஸ்தத்துடனறியவும். ரு. எ. கசு.

௩௦௯. மாமிசத்துடன் தினத்தை, கொழுப்போடு இரவை ; இரசத்தால் சலங்களை, சத்தால் நெய்யை, சீதத்தைச் செழுமையுடன், சுவாஹாவைக் கண்கபையோடு ; வெண்பனியைக் கண்ணீர்களுடன் சோதியைச் சொரூபத்தால், நட்சத்திரங்களை பிரதிரூபத்தோடு, புவியைச் சர்மத்தோடு காய நிறத்தை காய நிறத்துடன் அறியவும் அழைப்பதற்கு சுவாஹா! அடைந்ததற்கு சுவாஹா! அளித்ததற்கு சுவாஹா! ரு. எ. ௨௦.

௩௧௦. அக்கினிக்கு பக்கத்தின் முதல் எலும்பை; சரஸ்வதிக்கு இரண்டாவதை ; சோமனுக்கு மூன்றுவதை ; சலத்துக்கு நான்காவதை; ஔஷதிகளுக்கு ஐந்தாவதை ; வருஷத்துக்கு ஆறுவதை; மருத்துக்களுக்கு ஏழாவதை; பிரஹஸ்பதிக்கு எட்டாவதை ; மித்திரனுக்கு ஒன்பதாவதை, வருணனுக்குப் பத்தாவதை, இந்திரனுக்குப் பதினொன்றுவதை விசுவே தேவர்களுக்கு பன்னிரண்டாவதை ; சோதி சகத்துக்கும் பக்கத்தை ; யமனுக்கு விலா எலும்பை—யறியவும். ரு. எ. ௨௧.

௩௧௧. வாயுவுக்கு முதல் எலும்பை ; சரஸ்வதிக்கு இரண்டாவதை; சந்திரனுக்கு மூன்றுவதை, நட்சத்திரங்களுக்கு நான்காவதை; சாவித்திரிக்கு ஐந்தாவதை ; ருத்திரனுக்கு ஆறுவதை ; சர்ப்பங்களுக்கு ஏழாவதை ; அரியமானுக்கு எட்டாவதை ; துவஷ்டாவுக்கு ஒன்பதாவதை ; தாத்ருவுக்குப் பத்தை ; இந்திராணிக்கு பதினொன்றை ; அதிதிக்கு பன்னிரண்டாவதை ; சோதி சகத்துக்குப் பக்கத்தை ; யமிக்கு விலா எலும்பை யறியவும். ரு. எ. ௨௨.

௩௧௨. இருநீர்ப்பைக் கருகிலுள்ள பாகங்களுடன் வழியை ; தொடர்ச்சியை இரு தசைப் பாகங்களோடு ; கிளிகளைப் பித்தமுடன் ; கல்லீரலோடு காமாலையை ; கெட்ட காற்றுகளுடன் ஹலீட்சணங்களை ; மலத்தோடு

கூச்மங்களை ; புழுக்களை குடற் பொருள்களுடன் ; நாய்களை துண்டஞ் செய்வதோடு ; சர்ப்பங்களை உதிரநாற்றத்துடன் ; பறவைகளை பசனகந்தமோடு ; எலும்புகளை பிரசாதங்களுடனறியவும். ௫. எ. ௨௩.

---

## அநுவாகம் ௩௧௩.

### ஆத்மா

க. குதிரை யக்ஞாருகமான விசுவே தேவர்களுடன் சேர்ந்து துரித பாய்ச்சல்களால் ஆக்கிரமித்துள்ளது ; நீ எம்மை சுகிருத உலகத்துக்கு வகித்துச் செல்லவும். நாங்கள் உன் பலத்தில் இன்பமாக வேண்டும். ௫. எ. ௨௪.

---

## அநுவாகம் ௩௧௪.

### பெரிய குதிரை

க. சோதி உன் முதுகாகும் ; உன் நிலயம் புவி உனதாத்மா வானமாகும் ; சமுத்திரம் உன் மூல நிலயம்.

௨. உன் கண் சூரியன் ; பிராணன் காற்றாகும் ; உன் செவி சந்திரன் ; உன் சந்திகள் பட்சங்களும் மாதங்களுமாகும் ; உன் அங்கங்கள் ருதுக்கள் ; உன் மகிமை வருஷமாகும். ௫. எ. ௨௪.

---

---

௩௦௦—௩௧௨. கருத்து—பரஸ்பர சம்பந்தங்கள்.

௩௧௩. கருத்து—குதிரை நாடவும்.

௩௧௪. கருத்து—நிசகுதிரை.

## அநுவாகம் ௩௧௫.

### தேவ சரிதை

க. அக்கினி பசுவாயிருந்தது; அதனால் யக்ஞஞ் செய்தார்கள்; அது அனலுள்ள இவ்வுலகத்தை ஜயித்தது. இது உன் உலகமாகும்; நீ அதை ஜயிப்பாய், ஆதலால் அதை கிரகிக்கவும். வாயு பசுவாயிருந்தது; அதனால் அதை யக்ஞஞ் செய்தார்கள். அது வாயு உள்ள இவ்வுலகத்தை ஜயித்தது; இது உனது உலகமாகும்; அதை நீ முகரவில்லையேல் உன்னை நான் தடுப்பேன். ஆதித்தியன் பசுவாயிருந்தது; அவர்கள் அதனால் யக்ஞஞ் செய்தார்கள்; அது ஆதித்தியனுள்ள இவ்வுலகத்தை ஜயித்தது. இது உன் உலகம், நீ முகர்ந்தால் அதை நீ ஜயிப்பாய். ரு. எ. உசு.

[தொடரும். ௩௧எ வது அநுவாகம்.]

---

## அநுவாகம் ௩௧௬.

### சோமன்

#### காண்டம் எ.

க. பெரியவனே! பால் மிகுந்து பரந்த தாரையோடாகும் நீ கலசத்தை முகரவும். இந்துக்கள் உன்னை நதிகள் கடலைப்போல் நுழையட்டும். எங்கும், என்னை ஆயிரம் பசுக் களுடனுக்கவும். பிரசையுடன் பொருள் என்னை மறுபடியும் நுழைய வேண்டும்.

உ. நீங்கள் இருவர்களும் ஜயித்துளீர்கள்; நீங்கள் ஜயிக்கப்படவில்லை. இருவர்களின்—கூட்டத்தில்—எவனும் தோல்வியாகவில்லை. இந்திரன் விஷ்ணுவான நீங்கள்

---

௩௧௫. கருத்து—அக்கினி யென்னும் பிராணி.

இருவர்களும் பரஸ்பரம்போட்டியாகி ஆயிரத்தை மூன்று பாகஞ் செய்து கொண்டார்கள்.

௩. இம்சையற்றவர்களே! மகீ இடை அதிதி பிரியை இரந்தி பிரயேஷி விசுருதியான இவை உனது நாமங்களாகும்: தேவர்களின் நடுவே நல்ல செயல்களின் கர்த்தாவாக என்னை யறிவிக்கவும். எ. க. சு.

## அநுவாகம் ௩௧எ.

[அசுவமேதம்—௩௧௫-வது அநுவாகத் தொடர்ச்சி]

### துரகம்.

க. நான் உன்னை தேவ சவிதாவின் தூண்டுதலில் பூஷண புஜம் அசுவினி கைகளோடு கிரகிக்கிறேன். உ. பூர்வத்தில் கவிகள் சபைகளில் ருதத்தின் இப்பாசத்தைப் பற்றியுளார்கள். ருத சாமனில் தேவர்கள் அதனால் தாரையை யறிவித்து சோமனை சுவாதீனஞ் செய்தார்கள். ௩. நீ சூழ்பவன். நீ சகமாகும்; நீ அடக்குபவன், நீ ஆதரவாகும், நீ சுவாஹா சத்தத்துடன் விசாலமான அக்கினி வைசுவா நரனுக்குச் செல்லவும். ச. நீ அடக்குபவன், நீ புவியிலரசனாகும், நீ அடக்கும் அடக்குபவனாகும். நீ ஆதரவளிக்கும் ஆதரவாகும்.

௫. கிருஷிக்கு உன்னை, சுகத்துக்கு உன்னை, செல்வத்துக்கு உன்னை, செழுமைக்கு உன்னை; சு. சகம், வானம், சோதிக்கு உன்னை, சத்து, அசத்து, சலங்கள், செடி கொடிகள், எல்லா சீவராசிகளுக்கும் உன்னைப் பற்றுகிறேன். எ. க. கக.

---

௩௧சு. கருத்து—ஆயிரத்தை மூன்று சமபாகமாய் பிரிப்பவர்.

௩௧எ. கருத்து—வியாபகமான குதிரை.

23

## அநுவாகம் ௩௧௮.

### துதிரையே!

௧. நீ புவியால் வியாபகனுகும், பிதாவால் பிரபு; நீ குதிரையாகும், நீ அசுவம். நீ துரகமாகும், நீ துரிதன். நீ ஆணுகும். நீ திட குதிரை. நீ வேகன். நீ வன்மையுள்ளவனுகும், நீ சக்திமான். நீ வீர மனமுள்ளவன். அழைத்துச் செல்பவன் என்பது உனது பெயர். நீ ஆதித்தியர்களின் வழியை யநுசரிக்கவும்.

௨. அக்கினிக்கு சுவாஹா! இந்திராக்கினிக்கு சுவாஹா! பிரஜாபதிக்கு சுவாஹா! விசுவே தேவர்களுக்கு சுவாஹா! எல்லா தேவர்களுக்கும் சுவாஹா!

௩. இங்கு ஆதரவு சுவாஹா! இங்கு அதி ஆதரவு சுவாஹா! இங்கு இன்பம் சுவாஹா! இங்கு அதி இன்பம் சுவாஹா!

௪. முக்காலங்களுக்கும். உன்னை புவி, பொருள்களுக்கும் உன்னைச்—செலுத்துகிறேன்.

௫. திசைகளைக் காக்கும் தேவர்களே! பிரோக்ஷிதமாகும் இக் குதிரையை யக்ஞம் தேவர்களுக்காக நீங்கள் துணைபுரியுங்கள். எ. க. கஉ.

---

## அநுவாகம் ௩௧௯.

### சலன துதிரை

௧. கமனத்துச்கு சுவாஹா! அதி கமனத்துக்கு சுவாஹா! துரிதத்துக்கு சுவாஹா! துரிதஞ் சென்றவனுக்கு சுவாஹா! சூகார சத்தத்துக்கு சுவாஹா! சூகார

---

௩௧௮. கருத்து—குதிரை யென்னும் பெயரால் அவனை யழைப்போம்.

சத்தம் செய்யப் பட்டுள்ள வனுக்கு சுவாஹா! சென்றுள்ள வனுக்கு சுவாஹா! முன் சென்றுள்ள வனுக்கு சுவாஹா! முன் பாய் பவனுக்கு சுவாஹா! குதித்துச் செல்ப வனுக்கு சுவாஹா! முன் செல்ப வனுக்கு சுவாஹா! அதி முன் செல்ப வனுக்கு சுவாஹா! அனைத்துக்கும் சுவாஹா! எ. க. கங.

## அநுவாகம் ௩௨0.

### தேவ நட்பு

க. அக்கினிக்கு சுவாஹா, சோமனுக்கு சுவாஹா, வாயுக்கு சுவாஹா, சல சந்தோஷத்துக்கு சுவாஹா, சவிதாவுக்கு சுவாஹா, சரஸ்வதிக்கு சுவாஹா, இந்திரனுக்கு சுவாஹா, பிரகஸ்பதிக்கு சுவாஹா, மித்திரனுக்கு சுவாஹா, வருணனுக்கு சுவாஹா, சர்வத்துக்கு சுவாஹா! எ. க. கச.

## அநுவாகம் ௩௨க.

### வருஷ குதிரை

க. புவிக்கு சுவாஹா! வானத்துக்கு சுவாஹா! சோதிக்கு சுவாஹா! சூரியனுக்கு சுவாஹா! சந்திரனுக்கு சுவாஹா! நட்சத்திரங்களுக்கு சுவாஹா! கீழ்த்திசைக்கு சுவாஹா! தென் திசைக்கு சுவாஹா! மேற்திசைக்கு சுவாஹா! வடதிசைக்கு சுவாஹா! உச்சிக்கு சுவாஹா! திசைகளுக்கு சுவாஹா! நடுத்திசைகளுக்கு சுவாஹா! பாதி வருஷங்களுக்கு சுவாஹா! சரத்துக்களுக்கு! சுவாஹா! இரவு பகல்களுக்கு சுவாஹா! பட்சங்

---

௩கக. கருத்து—அசையுங் குதிரை.
௩௨0. கருத்து—தேவ குதிரை

களுக்கு சுவாஹா! மாதங்களுக்கு சுவாஹா! ருதுக்களுக்கு சுவாஹா! வருஷத்துக்கு சுவாஹா! சர்வத்துக்கு சுவாஹா! எ. க. கசு.

## அநுவாகம் ௩௨௨.

### எங்கும் வாழி

க. அக்கினிக்கு சுவாஹா! சோமனுக்கு சுவாஹா! சவிதாவுக்கு சுவாஹா! சரஸ்வதிக்கு சுவாஹா! பூஷணனுக்கு சுவாஹா! பிரகஸ்பதிக்கு சுவாஹா! சலங்களின் இன்பத்துக்கு சுவாஹா! வாயுக்கு சுவாஹா! மித்திரனுக்கு சுவாஹா! வருணனுக்கு சுவாஹா! சர்வத்துக்கு சுவாஹா! எ. க. கசு.

## அநுவாகம் ௩௨௩.

### திவ்யம் போற்று

க. புவிக்கு சுவாஹா! வானத்துக்கு சுவாஹா! சோதிக்கு சுவாஹா! அக்கினிக்கு சுவாஹா! சோமனுக்கு சுவாஹா! சூரியனுக்கு சுவாஹா! சந்திரனுக்கு சுவாஹா! பகலுக்கு சுவாஹா! இரவுக்கு சுவாஹா! நேர்மைக்கு சுவாஹா! நன்மைக்கு சுவாஹா! நலவாசத்துக்கு சுவாஹா! பசிக்கு சுவாஹா! திருப்திக்கு சுவாஹா! ரோகத்துக்கு சுவாஹா! பனிக்கு சுவாஹா! சீதத்துக்கு சுவாஹா! சூட்டுக்கு சுவாஹா! வனத்துக்கு சுவாஹா! சுவர்கத்துக்கு சுவாஹா! சகத்துக்கு சுவாஹா! சர்வத்துக்கு சுவாஹா! எ. க. கஎ.

---

௩௨௧. கருத்து. பிரபஞ்ச குதிரைகள்.

௩௨௨. கருத்து. திவ்ய குதிரைகள்.

௩௨௩. கருத்து. எல்லா குதிரைகளுக்கும் வாழி.

## அநுவாகம் ௩௨௪.

### தீட்சை

௧. நீ தேவச்செயலான உழைப்பால் தோன்றியுளாய்; நீ ருத வழியாகும். நான் உன்னை திவ்ய வசுக்களுடன் தேவ காயத்திரீயோடுச் சேர்க்கிறேன்; நான் உன்னை அவியான வசந்தத்துடன் தீட்சை யாக்குகிறேன்.

௨. நான் உன்னை தேவ ருத்திரர்களுடன் திவ்ய திருஷ்டுபு சந்தத்தோடு சேர்க்கிறேன். நான் உன்னை அவியான கிரீஷ்ம ருதுவோடு புனித மாக்குகிறேன்.

௩. நான் உன்னை ஆதித்திய தேவர்களுடன் திவ்ய ஜகதீச் சந்தத்துடன் சேர்க்கிறேன்; நான் உன்னை அவியான மழை காலத்துடன் புனித மாக்குகிறேன்.

௪. நான் உன்னை விசுவே தேவர்களுடன் திவ்ய யநுஷ்டுபுச் சந்தத்தோடு சேர்க்கிறேன். நான் உன்னை அவியான சரத்ருதுவால் சுத்தமாக்குகிறேன்.

௫. நான் உன்னை அங்கிரசு தேவர்களுடன் திவ்ய சந்தத்தால் சேர்க்கிறேன்; நான் உன்னை அவிகளான சிசிரமந்தங்களுடன் புனிதமாக்குகிறேன்.

௬. நான் ருதம் காயத்திரீ சந்தத்துடன் ருத பத்தினியான தீட்சையில் ஏறியுளேன். நான் சத்தியத்தில் ருதத்தை ஸ்தாபித்துளேன்; நான் ருதத்தில் சத்தியத்தை ஸ்தாபித்துளேன்.

௭. பாதுகாப் பளிக்கும்.

௮. பெரியவனை யழைப்போம்.

௯. இங்கு ஆதரவு சுவாஹா! இங்கு அதி ஆதரவு சுவாஹா! இங்கு இன்பம் சுவாஹா! இங்கு அதி இன்பம் சுவாஹா! எ. க. கஅ.

---

௩௨௪. கருத்து. இங்கு இதோ இன்பம்.

சுவாஹா! யக்ஞபதியே! பல வீரர்களால் யநுசரிக்கப்பட்டு துதிமொழிகளாலோங்கும் இது உனது யக்ஞமாகும். நீ இதை அங்கீகரிக்கவும். சுவாஹா! அ. உஉ.

எ. வாயுவின் சலனம் போலும் கடல் அலைபோலும் இந்தப் பத்து மாதங்கள் பூரணமாகட்டும். இப்பத்து மாதங்கள் கழிந்து, புலனுகட்டும் அ.உஅ.

அ. கம்பீர காயங்களுடன் நீண்ட கேசங்களோடு காளைபோலுள்ள வேக குதிரைகளைப் பூட்டவும். சோமன் பருகும் இந்திரனை நீ எங்கள் துதிகானங்களைச் செவியுற வாருங்கள். நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். ஷோடஷி இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனக்கு மூலஸ்தானமாகும். ஷோடச இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். அ.௩௪.

கூ. பிரஜாபதி எவனைக் காட்டிலும் அதிக பலிஷ்டனாய் புலனுகுபவன். அவன் எல்லா புவனங்களிலும் வியாபகமாயுளான். ஷோடசியான அவன் பிரசையால் இன்பமாகி மூன்று பெரிய சோதிகளையுந் தாங்குகிறுன். க0. இந்திரன் சம்ராட்டாகும், வருணனுகும், இராஜாவாகும், அவன் போக வஸ்துவை முதன்மையாகவும் மேன்மையாகவுஞ் செய்துளான். நானும் அநுசரித்து அப்போகத்தைப் பருகுகிறேன். பிரியமான வாக்கு தேவியானவள் பிராணனேடு கூட சோம இரசத்தோடு திருப்தியாகட்டும். சுவாஹா. அ. ௩கூ. ௩எ.

கக. தேவனே! அனைவரும் சூரியனைப் பார்க்க அவனது உதய கிரணங்கள் அவனை உச்சியில் சுமந்து செல்லுகின்றன....மற்றது அத் அ ச0வது மந்திரத்தின் பின்பகுதி. க௨. கலசத்தை முகர்ந்து பார்க்கவும். அதிபலமுள்ளவனே! சோம துளிகள் உன்னை நுழையட்டும்.

பலத்தோடு மறுபடியும் திரும்பவும். பாலின் விசால தாரை வெள்ளங்களுடன் ஆயிரமான ஐசுவரியத்தை எமக்குப் பொழியவும். மறுபடியும் எமக்குச் செல்வங்கள் வரட்டும். ௧௩. இடை, பூஜிக்கவும் இன்ப மனுபவிக்கவும ருகதையானவள், நீ சுந்தரமாய் இன்பாருகதையா சோதியுள்ளவளாய் அதிதியாய் சரஸ்வதியாய் மேன்மை யாயுள்ளவள். உத்தமி, இவை யனைத்தும் துக்கம் நீங்கிய உனது நாமங்களாகும். நீ என் செயல்களை தேவர்களுக்குச் சொல்லவும்.

௧௪. இந்திரனே! எமது சத்துருக்களை யொழிக்கவும்; எங்களை எதிர்ப்பவனைத் தாழ்மை யாக்கவும். எங்களுக்குத் துன்பமளிக்க விரும்புபவனை அதோகதி அந்தகாரத்தில் தள்ளவும். நீ ஆதரவோடு பற்றப்பட்டுளாய், சத்துரு ஜயிக்கவும் இந்திரனுக்கு உன்னை நாடுகிறேன். இது உனது மூலஸ்தானம். சத்துரு ஜயிக்கும் இந்திரனுக்கு உன்னை - நாடுகிறேன், ௧௫. நாங்கள் மனோ துரிதனையும் விசுவ கருமனை வாசஸ்பதியை இன்று எமது போரைத் துணைபுரிய யழைப்போம். எல்லாச் செயல்களும் சிறப்பாயுள்ளவனும் உதவிக்கு உற்சாகமளிக்கும் அவன் எங்கள் அழைப்புக்களைப் பிரியமாய் செவியுற வேண்டும். நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய், இந்திர விசுவ கர்மனுக்கு உன்னை நாடுகிறேன். இது உனது மூலஸ்தானம். இந்திர விசுவகர்மனுக்கு உன்னை - நாடுகிறேன். அ. ௪௧—௪௫.

௧௬; விசுவகர்மனை நீ, வளரும் அவியால் இந்திரனை யழியாதக் காப்பாகச் செய்துளாய். பழைய சனங்கள் யுக்தச்செயலுக்குச் சேரும் அவன் முன் பணிந்துளார்கள். நீ ஆதரவுடன் பற்றப்படுகிறாய். மற்ற பகுதி ௪௫-வது மந்திரத்தைப் போலாகும். ௪. ௪௬.

கிரகஸ்தனே !

கஎ. இங்கு இன்பம், நீங்கள் இன்ப மநுபவியுங்கள், இங்கு நிலை, சுவநிலையாகும். சுவாஹா ! பெண் பிள்ளையின் நிமித்தம் கருப்பத்தைக் குணமாக்கவும். பெண் பிள்ளைகள் பிற்காலத்தில், தாயைக் காக்கட்டும். அவன் எங்களில் செல்வப் புஷ்டியைத் தரிக்கட்டும். சுவாஹா ! நீ பெரிய செயலின் எல்லையாகும். நாங்கள் தரணியினின்று அமுதம் சென்றுளோம். நாங்கள் தேவர் சோதி சுவர்க்கம் கண்டுளோம். அ. ருக. ருஉ.

கஅ. போர்க்காலத்தில் போர்புரியத் தயாராயுள்ள இந்திர பர்வதனே ! எங்களுடன் சமர் செய்ய விரும்பு பவனைத் துரத்தவும். வச்சிராயுதத்தால் அவனை வெகு தூரந் துரத்துங்கள். சத்துரு சேனை எம்மைத் தாக்கினால் அதையும் கீழே சாய்க்கவும். சேதிப்பவன் எங்கள் சத்துருக்களை எங்கும் சேதிக்கவேண்டும். வீரனே ! எங்கும் அவர்களைச் சேதிக்கவும். புவி, வானம், சோதி ! நாங்கள் பிரசை மிகுந்து வீரமக்கள் நிறைந்து போஷிக்கும் உணவு கருவியனுடனுக வேண்டும். அருங.

உ௦. சோதிக்கும் தேவர்களுக்கும் யக்ஞம் சென்றுள்ளது. அங்கிருந்து செல்வம் எனக்கு வரட்டும். யக்ஞம் வானம் மனிதர்களுக்கு சென்றுள்ளது. பொருள்கள் அங்கிருந்து எனக்கு வரட்டும். யக்ஞம் புவி பிதுருக்களுக்கு சென்றுள்ளது, அங்கிருந்து பொருள் எனக்கு வரட்டும். எங்கெங்கு யக்ஞம் சென்றபோதிலும் அங்கிருந்து செல்வம் எனக்கு வரட்டும். அ. சு௦.

உக. யக்ஞத்தை ஸ்தாபனஞ்செய்யும் நுச இழைகள் நூற்கப்பட்டு விட்டன. நான் சுவதாவுடன் அறுந்த இழைகளையும் ஒன்று சேர்க்கிறேன். சுவாஹா ! தேவர்

களுக்கு யக்ஞஞ் செல்லட்டும். உஉ. யக்ஞத்தின் கறப்பு எங்கும் விரிந்துள்ளது. அது எட்டுதிசைகளிலும் விரிந்துள்ளது. யக்ஞத்தைப் பொழியவும். என் பிரசையில் புஷ்டியை யளிக்கவும். நான் சதாகாலம் செல்வத்தை யடைய வேண்டும். சுவாஹா! அ. சுக. சுஉ.

உஉ. சோமனே! செல்வம் அசுவம் சொர்ணத்தைப் பொழியவும். பசுசாதன பலத்தை இங்கு நிரப்பவும். சுவாஹா! அ—சுங.

---

## அநுவாகம் ஙஎசு.

### வாஜபேயம்

க. இணைக்கப்படும் குதிரையான நீ வாயுவைப் போல் துரிதமாகவும், இந்திரனின் வலது கைக் குதிரையைப்போல் நீ கீர்த்தியுடனுகவும். விசுவ மறியும் மருத்துக்கள் உன்னை இணைக்கட்டும். துவஷ்டா உன் பாதங்களில் துரிதத்தை வைக்கட்டும். சு. அ.

உ. உங்கள் பலமுங் வீரமும் எங்களிலாக வேண்டும். உங்கள் வர்சஸூம் அறிவும் எங்களிலாகவேண்டும். எங்கள் தாய் தரணிக்கு நமஸ்காரம்! எங்கள் தாய் தரணிக்கு நமஸ்காரம்! இது உனது அதிபதி த்வத்திலாகும், நீ அரசுபுரிபவன், நீ நிர்வாகஞ் செய்பவன், நீ நிலையாயும் திரமாயு மிருப்பவன். நான் உழவுக்கு உன்னை, க்ஷேமத்துக்கு உன்னை செல்வத்துக்கு உன்னை போஷிப்புக்கு உன்னை நாடுகிறேன். சு. உஉ.

ங. ஸவிதா, கிரகபதிகளின் அக்கினி, வனஸ்பதிகளின் சோமன் வாக்கின் பிரகஸ்பதி செல்வச் சலனத்துக்கு உன்னைத் துரிதமாக்கட்டும். இந்திரன் சிறப்புக்கு

---

ஙஎ௫. கருத்து—சோமனைப் பற்றவும்.

ருத்திரன் பசுக்களுக்கு மித்திரன் சத்தியப்பேச்சுக்கு, வருணன் தர்ம பதிகளுக்கு, உன்னைத் துரிதமாக்கட்டும். ச. மகத்தான க்ஷத்திரத்துக்கும் மகத்தான மேன்மைக்கும் அவனுக்குப் போட்டியாய் எவனும் வராமலிருக்க தேவர்களே! நீங்கள் செய்யுங்கள். இவன் தாய் பெயர் இது. இவன் தந்தைபெயர் இது. இவன் குடும்பம் இது மகாசனங்களே! இவன் தான் உங்கள் அரசன். சோமனே எமது பிராமணர்களுக்கு அரசனாகும். கூ. ௩க. ச0.

---

## அநுவாகம் ௩எஎ.

### அபிஷேகம்

க. விரியு மக்கினி தர்ம பதியாகும். விரியு மனல் தர்மத்தின் பதி, தேஜஸைச் சுவீகரிக்கட்டும். சுவாஹா. சுவாஹா கிருதஞ் செய்யப்பட்ட சூரிய இரசிமிகளோடு சனங்களின் நடுவே சிறப்புக்காக முயற்சி செய்யுங்கள். உ. நான் தூண்டும் சவிதாவால், வாக்குச் சரஸ்வதியால், ரூபங்களின் துவஷ்டாவால், பசு பூஷணால், இந்த இந்திரன் இந்த பிரகஸ்பதியால் பிரமத்தால் வருணன் ஒஜசால் அக்கினி தேஜசால் சோமன் இராஜாவால், பத்தாவது தேவரான விஷ்ணுவால் தூண்டப்பட்டு முன் செல்லுகிறேன். க0. உகூ—௩0.

௩. ஒளித் தலைவர்களான அசுவினிகள் இன்ப சாதனத்தைப் பருகியுள்ளார்கள். அவர்கள் இந்திரன் அசுர நமூசியோடு போர்புரிய உதவி செய்துளார்கள். ச. அசுவினிகள் பெற்றோர்கள் மகனைப்போல் தங்களது அதி அறிவு வன்மையோடு இந்திரனே! உனக்கு உதவி புரிந்துளார்கள். மகவானே! நீ சக்தியுடன் இன்ப சாதனத்

---

௩எசு. கருத்து—பலம் நாடவும்

தைப் பருகியவுடன் சரஸ்வதி உன்னைச் சுகமுடனாக்கு கிறாள். க0. ௩௩—௩௪.

---

## அநுவாகம் ௩எஅ.

### புரீஷ்யாக்கினி

க. நாங்கள் நோயற்று வாழ்வதற்கு, பிரசைகளுக்கு தேன் நிறையும் திவ்யமான சலங்களைப் பொழியவும். அச் சல சார்பினால் செழுமை செடி கொடிகள் செம்மை யாகின்றன. கக. ௩அ.

உ. சோமன் காக்கும் மனிதரின் சுக நண்பனை அக்கினி வைசுவாநரன் ரிஷிகளால் போற்றப்பட்டுளான். துவேஷமற்ற சோதியையும் சகத்தையும் நாங்கள் யழைப் போம். தேவர்களே! வீரமக்களோடு எமக்குச் செல் வத்தை யளிக்கவும். கஉ. உகூ.

௩. எல்லா வேத மொழிகளும் கடல்போல் விரியும் இந்திரனைப் பிரகாச மாக்குகின்றன. போரிலும் இரதச் சண்டையிலும் அவன் பெரியவன். தலைவர்களில் அவன் திவ்ய த்தலைவன். கஉ. ௫௬.

ச. தேவ வழி செல்பவர்களே! துன்பமாகாதவர் களே! நீங்கள் விடுதலையாகுங்கள். நாங்கள் இவ்விரு ளின் எல்லையில் வந்து விட்டோம். நாங்கள் சோதியைப் பெற்றுளோம். கஉ. எ௩.

௫. செடியே! நீ சகலத்தையும் விட சிரேஷ்ட னாகும்; மரங்கள் உன்னை யநுசரிக்கும். எங்களைத் துன் பஞ் செய்ய நாடுபவன் எமது ஆதிக்கத்தி லாகட்டும். கூ. நீ குளிர், கட்டி, ஒழுக்கு நீக்குபவன்; நீ க்ஷயமும் முக நோயும் நீக்குபவன். எ. இந்திரன் கந்தர்வன் பிரகஸ்பதி

---

௩எஎ. கருத்து—அக்கினி.

உன்னைப் புவியிலிருந்து கெல்லுகிறான். செடியே! அரசனான சோமன் உன்னை யறிந்து க்ஷயத்தினின்று நீங்குகிறான். அ. என் சத்துருக்களை ஜயிக்கவும், என்னை எதிர்க்கு மனிதர்களை நீ அடக்கவும். எல்லாக்குறைகளையும் நீ ஜயிக்கவும். ஓஷதியே! நீ ஜயசீலன். கூ. ஓஷதியே உன்னைப் புவியினின்று கெல்லுபவனும் நான் எவனுக்காக உன்னைப் புவியினின்று பிரிக்கிறேனோ அவனும் நீடூழிகாலம் வாழட்டும். நீயுமப்படியே நீடூழிகால மோங்கி நூறு கிளைகளுடன் உயரமாய் எழுச்சியாகவும். கஉ. கூஎ-க0க.

க0. மிகவும் இன்பமான சோமனே! சகல கிரணங்களுடனும் நீ பெருகவும். நீ அதி விசால நண்பனாகி நாங்கள் ஓங்குவதற்குப் பிரசன்ன மாகவும். கக. அக்கினியே! உன்னை நாடும் கானங்களால், நீ உச்சியிலுள்ள ஸ்தானத்தினின்று உன் மனத்தை தன் வசம் வத்சன் பற்றட்டும். கஉ. அங்கிரசு நிறையு மக்கினியே! எல்லா மேன்மையான புருஷர்களும் தனித்தனி விருப்ப சாதனமான உன்னை நாடியுள்ளார்கள். கங. அக்கினி பிரியமான வீடுகளில் வரும் வரப்போகும் விருப்பமான யவன் ஒரே சக்கரவர்த்தியாகப் பிரகாசிக்கிறான். கஉ. ககரு—ககஅ.

---

## அநுவாகம் ஙஎக.

### அக்கினி போற்று

க. உன் பலத்தை விரியும் வலைபோல் விஸ்தாரமாக்கவும். ஆட்களுடன் செல்லும் பெரிய அரசனைப்போல் போகவும். உனது துரித வலையை யநுசரித்து நீ அம்பு

---

ஙஎஅ. கருத்து—இஷ்டம்போல் உங்கள் இராஜாவைத் தேர்ந்தெடுங்கள்.

களை எய்கிறாய். கொடூரமாய் எரியும் அம்புகளால் நீ சத்துருக்களைக் குத்தவும். ௨. சுழலுமாயுதங்களை நீ துரிதமாய் செலுத்தவும். உன் கோபத்தில் கொதித்து வெகு கவனமுடன் அவற்றை யநுசரிக்கவும். அக்கினியே! பறக்கும் சுவாலைகளை உன் நாக்கால் எங்குமாக்கவும். உன்னைச் சுற்றிலும் தங்குதடை யன்னியில் எரிகொள்ளிகளை வீசவும். ௩. உன் சலனத்தில் துரிதமாகி ஒற்றர்களை எங்கும் முன் செலுத்தவும். சனங்களின் காப்பே! நீ ஒரு பொழுதும் ஏமாறாதே. அருகிலும் தூரத்திலுமிருந்தும் உன்னிடமிருந்து எத்தீமையும் எங்களை வெல்லவேண்டாம். கந. ௬—கக.

௪. அக்கினியே! எழுச்சியாகவும். எங்கள் முன்னிலையில் நீ விரியவும். அம்புகளைக் கூறுசெய்யும் நீ எங்கள் பகைவர்களை எரிக்கவும். சுடரனலே! எமக்குத் தீமை செய்பவனை காய்ந்த புல்லைப்போல் பூரணமாய் எரித்துவிடவும். ௫. அக்கினியே! எழுச்சியாகவும். எமக்கு விரோதமாய் சமர் புரிபவர்களை யொழிக்கவும். உன் திவ்ய பலத்தைப் புலனாக்கவும். இருள் மூழ்கியவனது வன்மையுடனாகும் விற்களைத் தளர்ச்சியாக்கவும். எங்கள் சத்துருக்கள் பந்துவானாலுஞ் சரி பகைவனானாலுஞ் சரி அவர்களை யொழிக்கவும். நான் உன்னை அக்கினியின் கொடூர யாவேசத்தோடு ஸ்தாபிக்கிறேன். ௬. அக்கினி சோதியின் தலைவனும் சிரனுமாகும். புவியின் பதியவனே. அவன் சலங்களின் இரேதசைத் துரிதமாக்குகிறான். நான் இந்திரனின் பெரிய பலத்தால் உன்னை ஸ்தாபிக்கிறேன். கந. க௨—க௪.

௭. உனது மங்களகரமான சேனைகளால் யுக்தமாக்கும் யக்ஞம், வானத்தின் தலைவனாகும். அக்கினியே! உனது சுவாலையை யவி சுமப்பவனாகச் செய்து சோதி

யளிக்கும் சிரத்தை சுவர்க்கத்துக்கு எழுச்சியாக்கியுளாய். கங. கரு.

அ. அதி இளைஞனே! யக்ஞ புருஷர்களைக் காக்கவும், அவர்கள் மொழிகளை கேட்கவும். அவனையும் அவன் பிரசையையுங் கேட்கவும். கங. ருஉ.

---

## அநுவாகம் ங அО.

### சிருட்டிகள்

க. சுக்கிரமும் சுசியுஞ் சேர்நது கிரீஷ்ம ருதுவாகும். நீ அக்கினியின் அக இணைப்பாகும். சோதியும் சகமும் சலம் ஓஷதி அக்கினிகள் என் சிறப்புக்குச் சேர்த்துப் பிரித்து உதவி செய்யட்டும். தேவர்கள் கூட்டங்களுடன் இந்திரனைச் சுற்றிக் கூடுவதுபோல் புவிசோதிக்கு நடுவிலுள்ள அனல்கள் இக்கிரீஷ்ம ருதுக்களைச் சுற்றிச் சேரட்டும் அத்தேவதையுடன் திடமாகி அங்கிரசனைப் போல உட்காரவும். கச. சு.

உ. விசுவகர்மன் வானத்தின் யெல்லையில் சோதி நிறையும் உன்னை ஸ்தாபிக்கட்டும். எல்லா பிராணன் அபானன் வியானனுக்கு எல்லா சோதியையுங் கிரகிக்கவும். உனது அதிபதி வாயுவாகும். அந்த தேவதையுடன் அங்கிரசனைப்போல் திடமாயிருக்கவும். கச. கச.

ங. திரிவிருத ஸ்தோமன், துரிதமாகும். பஞ்சதசம் பிரகாசமானதாகும். வியோமன் சப்ததசம்; தரிப்பவன் ஏக விம்சமாகும்; வேகம் அஷ்ட தசமாகும்; தபம் நவ தசமாகும்; ஜயகோஷம் சவிம்சமாகும்; வர்சஸு துவா விம்சம்; சம்ரட்சணை திரயோவிம்சம்; மூலம் சதுர் விம்சம்; கருப்பம் பஞ்சவிம்சம். ஓஜசு திரிணவம். அறிவு

---

ஙஎகூ. கருத்து—அனலைப் பற்றவும்.

ஏகத்திரிம்சம்; பிரதிஷ்டை திரியத் திரிம்சம்; ஒளியுள்ளவனின் நிலயம் சதுஸ் திரிம்சம்; சோதியின் உயரிய நிலயம் ஷத்திரிம்சம்; சுற்றுபவன் அஷ்ட சத்வாரிம்சம்; தரிப்பு சதுஷ்டோமம். கச. உரு.

---

## அநுவாகம் ௩அக.

### அனல் சாதனங்கள்

க. பசுக்கள் ஆசிரயமாகி, துரித குதிரைகளின் வீடாயும் அழியாத திட துரகங்களின் வாசமுமாய் செல்வப் பிரபுவுமான அக்கினியை நான் மதிக்கிறேன். உன்னைத் தோத்திரஞ் செய்பவர்களுக்கு உணவை யளிக்கவும். உ. கூட்டம் கூட்டமாய் பசுக்கள் நாடி துரித பாதங்களுடன் குதிரைகள் செல்லும் நன்கு தோன்றும் தமது வீரர்கள் செல்லும் அக்கினியை சிறந்தவனுக நாங்கள் போற்றுகிறோம். உன் துதியைச் செய்பவர்களுக்கு உணவைக் கொண்டு வரவும். ௩. நல்ல சந்திரனே! நெய் சாதனங்கள் உன் முகத்தில் பக்குவமாகின்றன. பலத்தின் பதியே! எங்கள் யுக்தமான செயல்களில் அபரிமிதமாய் எங்களுக்கு நிரப்பவும். உன்னைத் துதி செய்பவர்களுக்கு உணவைக் கொண்டு வரவும். கரு. சக. ச௩.

ச. அக்கினியே! நாங்கள் நல்லறிவை துதிகளோடு துரகஙகளைப்போல் கானங்களுடன் நீ பிரியமாய் விரும்புபவற்றைக் கொண்டு வருகிறோம். ரு. அக்கினியே! நீ இன்பமளிக்கும் பலத்தோடும் நலமான சத்தியத்தோடும் சதாகாலம் பெரிய அறிவு இரதமுடனுகுபவனே நீ. சு. அக்கினியே! நல் மனமுடன் உனது எல்லாத் தோற்றங்களோடு சொர்ண சோதியைப்போல எமது அறிஞர்கள்

---

௩அ0. கருத்து—அனல் மர்மங்கள்

வழியாய் எங்களில் இணைய வரவும். எ. நான் அக்கினியை ஹோதாவாய், தாராளனும் சக்தியின் சிறந்த மகனும் சீவிக்கும் அனைத்தையும் அறிபவனும் சகலத்தையுமறி பவனும் மதிக்கிறேன். நல்ல யக்ஞங்களின் தலைவனான நீ திவ்யம் நோக்கி உயர் ஓங்கு பவனுமுள்ளாய். நெய்யி னின்று சுவாலை கிளம்புங்கால் நெய்யின் சக்தி நாளு சோதியை பிரகாசிக்கச் செய்கின்றன, கரு. சச. சஎ.

அ. அக்கினியே! எமது நெருங்கிய நண்பனாகவும். என் பிரியகாப்பாகவும் காருண்ய மித்திரனாகவுமாகவும். நலமான அனலாய் வரவும், மேன்மையுள்ளவனாய் வரவும், அதி உத்தம சிரேய்சுடனாகும் செல்வத்தை எமக்களிக்க வும். அதி சோதியும் ஒளியு முள்ளவனே! நாங்கள் நண் பர்கள் சுகத்துக்காக நாடுகிறோம். கரு. சஅ.

---

## அநுவாகம் ௬அஉ.

### ருத்திரம்

க. பெரியவன் சிறியவன் வளரும் இளைஞன் வளர்ந்த மனிதன் - எவருக்கும் தீங்கு செய்யாதே. தந்தை தாயைக் கொல்லாதே. ருத்திரனே! எங்கள் தேக த்துக்குத் தீமை செய்யாதே.

உ. எங்கள் சுக்கிலத்திலும் சந்ததியிலும் தீமை செய்யாதே. எங்கள் சீவர் பசுக்களில் குதிரைகளில் கெடு தல் செய்யாதே. உன் கோபத்திலே என் வீரர்களை யழிக் காதே. உனக்கே எப்பொழுதும் வணக்கம் கசு. கரு. கசு.

ங. கணங்களுக்கு நமஸ்காரம், கணபதிகளான உங் களுக்கும் நமஸ்காரம். தீண்டாதவர்களுக்கு நமஸ்காரம். தீண்டாததலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம், அறி

---

௬அக. கருத்து—அன்னுண்மை யறி.

ஞர்களுக்கு நமஸ்காரம் அறிஞர் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். விரூபர்களான உங்களுக்கு நமஸ்காரம், விசுவரூபர்களான உங்களுக்கும் நமஸ்காரம். கசு. உரு.

ச. சேனைகளுக்கு நமஸ்காரம்; சேனைகளின் தலைவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். இரதஞ் செல்லும் உங்களுக்கு நமஸ்காரம்; இரதத்தில் செல்லாத உங்களுக்கும் நமஸ்காரம். சாரதிகளுக்கு நமஸ்காரம். குதிரையோட்டிகளான உங்களுக்கும் நமஸ்காரம், பெரியவர்களான உங்களுக்கு நமஸ்காரம், சிறியவர்களான உங்களுக்கும் நமஸ்காரம். ரு. தச்சர்களான உங்களுக்கு நமஸ்காரம், இரதஞ் செய்யும் உங்களுக்கும் நமஸ்காரம். குயவர்களான உங்களுக்கு நமஸ்காரம், கருமார்களான உங்களுக்கும் நமஸ்காரம், நிஷதர்களான உங்களுக்கு நமஸ்காரம். புஞ்சிஷ்டர்களான் உங்களுக்கும் நமஸ்காரம். நாய்த் தலைவர்களான உங்களுக்கு நமஸ்காரம். வேடர்களான உங்களுக்கும் நமஸ்காரம். கசு. உசு. உஎ.

சு. சர்வர்கள் புவியின் கீழ் சஞ்சரிப்பவர்களாகும். அவர்கள் கழுத்துக்கள் நீலநிறங்களாகும். அவர்கள் கண்டங்கள் வெண்மை நிறங்களாகும். அவர்களுக்கு ஆயிரம் யோசனைகளுக்கப்பால் நாங்கள் விற்களை விசாலஞ் செய்கிறோம். எ. இளம் புற்களைப்போல் பசுமையாய் மரங்களில் நீல சிகப்புக் கழுத்துக்களுடன் அவர்கள்உளார்கள். நாங்கள் ஆயிரம் யோசனைகளில் அவர்களுக்கு விற்களை விசாலஞ் செய்கிறோம். பூதங்களின் அதிபதிகளால் ஜடாதாரிகளாய் சிகை சூன்னியர்களாய் எவர்கள் உண்டோ அவர்களுக்கு ஆயிரம் யோசனைகளில் விற்களை விசாலமாக்குகிறோம். கூ. வழிகாத்து சீவனுக்குப் போர்புரிந்து உணவுகொண்டு வருபவர்களுக்கு ஆயிரம் யோசனைகளில் நாங்கள் விற்களை விசாலமாக்குகிறோம். க0. கைகளில்

கத்தி அம்புகள் தரித்து தீர்த்த நிலயங்களில் சஞ்சரிப்பவர்களுக்கு ஆயிரம் யோசனைகளில் விற்களை விஸ்தாரஞ் செய்கிறோம். கக. மனிதர்கள் உண்ணுங்காலும் பருகுங்காலும் அவர்களைத் துன்பஞ் செய்பவர்களுக்கு நாங்கள் ஆயிரம் யோசனைகளில் விற்களை விசாலமாக்குகிறோம். கஉ. இத்தனை ருத்திரர்கள் இன்னம் அதிகமான ருத்திரர்கள் திசைகளில் பல வாறு திரமாயுள்ளார்கள். ஆயிரம் யோசனைகளில் அவர்களுக்கு விற்களை விஸ்தாரஞ் செய்கிறோம். கங. மழை அம்புகளாகவுள்ள சோதியி லிருக்கும் ருத்திரர்களுக்கு நமஸ்காரம். பத்து கிழக்கில் பத்து தெற்கில், பத்து மேற்கில் பத்து வடதிசையிலுள்ளார்கள். அவர்களுக்கு நமஸ்காரம். அவர்கள் எங்களை இரட்சித்து சுகமளிக்கட்டும். எங்களை வெறுப்பவனையும் நாங்கள் வெறுப்பவனையும் அவர்கள் வாயில் தள்ளுகிறோம். கச. எவர்கள் அம்புகள் பவனமோ எவர்கள் வானத்திலுளார்களோ அந்த ருத்திரர்களுக்கு நமஸ்காரம், பத்து கிழக்கில் பத்து தெற்கில் பத்து மேற்கில் பத்து வடதிசையிலுளார்கள். அவர்களுக்கு, நமஸ்காரம். அவர்கள் எங்களை இரட்சித்து சுகமளிக்கட்டும். எங்களை வெறுப்பவனையும் நாங்கள் வெறுப்பவனையும் அவர்கள் வாயில் தள்ளுகிறோம்.

கரு. புவியை நிலயமாகக்கொண்டு உணவை யம்புகளாகவுள்ள ருத்திரர்களுக்கு நமஸ்காரம். பத்து கிழக்கில் பத்து தெற்கில் பத்து மேற்கில் பத்து வட திசையிலுளார்கள். அவர்களுக்கு நமஸ்காரம். அவர்கள் எங்களை இரட்சித்து சுகமளிக்கட்டும். எங்களை வெறுப்பவனையும் நாங்கள் வெறுப்பவனையும் அவர்கள் வாயில் தள்ளுகிறோம். கசு. ருஎ—சுசு.

---

ஙஅஉ. கருத்து—ருத்திரன் யார்?

## அநுவாகம் ௩-அ௩.

### அனலேழச்சி

க. அக்கினியே! பால் நிறையும் பலம் மிகும் இந்த ஸ்தன்ய பானத்தைப் பருகவும். சலப்பெருக்கு நடுவே பருகவும். தேன் சுகந்தமுடனுறும் இந்த சலமூலத்தைப் பற்றவும். குதிரையே! உன் சலநியலத்தில் செல்லவும். உ. நெய் கலந்துள்ளது. நெய்யே அவன் மூலஸ்தானம், அவன் நெய்யில் சாய்ந்துளான். நெய்யே அவனுக் கேற்ற நிலயமாகும். உன் யநுகூலம் போல் வரவும். குதிரையே! ஆனந்தமாக்கவும். சுவாஹா கிருதஞ் செய்யப் பட்டுள்ள அவியைச் சுமக்கவும். கஎ. அஎ—அஅ.

௩. மதுரமிகும் அலை சமுத்திரத்தினின்று தோன் றும் கிரணத்தோடு கலந்து அது அமிருதமாகும். நெய் யின் மறைமுகமான நாமம் எது உண்டோ அது தான் அமுத நடுவான தேவ நாக்காகும். ச. மரியாதைகளுடன் தரிக்கப்படும் இந்த யக்ஞஸ்தானத்தில் நெய்யின் நாமத் தை நாம் கம்பீரமாய்ச் சொல்வோம். நாம் கோஷிக்கும் மொழியை அறிஞன் கேட்கட்டும். இந் நான்கு கொம்பு களுள்ள குணமலை வேதத்தைப் புலனுக்கும். கஎ. அகூ. கூO,

ரு. அவனுக்கு நான்கு கொம்புகள் உண்டு. மூன்று கால்கள் அவனை வகித்துச் செல்லும். அவன் தலைகள் இரண்டு. அவன் கைகள் ஏழாகும். மூக்கட்டுக்களால் கட்டப்பட்டு விருஷபன் உரத்தகோஷஞ் செய்கிறன். மகத்தான தேவன் மனிதர்களில் நுழைந்துளான். சா. பணிகளால் மறைக்கப்பட்டு பசுவில் சாய்க்கப்பட்டுள் ளது என மூவ்வகையுள்ள நெய்யை தேவர்கள் கண்டு ளார்கள். இந்திரன் ஒன்றைச் செய்வான். சூரியன் மற்

றதைச் செய்கிறான். அவர்கள் தங்கள் சக்தியால் வேனனின்று மூன்றுவகை யுருவமாக்குகிறார்கள். கஎ. கூக. கூஉ.

எ. மனோ சமுத்திரத்தினின்று சத்துருக்கள் காணாமலுள்ள இந் நதிகள் பல ஓடைகளோடு பாய்கின்றன. நான் நெய் தாரைகள் இறங்குவதைப் பார்க்கிறேன், அவற்றின் நடுவே பொன் கிரணமுண்டு. அ. இருதயத்தில் மனத்தால் தூய்மையாகி எமது மொழிகள் நதிகளைப் போல் நன்கு பாய்கின்றன. வில்லாளன் முன்னிலையில் கானக மிருகங்கள் துரிதமாவதுபோல் நெய் தாரைகள் மொழிகின்றன. கூ. நதிகளின் துரித அலைகள் பாய்ந் தோடுவதுபோலும் வேகஞ் சுழலும் காற்றுக்கும் விரைவாய் நெய் தாரைகள் பாய்கின்றன. வேலிகளை உடைத்துச் செல்லும் சுந்தரமான குதிரையைப் போல் திமிறித் தளம்பிப் பொங்கி பொழிகின்றன. கஎ. கூந—கூ௫.

க0. பார்ப்பதற்குச் சுந்தரமாயும் அமைதி நகையுடனுகி விவாகப் புருடர்களை ஒருமையுடன் நாடும் ஸ்திரீகளைப்போல் அவர்கள் அக்கினியைப் பற்றுகிறார்கள். நெய் தாரைகள் சமித்தையடையும். இன்பமாய், ஜாதவேதசன் அவற்றைப்பெற்றுக் கொள்கிறான். கஎ. கூசுா.

கக. விவாக மஹோற்சவத்துக்கு ஆனந்தாபரணங்களுடன் தங்களை யலங்கரித்துக்கொள்ளும் கன்னிகைகளைப்போல், நான் அத்தாரைகளைக் காண்கிறேன். எங்கு யக்ஞமாகி சோமன் பாய்கின்றதோ அங்கு நெய் தாரைகள் பாய்கின்றன. கஉ. எங்கள் துதிக்கு கோச் செல்வத்தை யளிக்கவும். எங்களில் திவ்யத் திரவியங்களை யளிக்கவும். நாங்கள் அளிக்கும் யக்ஞத்தை தேவர்களுக்கு வகித்துச் செல்லவும்; நெய்தாரைகள் தேன் மிகுந்து புனிதமாய் பாய்கின்றன. கஎ. கூஎ. கூஅ.

கங. கடல்.கருத்து எல்லா வாழ்க்கையின் அகத்தி லுள்ள உன் சக்தி சிறப்பிலே பிரபஞ்சம் சாய்ந்துள்ளது. நாங்கள் இச் சபையில் சலத்தோற்றத்தில் கொண்டுவந் துள்ள தேன் நிறையும் அலையை நாங்கள் அடைய வேண்டும். கஎ. ௬௬.

---

## அநுவாகம் ௩அச.

### அனல் மகிமை

க. ஆயுசு யக்ஞத்தா லோங்கட்டும். பிராணன் யக் ஞத்தா லோங்கட்டும். கண் யக்ஞத்தா லோங்கட்டும். காது யக்ஞத்தா லோங்கட்டும். வாக்கு யக்ஞத்தா லோங் கட்டும். மனம் யக்ஞத்தா லோங்கட்டும். ஆத்மா யக் ஞத்தா லோங்கட்டும். பிரமம் யக்ஞத்தா லோங்கட்டும். சோதி யக்ஞத்தா லோங்கட்டும். சுவர்கம் யக்ஞத்தா லோங்கட்டும். அறிவு யக்ஞத்தா லோங்கட்டும். யக்ஞம் யக்ஞத்தா லோங்கட்டும். ஸ்தோமம் யஜும், ரிக்கு சாமன், பிரஹத்தும் இரதந்தரமும் யக்ஞத்தா லோங்கட்டும். தேவர்களான நாங்கள் சோதிக்கு வந்துளோம். நாங் கள் பிரஜாபதியின் பிரசையா யுளோம். நாங்கள் அமு தமா யுளோம். சுவாஹா! கஅ. உ௬.

உ. நான் சோதியுள்ள சவிதாவின் தூண்டுதலினுல் அசுவினிகளின் கைகளோடு பூஷணனின் புஜங்களால் வாக்கு சரஸ்வதியின் ஆதிக்கத்தினுல் சுவாதீனமாகி அக் கினியின் சாம்ராஜ்யத்துடன் நான் அபிஷேகஞ் செய் கிறேன். கஅ. ௩எ.

௩. தவம் சுவர்கம்போலாகும், சுவாஹா! அர்க் கம் சுவர்கம்போலாகும், சுவாஹா! சுக்கிரம் சுவர்கம்போ

---

௩அ௩. கருத்து—ரெய் இரகசியம்.

லாகும், சுவாஹா! சோதி சுவர்கம்போலாகும் சுவாஹா! சூரியன் சுவர்கம்போலாகும் சுவாஹா! கஅ. ருo.

ச. பிருகு வசுக்களால் விருப்பமளிக்கும் யக்ஞம் செய்யப்பட்டுள்ளது. எங்கள் பிரியமான அதிப்பிரேமையுடனுனவனது கிருஹத்துக்குச் செல்வம் வரவேண்டும். ரு. யக்ஞம் அவிகள் யளிக்கப்படு மக்கினி எமது விருப்பமான அவியைக் காக்கட்டும். தேவர்களுக்கு இந் நமஸ்காரம் திவ்ய துரிதமாகட்டும். கஅ ருசு. ருஎ.

சு. நான் சன்மத்தினுல் ஜாதவேதசன், என் கண் நெய்யாகும். என் வாயில் அமிருதமுண்டு. நானே முத்தாது; வானமளப்பவன். நான் அழியாத நெருப்பு, என் பெயர் எரியும் அவியாகும். எ. நான் ரிக்காகும், நான் யஜுராகும். நான் சாமனுகும். நீ ஐந்து சனங்களின் நடுவே எமது இப்புவியில் எரியும் அனல்களில் நீ பெரியவனுகும். நீ எங்களை நீண்ட ஆயுளுக்குத் துரிதமாக்கவும். அ இந்திரனே! போரில் ஜயித்து விருத்திரனைக் கொல்லுஞ் சக்திக்காக உன்னை எமது பக்கம் திருப்புகிறோம். கூ. அதிகமழைக்கப்படும் இந்திரனே! நீ தானுக்களுடன் திகழும் கைகளற்ற கிஞருவை துண்டம் துண்ட மாக்குகிருய். இந்திரனே! பாதமற்று பாதகஞ்செய்து, பலமோங்கும் விருத்திரனை உன் பலத்தால் துவம்சஞ் செய்கிருய். கஅ. சுசு—சுகூ.

கo. மலையில் திரியும் பயங்கர காட்டு மிருகம்போல நீ வெகு தூரத்தினின்று எங்களை யணுகியுளாய். இந்திரனே! உன் ஆயுதம் கூறிய வாளை கூர்மை செய்து எங்கள் சத்துருக்களைக் கொல்லவும். எங்களை வெறுப்பவர்களை துவம்சஞ் செய்யவும். கக. வைசுவாநர அக்கினி எங்களைக் காப்பதற்கு வெகு தூரத்தினின்று எங்கள் துதிகளுக்கு வரட்டும். கஉ. அவன் சோதி சகத்தில் நாடப்

படுபவன். அவனையே நாடுகிறார்கள். அக்கினி புவியில் வளரும் எல்லா ஓஷதிகளிலும் பிரவேசித்துளான். வைசுவாநராக்கினி இரவும் பகலும் நாடப்படும் அவன், பலத்தினால் எங்களைப் புன்மையினின்று காக்கவேண்டும். கங. அக்கினியே! செல்வப் பிரபுவே! இவ்விருப்பத்தை யடையவும். செல்வம் வீரர் கூட்டத்தை யடையத் துணை புரியட்டும். கஅ. எக—எச.

கச. நாங்கள் மரியாதையாய் தூக்கிய கைகளுடன் உன்னை யணுகி உன் விருப்பத்தை உனக்கு பூரணஞ்செய்துளோம். அக்கினியே! அநட்பு சூன்னிய மனமுள்ள பிராமணனைப்போல் நாடும் நினைவுடன் தேவர்களைப் போற்றுங்கள். கரு. கிரகம் வகிக்குப் அக்கினி இந்திரன் பிரமன் தேவ பிரஹஸ்பதி, எல்லா தேவர்களும் ஒருமையுடன் எங்கள் நன்மைக்காக யக்ஞத்தைக் காக்கவேண்டும். கசு. அதிஇளாஞனே! யஜமானனது மனிதர்களைக் காக்கவும். மொழிகளைக் கேட்கவும். அவனையும் அவன் பிரஜையையும் இரட்சிக்கவும். கஅ. எரு—எஎ.

---

## அநுவாகம் ௩அரு.

### சௌத்திரமணி

க. உங்கள் ஒவ்வொருவருக்கும் தேவ ஹிதமான ஸ்தானம் செய்யப்பட்டுளது. ஆதலால் பரம நிலயத்தில் எமக்கு ஸ்தானத்தை யளிக்கவும். சுரையான நீ சக்தியுள்ளவன். இங்கு இதோ சோமன். உன் மூல நிலயத்தில் நுழைந்து எனக்கு இம்சை செய்யாதே. உ. நீ ஆதரவோடு பற்றப்படுகிறாய். நீ அசுவினிகளின் தேஜசாகும், சரஸ்வதியின் வீரியமாகும், இந்திரனின் பலமாகும். இது

---

௩அச. கருத்து—எனக்கு எல்லாம் வேண்டும்.

உனது மூலஸ்தானம். நான் இன்பத்துக்காக உன்னைப் பற்றுகிறேன். ஆனந்தத்துக்காக உன்னைப் பற்றுகிறேன். நான் மேன்மைக்காக உன்னைப்பற்றுகிறேன். ந. நீ தேஜசாகும்; எனக்குத் தேஜஸையளிக்கவும். நீ வீரியமாகும். எனக்கு வீரியத்தை யளிக்கவும். நீ பலமாகும். பலத்தை எனக்களிக்கவும். நீ ஓஜசாகும்; எனக்கு ஓஜஸை யளிக்கவும், நீ கோபமாகும். எனக்குக் கோபத்தை யளிக்கவும், நீ ஜயிக்குஞ் சக்தியுள்ளவன்; எனக்கு ஜயிக்குஞ் சக்தியை யளிக்கவும். கக. எ—கூ.

ச. புலியும் ஓநாயுமான சிங்கமும் கழுகுமான இவ்விரண்டுகளைக் காக்கும் விஷூசிகன் இவனைத் துன்பத்தினின்று காக்கட்டும். ரு. அக்கினியே! நான் குதூகலமாய் ஸ்தன்யபானஞ் செய்வது எனது தாயை இம்சை செய்வது போலாகும். நான் அதனால் கடனின்று நீங்குகிறேன். எனது பெற்றோர்கள் என்னால் துன்பமாகாமலுள்ளார்கள். நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்துளீர்கள்; மங்களத்தோடு என்னை இணைக்கவும். நீங்கள் பிரிந்துளீர்கள்; என்னைத் துன்பத்தினின்று பிரியுங்கள். ககூ. க0. கக.

சூ. வைத்தியர்களான தேவாசுவினிகள் சிகிச்சை செய்யும் யக்ஞத்தை விரித்துளார்கள். இந்திரனுக்கு இந்திரியத்தை யளித்துக்கொண்டு சொல்லோடு சரஸ்வதியானவள் வைத்தியராயுளாள். ககூ. கஉ.

எ. இளம் புற்கள் தீட்சா ரூபங்களாகும். தானிய முளைகள் பிராயணீயமாகும். பொறிகள் சோமன் வாங்கும் வடிவங்களாகும்; சோம கிரணங்களும் தேனும் அப்படியே. அ. ஆதித்திய ரூபம் மாசரமாகும்; மகா வீர ரூபம் நக்னஹூவாகும். சுரையுடன் மூன்று இரவுகள் பொர்ழியும்; உபசத்துகளின் சின்னமே இது. கூ. பொங்கும் பரி

சுருதமே வாங்கிய சோமனின் ரூபமாகும்; அசுவினிகள் சரஸ்வதியால் இந்திரனுக்காக இந்திர இரசம் கறக்கப்பட்டுளது. ௮. யஜமானனின் பீடம் சிங்காசன சின்னமாகும். வேதியின் சுரை நிறையும் கலசமுள்ள நடுப்பாகம் உத்தரவேதி ரூபமாகும். வடிகட்டும் சாதனம் வைத்தியனுகும். ௯. வேதியினுல் வேதியுண்டாகும்; தருப்பையால் திடதருப்பை யுண்டாகும்; யூபத்தால் யூபம்தோன்றும்; அக்கினியால் அக்கினி முன் செலுத்தப்படுவான். ௧௯. ௧௩—௧௭.

௧௨. அசுவினிகள் அவி ஸ்தானமாகும், சரஸ்வதி அனல் ஸ்தானமாகும். இந்திரனுக்காக இந்திரஸ்தானம் தயாராயுளது. காருஹபத்தியம் பத்தினி சாலையாகும். ௧௩. கட்டளைகளால் அவன் கட்டளைகளை யடைகிறுன். அப்பிரிகளால் அவன் யக்ஞ அப்பிரிகளை யடைகிறுன். முன் அவிகளால் பின் அவிகளை யடைகிறுன். வஷட்கோஷங்களால் ஆஹுதிகளை யடைகிறுன். ௧௪. அவன் பசுக்களால் பசுக்களை யடைகிறுன். புரோடாசங்களால் யக்ஞ உணவை யடைகிறுன்; சந்தங்களால் சாமிதேனிகளை யடைகிறுன்; யாஜ்யங்களால் வஷட் சப்தங்களை யடைகிறுன். ௧௫. பொறி, பக்குவ தானியங்கள் பால் தயிர் சோமனின் ரூபங்களாகும். பால் மிசிரம் இனிய தயிர் யக்ஞ உணவு ரூபங்களாகும். ௧௯. ௧௮—௨௧.

௧௬. பக்குவான்னம் குவலரூபம், பக்குவ பாவம் கோதுமை ரூபம். பொறிபக்குவ யுண்டை கரம்ப ரூபமாகும். இந்திர யவங்கள் தயிர்மிசிர ரூபமாகும். ௧௭. யவதானியங்கள் பாலின் வடிவங்களாகும்; தயிரின் வடிவம் கர்க்கந்த பழங்களாகும். அன்னரசம் சோமனின் வடிவம். பால் இரசம் சோமனின் சத்தாகும். ௧௮. ஆசிராவயம் ஸ்தோத்திரியங்களாகும், பிரத்தியாசிர

வம் அநுரூபமாகும். யக்ஞம் தாய்வடிவம். பிரகாதங்கள் யஜாமகங்களாகும். கக. அரை ருக்குக்களால் உக்தங்களின் ரூபமாகும். அவன் பதங்களால் நிவிதங்களை யடைகிறான். பிரணவங்களால் சஸ்திர ரூபத்தையும் பாலினால் சோமனையுமடைகிறான். கக. உஉ—உரு.

உ0. அசுவினிகளால் காலை யக்ஞத்தையும், இந்திரனால் நடுப்பகல் இந்திர யக்ஞத்தையு மடைகிறான். விசுவே தேவர்களுக்குப் பிரியமான மூன்றாவது யக்ஞத்தை சரஸ்வதியால் யடைகிறான். கக. உசா.

உக. அவன் வாயுவினால் வாயு சம்பந்தமானவற்றை யடைகிறான். சத்தினால் அவன் சோமனுக்கு துரோண கலசத்தை யடைகிறான். இரு கும்பங்களால் இரு பவித்திர பாண்டங்களையும், பக்குவ பாண்டங்களால் பக்குவஞ் செய்யும் கலயங்களையு மடைகிறான். உஉ. யஜுரினால் கிரஹங்களை யடையலாம், கிரகங்களால் துதிகளும் தோத்திரங்களுமாகும். சத்தங்களால் உக்தங்களும் சஸ்திரங்களும் தோன்றும். சாமனால் அவபிருதத்தை யடையலாம். கக. உஎ—உஅ.

உந. இடைகளால் உணவுகளை யடைகிறான். சூக்த வாசங்களால் விருப்பங்களை யடைகிறான். சம்யுவினால் பத்தினீ சம்யாஜங்களையும் பூரணத்தை சமிஷ்டா யஜுரினால் யடைகிறான். உச. அவன் விரதத்தினால் தீட்சையை யடைகிறான். தீட்சையால் தட்சிணையையு மடைகிறான். தட்சிணையால் சிரத்தையை யடைகிறான். சிரத்தையால் சத்தியத்தை யடைகிறான். உரு. தேவர் பிரமத்தால் செய்யப்படும் இந்த யக்ஞ வடிவமனைத்தையும், சௌத்திரமணி யக்ஞச் செயலில் யவன் யடைகிறான். உசா. மேன்மையானவர்கள் மரியாதைகளுடன் சோம இரசம் நிறையும் தருப்பையுடனை சூவீரனுகும் யக்ஞ

தை வளர்க்கிறார்கள். இனிய கானஞ்செய்யும் யஜமானர்களான நாங்கள் சோதியில் தேவர்களின் நடுவே சோமனை ஸ்தாபித்து இந்திரனுக்கு இன்பத்தை யளிக்கவேண்டும். கக. உகூ—ருஉ.

உஎ. ஓஷதிகளில் பொழியும் சோம இரசத்தால் தரித்து திடமுடனுகு சகல சத்தினுல் யக்ஞம் அக்கினி, இந்திரன் அசுவினிகள் சரஸ்வதியை இன்பத்தோடு துரிதமாக்கவும். உஅ. இந்திரனுக்காக சரஸ்வதியால் பொழியபட்டு, நமூசி யசுரனிடமிருந்து அசுவினிகளால் கொண்டு வரப்படும் தேன்மிகுந்து திவ்யமாய் பாயும் இந்துவான சோம இராஜனை நான் இங்கு பருகி புசிக்கிறேன். உகூ. இந்திரன் சக்தியோடு புசித்து இங்கு மிகுதியாள்ள இனிய இரச பாகத்தை சிவமான மனத்தால் சோமனுன இந்து இராஜனை இங்கு புசிக்கிறேன். கக. ருரு—ருரு.

## பிதுருக்கள்

ருக. சுவதாக்களை நாடும் பிதுருக்களுக்கு சுவதாவும் நமஸ்காரமுமாகட்டும். சுவதாக்களை விரும்பும் பாட்டன்களுக்கு சுவதாவும் நமஸ்காரமு மாகட்டும். சுவதாக்களை நாடும் முப்பாட்டன்களுக்கு சுவதாவும் நமஸ்காரமுமாகட்டும். பிதுருக்கள் புசித்துளார்கள். பிதுருக்கள் இன்பமாயுளார்கள். பிதுருக்கள் இன்பமாக்கப் பட்டுள்ளார்கள். பிதுருக்களே! நீங்கள் புனிதமாகுங்கள். ருஉ. சோமனை யநுபவிக்கும் பிதுருக்களே! என்னை இன்பமாக்குங்கள், பாட்டன்களே! என்னை இன்பமாக்குங்கள். சதாயுஷு யளிக்கும் பவித்திரத்தினுல் பிரபிதாமஹர்கள் என்னைக் காக்கவேண்டும். பிதாமகர்கள் என்னைப் புனிதமாக்கவேண்டும். பிரபிதாமஹர்கள் என்னைப் புனிதமாக்கவேண்டும். நூறுவருஷங்கள் கொண்டு

வரும் பவித்திரத்தினால் நான் பூரண ஆயுளையடையவேண்டும். கக. நடு. நஎ.

நஙு. தேவசனங்களானவை என்னைச் சுத்தமாக்கவும். மனத்தோடு அறிவுகள் என்னைச் சுத்தஞ்செய்யட்டும். விசுவப்பொருள்களே எனக்கு தூய்மையாக்கவும். ஜாதவேதசனே! என்னைச் சுத்தமாக்கவும். நச. பிரகாசமுள்ள தேவனே! சுத்தமானப் பவித்திரத்தினால் என்னைச் சுத்தமாக்கவும். அப்பால் என் அறிவையும் சுத்தமாக்கவும். நரு. அக்கினியே! உன் சுத்தச்சோதியில் வியாபகமாகும் புனிதமான பிரமத்தால் என்னைச் சுத்தமாக்கவும். கக. நகூ—சக.

நகூ. எல்லா அறிவுகளையுமளிக்கும் பவமானன் இன்று, புனிதமாகும் அவன் எங்களைச் சுத்தமாக்கட்டும். நஎ. தேவனான ஸவிதாவே! யக்ஞத்தாலும் பவித்திரத்தாலும் என்னை எங்கும் சுத்தமாக்கவும். நஅ. வெகு தேகங்களையும் வெகு அறிவுகளையுமுடைய சுத்தஞ்செய்யுந் தேவியானவள் தேவர்களுக்குப் பிரியமாய் வந்துளாள். அவளால் நாங்கள் சமான ஸ்தானங்களில் இன்பமாகி செல்வத் தலைவர்களாக வேண்டும். கக. சஉ—சச.

நஅ. யம இராஜ்யத்தில் சமானர்களாயும் சமசித்தமுள்ளவர்களுமான எந்தப் பிதுருக்களுண்டோ அவர்களின் உலகம் சுவதாவாகும். நமஸ்காரம். யக்ஞம் தேவர்களுக்கு ஓங்கட்டும். நகூ. எவர்கள் இந்த சகத்திலுள்ள சீவர்களில் சமானமாயும் சகசித்தமுள்ளவர்களாயுமுள்ள எனது உயிர்களாயுளார்களோ அவர்களது இலட்சுமி என்னில் நூறுவருஷங்கள் ஓங்கட்டும். சO. நான் பிதுருக்கள் வழியெனவும் தேவமனித வழியெனவும் இரு வழிகள் யெனச்சொல்வதைக் கேட்டுளேன். இந்த இரண்டு வழிகளில் எல்லாப் பிராணிகளுஞ் செல்லுகின்

றன. ஒவ்வொன்றும் தாய் தந்தை நடுவே போகின்றன. ககூ, சரு—சஎ.

சக. இந்த யக்ஞமானது எனது நன்மைக்காக எல்லா சாதனத்துடன் பத்து வீரர்களுடனுகும் மக்களைக் கொண்டு வரட்டும். அவர்களால் ஆத்மா ஜயித்து, பிரசை பற்றி பசுவடைந்து இவ்வுலகம்பெற்று அபயமடைவோம். அக்கினி என் பிரசையை வெகு பல வாக்கட்டும். எங்களில் உணவு, பால் இரேதசை யளியுங்கள். சஉ. சோமனுக் கருகதையான பிதுருக்கள் நீசம் நடுவு உச்சியிலே றட்டும். நாங்கள் அழைக்குங்கால் பிராணங்களை நன்கு பெற்று புன்மை பிரிந்து சத்தியமறியும் பிதுருக்கள் எங்களை இரட்சிக்கட்டும். சங. அங்கிரசர்கள் நவக்வர்கள், அதர்வாணர்கள் பிதருக்கள் சோமாருகர்கள், எமது பிதுருக்களாகும். பூஜாருகர்களான அவர்கள் எங்களை நல்மனத்தோடு நோக்கட்டும். அவர்களின் மங்கள நினைவை நாங்கள் யநுபவிக்கட்டும். ககூ. சஅ—ருo.

சச. சோமாருகர்களாய் வசிஷ்டர்களான பழைய பிதுருக்கள் சோமனைப்பருக இங்கு வந்துளார்கள். இவர்ளுடன் யமன் விருப்பமோடு விருப்பமுள்ளவராகி இஷ்டம்போல் எங்கள் அவிகளை புசிக்கட்டும். சரு. சோமனே! நீ அறிவில் மிகச்சிறந்தவனுகும். நீ கோமலமான வழியில் எம்மை நடத்திச்செல்லுகிறுய். சோமனே! தீரர்களான எமது பிதுருக்கள் உன்நீதியால் தேவர்களில் எமக்காக இரத்தினத்தை பயன்செய்து கொள்ளுகிறுர்கள். சசா. பவமானனே! சோமனே! எங்கள் பூர்வமான தீரர்கள் உன்னேடு செயல்களைச் செய்துளார்கள். அபஜயமற்று சமர்செய்து தடைகளையெல்லாம் நீக்கவும், வீரம் பொருள் செழுமையால் எங்களைச்செல்வர்களாக்கவும். ககூ. ருக—ருங.

சஎ. சோமனே ! நீ பிதுருக்களோடு ஒன்று சேரவும். நீ புவி சோதியெல்லாம் வியாபகமாயுளாய். ஆதலால் இந்துவே ! நாங்கள் அவியோடு உன்னை நாடட்டும் ; நாங்கள் செல்வபதிகளாக வேண்டும். சஅ. தருப்பையிலே திகழும் பிதுருக்களான நீங்கள் வந்து எங்களை இரட்சியுங்கள். உங்களுக்காக இவ்வவிகளைச் செய்துளோம். அவற்றை யங்கீகரியுங்கள். அதிமங்கள இரட்சணையோடு எம்மிடம் வாருங்கள். துன்பமன்னியில் சுகம் சக்தியை எமக்களியுங்கள். சகூ. நல்மனமுள்ள பிதுருக்களை நான் விஷ்ணுவினிடமிருந்து மகனையும் சந்ததியையும் பெற்றுளேன். தருப்பையிலமர்ந்து அவியுடன் சோம இரசம் யநுபவிக்குமவர்கள் அடிக்கடி இங்கு வருகிறார்கள். கக. ருச—ருசு.

ரு0. சோமாருகர்களான பிதுருக்கள் தருப்பையில் வைக்கப்பட்டுள்ள பிரியமான நிதிகளுக்கு அழைக்கப் படுமவர்கள் அருகில் வந்து எங்களைச் செவியுறட்டும். அவர்கள் எமக்கு நன்மையுள்ளவர்களாகி எங்களை ஆசிர்வதிக்கட்டும். சகூ. ருஎ.

ருக. சோமார்கர்களால் சுவாலைகள் உருசித்துள்ள எமது அப்பிதுருக்கள் தேவ வழிகளான நெறிகளோடு வரவேண்டும். இந்த யக்ஞத்தில் சுவதாவினால் இன்பமாகி எங்களை இரட்சித்து எமக்கு உபதேச மளிக்கட்டும். ருஉ. அக்கினிச் சுவாலைகள் உருசி பார்க்கும் பிதுருக்களான நீங்கள் இங்கு அருகில் வாருங்கள். பிரியமான தலைவர்களே ! ஒவ்வொருவரும் உங்களுக்குரிய ஸ்தானத்திலுட்காருங்கள். தருப்பையில் அளிக்கப்படும் யக்ஞ உணவைப் புசியுங்கள். செல்வங்களையும் ஏராளமான வீர மக்கட்களையு மளியுங்கள். கக. ருஅ—ருகூ.

ருங. சுவாலையுடன் எரிந்தவர்களும் எரியாதவர்களும் சோதியின் நடுவே சுவதாவில் இன்பமாகட்டும்.

அவர்களுக்கு சுவராட்டானவன் இப்பிராணனை யளிக்கும் தேகத்தை செயலுக்கேற்றவாறு யளிக்கிறான். ருச. நாராசம்சனில் சோமபானஞ் செய்பவர்களும், ருதுக்களோடு இசைபவர்களான அனல் அறிஞர்களை அழைக்கிறோம். அனலறிஞர்களான அவர்கள் எங்கள் அழைப்புக்கு ஆயத்தமாகட்டும். நாங்கள் செல்வபதிகளாகவேண்டும். ருரு. உங்களுக்குத் தட்சிண பாகத்திலுட்கார்ந்து வணங்கிய பாதமுடன் நமஸ்கரித்துளோம். நீங்கள் யனைவரும் இந்த யக்ஞத்தை யங்கீகரியுங்கள். பிதுருக்களே! மனித முயற்சியினால் நாங்கள் செய்யும் குற்றத்துக்காக எங்களைத் துன்பஞ்செய்யாதே. கக. சுo—சுஉ.

ருசு. அருணோதய மூலத்தில் அமரும் நீங்கள் அளிக்கும் மனிதனுக்கு செல்வங்களைக் கொடுங்கள். உங்களின் செல்வபாகத்தை அவர்கள் மக்களுக்களியுங்கள். பிதுருக்களே! எமக்கு இப்பொழுது பலத்தை யளியுங்கள்; ருஎ. அக்கினி கவ்யவாகனனே! சொற்களால் செவியுறத் தகுதியான தேவர்களில் யுக்தமாக்குவதற்கான நீ அறியுஞ் செல்வத்தை எமக்களிக்கவும். ருஅ. கவ்யம் சுமக்கும் அக்கினி சத்தியம் வளர்ந்து பிதுருக்களைப் பற்றுமவன் அவிகளை தேவர்கள் பிதுருக்களுக்கு கோஷிக்கட்டும். ருகூ. அக்கினி கவ்ய வாஹனனே! நாங்கள் நாடிய பொழுது அவிகளைச் சுகந்தமாக்கி அவற்றைச் சுமந்து சென்று பிதுருக்களிக்கிறாய். சுவதாவுடன் அவர்கள் அவற்றைப் புசிப்பார்கள். நான் கொண்டுவரும் அவிகளைப் புசிக்கவும். கக. சுந—சுசு.

சுo. ஜாதவேதசனை நீ நாங்கள் அறியும் நாங்கள் அறியாத பெரியவர்களான இங்கு உள்ள இங்கு இல்லாத பிதுருக்களையெல்லாம் நீ அறிகிறாய். கக. சுஎ.

சுக. சுவதாக்களால் நன்கு செய்யப்பட்டுள்ள யக்ஞத்தை யங்கீகரியுங்கள். இனி பழைய புதிய பிதுருக்களுக்கு நாம் வணக்கத்தை யளிப்போம். புவியில் சாய்பவர்களுக்கும் பலமுள்ள சனங்களின் நடுவே வசிக்கும் பிதுருக்களுக்கும் நமஸ்காரம். சுஉ. அக்கினியே! பழைய அறிஞர்களைப்போல் பெரிய பிதுருக்கள் சத்தியத்தில் துரிதமாகிக்கொண்டு சோதியையும் அறிவையும் நாடி உயரிய மொழிகளைச் சொல்லி புவியின் இருளைப் பிளந்து அருணன்களைப் புலனாக்கியுள்ளார்கள். கசு. சுஅ. சுகூ.

சுங. நாங்கள் சந்தோஷமாய் உன்னை ஸ்தாபிக்கிறோம். சந்தோஷமாய் உன்னைப் பிரகாசமாக்குகிறோம். அவிகளில் புசிக்க யாவலுள்ளப் பிதுருக்களை இங்கு கொண்டு வரவும். எதிர்க்கும் எல்லா சத்துருக்களையும் அழுத்தி சலநுரையினால் நமூசியின் தலையை இந்திரனை நீ நீக்குகிறாய். சுச. பொழியும் அமிருதனை சோமனரசன் தன் சரள சுபாவத்தால் மிருத்யுவை நீங்கினான். ருதத்தினால் சத்தியமும் சக்தியும் சத்தின் சுத்த சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். கசு. எO—எஉ.

சுசு. அங்கிரசரின் குருவி அறிவால் சலங்களினின்று பாலைப் பருகும் ருதத்தினால் சத்தியமும் சக்தியும் சத்தின் சுத்த சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். கசு. எங.

சுஎ. சோதியிலமரும் ஹம்சமானது சலங்களினின்று சோமனை சந்தசால் பருகும். ருதத்தினால் சத்தியமும் சக்தியும் சத்தின் சுத்தமான சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். சுஅ. பிரஜாபதி

பிரமத்தினால் பக்குவ உணவினின்று பாலும் க்ஷத்திரமுமான சோம இரசத்தைப் பருகுவான். ருதத்தினால் சத்தியமும் ஏக்தியும் சத்தின் சுத்தமான சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். கக. இந்திரியம் மூலஸ்தானத்தை நுழையும். தனித் தனியாய் ரேதசையும் நீரையும் விடும். கோசமுள்ள கருப்பம் சன்மத்தினால் கவரும் சருமத்தை நீங்கும். ருதத்தினால் சத்தியமும் சக்தியும் சத்தின் சுத்தமான சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். கக. எச—எசு.

எ0. ரூபத்தைக்கண்டு பிரஜாபதி சத்திய அசத்தியத்துக்கு பல வடிவங்களை யளிப்பான். பிரசாபதி அசத்தியத்துக்கு அசிரத்தையை யளிப்பான். சத்தியத்துக்குச் சிரத்தையை யளித்துளான். ருதத்தினால் சக்தியும் சத்தியமும் சத்தின் சுத்தமான சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். எக. ருதமான வேதத்தினால் இரு வடிவங்களையும் பொழிந்ததையும் பொழியாததையும் பிரஜாபதி பருகுவான். ருதத்தினால் சக்தியும் சத்தியமும் சத்தின் சுத்தமான சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். கூக. எஎ. எஅ.

எஉ. பிரஜாபதி பொழியும் இரசத்தைக் கண்டு சோதியினால் சுத்தமான பாலாகும் சோமனைப் பருகுவான். ருதத்தினால் சக்தியும் சத்தியமும் சத்தின் சுத்தமான சிறந்த பானமும் தோன்றும். இந்திரனின் இந்திரியமான இது தேனும் பாலுமான அமிருதமாகும். கக. எக.

எங. அறிஞரான கவிகள் மனம் சுயம் கம்பள

நூலால் தந்திரத்தைச் செய்துளார்கள். சரஸ்வதி, ஸவிதா வருணன் அசுவினிகள் இந்திரனின் வடிவமான யக்ஞத்தைக் குணமாக்குவார்கள். எச. முத்தேவர்கள் பெருஞ் சக்திகளால் தரித்து நன்கு சேர்ந்துள்ள இவ் வடிவம் அமிருத மயமாகும். இளம் புல் யவதானியங்களால் அவன் ரோமத்தைச் செய்துளார்கள்; பச்சை தானியங்கள் அவனது சருமம் மாமிசத்தை யளிக்கும். கக. அO. அக.

எரு. சரஸ்வதி அகத்தின் ரூபத்தைச் செய்வாள்; வைத்தியர்களான அசுவினிகள் ருத்திர மார்கத்தைச் செய்பவர்களாகும். புவியின் மேல் வைக்குங் கால் மாசரங்கள் பவித்திரத்தினுல் அவன் எலும்பு மஜ்ஜத்தைச்செய்துளார்கள். கக. அஉ.

எசு. சரஸ்வதி மனம் சத்தியம் அசத்தியத்தால் சுந்தரச் செல்வத்தையும் இரம்மியமான தேகத்தையும் செய்கிறுள். தரியில் நெசவு நூல் நாடாவைப்போல் திரமான சத்து பொழியும் இரசமுடன் சிவந்த சாரோடு சேரும். எஎ. அவர்கள் பாலினுல், சோதியான அமுதத்தைப் புலனுக்கி யுளார்கள். அவர்கள் துன்மதி துஷ்ட அறிவைத் துரத்தி காற்று தேகத்தைத் திணறச் செய்யும் பக்குவம் சூன்னியமும், அபக்குவமுமான உணவை நீக்கி சுரையால், மூத்தி ரேந்திரியத்தினின்று ரேதசை யுண்டு பண்ணுகிறுர்கள். எஅ. நன்கு காக்கும் இந்திரன் இருதயத்தால் இருதயத்தைச் செய்துளான். ஸவிதா புரோடாசத்தால் சத்தியத்தை யுண்டுபண்ணுவாள். வருணன் இருதய இரு பாகங்களை சிகிச்சை செய்து வாயு சாதனங்களால் பித்தம் நீராசயங்களை உருவமாக்குகிறுன். கக. அங—அரு.

எகூ. தேன்பொழியும் பாண்டங்கள், குடல்களா கும். நன்கு பால் கறக்கும் பாத்திரங்கள் அடிவயிறுக ளாகும். கருடனின் சிறகு ஈரலாகும். நாபியும் உதரமும் பெருஞ் சக்திகளால் தாயைப்போல் மூலசாதனமாகும். அ0. கும்பம் சக்திகளால் புன்மை பிரி சாதனத்தைப் புலனுக்கும். குழந்தை தரிப்பதும் அதுவே. நூறு தாரை கள் பொழியும் மர்மஸ்தானம் வியக்தமாயுள்ளது. பிது ருக்கு கும்பம் சுவதாவைப் பொழியும். கக. அகூ—அஎ.

அக. முகம் கூத்தாகும்; அத்துடன் சிரம். அவன் நாக்குப் பவித்திரமாகும். சரஸ்வதி அசுவினிகள் அவன் வாயாகும். சாப்பியம் அவன் மலம் நீங்கும் சாதனம். ரோமம் வடிக்கட்டியாகும். ஜலப்பை பலமுடன் பூரண மாகும் மர்மஸ்தானமாகும். ககூ. அஅ.

அஉ. அசுவினிகள் இரு கிரகங்களால் அவன் கண்ணை யமுதமாய் செய்துளார்கள். அஜம் பக்குவ அவி யால் அவர்கள் தேஜஸை யளித்துளார்கள். கோதுமை களால் கண் ரோமங்களேயும், அவை கருத்து கனிந்த வடிவமுடனுக குவலயப் பழங்களால் கண் புருவங்களை யலங்கரிக்கிறார்கள். அங. ஆடும் மேஷமும் நாசியில் வீரியமளிப்பதற்காகும்; இரு கிரகங்களால் பிராண னின் அமுத வழிகளாகும். சரஸ்வதி, இந்திர யவம் யக்ஞ குவலயங்களால் வியானத்தையும் நாசி தாதுகளையும் செய்துளாள். அச. விருஷபன் வன்மைக்காக இந்திரவடி வத்தைச் செய்வான். இரு கிரகங்களால் அமுதமான செவி, இரு காதுகளுக்காகும். தருப்பையும் யவதானிய மும் அவன் கண் புருவங்களாகும். அவன் வாயினின்றும் கற்கந்தும் கனிந்த தேனும் தோன்றும். ககூ. அகூ—கூக.

அரு. இடை, அங்கத்திலுள்ள ரோமங்கள் ஓநாயின் கேசங்களாகும்; முக ரோமம் புலியின் ரோமங்களாகும்.

சிர்ஷரோமம் சிங்க கேசங்களாகும். சிரத்திலுள்ள அது சுந்தரம் சிரேயசுக்காகும். சிகை சக்தியும் சோபமுமுள்ளது. அசு. வைத்தியர்களான அசுவினிகள் அவன் ஆத்மா அங்கங்களைச் சேர்க்கிறாள். சரஸ்வதி உடல் உறுப்புக்களை ஒருமையாக்குகிறாள். அவர்கள் இந்திரனின் ரூபத்தையும் சந்திரனால் சதாயுசையும் சோதியான அமிருதத்தையு மளிக்கிறார்கள். அஎ. அசுவினிகளின் பத்தினியான சரஸ்வதி தன்னில் சுகிருதமான குழந்தையை தரிக்கிறாள். அரசனான வருணன் சலங்களின் செல்வ இரசத்தால் நீர்களில் சிரேயசுக்காக இந்திரனைப் புலனாக்குகிறான். கசு. சுநு—சுச.

அஅ. அமுதமான சோம இரசம் பசுக்களின் தேஜசு, பலமுள்ள அவியாகும். பொழியும் பால் இரசத்தோடு அவன்தேனும் இனிமையுமாவான். சரஸ்வதியோடு வைத்தியர்களான அசுவினிகளுடன் அவன் பாலாவான். அவன் பொழிந்தும் பொழியாதனின்றும் புலனாவான். கசு. சுரு.

---

## அநுவாகம் ௩அசு.

### இந்திராக்கினி

க. நீ க்ஷத்திரத்தின் மூலஸ்தனமாகும். நீ க்ஷத்திரத்தின் நாபியாகும், உன்னை ஒருவரும் இம்சிக்கவேண்டாம். என்னை இம்சிக்காதே. உ. மிக்க அறிஞனாய் திடவிரதனான வருணன் சனங்களில் சாம்ராஜ்யத்துக்காக ஸ்தாபனமாயுளான். மிருத்யுவினின்று என்னைக் காக்கவும். மின்னலினின்று என்னைக் காக்கவும். ௩. நான் ஒளியுள்ள சவிதாவின் பிரேரணை; பூஷணபுஜம் அசுவினிகைகளால்,

௩அடு. கருத்து—தேவர் செய்வதெவை.

அசுவினி சிகிச்சையால் தேஜசுக்காகவும் பிரமவர்சஸுக் காகவும் உன்னை அபிஷேகஞ் செய்கிறேன். நான் சரஸ்வதி யின் சிகிச்சை சக்தியால் வீரியத்துக்கும் நீ புசிக்க உண வுக்கும் உன்னை யபிஷேகஞ் செய்கிறேன். உ௦. க. உ.

ச. நீ யாராகும்? நீ எவராகும்? நான் யாருக்கும் எவருக்கும் உன்னை நாடுகிரேன். நான் சுமங்களன் சுசு லோகன். சத்திய இராஜனுக்கு உன்னை நாடுகிறேன். உ௦. ச.

ரு. என் சிரம் ஸ்ரீயாகட்டும்; முகம் மேன்மையாக வேண்டும், என்கேசங்களும் தாடிகளும் பிரகாசமுடனு கட்டும். எம்பிராணன் அரசனும் அமிருதனுமாகவேண் டும். என் கண் சம்ராட்டாகவும் என் காது விராட்டாகட் டும். சு. என் நாக்கு மங்களமாகவேண்டும். என் வாக்கு ஓங்கி மனம் கோபமாகி, கோபம் சுவராட்டாகட்டும், விரல்களும் அங்கங்கள் இன்பம் அதி இன்பங்களாக வேண்டும். என் மித்திரன் ஜயிக்குஞ் சக்தியாகட்டும். உ௦. ரு. சு.

எ. என் கைகள் பலமுடனுகவேண்டும். என் புஜங் கள் வன்மையுடனுகட்டும். என் ஆன்மா வீரச் செயலுட னுகட்டும். என் இருதயம் க்ஷத்திர மாகவேண்டும். அ. என் முதுகு வயிறு, ஸ்கந்தம் கழுத்து, இடை, தொடை, முழங் கை முழங்கால்கள் சனங்கள் சர்வாங்கங்களும் அரசாங்க மாகட்டும், கூ. என் சித்தம் என்நாபி, என் விக்ஞானம் பாயுரிந்திரியம் மூலேந்திரியம் சனனேந்திரியம் இன்பாங் கங்கள் சௌபாக்கிய முடனுகவேண்டும். கால் முழங் கால்களில் நான் தர்மமாகும். சனங்களில் அரசன் ஸ்தா பனமாயுளான். உ௦. எ—கூ.

க௦. நான் க்ஷத்திரத்தில் நிலையாகுகிறேன். இராஷ் டிரத்தில் நிலையாகிறேன். நான் குதிரை கோக்களில் சாய்ந்துளேன். நான் ஆத்மாவிலும் ஒவ்வொரு அங்கங்

களிலும் ஆசிரயத்துளேன். நான் பிராணன்கள் புஷ்டி சோதி சகம், யக்ஞத்தில் ஸ்தாபன மாயுளேன். உ௦. க௦.

கக. மூன்று ஏகாதசங்களான தேவர்கள் ஐசுவரிய வான்களான முப்பது மூவர்கள், பிரகஸ்பதியை புரோகி தராயுள்ள யவர்கள் ஒளி ஸவிதாவின் தூண்டுதலால் அந் திவ்யர்கள் நலன்களோடு என்னை இரட்சிக்கட்டும். உ௦. கக.

கஉ. முதல் இரண்டுடன், இரண்டு மூன்றோடு மூன்று சத்தியத்துடன், சத்தியம் யக்ஞத்தோடு, யக்ஞம் யஜுக்களுடன், யஜுக்கள் சாமனோடு, சாமன்கள் ருக் குக்களுடன், ருக்குக்கள் முன்பின் வாக்கியங்களோடு முன்பின் வாக்கியங்கள் யாஜ்யங்களுடன், யாஜ்யங்கள் வஷட் காரங்களோடு, வஷட்காரங்கள் அவிகளுடன், அவி கள் என் விருப்பங்களைப் பூர்த்தியாக்கட்டும். புவியே சுவாஹா! உ௦. கஉ.

கங. என் ரோமம் முயற்சியாகும், சர்மம் வணக்க மாகும். என்மாமிசம் நோக்கம். செல்வம் என் எலும்பா கும். என் மஜ்ஜை நமஸ்காரமாகும். உ௦. கங.

கச. அக்கினி தேவர் தேவ புருஷர்களுக்கு எக் குற்றஞ் செய்திருந்தபோதிலும் சரி அக்கஷ்டம் எல்லா கலக்கத்தினின்று என்னை நீக்கவேண்டும். கரு. பகலிலோ இரவிலோ நாங்கள் ஏதேனும் பாவஞ் செய்திருந்தால் வாயு அக்கஷ்டம் எல்லா கலக்கத்தினின்று என்னை நீக் கட்டும். கசு. உறக்கத்திலோ விழிப்பிலோ நாங்கள் ஏதே னும் குற்றஞ்செய்திருந்தால் அக்கஷ்டம் எல்லாக் கலக் கத்தினின்று சூரியன் என்னை நீக்கவேண்டும். கஎ. கிரா மத்திலோ காட்டிலோ கூட்டத்திலோ காயேந்திரியத்தி லோ நாங்கள் செய்யும் குற்றம் சூத்திரன் ஆரியன்,

பரஸ்பரம் கெடுதலாகச் செய்யும் குற்றத்துக்கு நீயே பரி காரன். உ௦. கசு—கஎ.

கஅ. சலங்களே ! இம்சையற்றவர்களே ! வருணன் யென யழைக்குங்கால் வருணனை நீ எங்களை விடுதலை யாக்கவும். சதா சலனமாகி சுத்தஞ்செய்யும் ஸ்னன காரணனே ! நீ உன் வழியில் சரிந்து செல்லுகிறாய். தேவர் களோடு தேவர்களுக்கு விரோதமாய் செய்த பாவத்தை யும் மனிதர்களால் மானிடர்களுக்குச் செய்த பாவத்தை யும் நான் புனிதமாக்கவேண்டும். துன்பத்தினின்று என்னைக் காத்து இரட்சிக்கவும். தேவனே ! ஓங்கி சத் திக்கும் சத்துருவினிடமிருந்தும் காக்கவும். உ௦. கஅ.

ககூ. உன் இருதயம் சமுத்திரத்திலாகும், -அது- சலத்தினுள்ளே உண்டு. சலங்களும் ஓஷதிகளும் உன்னு டன் இணையட்டும். சலங்களும் ஓஷதிகளும் உனக்கு நட்புட னாகட்டும். நாங்கள் எவனை வெறுத்து எவன் எம்மை வெறுக்கிறானோ அவனுடன் சலங்கள் நட்பில்லாமலாகட் டும். உ௦. மரத்தினின்று பழம் விழுவதுபோலும் உழைப் புக்குப் பிறகு ஸ்னனத்தால் சுத்தமாவது போலும், பவித்திரத்தால் நெய் தனிமையாவதுபோல் குற்றத்தினி ன்று என்னைச் சலங்கள் சுத்தமாக்கட்டும். உ௦. ககூ, உ௦.

உக. நாங்கள் இருளுக்கபபால் உயரிய ஜோதியைப் பார்ப்பவர்களாய், சூரியனுக்கு வந்துளோம். அவன் தேவர்களின் தேவனாகும். அவன் உயரிய சோதியாகும். உ௦. உக.

உஉ. நான் இன்று சலங்களை நாடியுளேன் ; அந்த இரசத்துக்கு நாங்கள் வந்துளோம். அக்கினி பாலுடன் இங்குவருகிறான். என்னை வர்சஸு பிரசை, பொருளுடன் சேர்க்கவும். உங. நீ வளர்பவன் ; நாங்களும் வளர விரும்புகிறோம். நீ சமித்தாகும். நீ தேஜசாகும், எனக்

குத் தேஜஸை யளிக்கவும். புவி மறுபடியும் வருகின்றது, அப்படியே உஷையும் சூரியனுமாகும். இப்பிரபஞ்சமான இச்சகம் மறுபடியும் வருகின்றது. நான் வைசுவாநரசோதியை யடையவேண்டும். என் விரியும் விருப்பங்களையெல்லாம் நான் அடையவேண்டும். புவியே, சுவாஹா! உ0. உஉ. உஙூ.

உச. விரதபதியான அக்கினியே! நான் உன்னில் சமித்தைச் சாய்க்கிறேன். நான் விரதம் சிரத்தைக்கு வந்துளேன். தீட்சிதமான நான் உன்னை எழுச்சியாக்குகிறேன். உ0. உச.

உரு. எங்கு பிரமமும் க்ஷத்திரமும் ஒன்று சேர்ந்து நன்கு செல்லுகிறார்களோ எங்கு தேவர்கள் அக்கினியுடன் நன்கு இணைந்துளார்களோ அப்புண்ணிய உலகத்தை நான் அறிய விரும்புகிறேன். உசா. எங்கு இந்திரனும் வாயுவும் நன்கு சேர்ந்து இணைந்து செல்லுகிறார்களோ எங்கு நாசம் இல்லையோ அப்புண்ணிய உலகத்தை நான் அறிய விரும்புகிறேன். உ0. உரு. உசா.

உஎ. உன் கிளையுடன் கிளை சேரட்டும், கணுவோடு கணு இணையட்டும்; உன் கந்தம் சோமனைக் காக்கட்டும். இன்பத்துக்கு அழியாத இரசமாகட்டும். உஅ. அவர்கள் அதைப் பொழிகிறார்கள், அதை எங்கும் பொழிகிறார்கள்; அதை வியாபகமாய்ப் பொழிகிறார்கள், அவர்கள் அதைப் புனிதஞ் செய்கிறார்கள், சக்தி தரிக்கும் சுரை இன்பத்தில் நீ யார்? நீ யார்? யென அவன் கேட்கிறான். உ0. உஎ. உஅ.

## இந்திரன்

உகூ. இந்திரனே! காலையில் தானியங்களுடன் பக்குவான்னமுடன் துதிகளோடு யளிக்கு முணவை யங்கீகரிக்கவும். ஙூ0. மருத்துக்களே! விருத்திரனை நன்குகொல்

லும் இந்திரனுக்கு உச்சகானத்தை கோஷிக்கவும். அக்கானத்தால் சத்தியம் வளர்பவர்கள் அழியாதசோதியை தேவருக்காகச் செய்துளார்கள். ஙக. அத்வர்யுவே! மேகங்களால் பொழியப்பட்ட சோமனை பவித்திரத்தில் பொழியவும். நீ இந்திரன் பருகுவதர்க்காக அதைப் புனிதமாக்கவும். ஙஉ. நான் பூதங்களின் அதிபதியாயும், சகங்களெல்லாம் ஆசிரயத்தும், மேன்மையிலும் மேன்மையான உன்னை அவனால் கிரகிக்கிறேன். ஙங. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். நான் உன்னை அசுவினிகளுக்குப் பற்றுகிறேன். உன்னை சரஸ்வதிக்கு உன்னை இந்திரனுக்கு மேன்மையான காப்பனுக்கு உன்னை கிரகிக்கிறேன். உ௦. ஙஉ—ஙங.

ஙச. நீ பிராணப்பான காப்பாகும்; நீ என் கண் காது காப்பன். நீ என் வாக்கின் விசுவ பேஷஜனாகும். நீ மனத்தை இசைப்பவனாகும். உ௦. ஙச.

ஙரு. அழைக்கப்படும் நான் அசுவினி, சரஸ்வதி இந்திரன் நல இரட்சகனால் செய்யப்படும் உன்னை புசிக்கிறேன். ஙசு. உஷைகளின் முன் உதயமாகி பூர்வசோதி, நெடுந் துரிதமுடன் பலம் ஒங்கும் இந்திரன் மூன்று முப்பது தேவர்களோடு வச்சிரபாஹுவான அவன் விருத்திரனைக்கொன்று துவாரங்களைத் திறந்து எரிவான். ஙஎ. மனிதர் போற்றும் பெருமை வாயும் தநூனபதன் வீரனாகி யக்ஞ நிலயங்களை யளப்பவனாகும். பசுப் புஷ்டியில் பெருகும் அவன் இனிய நெய்யினால் விளங்கி, அறிஞனாகி பொன் ஒளியால் பிரகாசமாகி யக்ஞஞ் செய்கிறான். உ௦. ஙரு—ஙஎ.

ஙஅ. தேவர்களால் போற்றப்படும் அவன் வெகுபல குதிரைகளுள்ளவன். அவிகளால் நாடப்படும், அவன் தன் பலத்தைப் புலனாக்கி உதவியளிப்பவனாகும். அவன்

கோட்டை இடிப்பவன், மேகக்கூட்டம் பிளப்பவன், வச்சிராயுதம் தரிக்குமவன் இன்பமாகி எங்கள் யக்ஞத்தை தயணுகட்டும். நகூ. குதிரைகளுள்ள இந்திரனவன் எமது அவியை யங்கீகரித்து புவியின் பூர்வதிசையில் யமரட்டும். வசு ஆதித்தியர்களால் பிரசித்தமான தருப்பை விரிந்து விசாலமாய் சுந்தரமாயுள. ச0. கோஷிக்கும் கவாடங்கள் காளையான இந்திரனுக்குச் செல்லும். அவனுக்குப் பெண்கள் தங்கள் புருஷனோடு துரிதமாகிறார்கள்! திவ்யமாய் நன்கு கைவசமாகி கவாடங்கள் நன்கு திறந்து விசாலமாகட்டும். வீரனுக்கு அவை மகிமையுடன் விசாலமாகும். உ0. நஅ—ச0.

சக. நன்கு யளித்து அதி ஒளி நிறைந்து சுந்தரத்தால் சேரச்செய்யும், பால் நிறைந்துள்ள இரவும் பகலும் விசாலமான தேவர்களைத் திவ்யமாக்கும் பெரியவனை இந்திரனை ஒன்று சேர்க்கும். விசாலமான சூரனை நாடவும். சஉ. இனிய மொழிகளுடனுகும் முதன்மையான தேவ ஹோத்துருக்கள் மனிதனுக்கு எல்லா இடங்களிலும் யக்ஞங்களை நிர்மாணஞ்செய்து யக்ஞத் தலைமையில் இந்திரனை ஸ்தாபித்து இனிய அவியால் பூர்வ சோதியைப் பெருக்குகிறான். சந. விசுவத்தில் துரிதஞ் செய்யும் இடை, பாரதி, சரஸ்வதியான மூன்று தேவிகள் அவியினுல் வளர்ந்து இந்திரனில், விவாக ஸ்திரீகளைப்போல், இன்பமாகி பாலுடன் இழையை அறுகாமல் செய்யட்டும். உ0. சக—சந.

சச. வெகு தூரத்தினின்று வரும் துரிதமான தவஷ்டா கீர்த்தியும் காளையுமான இந்திரனுக்கு புஷ்டியையும் பலத்தையு மளிக்கட்டும். சக்தியும் அதிரேதசும் நிறையும் மேகத்தை யொன்று சேர்த்து யக்ஞத்தின் உச்சியில் தேவர்களை நாடுவான். சரு. திவ்யமான வனஸ்பதி

ஆக்ஞை செய்யப்பட்ட புருஷன்போலும் தன்னில் சேர்ந்து யக்ஞம் போலும் பாசங்களால் அவிகளால் இந்திரன் வயிற்றைப் பூரணஞ் செய்து தேனுலும் நெய்யாலும் யக்ஞத்தை இனிமையுடனுக்கட்டும். சகூ. காளையான இந்திரன் அரிதஞ் ஜயிப்பவனுகும். சோம துளிகளைச் சேர விருஷபத்தைதப்போல் அவன் பாய்ந்தோடுகிறான். நெய் பிரகாசமளிக்கும் மனத்தால் இன்பமாகி அமிருதமான தேவர்கள் சுவாஹாவில் இன்பமாகட்டும். உ௦. சச—சகூ.

சஎ. எங்கள் இரட்சிப்புக்காக இந்திரன் எம்மிடம் வரவேண்டும். போற்றப்படும் சூரன் இங்கு எமது தோழனுகட்டும். பல சக்திகளுடனுகு மவன் பலம் பெருகி சோதியைப்போல் வளர்கிறான். அவன் சக்திகளின் தலைவனுகும். சஅ. பலமுள்ள இந்திரன் துணையளிப்பவன். தூரத்தினின்றோ அருகினின்றோ எங்கள் காப்புக்கு வரட்டும். அவன் மனிதர் தலைவன். வச்சிராயுதந் தரிப்பவன். அவன் வன்மைகளுடன் சமர்களில் போர்களில் சத்துருக்களைக் கொல்பவனுகும். சகூ. இந்திரன் குதிரைகளுடன் எங்களை நோக்கி எமது துணைக்கும் எமது செல்வத்துக்காகவும் வரவேண்டும். வச்சிராயுதந் தரித்து உரத்த கோஷமுடனுகும் மகவான் இந்த யக்ஞம் சமரில் எங்கள் பக்க மாகட்டும். உ௦. சஎ—சகூ.

ரு௦. காக்கும் இந்திரன் இரட்சிக்கும் இந்திரன் ஒவ்வொரு அழைப்பிலும் செவியுறும் வீரனை நான் அழைக்கிறேன். நான் பலர்களால் அழைக்கப்படும் சுக்கிரனை இந்திரனை அழைக்கிறேன். மகவானை இந்திரனே! எங்களை இரட்சித்து க்ஷேமஞ் செய்யவும். ருக. துணைபுரியும் இந்திரன் எங்கள் நற்துணையாகவேண்டும், எல்லா ஐசுவரியத் தலைவனான அவன் எமக்குச் சுகமளிக்கட்டும்.

துவேஷிகளை வேதனை செய்யவும். எம்மை அபயமுடைனுக்கவும். நாங்கள் நல்ல வீர மக்கட்களின் தலைவர்களாக வேண்டும். ருஉ. பூஜைக் கருகனான அவனது நல் மனத்தை நாங்கள் யநுபவிக்கட்டும்; அவன் மங்கள மனத்தில் நாங்கள் வசிக்கவேண்டும். இரட்சிக்கும் இந்திரன் நன்கு காக்கும் அவன் எங்களிடமிருந்து தூரத்திலேயும் எங்கள் சத்துருவை துரத்தட்டும். உO. ருO—ருஉ.

ருஙு. இந்திரனே! குதிரைகளுடன் இன்பங்களுடன் தோகை விரியும் மயில்களைப் போலான நீ இங்கே வரவும். வேடர்கள் பறவையைத் தடுப்பதுபோல் உன்னை ஒருவரும் தடுக்காமலிருக்கட்டும். பாலை வனங்களைக் கடப்பதுபோல் அவர்களை கடக்கவும். ருச. வச்சிராயுதந் தரித்து வன்மையுடனுகு மிந்திரனை வசிஷ்ட மொழிகள் துதிகளோடு இந்திரனைப் போற்றுகின்றன. போற்றப்படுமவன் எங்கள் கோச் செல்வம் மக்கட் செல்வத்தைக் காக்கவேண்டும். எங்களைச் சதாகாலம் சுவஸ்திகளோடு இரட்சிக்கவும். ருரு. அசுவினிகளே! அக்கினி எழுச்சியாக்கப்பட்டுள்ளது. தவமும் ஓங்கியுள்ளது, விராடன் பொழியப்பட்டுளான். இங்கு பசுவான சரஸ்வதியானவள் சுத்தமான இந்திரியமான சோமனைப் பொழிந்துளாள். உO. ருஙு—ருரு.

ருசு. அசுவினிகளான வைத்தியர்களும் சரஸ்வதியும் சோமன் பாயுங்கால் இனிமையான மருந்தைக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் இந்திரனுக்கு சகத்தையும் இந்திரியத்தையுஞ் சுமக்கிறார்கள். ருஎ. அசுவினிகளான வைத்தியர்கள் சோமன் பாயுங்கால் இனிமையான மருந்தைக் கொண்டு வருகிறார்கள். மனிதத் துதியுடன் சரஸ்வதியானவள் இந்திரனுக்கு நக்னஹுவான சோமனைத் தரிக்கிறார். ருஅ. போற்றப்படும் சரஸ்வதி

யானவள் வீரியம் இந்திரியங்களை இந்திரனுக் களிப்பாள். அசுவினிகள் உணவுகளால் உயரியான்னம் உறுதிச் செல்வத்தால் தரிப்பார்கள். ருக. அசுவினிகள் நமூசியினிடமிருந்து பொழிந்து பொங்கும் இரசமான பிரகாச சோமனைக் கொண்டு வந்துளார்கள். சரஸ்வதி தருப்பையுடன் அதைப் பானத்துக்காக இந்திரனுக்குக் கொண்டு வந்துளாள். உ௦. ருசு—ருக.

சா௦. சரஸ்வதியும் இந்திரனும் அசுவினிகளுடன் புவி சோதியினின்று திசை, வியாபக கவாடங்களான விருப்பங்களைக் கறந்துளார்கள். சாக. அசுவினிகளே! இரவும் பகலும் தினத்திலும் மாலையிலும் சுந்தரமாயுள்ளவர்கள் சரஸ்வதியுடன் சேர்ந்து சிறந்த சக்திகளுடன் இந்திரனை யலங்காரஞ் செய்கிறார்கள். சாஉ. சரஸ்வதியே! அசுவினிகளே! பகலிலும் இரவிலும் எங்களைக் காக்கவும். திவ்ய ஹோத்துருக்களே! வைத்தியர்களே! இரசம் பொழியுங்கால் நீங்கள் இந்திரனைக் காக்கவும். சாங. அசுவினிகளும் தனித்தனியாய் இடை பாரதி சரஸ்வதி பொங்கும் இரசமுடன் பலமிகும் சோமனை இந்திரன் பருகி இன்பமுடனுகப் பொழிகிறார்கள். உ௦. சா௦—சாங.

சாச. சோமபானம் பொழியுங்கால் அசுவினிகள், சரஸ்வதி துவஷ்டா இந்திரனுக்கு சிகிச்சை இரசத்தை யளித்துளாள். பல ரூபத்துடன் கீர்த்தியாகும் இலட்சமி தேனுகும் சத்தைச் செய்துளாள். சாரு. இந்திரனே வனஸ்பதியே! அசுவினிகளுடன் பசுவைப்போல் சரஸ்வதி, ருதுகாலங்களில் போற்றப்படும் பொங்கும் இனிய இரசத்தைப் புலனுக்குகிறாள். சாசா. அசுவினிகளே! மாசரம், பசுக்கள் சரஸ்வதி பொழியும் இரசத்துடன் இனிமையான பொழிந்த சோமனைப் பருக இந்திரனுக் களித்துளீர்கள். சுவாஹா. சாஎ. அசுவினிகள் சரஸ்

வதியோடு அசுரனான நமூசியினிடமிருந்து இந்திரனுக்காக அறிவினால் அவி, இந்திரியம் சுக்கிரச்செல்வம் அதிப் பொருளையுங் கொண்டு வந்துளார்கள். உ0. சுச—சுஎ.

சுஅ. சரஸ்வதி அசுவினி யக்ஞத்தால் இந்திரனை பலமுடனாக்குவார்கள்; அசுர ஜன்மமான நமூசியினால், செல்வஞ் ஜயிக்க வலனைப் பிளப்பார்கள். சுகூ. சரஸ்வதியும் அசுவினிகளும் பசுக்களும் உணவுகளாலும் உயரிய சக்திகளால் இந்திரனைத் தாங்கி அவன் புகழைப் போற்றுகிறார்கள். எ0. பகன் சவிதா வருணனால் பலமளிக்கப்படும் இந்திரன் யக்ஞபதியாகும். நன்கு காக்கும் யஜமானனுக்குப் பிரியனாகட்டும். உ0. சுஅ—எ0.

எக. சவிதாவும் வருணனும் யளிக்கும் யஜமானனுக்கு செல்வத்தைப் பொழியட்டும். நன்கு காக்கும் அவர், நமூசியினிடமிருந்து பலம் இந்திரியம் பொருளையடைந்துளார். எஉ வருணன் இந்திரியம் க்ஷத்திரமளித்து சவிதா மங்களத்தையும ஐசுவரியத்தையு மளிப்பாள், நன்கு காப்பவன் யசஸால் பலமளித்து யக்ஞத்தை யடைந்துளான். உ0. எக. எஉ.

எங. அசுவினிகள் பசுக்களால் பலத்தையும் குதிரைகளால் வீரியம் வன்மையையும், சரஸ்வதி உணவால் இந்திரனையும் யஜமானனையம் பலமுடனாகச் செய்வாள். எச. சுந்தர ரூபமுள்ள நாசத்தியர் பொன் நெறிகளில் செல்லும் அவ்வீரர்கள அவிமிகும் சரஸ்வதி, இந்திரனே நீ, எங்கள் செயல்களில் துணைபுரியுங்கள். எரு. நற்செயல்களுடனாகும் வைத்தியர்களான பால் மிகும் சரஸ்வதி நூறு பலங்களுள்ள விருத்திரனைக் கொல்லுபவனை இந்திரனுக்கு இந்திரியத்தை தரித்துளாள். உ0. எங—எரு.

எசு. அசுவினிகளே! சரஸ்வதியே! நமூசி யசுர ஷின் செயல்களில் இணைந்து சுராபானஞ் செய்பவர்களே! அவன் செயல்களில் இந்திரனுக்கு உதவி யளிக்கவும். உ௦. எசு.

எஎ. அசுவினிகள் பெற்றோர்கள் மகனைப் போல் தங்களது அதி அறிவு வன்மையுடன் இந்திரனே! உனக்கு உதவி புரிந்துளார்கள். மகவானே! நீ சக்தியுடன் இன்ப சாதனத்தைப் பருகியவுடன் சரஸ்வதி உன்னைச் சுகமுடனுக்குகிறாள். எஅ. எவனில் குதிரைகள், காளைகள் மாடுகள் பொதிப் பசுக்கள் ஆடுகள் நன்கு நியமனமாகி யளிக்கப்பட்டுள்ளனவோ அந்த சோம சேர்க்கையாய் சோமபானஞ் செய்பவனாய் அறிஞனுயுள்ள யக்கினிக்கு உன் இருதயத்தால் இனிமையான மனத்தைப் புலனுக்கவும். எகூ. அக்கினியே! சோமான் பாத்திரத்திலும், அகப்பையால் நெய்யைப்போலும் உன் வாயிலுள் சோமன் பொழியப்படும்; பெரிய புகழோடும் பெருமையான சமர் ஜயிக்கும் சுவீரனையும் செல்வத்தை என்னில் யளிக்கவும். உ௦. எஎ—எகூ.

அ௦. அசுவினி தேஜசால் கண்ணையும், சரஸ்வதி பிராணனுல் வீரத்தையு மளிப்பாள். இந்திரன் வாக்கு வன்மையுடன் இந்திரனுக்கு இந்திரியத்தை யளிப்பான். அக. நாசத்தியர்களே! அசுவினிகளே! ருத்திரர்களே! மனிதர் காக்கும் பார்க்கத்துக்கு பசுக்கள், குதிரைகளுடன் வாருங்கள். அஉ. ஐசுவரியமோங்கும் செல்வனே! துஷ்ட சத்துருவும் தூரத்திலும் அருகிலுமுள்ள எவரும்-புன்மை செய்யாமலிருக்க நீ காக்கவும். அரு. ஆவலாய் நாடப்படும் அசுவினிகளே! அனைத்தையு மளிக்கும் பொருள் பலரூபமான திரவியத்துக்கு எம்மை யழைத்துச் செல்லுங்கள். உ௦. அ௦—அரு.

அச. உணவு உயரிய வித்தைகளோடும் சுத்தஞ் செய்பவளாயும் செல்வமும் யறிவுள்ளவளுமான சரஸ்வதி எங்கள் யக்ஞத்தைப் பூரணமாக்கட்டும். அரு. மனிதர் மொழிகள் எழுப்புபவளாயும் நல்லறிவுகளை உதயமாக்குபவளுமான சரஸ்வதி யக்ஞத்தை தரித்துளாள். அசூ. பெரும் வெள்ளமான சரஸ்வதி தன் கிரணத்தால் சாந்தி செய்கிறுள். எல்லா அறிவுகளையும் அவள் பிரசன்ன மாக்குகிறுள். உ௦. அச—அசூ.

அஎ. இந்திரனே! அதிசய ஒளியுள்ளவனே! இப்படி பிறந்த சாதனங்களால் சுத்தமாகி இவ்வாஹுதிகள் உன்னை நாடுகின்றன. நீ வரவும். அஅ. அறியும் பிராமணரால் தூண்டப்பட்டு, கானத்தால் துரிதமாகி பொழியும் ஞானிகளின் மொழிகளுக்கு வரவும். அசூ. இந்திரனே! உயரிய குதிரைகளுள்ளவனே! துரிதமாகி யருகில் வரவும். பிரமங்களை யணுகவும்; எங்கள் யக்ஞத்தில் இன்பமாகவும். உ௦. அஎ. அஅ.

கூ௦. இரு அசுவினிகள் சரஸ்வதியுடன் சேர்ந்து மதுவைப் பருகட்டும். நல்ல இரட்சகனுய் விருத்திரனைக் கொல்லும் இந்திரன் சோமனுன மதுவை பற்றட்டும். உ௦. கூ௦.

---

## அநுவாகம் ௩அஎ.

### சௌத்திரமணி

க. வருணனே! இந்த எனது அழைப்பைச் செவிகொடுக்கவும். இன்று எமக்குச் சுகமளிக்கவும், துணை நாடி நான் உன்னை நாடுகிறேன். உ. வருணனே! வந்தனஞ்செய்பவனுய் நான் பிரமத்தால் உன்னிடம் இதைக்

---

௩அசூ. கருத்து—சோமனளி.

கேட்கிறேன். உனது யஜமானன் அவிகளால் இதை கேட்கிறான். வருணனே! நீ இங்கு தங்கவும். கோபமாகாதே. விரியும் அரசனான நீ எங்களிடமிருந்து ஆயுசைத் திருடாதே. ங. அக்கினியே! வருணனை யறியும் நீ தேவரின் கோபத்தை எம்மிடமிருந்து தூரமாக்கவும், பூஜைக் கருகனும் பிரகாசனுமுள்ள நீ சோதி வீசும் நீ எங்களைத் துவேஷிப்பவர்களை யெல்லாம் எம்மிடமிருந்து தூரமாக்கவும். உக. க—ங.

ச. அக்கினியே! எங்கள் நெருங்கிய நண்பனான நீ இப்பொழுது இக்காலை உதயமாகுங்கால் எங்கள் அருகிலிருக்கவும், வருணனை எங்களிடஞ் சாந்தமாக்கவும் நீ அளிப்பவனாகவும். உன் அன்பைப் புலனாக்கவும். எங்களைச் செவியுறத் துரிதமாகவும். உக. ச.

ரு. நாங்கள் சுவிரதங்களின் தாயாயும் ருதத்தின் மனைவியாயும் மகத்தாயுமுள்ள அதிதியான அன்னையை எமது இரட்சிப்புக்கு அழைப்போம். அவள் அதிசெல்வமுள்ளவள். விசாலமாய் விரிபவள். எப்பொழுதும் அழியாயாதவள். நல் சுகமளிப்பவள், நலமானவழி காட்டுபவள். சு. நாங்கள் க்ஷேமத்துக்காக, திவ்யமாயும் ஒழுக்கன்னியிலுமுள்ள நூறு துடுப்புக்களுடனாகும் இப்படகில் குற்றமன்னியில் ஏறுவோம். புவி நமது நற்காப்பாகும், சோதியும் இதற்கு நிகரில்லை. அதிதி திவ்யமான தலைவர் தாய்மையான துணைவராகும். எ. நான் க்ஷேமத்துக்காக ஒழுக்கும் குற்றமும் நீங்கி நூறு துடுப்புக்களால் செல்லும் நலமானக் கப்பலை ஏறவேண்டும். உக. ரு—எ.

அ. அறிவுமிகும் மித்திர வருணர்களே! நெய்யால் எமது நிலங்களை பசுமையுடனாக்கவும். தேனால் திசைகளை திவ்யமாக்கவும். க. உங்கள் கைகளை நீட்டவும். எங்கள் ஆயுசு பெருகட்டும். நெய்யால் பசுமேயுந் நிலங்களை பசு

-மையாக்கவும் அதி இளைஞனே! சனங்களில் எம்மைப் புகழுடனாக்கவும். மித்திர வருணனே! இந்த எனது அழைப்புகளைச் செவி கொடுங்கள். உக. அ—கூ.

க0. திடமுள்ளவர்களாய் சாந்தமாய் தேவசபைக்குச் செல்லும் குதிரைகள் நாங்கள் யழைக்குங் உங்களைச் சுகமுடனாக்கட்டும். துஷ்டன் சர்ப்பன் துரோகிகளைக் கொன்று எல்லா துக்கங்களையும் அவை யொழிக்கட்டும். சுவாஹா. கக. குதிரைகளே! அறிஞர்களும் அமிருதர்களும் ருதங்காண்பவர்களுமான நீங்கள் ஒவ்வொரு சமர் சண்டையில் எமக்குத் துணைபுரியவும் இதன் இரசத்தைப் பருகவும்; திருப்தியாகி இன்பமுடனாகவும். அப்பால் தேவர்கள் செல்லும் வழிகளில் செல்லுங்கள். உக. க0. கக.

கஉ. சமித்தால் அக்கினி எழுச்சியாக்கப்பட்டுளான். நன்கு உதயமாகும் அவன் வரிக்கத் தகுந்தவன். மூன்றை இரட்சிக்கும் பசுவான காயத்திரீ சந்தம் இங்கு ஆயுசையும் இந்திரியத்தையு மளிக்கும். கங. தநூனபதன், சுத்த செயலுள்ளவன் தேகங் காப்பவன் சரஸ்வதிஉஷ்ணீ சந்தம் இரண்டை இணைக்கும் பசு இங்கு ஆயுசையும் இந்திரியத்தையு மளிக்கும். கச. அக்கினி அளிப்புக்களோடு போற்றுவதற்குரியவன், சோமதேவன் மரணமில்லாதவன் பஞ்சரட்சணையடையும் பசு அநுஷ்டுபுச்சந்தம் இங்கு ஆயுசையும் இந்திரியத்தையு மளிக்கும்.உக. கஉ—கச.

கரு. விரியும் நற் தருப்பையுடன் அக்கினியுளான். தன்னருகில் பூஷணனோடு மரண மன்னியிலுளான். தேகம் இந்திரியம் மனத்துடன் பிரஹத் சந்தம் இங்கு ஆயுசு இந்திரியத்தை யளிக்கும். கசு. திவ்ய கவாடங்கள், மகத்தான திசைகள் பிரமமாகும், பிரகஸ்பதி தேவராகும். நான்கு சக்தி சேரும் பசுவும் பங்கதி சந்தமும்

இங்கு ஆயுசு பலத்தை யளிக்கும். ௧௭. சுந்தர ரூப முள்ள இளமைகளான உஷைகள்; அமுதமான விசுவே தேவர்களாகும் ஆவலுடன் சேரும் பசுவும் திரிஷ்டுபுச் சந்தமும் ஆயுசையும், இந்திரியத்தையு மளிக்கும். ௧௮. திவ்யமான ஹோதாக்ருக்கள் இருவர்களும் வைத்தியர் களாகும். அவர்கள் இந்திரனின் நெருங்கிச் சேரும் நண்பர்களாகும். பொதிபசுவும் ஜகதீச் சந்தமும் ஆயுசை யும் இந்திரியத்தையு மளிக்கும். உக. ௧௫—௧௮.

௧௯. மூவரான இடை பாரதி சரஸ்வதி மருத்துக் களான சனங்களுமுண்டு. பசுவும் பாலுடனுகும் கோ வான விராஜ சந்தம் இங்கு ஆயுசையும் இந்திரியத்தையு மளிக்கும். ௨௦. ரேதசுமிகும் அதிசயமான துவஷ்டா, புஷ்டி பெருக்கும் இந்திராக்கினியாகும். பசுவும் பல மான காளையும் துவிபாத சந்தமும் ஆயுசையும் இந்திரி யத்தையு மளிக்கும். ௨௧. சாந்த மளிக்கும் வனஸ்பதி; செல்வம் பெருக்கும் சவிதா கன்று குணமாக்கும் பசு ககுப்புச்சந்தம் ஆயுசையும் இந்திரியத்தையு மளிக்கும். ௨௨. அதி வன்மையுள்ள வருணன் சுவாஹாவோடு யக் ஞத்துக்குச் சிகிச்சை யளிக்கிறான். விருஷபமும் பசுவும் பிரஹத்தும் அதிச்சந்தமும் ஆயுசையும் இந்திரியத்தையு மளிக்கும். உக. ௧௯—௨௨.

௨௩. திருவிருதத் துதிகளோடாகும் வசுக்களான தேவர்கள் வசந்த ருதுவுடன் இரதந்தரத்துடன் இந்திர னுக்குத் தேஜஸையும் ஆயுசையும் யளிப்பார்கள். ௨௪. பஞ்ச தசத் துதிகளுடன் போற்றப்படும் தேவர்களான ருத்திரர்கள் கிரீஷ்மத்துடன் பிரஹத்தோடு புகழுடன் அவியான பலத்தையும் ஆயுசையும் இந்திரனுக்கு அளிப் பார்கள். ௨௫. சப்த தச ஸ்தோமனுடன் துதிக்கப் படும் ஆதித்தியர்கள் மழைகளோடும், சனம், வைரூபத்

துடன் இந்திரனுக்கு ஆயுசு,யக்ஞம்,இந்திரியத்தை யளிப் பார்கள். உகூ. ஏக விம்ச ஸ்தோம துதியில் துதியாகு ரிபுக்களான தேவர்கள் சரத்துடனும், வைராஜனோடு ஸ்ரீயும் இந்திரனுக்கு ஆயுசு, யக்ஞம் ஸ்ரீயை யளிப்பார் கள். உஎ. இருபத்து ஏழு ஸ்தோமங்களோடு துதி யாகும் தேவர்களான மருத்துக்கள் ஏமந்தத்துடன்,சக்தி களோடு சக்வரீக்கள் இந்திரனுக்குச் சக்தி, ஆயுசு, யக் ஞத்தை யளிப்பார்கள். உஅ. முப்பத்து மூன்று ஸ்தோ மங்களுடன் துதியாகும் அமிருதமான தேவர்கள் சைசி ரத்தோடு சத்தியத்துடன் ரேவதிகள் இந்திரனுக்கு க்ஷத் திரம் யக்ஞம் ஆயுசை யளிப்பார்கள். உக. உரு—உஅ.

உகூ. ஹோதா யக்ஞ ஸ்தானத்தில் சமித்துடன் அக்கினி அசுவினிகள் இந்திரன் சரஸ்வதியை நாடட்டும். கோதுமைகளுடன் புகைநிற ஆடும், மூளை மருந்துக் கீரை குவளயங்களோடு தேன் தேஜசு பால் இந்திரியம் சோமனுமாகும். பொழியும் இரசத்தோடு இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே ! நெய்பொருள் நாடவும், ௩0. தநூனபதனை ஹோதா சரஸ்வதியை நாடட்டும். ஆடும் மேஷமும் இனிய தேன் மார்க்கத்தில் மருந்து அசுவினிகளுக்கும் இந்திரனுக்கும் வீரமான வன் மையை வகித்துச்செல்லும். அவை குவலயம் இந்திரயவம் நெல் மூளைகளோடு பரிகார மருந்தான பாலும் சோமனு மாகும். பொழியும் சோமனோடு அவர்கள் இனிய நெய் யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருளை நாட வும். உக. உகூ. ௩0.

௩க. ஹோதா நராசம்சனையும் நக்னஹுவான பதியையும் யஜிக்கட்டும். சுரையுடன் மருந்து மேஷம் வைத்தியனான சரஸ்வதி, அசுவினிகளின் பொன்மயமான இரதம், வபை இந்திரனின் வீரியம் ; பதரி பழம் இந்திர

தானியங்களோடு மருந்தாகும்; கிரைகளோடு பாலும் சோமனுமாகும். பொழியும் சோமனோடு அவர்கள் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருளை நாடவும். ௩உ. அவிகளால் ஓங்கும் ஹோதா யசித்து சரஸ்வதியையும் இந்திரனையும் போற்றட்டும். அவர்களை பசு, பலம், விருஷபத்தால் பலமுடனாக்கட்டும். அசுவினிகளுக்கும் இந்திரனுக்கும் சத்தியும் மருந்துமான தேன், குவலய பழங்களும் மாசரங்களுடன் பொரிகளும் பாலும் சோமனுமாகும். பொழியும் சோமனோடு அவர்கள் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருளை நாடவும். ௩௩. ஹோதாவானவன் கம்பளமிருதுவான யக்ஞ தருப்பை, வைத்தியர்களான நாசத்தியர்கள், வைத்தியர்களான அசுவினிகளைப் போற்றட்டும், குட்டியுடனாகுங் குதிரை பசு வைத்தியமாகும். வைத்தியனான சரஸ்வதி இந்திரனுக்கு மருந்தான பால் சோமனை யளிக்கிறாள். அவர்கள் பொழியும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருளை நாடவும். உக. ௩க—௩௩.

௩ச. ஹோதாவானவன் அசுவினிகளுடன் கதவுகள் திசைகள் முழங்கும் வியாபகமான கவாடங்கள் வழிகளை யஜிக்கட்டும், இந்திரன் இரு பாலான உலகங்களை கறப்பான். பசுவான சரஸ்வதி அசுவினிகளுக்கும் இந்திரனுக்கும் சத்தி, சுத்த சோதி, மருந்தைத் தருகிறாள். பால் சோமனாகும். அவர்கள் பொழியும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருளை நாடவும். உக. ௩ச.

௩ரு. ஹோதா சுந்தர வடிவமான இரு உஷைகளை யஜிக்கட்டும். இரவும் பகலும் சரஸ்வதியுடன் அசுவினிகள் மருந்தைப்போலும் கருடனைப் போலும், இந்திரனில்

உக்கிரவன்மையையும் மருந்தையு மளிக்கிருள். சோதி சித்தம் ஸ்ரீயோடு மாசரத்தை யளிக்கிருள். பால் சோமனுகும். அவர்கள் பொழியும் இரசத்தோடு இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருள்களை நாடவும். ௩௬. ஹோதா இரு திவ்யஹோத்துருக்களான இந்திரன் அசுவினிகளை யஜிக்கட்டும். இரவும் பகலும் விழிப்புள்ளவளாய் சிகிச்சை செய்பவளாயுமுள்ள சரஸ்வதி மருந்து ஈயத்தோடு இந்திரியத்தைப் பூரணமாக்குகிருள். பால், சோமன் அவர்கள் பொழியும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே நெய் பொருள்களை நாடவும். உக. ௩௫. ௩௬.

௩௭. ஹோதாக்கள் மூன்று தேவிகளை யுபாசிக்கட்டும். முத் தூரிதர்கள் முத்தாதுக்களோடு மருந்தையும் பொன்நிறத்தையும் இந்திரனில் சாய்க்கிருர்கள். அசுவினிகள், இடை, பாரதி வாக்கோடு சரஸ்வதி இந்திரனுக்கு மகத்தையும் இந்திரியத்தையு மளிக்கிருள். பால் சோமனுகும். அவர்கள் பொழியும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருள்களை நாடவும். ௩௮. ஹோதாவானவன் சுரேதசனுன துவஷ்டாவையும் மனிதருக்குத் தூரிதமாகும் விருஷபனையும் இந்திரன் அசுவினி வைத்தியனை சரஸ்வதியையும் யஜிக்கட்டும். ஓஜசு இந்திரியம் உறுதி, மருந்தான கொடும் ஓநாயும் சுரையுடன் புகழும் மருந்தாகும். மாசரத்துடன் புகழாகும் பால், சோமனுகும், அவர்கள் பொழியும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருள்களை நாடவும். உக. ௩௭. ௩௮.

௩௯. ஹோதாவானவன் சாந்தமளிக்கும் வனஸ்பதியை நூறு சக்தியுள்ள பயத்துக்குச் சமானமான கோபத்தை இராஜாவான புலியை யஜிக்கட்டும். அச்வினி

வைத்தியரான சரஸ்வதி ஆயுதத்தால் கோபத்தைத் கறக்கட்டும். பால், சோமனாகும். அவர்கள் பொழி யும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருள்களை நாடவும். சo. ஹோதா அக்கினியை யஜிக்கட்டும். நெய் பொருள்களுக்கு—சுவா ஹா! சின்னஞ் சிறு கிருதப்—பொருள்களுக்கு—சுவா ஹா! தனித்தனிக்கு சுவாஹா! அசுவினிகளுக்கு ஆட்டு இராசியை சுவாஹா! சரஸ்வதிக்கு மேஷத்தை சுவாஹா! இந்திரனுக்கு விருஷபத்தை சுவாஹா! சக்தி சிங்கத் தக்கு இந்திரியத்தை சுவாஹா! மருந்தான அக்கினியை சுவாஹா! சோமேந்திரியனை சுவாஹா! நன்கு காக்கும் இந்திரியனையும், சவிதாவையும் வைத்தியர்களின் பதியான வருணனையும் சுவாஹா! பிரியமாயும் உணவு மருந்தாயு முள்ள வனஸ்பதியை சுவாஹா! தேவர்கள் நெய் பருகு பவர்கள். அக்கினி மருந்தை பற்றுகிறான். பால் சோம னாகும். அவர்கள், பொழியும் இரசத்துடன் இனிய நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! நெய் பொருள் களை நாடவும். சக. ஹோதா ஆட்டின் வபையால் முதன்மையான பொருளால் அசுவினிகளை யஜிக்கட்டும். அவர்கள் நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! அவியை யளிக்கவும். ஹோதா மேஷ வபையுடன் சரஸ் வதியை யஜிக்கட்டும். அவள் நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே அவியை யளிக்கவும். ஹோதா விருஷப வபையுடன் இந்திரனை யஜிக்கட்டும். அவன் நெய்யை யநுபவிக்கட்டும். ஹோதாவே! அவியை யளிக்கவும். உக. நள—சக.

சஉ. ஹோதாவானவன் அசுவினிகள் சரஸ்வதி நன்கு காக்கும் இந்திரனை யஜிக்கட்டும். இந்த சோமன் கள், சோம கிரகங்கள், ஆடுகள், மேஷங்களுடனும் விரு

ஷபங்கள் சிறு கீரைகளுடனும் பசுமை பொரிகளோடு மாசரங்களால் புனிதமாகும் இன்ப மளிப்பவர்களாகும். இவை சுத்தமானவை, பால் நிறைபவை, அமிருதங்கள் இங்கு மங்கும் இவை தேன் பொழிபவை, அசுவினிகள் சரஸ்வதி நன்கு காக்கும் இந்திரன் விருத்திரனை யழிப்பவன் இவற்றை யங்கீகரிக்கட்டும். அவர்கள் சோமரசத்தையும் மதுவையும் பருகட்டும். இன்பமாகி யநுபவிக்கட்டும். ஹோதாவே யஜிக்கவும். சந. ஹோதாக்கள் அசுவினிகளை யஜிக்கட்டும். அவர்கள் ஆட்டின் அவியைப் புசிக்கட்டும். அவர்கள் இன்று நடுவினின்று தோன்றும் நெய்யை மனித பரிசத்துக்கு முன் எங்களை வெறுப்பவர்கள் முன்னிலையில் புசிக்கட்டும். அவர்கள் விரிந்த யவ தானியத்துடன் பசுமையாகவும் புதுமையாயுமுள்ள நிலங்களின் நடுவே, நூறு ருத்திரர்கள் சேரும், அக்கினியால் சுவைக்கப்பட்டு தொடை முன் பாதம் முதுகு பக்கமுள்ள அங்கங்களை தங்கள கத்திலாக்கட்டும். இவர்கள் சேதமாகி சாந்தமான இவற்றின் ஒவ்வொரு அங்கத்தின் இரசத்தையும் புசிக்கிறார்கள். இப்படி அசுவினிகள் பற்றட்டும். ஹோதாவே! அவியை யளிக்கவும். உக. சஉ சந.

சச. ஹோதாவானவன் சரஸ்வதியை யஜிக்கட்டும். அவள் மேஷத்தை அவியையும் யணுகட்டும். இன்று அவள் நடுவினின்று........இனி சந-வது மந்திரக் கடைப் பாகத்தைப் போல் படிக்கவும். சரு. ஹோதா இந்திரனை யஜிக்கட்டும்........இனி சச-வது மந்திர கடைப்பாகத்தைப்போல் படிக்கவும். உக. சச—சரு.

சசு. ஹோதா வனஸ்பதியை யஜிக்கட்டும். அவன் நன்கு முறுக்கப்பட்டு திடமாயுள்ள கயிற்றால் பற்றியுளான். எங்கு அசுவினிகளின் பிரியமான நிலயங்களுண்டோ அங்கு ஆட்டின் யக்ஞமாகும். எங்கு சரஸ்வதி

யின் பிரிய நிலயங்களுண்டோ அங்கு-மேஷத்தின் யக்ஞமாகும். எங்கு இந்திரனின் பிரிய நிலயங்களுண்டோ அங்கு விருஷபத்தின் யக்ஞமாகும். அக்கினி, சோமனின் நன்கு காக்கும் இந்திரன், சவிதா, வருணன், நெய் பருகும் தேவர்கள், ஹோதாவான அக்கினியின் தனித்தனியான— பிரிய நிலயங்களில் புகழ்ந்து போற்றப்படும் யக்ஞப்-பொருள்களை நன்கு வைத்து அவற்றை பலமுடனாக்கி பூரணமாக்கட்டும், திவ்யமான வனஸ்பதி பற்றட்டும். ஹோதாவே அவியை யளிக்கவும். உக. சசு.

சஎ. ஹோதாவானவன் அக்கினி சுவிஷ்டகிருதனை நாடட்டும். அக்கினி அசுவினிகளின் பிரியமான நிலயங்களை ஆட்டின் யாகத்தை யஜிக்கட்டும். அவன் மேஷ யக்ஞம் சரஸ்வதியின் பிரிய நிலயங்களை யஜிக்கட்டும். அவன் இந்திரனின் விருஷப யக்ஞத்தை பிரிய நிலயங்களை யஜிக்கட்டும். அவன் அக்கினியின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும், சோமனின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும், நன்கு காக்கும் இந்திரனின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும். சவிதாவின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும், வருணனின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும். வனஸ்பதியின் பிரியங்களைப் போற்றட்டும். உணவுகளைப் போற்றட்டும். நெய் பருகும் தேவர்களின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும். ஹோதாக்கினியின் பிரிய நிலயங்களைப் போற்றட்டும். மகிமையான தன்னையே நாடட்டும். அவன் யக்ஞாருகமான உணவை யக்ஞத்தாலடையட்டும். ஜாதவேதசனுன அவன் யத்ஞத்தைச் செய்யட்டும். யக்ஞ உணவைப் பற்றட்டும். ஹோதாவே அவியை யளிக்கவும். உக. சஎ.

சஅ. தேவ தருப்பையானது அசுவினியான சரஸ்வதி இந்திரனுக்கு கண்ணுன கதியை யளிக்கிறுள். தருப்

யையால் அழியாத இந்திரியத்தை யளிப்பாள். அவர்கள் புவியின் ஐசுவரியத்துக்காக-பலத்தை யடையட்டும். யஜிக்கவும். சள. திவ்யத் துவாரங்களான கதவுகள் அசுவினிகள் சரஸ்வதி மூக்கில் இந்திரனுக்கு வீரியத்தையும் பிராணனையு மளிப்பாள். அவர்கள் இன்பமான செல்வத்துக்கு புவியின் பலத்தை யடையவேண்டும். ஹோதாவே யஜிக்கவும். உக. சஅ. சகூ.

ருo. தேவிகளான காலை மாலைகள், அசுவினிகளும் நன்கு காக்கும் சரஸ்வதியும் உஷைகளால் மொழியான பலத்தையும் இந்திரியத்தையும் இந்திரனுக்கு தரிக்க வேண்டும். செல்வமடைய அவர்கள் சகத்தின் செல்வத்தைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ருக. நாடுவதற் கருகதையான தேவிகளான அசுவினிகளும் சரஸ்வதியும் உஷைகளால் இந்திரனுக்கு பலத்தையும் செவியுறச் சக்தியைம் சிறப்பையும் மளித்துளார்கள், ருஉ. செல்வத்தையடைய அவர்கள் சகச் செல்வத்தைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ருஉ. உறுதியான ஆஹூதி கொண்டு வருபவர்களுமாகி பசுக்களான சரஸ்வதியும் வைத்தியர்களான அசுவினிகளும் இந்திரனின் காப்புக்களாகும். யக்ஞத்தால் அவர்கள் ஸ்தன்னியத்தினின்று அவனுக்குச் சிறந்த சோதியையும் சக்தியையு மளிப்பார்கள். அவர்கள் செல்வ மநுபவிக்க புவியின் பொருளை அடையட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ருங. தேவ ஹோத்தாக்களாய் இருதேவர்களான அசுவினி வைத்தியர்களும் ஹோதாக்கள் வஷட்காரங்களுடன் சரஸ்வதியும் பலத்தையும் பிரகாசத்தையும் இந்திரனில் அளித்து அவன் இருதயத்தில் அறிவை வைத்துளார்கள். அவர்கள் செல்வமடைய புவியின் சக்தியை நாடட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ருச. தேவிகள் மூன்று,

மூத்தேவிகளான அசுவினி, இடை, சரஸ்வதி இந்திரனின் நடு நாபியில் இந்திரியத்தைத் தரித்துளார்கள், அவர்கள் செல்வமடைய புவி-சக்தியை நாடட்டும். ஹோதாவே! யஜிக்கவும். உக. ௫௦—௫௪.

௫௫. அசுவினி சரஸ்வதியால் இரதஞ் செலுத்தப் பட்டு மும்முறை காக்கும் தேவநராசம்சனை இந்திரன் துவஷ்டா பலத்துக்கும் பிறப்புக்கும் அருகதையான இந்திரனில் அமுத வடிவமான இரேதசை வைக்கட்டும். ௫௬. தேவர்களால் தேவன், அசுவினி சரஸ்வதியால் பொன் நிறன் இலை நல்ல பழங்களுள்ளவன் இந்திரனுக்கு இனிமையைப் பக்குவமாக்குகிறான். ஓஜசுடனும் உறுதி யுடனும் கோபமுடன் விருஷபனை வனஸ்பதி இந்திரியங் களைத் தரிப்பான். அவர்கள் செல்வ மனுபவிக்க புவி யின் சக்தியை யடையட்டும். ஹோதாவே! யக்ஞத்தைப் பற்றவும். ௫௭. செடிகளின் உடையாய் யக்ஞத்தில் கம்பளத்தை மிருதுவாய் விரிக்கப்படும் தருப்பை சரஸ் வதி அசுவினிகளுடன் இந்திரனை உனக்கு சுந்தரஸ்தான மாகட்டும். அவர்கள் தருப்பையுடன் இணைந்து தலைமைப் பதவியையடைய உன்னில் அரசனை கோபத்தையும் பலத்தையு மளிக்கவேண்டும். அவர்கள் செல்வமடைய புவியின் பலத்தை யடையட்டும். ஹோதாவே யஜிக்கவும். உக. ௫௫—௫௭.

௫௮. தேவ அக்கினியான சுவிஷ்டகிருதன் எப்படி நாடவேண்டுமோ அப்படி தேவர்களை நாடட்டும். ஹோத்ருக்கள் அசுவினிகளால் இந்திரனை, வாக்கினால் வாணியையும் சரஸ்வதியையும், அக்கினி சோமனை யஜிக்கட்டும். சுவிஷ்ட கிருதன் நன்கு நாடப் பட் டுளான். நான்கு காக்கும் இந்திரன் சவிதா, வரு ணன் வைத்தியன் அடைவதற்கு அருகர்கள். தேவரான

வனஸ்பதி நெய் பருகும் சுவிஷ்டர்களாகும். அக்கினி அக்கினியால் நாடப்பட்டுளான். ஹோதாவான சுவிஷ்ட கிருதன் கீர்த்தி காயபலம் உறுதி கண்ணியம் சக்தியை யளிப்பான். அவர்கள் செல்வ மனுபவிக்க புவியின் சக்தியை யடையட்டும். ஹோதாவே யஜிக்கவும். ருகூ. இன்று யஜமானன் உணவுகளைப் பக்குவஞ்செய்து புரோடாசங்களை பசனஞ் செய்பவராய் அசுவினிகளுக்கு ஆட்டைப்பற்றி சரஸ்வதிக்கு மேஷத்தை, இந்திரனுக்கு விருஷபத்தை நாடி அசுவினிகள் சரஸ்வதி நன்கு காக்கும் இந்திரனுக்கு சோம இரசம் பொழிந்து அக்கினியை ஹோதாவாகச் செய்துளான். உக. ருஅ. ருகூ.

சுo. திவ்யமான வனஸ்பதியானவன் ஆடோடு அசுவினிகளுக்கு, மேஷத்தோடு சரஸ்வதிக்கு விருஷபத்தோடு இந்திரனுக்கு நன்கு திரமாய் செய்துளான். அவர்கள் மஜ்ஜையினின்று இவற்றைப் புசித்துளார்கள், பக்குவ உணவுகளை அவர்கள் பற்றியுளார்கள். புரோடாசங்களால் அவர்கள் பலம் பெருகியுளார்கள். அக்கினி சரஸ்வதி இந்திரன் இரசத்தையும் சோமனையும் பருகியுளார்கள். சுக. உன்னை இன்று ரிஷியே! ரிஷி மகனே! ரிஷி சந்தானமான இந்த யஜமானன் வெகு புருஷர்களில் உன்னை சுவீகரித்துச் சொல்லவேண்டுவதாவது—இவ்வனல் தேவர்களில் எனக்காக யக்ஞத்தால் திவ்ய திரவியங்களைப் பற்றுவான். தேவரே! தேவதானங்களை நீ விரும்பி நாடவும். நீ நியமனமான ஹோதாவாகும். ஆசிகளுக்கு, நன்மொழிகளுக்கும் யனுப்பப்படும் மானிட ஹோதாவே நீ. நீ நல்ல மொழிகளைச் சொல்லவும். உக. சுo. சுக.

---

௧அஎ. கருத்து—ஹோதா யார்?

## அநுவாகம் ௩அஅ.

### அசுவமேதம்

க. நான் தேவர்களுக்கும் பிரஜாபதிக்கும் உன்னைத் துரிதமாக்குகிறேன். பிரமனே! தேவர்களுக்கும் பிரஜாபதிக்கும் நான் குதிரையைக் கட்டுவேன்; அதனால் நான் செல்வ முள்ளவனாவேன். தேவர்களுக்கும் பிரஜாபதிக்கும் அவனைக் கட்டி நீ சித்தனாகவும். உஉ. ச.

உ. சவிதாவின் சேதன சொரூபமான தேவ சோதியைப்பற்றவும், மகத்தாயும் உண்மையான செல்வத்தையுமளிப்பதான நல்லறிவை நாங்கள் நன்கு நாடுகிறோம். ௩. மனமறியும் தேவனாயும் செல்வம் செழுமை செய்யும் அறிவு வளர்க்கும் சவிதாவின் நல் நினைவை நாங்கள் நாடுவோம். ச. தேவ போஜனத்துக்கு இன்பமளிப்பவனாயும் வீரர்களின் பதியான செல்வமளிக்கும் சவிதாவை நான் அழைக்கிறேன். ரு. சவிதாதேவனின் மதியையும் சகல செல்வதையு மடையவும், நாங்கள் அறிவால் விசுவ திவ்யமானப் பொருளை நாடுகிறோம். உஉ. கக—கச

சா. அக்கினியை ஸ்தோமத்தினால் எழுச்சியாக்கவும் அமுதனைச் சுடராக்கவும் அவன் தேவர்களில் அவிகளை யளிக்கட்டும். எ. அவிசுமப்பவன், அமுதன் நல்நினைவும் பிரகாசமுமான தூதனை அக்கினி அறிவுடன் எங்கள் பக்கம் வருகிறான். அ. நான் தூதனை அக்கினியை என் முன்னிலையில் வைக்கிறேன். அவி சுமப்பவனை நான் அழைக்கிறேன். இங்கு அவன் தேவர்களை யுட்காரச்செய்யட்டும், கூ. பவமானனே! நீ சூரியனை உதயமாக்கியுளாய். நீ சக்தியால் சலத்தை வியாபகஞ் செய்துளாய். பாலுடன் ஓங்கும் செழுமைகளோடு எமக்குத் துரிதமாகவும். உஉ. கஎ. கஅ.

கo. காவுக்கு சுவாஹா! யாருக்கு சுவாஹா? எதற்கு சுவாஹா! துக்கம் யநுபவித்துள்ளவனுக்கு சுவாஹா! மனமறியும் பிரஜாபதிக்கு சுவாஹா! சித்தத்தை நன்கு அறிபவனுக்கு சுவாஹா! அதிதிக்கு சுவாஹா! மங்களமளிக்கும் அதிதிக்கு சுவாஹா! சரஸ்வதிக்கு சுவாஹா! புனிதஞ்செய்யும் சரஸ்வதிக்கு சுவாஹா! பெரிய சரஸ்வதிக்கு சுவாஹா! பூஷணனுக்கு சுவாஹா! பெரும் வழிகளின் பூஷணனுக்கு சுவாஹா! மனிதர்களை நன்கு காணும் பூஷணனுக்கு சுவாஹா! துவஷ்டாவுக்கு சுவாஹா! துரித துவஷ்டாவுக்கு சுவாஹா! பலரூபங்களுள்ள துவஷ்டாவுக்கு சுவாஹா! விஷ்ணுவுக்கு சுவாஹா! விஷ்ணு நிபூயபனுக்கு சுவாஹா! விஷ்ணு ஸிபிவிஷ்டனுக்கு சுவாஹா. உஉ. உo.

கக. பிராணனுக்கு சுவாஹா! அபானனுக்கு சுவாஹா! வியானனுக்கு சுவாஹா! கண்ணுக்கு சுவாஹா! காதுக்கு சுவாஹா! கருத்துக்கு சுவாஹா! கஉ. கீழ்திசைக்கு சுவாஹா! இங்கு வரும் திசைக்கு சுவாஹா! தென் திசைக்கு சுவாஹா! இங்கு வரும் திசைக்கு சுவாஹா! மேற்திசைக்கு சுவாஹா! இங்கு வரும் திசைக்கு சுவாஹா! வட திசைக்கு சுவாஹா! உயர் திசைக்கு சுவாஹா! இங்கு வரும் திசைக்கு சுவாஹா! கீழ்திசைக்கு சுவாஹா! இங்கு வரும் திசைக்கு சுவாஹா! உஉ. உஙு. உச.

கங. காற்றுக்கு சுவாஹா! ஆவிக்கு சுவாஹா! நீராவிக்கு சுவாஹா! மேகத்துக்கு சுவாஹா! மின்னல் மேகத்துக்கு சுவாஹா! இடி முழக்க மேகத்துக்கு சுவாஹா! வெடிக்கும் மேகத்துக்கு சுவாஹா! மழை பொழிவதர்க்கு சுவாஹா! மழைக்கு சுவாஹா! கடும் மழைக்கு சுவாஹா! துரித மழைக்கு சுவாஹா! நிற்கும் மழைக்கு

சுவாஹா ! நின்றுள்ள மழைக்கு சுவாஹா ! தெளிக்கும் மழைக்கும் தூவும் மழைக்கும் சுவாஹா ! மழை துளி களுக்கு சுவாஹா ! இடி முழக்கங்களுக்கு சுவாஹா ! மூடு பனிக்கு சுவாஹா ! உஉ. உகூ.

கச. பிராணனுக்கு சுவாஹா ! வசுக்கு சுவாஹா ! விபுவுக்கு சுவாஹா ! விவசுவனுக்கு சுவாஹா ! கணஸ்ரீக்கு சுவாஹா ! கணபதிக்கு சுவாஹா ! முன்னிலையிலுள்ள வனுக்கு சுவாஹா ! அதிபதிக்கு சுவாஹா ! பலத்துக்கு சுவாஹா ! நன்கு செல்பவனுக்கு சுவாஹா ! சந்திரனுக்கு சுவாஹா ! சோதிக்கு சுவாஹா ! சோரனுக்கு சுவாஹா ! திவபதிக்கு சுவாஹா ! கடு. மதுக்கு சுவாஹா ! மாதவ னுக்கு சுவாஹா ! சுக்கிரனுக்கு சுவாஹா ! சுசிக்கு சுவா ஹா ! நபசுக்கு சுவாஹா ! நபஸியனுக்கு சுவாஹா ! இஷ னுக்கு சுவாஹா ! ஊர்ஜனுக்கு சுவாஹா ! சஹசனுக்கு சுவாஹா ! சஹஸ்யனுக்கு சுவாஹா ! தவத்துக்கு சுவா ஹா ! தவஞ் செய்வனுக்கு சுவாஹா ! அம்ஹஸ்பதிக்கு சுவாஹா. உஉ. ௩௦. ௩க.

ககூ. பலத்துக்கு சுவாஹா ! உதயத்துக்கு சுவா ஹா ! ஜேஷ்டனுக்கு சுவாஹா ! அறிவுக்கு சுவாஹா ! அதி சுகத்துக்கு சுவாஹா ! சிரத்துக்கு சுவாஹா ! விய சனுவினனுக்கு சுவாஹா ! முடிவுக்கு சுவாஹா ! அதி முடிவுக்கு சுவாஹா ! புவனபதிக்கு சுவாஹா ! அதிபதிக்கு சுவாஹா ! பிரஜாபதிக்கு சுவாஹா ! உஉ. ௩உ.

கஎ. ஆயுசு யக்ஞத்தாலோங்கட்டும். சுவாஹா! பிரா ணன் யக்ஞத்தாலோங்கட்டும். சுவாஹா ! அபானன் யக் ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! வியானன் யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! உதானன் யக்ஞத்தா லோங் கட்டும் சுவாஹா ! சமானன் யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! கண் யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா! காது

யக்ஞத்தா லோங்கட்டும் சுவாஹா ! வாக்கு யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா! மனம் யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! மனம் யக்ஞத்தா லோங்கட்டும், சுவாஹா ! ஆத்மா யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! பிரமா யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! சோதி யக்ஞத்தா லோங்கட்டும், சுவர்கம் யக்ஞத்தா லோங்கட்டும், சுவாஹா ! பிருஷ்டம் யக்ஞத்தா லோங்கட்டும். சுவாஹா ! யக்ஞும் யக்ஞத்தா லோங்கட்டும். உஉ. ௩௩.

கஅ. ஒன்றுக்கு சுவாஹா ! இரண்டுகளுக்கு சுவாஹா ! நூறுக்கு சுவாஹா ! நூற்றொன்றுக்கு சுவாஹா ! காலைக்கு சுவாஹா ! சுவர்கத்துக்கு சுவாஹா ! உஉ. ௩௪.

---

## அநுவாகம் ௩அக.

### அசுவயாகம்

க. நீ ஆதரவுடன் கிரகிக்கப்பட்டுளாய். நான் உன்னைப் பிரஜாபதிக் கநுகூலமாய் கிரகிக்கிறேன். இது உனது மூல ஸ்தானமாகும். சூரியன் உனது மகிமையாகும். பகலாலும் வருஷத்தாலும் உனக்குண்டாகும் மகிமைக்கு வாயுவினுல் வானத்தாலும் உனக்குண்டாகும் அம் மகிமைக்கு, தேவர்களுக்கு பிரஜாபதிக்கு சுவாஹா ! உ௩. உ.

உ. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். நான் பிரஜாபதிக்கு யநுகூலமாய் கிரகிக்கிறேன். இது உனது மூல ஸ்தானம் ; சந்திரன் உனது மகிமையாகும் ? இரவினுலும் வருஷத்தாலும் தோன்றும் உனது மகிமைக்கு புவியிலும் அக்கினியிலும், நட்சத்திரங்களிலும் சோதியிலும் விளை

---

௩அஅ. கருத்து—சுவாஹா.

யும் உனது அம் மகிமைக்கு தேவர்களுக்கு பிரசாபதிக்கு சுவாஹா ! உரு. ச.

ந. கிரணங்களுடன் இரதம் நன்கு சேர்க்கப்பட்டுள்ளது, குதிரை கடிவாளத்தோடு நன்கு சேர்க்கப்பட்டுள்ளது. சோமனது தலைமையை யநுசரிக்கும் சலம் தோன்றிய பிரம்மம் சலங்களிலும் சேர்ந்துள்ளது.

ச. குதிரையே ! நீ தானுகவே உன் காயத்தை ஒங்கச்செய்து கொள்கிறாய், நீ தானுகவே நாடுகிறாய். நீ தானுகவே பற்றுகிறாய். அந்நியனன்னியில் நீயே உன் மகிமையை யடைகிறாய். ரு. நீ இங்கு மரிப்பதில்லை. நீ துன்பமாவதில்லை. நீ சுந்தரமான வழிகளால் தேவர்களுக்குச் செல்லுகிறாய். தேவசவிதா நலஞ்செய்பவர்கள் சென்று வசிக்கும் நிலயத்தில் உன்னை ஸ்தாபிக்கட்டும். உரு. கச—கரு.

சா. சூரியனுக்குச் சமானமான சோதியுள்ளவன் யார் ? சமுத்திர சமான ஏரி எது ? புவியைவிட அதிக விசாலமாயுள்ளது யெது? அளக்கமுடியாதபொருள் எது? எ. பிரமனே சூரியனைப்போல் சோதியுள்ளவன். சோதியே சமுத்திர சமானமான ஏரியாகும். இந்திரன் புவியை விட விரிபவன். பசு அளவுக்கு மிகுந்ததாகும். அ. தேவ நண்பனே ! நீ மனத்தால் அறிவை யடைந்துளாயோ யென நான் விளக்கமாக உன்னை வினவுகிறேன் ! தேவர்கள் விரும்பும் மூன்று பாதங்களால் இப்பிரபஞ்சத்தை யெல்லாம் வியாபகஞ்செய்துள்ள விஷ்ணுவைப்பற்றிக் கேட்கிறேன், கூ. புவனங்களையெல்லாம் வியாபகஞ் செய்துள்ள விஷ்ணுவின் மூன்று பாதங்களில் நான் புவியையும் சோதியையும் சுற்றுகிறேன் ; ஒரே அங்கத்திறுல் சோதியின் எல்லையையும் பற்றுகிறேன். உரு. சஎ—ருO.

கம. புருஷன் பிரவேசமாயுள்ள பொருள்கள் எவை? புருஷனகத்தில் அர்ப்பணமாயுள்ள பொருள்கள் எவை? அறிஞனே! நாங்கள் உன்னிடம் இவ்வினவை வினவுகிறோம். என் கேள்விக்கு நீயேன் பதிலளிப்பதில்லை. கக. பஞ்சப் பொருள்களில் புருஷன் பிரவேசமாயுள்ளான். இவற்றை யெல்லாம் புருஷன் தன் அகத்திலேயே அர்ப்பணமாக்கியுள்ளான். பதிலுக்கு இதுதான் என் மனோவிடை, அறிவில் நீ எனக்கு அதிகமானவனில்லை. உ௩. ருக. ருஉ.

கஉ. எவள் மஞ்சள் நிறமுள்ளவள் பெண் எனக்குச் சொல்லவும்? எவள் கருமஞ்சள் நிறம்? எது குதித்துத் துரிதமாகும்? வழியில் சரிந்து செல்வது எது? க௩. அஜமென்னும் சன்மமில்லாத பொருளே மஞ்சள் நிறம்-போல்தோன்றும். முள்ளம் பன்றியே கரும்மஞ்சள் நிறம். முயல் குதித்தோடும். வழியில் சரிந்து செல்வது பாம்புதான்; உ௩. ருரு—ருசா.

கச. இதற்கு எத்தனை வடிவங்களுண்டு? எத்தனை அட்சரங்கள்? ஹோமத் திரவியங்கள், எழுச்சியாக்கும் சமித்துக்கள் எத்தனை? இங்கு நான் யக்ஞத்தின் உன்னை கேட்கிறேன்? ருதுக்காலத்தில் எத்தனை ஹோதாக்கள் நாடுகிறார்கள். கரு. அதற்கு ஆறு வடிவங்களுண்டு; அட்சரங்கள் நூறாகும்; எண்பது ஓமத் திரவியங்கள். எழுச்சிக்கு சமித்துக்கள் மூன்றாகும். நான் உனக்கு யக்ஞறிவுகளைச் சொல்லுகிறேன். ருதுக்காலத்தில் எழு ஹோத்துருக்கள் நாடுகிறார்கள். உ௩. ருஎ—ருஅ.

கசா. புவியின் நடுவை எவன் அறிகிறான்? எவன் சோதி புவி வானத்தை யறிகிறான். சூரியனின் சன்ம நிலயத்தை யறிபவன் யார்? சந்திரனின் சன்ம நிலயத்தையு மறிபவன் எவன்? கஎ. எம்மைச் சுற்றியுள்ள புவி

யின் நடுவை நானறிவேன். நான் சகம்சோதி வானத்தை யறிவேன். நான் மகத்தான சூரியனின் சன்ம நிலயத்தையு மறிவேன். சந்திரனின் சன்ம நிலயத்தையு மறிவேன். உரு. ருக. சுO.

கஅ. பலமாகவும் சுவயம்புவாகவு முள்ள முதல்வன் மகத்தான வெள்ளத்தில் பிரஜாபதி தோன்றும், கால கருப்பத்தை ஸ்தாபித்துளான். உரு. சுரு.

கக. மகிமையான சோமனின்று பிரஜாபதிக்கு ஹோதா யஜிக்கட்டும். அவன் பற்றி, சோமனைப் பருகட்டும். ஹோதாவே! யஜிக்கவும். உரு. சுச.

---

## அநுவாகம் நுகூO.

### யக்ஞப் பிராணிகள்

க. பல நிறம் இந்திராக்கினிக்கு, துவிரூபங்கள் அக்கினி சோமனுக்கு, வாமன காளைகள் அக்கினி விஷ்ணுவுக்கு, மலட்டுப் பசுக்கள் மித்திர வருணனுக்கு, பகுதியான பலநிறம் மித்திரனுக்காகும். உ. கருங் கழுத்துக்கள் அக்னியினது. மாநிறம் சோமனது. வெண்மை வாயுவினதாகும். புலனைகதது அதிதியினது, சரூபம் தாதாவதாகும்; கன்றுகள் தேவ பத்தீனிகளாகும். ந. கருமைகள் புவிக்காகும், புகை நிறங்கள் வானத்துக்காகும்; பெரியவை சோதிக்காகும்; பழுப்பு மின்னலுக்காகும், மங்கல் நிறம் நட்சத்திரங்களுக்காகும். ச. அவன் புகை நிறப் பொருள்களை-வசந்தத்துக்காகவும், வெண்மையை கிரீஷ்மத்துக்கு, கருமையை மழைகளுக்கு சரத்துக்கு அருணங்களை, ஏமந்தத்துக்கு சுந்தரத்தை சசிருதுக்கு செம்மஞ்சள் நிறங்களை யடைவான். உச. அ—கக.

ரு. முப்பலங்கள் காயத்திரிக்கு பஞ்ச பலங்கள் திருஷ்டுபுக்கு, பலவாஹுங்கள் ஜகதீக்கு, மூன்றிலயங்களுள்ளவற்றை அநுஷ்டுபுக்கு, நாலாவதுநிலயமளிப்பதை உஷ்ணீக்குமாகும். சு. பஞ்ச பலங்களை விராஜனுக்கும், பெரும் பலவிருஷபங்கள் பிரஹதீக்கும், அதிபலமுள்ளவை கருப்புக் பொதிகாளைகள் பங்தீக்கும், பசுக்கள் அதிசந்தத்துக்குமாகும். எ. கருங்கண்டங்கள் அக்கினிக்கு, பழுப்பு சோமனுக்கு, சமீபமாகுபவை சவிதாவுக்கு; சிறு கன்றுகள் சரஸ்வதிக்கு, சியாம நிறப்பொருள்கள் பூஷணனுக்கு, சுந்தரநிறப் பொருள்கள் மருத்துக்களுக்கு; வெகு ரூபமானவை விசுவே தேவர்களுக்கு மலட்டுக்கள் சோதிவானத்துக்காகும். அ. நன்கு செல்லுமென சொல்லப்படுபவை ஐந்திராக்கினிக்கு, கரும்-பொருள்கள்-வருணனுக்கு சுந்தரமானவை மருத்துக்களுக்கு நற்பொருள் பிரஜாபதிக்காகும். உச. கந.—கரு.

சு. அவன் முன்னிலையிலுள்ள அக்கினிக்கு முதன்மையானவற்றை யளிப்பான்; ஒரே நிலயத்திலுண்டாகுபவை எல்லாம் புசிக்கும் மருத்துக் களிப்பான்; கிருகமேதிகளான மருத்துக்களுக்கு வெகு காலத்துக் கப்பால் தோன்றுபவற்றை யளிப்பான்; ஒருமையுடன் தோன்றுபவற்றை கிரீடை செய்யும் மருத்துக்களுக் களிப்பான். தொடர் பொருள்களை சுவயதிடர்களான மருத்துக்களுக் களிப்பான். க0. நன்கு செல்லுமென சொல்லப்படுபவை இந்திராக்கினிக்கு; துன்பமளிப்பவை மகேந்திரனுக்கு, வெகுரூபமுள்ளவை விசுவ கருமனுக்காகும். கக. புகை நிறம் பழுப்பு நிறமானவை சோமன் பற்றியுள்ள பிதுருக்களுக்கு; மாநிறமும் புகைநிறமுள்ளவை தருப்பையிலுட்காரும் பிதுருக்களுக்கு; கருப்பும் பழுப்புமானவை அக்

கினியால் ருசிக்கப்படும் பிதுருக்களுக்கு, சுந்தரம் கருமையுமானவை திரியம்பகனுக்காகும். உச. கசு—கஅ.

கஉ. நன்கு செல்லும் என சொல்லப்படுவை சுஞூசீரிக்காகும். வெண் நிறமானவை வாயுக்காகும்; வெளுப்பு நிறமானவை சூரியனுக்காகும். கந. அவன் குருவிகளை வசந்தத்துக்கு, சிறு குருவிகளை கிரீஷ்மத்துக்கு, அவன் மழைகளுக்கு கவுதாரிகளை, சரத்துக்குக் காடைகளை, ஏமந்தத்துக்கு ககரங்களை, சசிருதுக்கு விககரங்களைப் பற்றுவான். கச. கடலுக்கு மகரங்களை, பர்சன்னியனுக்குத் தவளைகளை, சலங்களுக்கு மீன்களை, மித்திரனுக்கு குலீபயங்களை, வருணனுக்கு முதலைகளைப் பற்றுவான். கரு. அவன் சோமனுக்கு ஹம்சங்களை, வாயுக்கு நாரைகளை இந்திராக்கினிக்கு குருஞ்சங்களை, மித்திரனுக்கு நீர்முழுக்குக்களை, வருணனுக்குச் சக்கரவாகங்களைப் பற்றுவான். கசு. அக்கினிக்குக் கோழிகளை வனஸ்பதிகளுக்கு ஆந்தைகளை, அக்கினி சோமனுக்கு நீலசாஷைகளை, அசுவினிகளுக்கு மயில்களை, மித்திர வருணனுக்குப் புறுக்களைப் பற்றுவான். உச. கசு—உந.

கஎ. அவன் சோமனுக்குக் காடைகளை, துவஷ்டாவுக்கு கௌலீகங்களை தேவ பத்தினிகளுக்கு பசு பட்சிகளை, தேவசகோதரிகளுக்கு குலீகங்களை, கிரஹபதியான அக்கினிக்கு பாருஷ்ணங்களை பற்றுவான். கஅ. அவன் தினத்துக்கு புறுக்களை, இரவுக்கு வஷீசாபூக்களை, சந்திகளுக்கு வௌவால்களை, மாசங்களுக்கு கருங்காக்கைகளை வருஷத்துக்கு மகத்தான கருடனைப் பற்றுவான். உச. உச. உரு.

கசு. அவன் வசுக்களுக்குக் கரும் மான்களை, ருத்திரர்களுக்கு, மான்களை ஆதித்தியர்களுக்கு நியங்குகளை விசுவே தேவர்களுக்கு புள்ளி மான்களை, சாத்தியர்

களுக்கு குலிங்கங்களைப் பற்றுவான். உ௦. ஈசானத்துக்கு கழுதைகளை மித்திரனுக்கு கௌரங்களையும்; வருண னுக்கு மகிஷங்களை; பிரஹஸ்பதிக்கு கவயங்களை, துவஷ் டாவுக்கு ஒட்டகங்களைப் பற்றுவான். உக. அவன் பிரஜா பதிக்கு ஆண் யானைகளையும், வாக்குக்கு வெண் எறும்பு களையும், காட்சிக்கு ஈக்களையும் கேள்விக்கு கருந்தேன் ஈக்களையும் பற்றுவான். உச. உஎ—உகூ.

உஉ. சோமனுக்கு கரும் மானையும், ஆட்டையும் கீரீயையும், பசுவையும் பூஷணனுக்குப் பற்றவும், நரி வா யுக்காகும், கௌரம் இந்திரனுக்காகும்; பித்வம், மான், கோழி இவை அநுமதிக்காகும், சக்கிரவாகம் எதிரொலிக் காகும். உச. ௩உ.

---

## அநுவாகம் ௩கூக.

### விசுவாசுவம்

க. முதல் எலும்பு இந்திராக்கினிக்கு, இரண்டா வது சரஸ்வதிக்கு; மூன்றுவது மித்திரனுக்கு; நான்கா வது சலங்களுக்கு; ஐந்தாவது நிர்ருதிக்கு; ஆறுவது அக்கினி சோமனுக்கு; ஏழாவது சர்ப்பங்களுக்கு; எட் டாவது விஷ்ணுவுக்கு; ஒன்பதாவது பூஷணனுக்கு; பத் தாவது துவஷ்டாவுக்கு; பதினொன்றுவது இந்திரனுக்கு; பன்னிரண்டாவது வருணனுக்கு; பதின்மூன்றுவது யம னுக்குரியதாகும். வலது பக்கம் சோதி சகத்துக்குரிய தாகும்; இடது பக்கம் விசுவே தேவர்களுக் குரியதாகும். உரு. ரு.

உ. எவனுடைய மகிமையால் இப்பனி நிறையும் மலைகளாகும்? எவனுடைய மகிமையால் சமுத்திரமாகும்?

---

௩கூ௦. கருத்து—பொருள் சம்பந்தங்கள்.

எவன் இரசத்தோடுள்ளான்? இக்கைகள் யெல்லாம் எவனுடையது. இப்பெருந்திசைகளெல்லாம் எவனுடையது. அவியால் எத்தேவனுக்கு நாங்கள், வணக்கமளிப்போம்? ௩. எவன் ஆத்மாவை யளிப்பானோ எவன் பலத்தை யளிக்கிறானோ எவன் ஆக்ஞையை விசுவமான தேவர்கள் யெல்லாம் உபாசிக்கிறார்களோ அவன் மிருத்யுவாகும், அவன் சாயை யமிருதமாகும். எத்தேவனை நாங்கள் அவியால் நாடுவோம்? உ௫. கஉ. க௩.

ச. எமக்கு எல்லாப் பக்கங்களிலிருந்தும் இம்சையற்று இடையூறன்னியில் ஜயமளிக்கும் மங்களமான அறிவுகள் எமக்கு வரவேண்டும். அதனால் அவர்கள் அழியாச் சாக்கிரதையுடன் பிரதிதினமும் எமது இரட்சிப்புக்களாகி எமது இலாபத்துக்கு எம்முடன் எப்பொழுதுமிருப்பார்கள். ௫. தேவர்களின் மங்களமான நல்நினைவு எமதாகவேண்டும். சத்தியம் நாடும் தேவர்களின் செல்வம் எமதாகவேண்டும். நாங்கள் தேவர்களின் நட்பை உபாசித்துளோம். அதனால் தேவர்கள் நீடூழி வாழ எங்கள் வாழ்க்கையை விசாலமாக்கவேண்டும். சு நாங்கள் பழைய மொழியுடன் இங்கு பகன், நண்பனை தட்சன், மித்திரன் அதிதி அரியமான், வருணன் சோமன் அசுவினிகளை யழைக்கிறோம். சுந்தர செல்வமான சரஸ்வதி சுகத்தை யளிக்கவேண்டும். எ காற்று எமக்கு இனிமையான ஔஷதத்தை வீசட்டும்: எமது அன்னையான புவி அதை யளிக்கட்டும். எமது தந்தையான சோதி அதை யளிக்கட்டும். சோமனைப் பொழியும் இன்பமளிக்கும் சாதனங்களும் எமது மனம் நாடும் அசுவினிகளான நீங்களும் இதைச் செவியுறுங்கள். உ௫. கச—கஎ.

அ. நிற்கும் நடமாடும் அனைத்துக்கும் தலைவனையும் பெரும் ஈசனையுள்ளவனை நாங்கள் துணைக்கழைப்போம்.

அவன் அறிவை எழுச்சியாக்குபவன். அதனால் பூஷணனாகுபவன் எமது செல்வச் செழுமையை ஓங்கச் செய்வான். அவன் எமது காப்பன். அவன் எமது நன்மைக்கு அழியாத இரட்சிப்பாகும். ௧௯. கீர்த்தியில் மூப்புள்ள இந்திரன் எம்மை ஓங்கச் செய்யவேண்டும்; எல்லா செல்வங்களின் தலைவனான பூஷணன் எம்மை க்ஷேமத்துடனாக்கவேண்டும். செல்வமளிக்கும் தார்க்ஷியன் எம்மை க்ஷேமமுடனாக்கட்டும். எமக்கு க்ஷேமத்தை பிரகஸ்பதியளிக்கட்டும். ௨௦. மருத்துக்கள் பிருசினி மக்கட்கள், சுந்தர சக்திமான்கள் புகழில் சென்று, போரில் சுகங்களை யளிப்பவர்கள் அக்கினியை நாவாக யுள்ளவர்களும் சூரியனைக் கண்களாக யுள்ளவர்களும் எல்லா தேவர்களும் இங்கு எமது இரட்சிப்புக்காக வரவேண்டும். ௨௫. ௧௮—௨௦.

௨௧. தேவர்களே! நாங்கள் எங்கள் செவிகளால் நன்மைகளைக் கேட்கவேண்டும். பூஜைக் கருகர்களே! எங்கள் கண்களால் நன்மையைக் காணவேண்டும். உம்மைத் துதிசெய்யும் திடாங்கம் தேகங்களுடன் தேவர் ஹிதமான ஆயுசை நாங்கள் அடையவேண்டும். ௨௨. தேவர்களே! எதற்குள்ளே நீங்கள் எங்கள் தேகங்களை யழிக்கிறீர்களோ அந்த நூறு சரத்காலங்கள் எங்கள் முன் உண்டு. அக்காலத்துக்குட் எங்கள் மக்கட்கள் முறையே பிதுருக்களாகிறார்கள். பறக்கும் ஆயுசின் நடுவே எங்களைப் பிரிக்காதேயுங்கள். ௨௫. ௨௧ ௨௨.

௨௩. அதிதி சோதியாகும்; அதிதி அந்த ரிட்சமாகும், அதிதி தாயாகும், அதிதி பிதாவும் மகனுமாகும், அதிதி விசுவே தேவர்களாகும், அதிதி பஞ்ச சனங்களாகும். பிறந்ததும் பிறக்கப் போவதுமான அனைத்தும் அதிதியாகும். ௨௫. ௨௩.

கச. இந்திரனையும் எல்லா தேவர்களையும் எமக்குத் துணையாகக் கொண்டு இச்சமஸ்தமான உலகங்களையும் சுவாதீனமாக்குவோம். இந்திரன் ஆதித்தியர் மருத்து கணங்களுடன் எமக்கு சிகிச்சை செய்யட்டும்; இந்திரன் எமது யக்ஞம் எமது தேகங்கள் எமது பிரசைகளைச் சித்தமாக்கட்டும். உ௫. கச.

---

## அநுவாகம் ௩கூஉ.

### வேறு பல யக்ஞங்கள்

க. அக்கினியும் புவியும் யநுகூலர்களாகும். அவர்கள் எனக்கு இதை யநுகூலமாக்கட்டும். வாயுவும் வானமும் யநுகூலர்களாகும். அவர்கள் இதை எனக்கு யநுகூலமாக்கட்டும். சோதியும் ஆதித்தியனும் யநுகூலர்களாகும். அவர்கள் எனக்கு இதை யநுகூலமாக்கட்டும். வருணனும் சலங்களும் யநுகூலர்களாகும். அவர்கள் எனக்கு இதை யநுகூலமாக்கட்டும். ஏழு நிலையின் தலைவரும் பொருள்களை சாதனஞ்செய்யும் அஷ்டனும் எங்கள் வழிகளை இனிமையுடனாக்கட்டும். இவனும் நானும் இணையட்டும். உசா. க.

### அனைவர்க்கும்

உ. நான் பிராமணனுக்கும் க்ஷத்திரியனுக்கும், சூத்திரனுக்கும் ஆரியனுக்கும் அருகிலுள்ளவனுக்கும் அந்நியனுக்கும் எல்லா சனங்களுக்கும் இம்மங்களமான வேதத்தை உபதேசஞ்செய்கிறேன். தட்சிணை யளிக்கும் தேவர்களுக்கு நான் பிரியமுடனாகவேண்டும். என் விருப்பம் பூரணமாகட்டும். அது எனது சுவாதீனமாகட்டும். உசா. உ.

---

௩கூக. கருத்து—எனக்கு வேண்டுபவை.

### செல்வம்

ங. பிரஹஸ்பதியே! சத்தியத்தின் மகனே! சத்துருச் சிறப்புக்கதிகமாயும் அறிவுள்ள சனங்களின் நடுவே பிரகாசிப்பதாயும் ஒளியுடன் உறுதியாயுள்ள செல்வத்தை எமக்களிக்கவும், நீ ஆதரவோடு கிரகிக்கப்பட்டுளாய். உன்னை பிரகஸ்பதிக்கு நாடுகிறேன். இது உனது மூலஸ்தானம். உன்னை பிரகஸ்பதிக்கு நாடுகிறேன். உசு. ங.

### இந்திரனே

ச. செல்வமிகும் இந்திரனே! இங்கு வரவும். நூறு சக்திகளுள்ளவனே! சோமனைப் பருகவும். சோமன் பெருமையான சாதனங்களால் பொழிந்துள்ளது. நீ ஆதரவோடு பற்றப்பட்டுளாய், நான் செல்வமிகும் இந்திரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். இது உனது மூலஸ்தானம். கோ நிறையும் இந்திரனுக்கு உன்னைப்பற்றுகிறேன். ரு. விருத்திரனைக் கொல்லும் இந்திரனே! வரவும். நூறு சக்திகளுள்ளவனே! சோமனைப் பருகவும். செல்வம்மிகும் சாதனங்களால் சோமன் பொழியப்பட்டுள்ளது. நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். உன்னைச் செல்வமிகும் இந்திரனுக்குப் பற்றுகிறேன். இது உனது மூலஸ்தானம். செல்வ மிகும் இந்திரனுக்கு உன்னைப்பற்றுகிறேன். உசு. ச. ரு.

### வைசுவாநரன்

சு. ருதம் சோதியின் தலைவனும், சத்தியஞ் சாயும் வைசுவாநரனும் அழியாத தவனுமுள்ளவனை நாங்கள் நாடுகிறோம். நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். நான் உன்னை வைசுவாநரனுக்குப் பற்றுகிறேன். இது உனது மூலஸ்தானம்; நான் வைசுவாநரனுக்கு உன்னைப் பற்றுகிறேன். எ. நாங்கள் வைசுவாநரனின் நல்நினைவில் சாய

வேண்டும், அவனே புவனங்களின் அதிதலைவனாகும். இதனால் சீவனுக்குத் தோன்றும் இதை யெல்லாம் அவன் காண்கிறான். வைசுவாநரன் சூரியனோடு சமமாயுளான். நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். நான் உன்னை வைசுவாநரனுக்கு நாடுகிறேன். அது உன் மூலஸ்தானமாகும். நான் உன்னை வைசுவாநரனுக்கு பற்றுகிறேன். அ. வைசுவாநரனே! வெகு தூரத்தினின்று எங்களைக் காக்க நீ இங்கு வரவும். அக்கினி அவனை அருகில் வரச் செய்யும் மொழியால்—சமீபமாக்குகிறான். நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். நான் உன்னை வைசுவாநரனுக்கு பற்றுகிறேன். இது உனது மூலஸ்தானம். நான் உன்னை வைசுவாநரனுக்குப் பற்றுகிறேன். உசா. சா—அ.

## அக்கினி

௯. அக்கினி பவமானன் ரிஷியாகும். பஞ்சசனங்களின் புரோகிதன். நாங்கள் மகா ஐசுவரியமுள்ள அவனை நாடுகிறோம். நீ ஆதரவுடன் பற்றப்பட்டுளாய். உன்னை வர்சஸுக்குப் பற்றுவேன்; இது உனது மூலஸ்தானமாகும். நான் உன்னை வர்சஸுக்குப் பற்றுவேன். உசா. ௯.

## இந்திரன்

௧0. கொட்டங்களில் பசுக்கள் கன்றுகளுக்குக் கனைப்பதுபோல் எங்கள் மொழிகளால் உம்மைத் துதிசெய்கிறோம்; எதிர்ப்பைத் தடுத்து இனிமையான இரசத்தில் இன்பமாகும் இந்த இந்திரனை—நாங்கள் நாடுவோம். உசா. ௧௧.

## அக்கினி

௧௧. அதிக மளிக்கச்செய்யும் கானம் அக்கினிக்காகும். அதி சோதி யுள்ளவனே! நீ அதிகமாய் பிரகா

சிக்கவும், செல்வமும் செழுமையும் பெரிய இராணியைப் போல் உன்னிடமிருந்தே வருகின்றன. கஉ. அக்கினியே! இங்கு வரவும். நான் உனக்கு இன்னம் வேறு கானங்களைச் சொல்வேன், இவ்விந்துக்காளல் நீ ஓங்கி வளரவும், கங. ருதுக்கள் உனது யக்ஞத்தை விசாலமாக்கட்டும்; மாதங்கள் உனது அவியை இரட்சிக்கட்டும். உனக்காக எங்கள் யக்ஞத்தை வருஷம் காக்கவேண்டும். எங்கள் பிரஜைகளைக் காக்கவேண்டும். கச. மலைகளினருகிலும் நதிகளின் சங்கத்திலும் அறிவோடு அறிஞன் தோன்றியுளான். உசு. கஉ—கரு.

### சோமன்

கரு. உன் இரசத்தின் சன்மஸ்தானம் உச்சமாகும். அது சோதியில் ஸ்தாபனமான போதிலும் அது புவியில் புலனாகும். அது உயரிய சுகமளித்து ஓங்கும் சிரேயசளிக்கும். கசு. செல்வங்காணும் நீ இந்திரனுக்குப் பாயவும். யஜிப்புக்குச் சேர்ந்து பாயவும். வருணனுக்கும் மருத்துக்களுக்கும் பாயவும். கஎ. அவனுடன் அடைய முயன்று திட மனிதர்களின் எல்லா செல்வத்தையும் மனிதர் புகழை யெல்லா மடைவோம். உசு. கசு.—கஅ.

### தேவர்கள்

கஅ. நாங்கள் வீரமக்கட்கள் பசு குதிரைகளுடன் ஓங்கவேண்டும். சகல புஷ்டிகளுடன் எமது எல்லா விருப்பங்களுட னோங்கவேண்டும். எங்களைச் சுற்றியுள்ள மனிதர்களோடும், பிராணிகளுடனும் பெருகவேண்டும். தேவர்கள் எங்கள் யக்ஞத்தை ருதுவில் வழிகாட்டட்டும். உசு. கக,

### அக்கினி

கக, அக்கினியே! விருப்பமாயுள்ள தேவபத்தினிகளை இங்கு கொண்டுவரவும், சோமபானத்துக்கு துவஷ்

டாவைக் கொண்டுவரவும். ௨௦. நல்ல மொழியுள்ளவனே! நேஷ்டாவே! ருதுபானத்தோடு எங்கள் யக்ஞத்தை கிரகிக்கவும். நீ தான் செல்வத்தை யளிப்பவன். ௨௧. செல்வந் தருபவன் ருதுக்களுடன் நேஷ்டாவினிடமிருந்து பானத்தைப் பருகுவான். ஆரம்பிக்கவும், அளிக்கவும், துரிதமாக்கவும். ௨௬. ௨௦.—௨௨.

## இந்திரன்

௨௨. இது உனது சோமன். நீ அருகில் வந்து அதை யணுகவும். நீ அதைப் பருகி நல்ல மனமுள்ள நீ அமுதமான இதன் நிலையைக் காக்கவும். எங்கள் யக்ஞத் தருப்பையி லுட்காரவும். இந்திரனே! உன் உதரத்தில் இவ்விந்துவை கிரகிக்கவும். ௨௬. ௨௩.

## தேவ பத்தினிகள்

௨௩. எங்களுடன் வாருங்கள். துரிதமாய்ச் செவி கொடுங்கள். கிரகம்போல் தருப்பையிலுட்கார்ந்து நீங்கள் இன்பமாகுங்கள். துவஷ்டாவும் இரசத்தில் இன்பமாகி இனிய தேவ தேவி கூட்டத்தோடு திருப்தியாகட்டும். ௨௬. ௨௪.

## சோமன்

௨௪. சோமனே! இனிய அதி இன்பமளிக்கும் தாரையுடன் நீ பாயவும். நீ இநதிரன் பானத்துக்காகப் பொழியப்பட்டுளாய். ௨௫. நீ பகையழிப்பவன், எல்லா மனிதர் நண்பன். தங்கத்தாலான துரோணத்தில் சமான மூல நிலயத்தில் உட்காரவும். ௨௬. ௨௫. ௨௬.

---

௩௯௨. கருத்து—சத்துரு சம்ஹாரம்.

## அநுவாகம் ௩௯௩.

### யக்ஞ மந்திரங்கள்

#### வாயு

௧. அறிஞனையும் அதிசயனையும் நிச்சயஞ்செய்பவனையுமுள்ள யவன் செல்வம் மிகுந்து அதி உணவுடனுருபவனை நாடுகிறான். அவர்கள் ஒருமையுடன் வாயுவுடன் சேர்ந்துளார்கள், நரர்கள் சுந்தரமான சந்தானங்களைச் செய்துளார்கள். ௨. சோதியான திஷணை நமது திரவியத்துக்காக ஸ்தாபனஞ்செய்து, பொருள்களுக்காக இவ்விரு உலகங்களும், புலனுக்கும், முதன்மையாயும் அதிசய செல்வமும் தரிக்கும் தேவ வாயுவில் அவனது நியமனமான சாதனங்கள் நாடும். ௨௭. ௨௩. ௨௪.

#### பிரஜாபதி

௩. மகத்தான சலங்கள் அக்கினியைப் புலனுக்கி விசுவமான கருப்பம் வருங்கால் தேவர்களின் ஒரே தேவன் தோன்றுவான். எமது அவியால் எந்த தேவனை நாங்கள் உபாசிப்போம்? ௪. எவன் தனது மகிமையால் சலங்களை யெல்லாங் கண்டு பலத்தை தரித்து ஜயத்தைப் புலனுக்கி தேவர்களின் நடுவே தேவனாய் எவன் உளானோ அவனை விட வெறு எவனுமில்லை. நாங்கள் எத்தேவனை எமது அவியால் உபாசிப்போம்? ௨௭. ௨௫. ௨௬.

#### வாயு

௫. வாயுவே! யக்ஞஞ் செய்பவனுக்கு எச்சாதனங்களால் அவனை நல்வழியில் செலுத்துகிறாயோ, அதனால் பூரண இன்பத்துடன் எமக்குச் செல்வத்தையும் வீர மகனையும் குதிரை பசுப்பொருள்களையும் எமக்களிக்கவும் ௬. உனது நூறு ஆயிரமான குதிரைகளுடன் எங்கள்





15. சூரியன் (மைசூர்)

யக்ஞத்துக்கு வரவும், வாயுவே! இந்த யக்ஞத்தில் நான் உன்னை இன்பமுடனழைக்கிறேன். தேவர்களே! சதா காலம் சுவஸ்திகளுடன் எங்களைக் காக்கவும். எ. வாயுவே! குதிரைகளால் இழுக்கப்பட்டு நீ இங்கு வரவும். சுத்தமான இது உனக்கு அளிக்கப்பட்டுள்ளது. நீ பொழிபவன். நீ கிரகத்துக்குச் செல்லுகிறாய். அ. இது இனிமையில் இனியது. புனிதமான இது யக்ஞங்களில் அளிக்கப்பட்டுளது; விரும்பப்படும் தேவனே! உன் குதிரை இழுக்கும் இரதத்தில் சோமபானம் பருக நீ வரவும். கூ. யக்ஞப்பிரியனே! தலைவனே! சிவமான குதிரைகளுடன் சிவமாய் யக்ஞத்துக்கு மனத்துடன் வாயுவே வரவும், க0. வாயுவே! சோமனைப் பருக குதிரைகளால் இழுக்கப்படும் நீ உனது ஆயிரம் இரதங்களுடன் எம்மிடம் வரவும். கக. சுவயமாயுள்ளவனே! நீ ஒன்று பத்துடன் இரண்டு இருபதுடன் யக்ஞத்துக்கு வரவும். முப்பத்து மூன்று குதிரைகள் உன்னைச் சுமக்கும். வாயுவே! இங்கு உன் குதிரைகளை யவிழ்க்கவும். உஎ. உஎ. ௫௫.

கஉ. அதிசய வாயுவே! சத்தியபதியே! நீ துவஷ்டாவின் மருமகனாகும், நாங்கள் உன் துணையை நாடுகிறோம். உஎ. ௫ச.

## இந்திரன்

க௩. வீரனே! கறக்காத பசுக்களைப்போல் உன்னை நாங்கள் அறை கூவுகிறோம். உன் துதியை கானஞ் செய்கிறோம், சோதி காண்பவனே! சலன, சலனமற்ற சகபதியே! தலைவனே! இந்திரனே. கச. புவியிலும் சோதியிலும் உனக்கு நிகரன் எவனுமில்லை. உனக்குச் சமனாய் சனிப்பவன் சனிக்கப்போகுபவனில்லை. இந்திரனே! மகவானே! குதிரைகளையும் பசுக்களையும் விரும்பி சக்திகளுள்ள நாங்கள் உன்னை யழைக்கிறோம்.

கரு. நாங்கள் செல்வங்களையடைய அறிஞர்களான நாங்கள் உன்னை யழைக்கிறோம், இந்திரனே! போரில் உன்னை யழைக்கிறார்கள். வீரர் தலைவனே! துரித குதிரையின் சமரிலும் உன்னை யழைப்போம். உஎ. ௩௫—௩௭.

கசு. அதிசயனே! வச்சிராயுதந் தரிப்பவன் நீ, ஆயுதம் எரிபவனும் நீயே, பலத்தால் புகழப்படுபவன் நீ. இந்திரனே! ஜயிப்பவன் பலத்துக்காக பசு குதிரை இரதப் பொருள்களை எங்களில் வீரமாய் பொழியவும். கஎ. அதிசயன், எப்பொழுதும் ஓங்கும் நண்பனான யவன் எந்த அதி அபரிமித பலத்துடன் எத்துணையை எமக்குக் கொண்டுவருவான்? கஅ. எந்த சத்தியமான அதி மேன்மை வாய்ந்த இன்ப இரசம் உன்னைப் பிரசன்னமாக்கும்? திடமாய் காக்கப்பட்டுள்ள திரவியத்தைத் திறக்கவும். ககூ. எமக்கும் உன்னைத் துதிக்கும் எமது நண்பர்களுக்கும் எம்மைக் காக்கும் நீ நூறு துணைகளுடன் எம்மிடம் வரவும். உஎ. ௩அ.—சக.

அக்கினி

உ0. ஒவ்வொரு யக்ஞத்திலும் பலத்துக்காக ஒவ்வொரு கானத்தாலும் அக்கினிக்குக் கானஞ் செய்யவும். வாருங்கள். நன்கு பிரியமுள்ள நண்பனைப்போல் நாம் அறிஞனும் அழியாமலுள்ள தேவனை உபாசிப்போம். உக. அக்கினியே! முதல் மொழியால் எம்மைக் காக்கவும், இரண்டாவதால் எம்மைக் காக்கவும். மூன்று மொழிகளால் எம்மைக் காக்கவும், உறுதிபதியே! வசுவே! நான்கு மொழிகளால் எம்மைக்காக்கவும். உஉ. பலத்தின் மகன், நமது நண்பனும், நமது அவியை யளிக்க அவனை நாம் நாடுவோம். அவன் சமரில் நமது துணையும் திட முமளிப்பவனாகவேண்டும். அவன் எமது காய காப்

பாகட்டும். உஉ. நீ சம்வத்சரம், நீ பரிவத்சரம், நீ இதாவத்சரம், நீ இதவத்சரம், நீ வத்சரம், உனது உஷைகளை ஓங்கச் செய்யவும். உனது இரவு பகல்களை ஓங்கச் செய்யவும். உனது பட்சங்கள், மாதங்கள் ருதுக்கள் வருஷங்களை ஓங்கச் செய்யவும், அவை சென்று வர நீ ஒன்று சேர்க்கவும். அவை வரிசையுடன் முன் செல்ல செலுத்தவும். நீ சுபர்ணத்தில் குவிந்து சேர்ந்துளாய்; நீ அத்தேவதையுடன் அங்கிரசனைப் போல் திரமாயிருக்கவும். உஎ. சஉ—சரு.

---

## அநுவாகம். ருகூச.

### சௌத்திரமணி

க. ஹோதா யக்ஞஸ்தானத்தில் புவியின் நடுவில் சமித்தால் இந்திரனை யஜிக்கட்டும்; மனிதர் தலைவர்களின் மேன்மையானவன் சோதியின் உச்சியில் உதயமாகியுளான். அவன் நெய்யை நாடட்டும். ஹோதாவே! யஜிக்கவும். உ. ஹோதா அவனை நாடட்டும், ஜயிக்கமுடியாத ஜயசீலனும் இரட்சைகளோடுள்ள தநூநபாதை நாடட்டும். இனிமை வழிகளோடு நராசம்சனின் தேஜசுடன் சோதிகாணும் தேவ இந்திரனை நாடவும். அவன் நெய்யை யடையட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ௩. ஹோதா மொழிகளால் துதிக்கப்பட்டு அவிபெறும் அமுதமான இந்திரனை யஜிக்கட்டும். தேவர்களின் திவ்ய வீரனும் வச்சிர ஹஸ்தனும் கோட்டைகளை உடைக்கும் இந்திரனை நாடவும். அவன் நெய்யை யடையட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ச. ஹோதா பல செயல்கள் செய்து தருப்பையில் திகழும் விருஷபத்தை நாடட்டும்.

---

௩கூ௩. கருத்து. அக்கினி பற்று.

அவனைத் தருப்பையில் வசு ருத்திரர்கள் ஆதித்தியர்களான நண்பர்களுடன் உட்காரச் செய்யவேண்டும். அவன் நெய்யை யடையட்டும், ஹோதாவே யஜிக்கவும். ரு. ஹோதா யஜிக்கட்டும். கவாடங்கள், இந்திரன் அவன் வீரம் ஓஜசு பலத்தை வளர்த்துள்ளன. இந்த நமது யக்ஞத்தில் செல்வதர்க்குச் சுலபமாய் ருதம் ஓங்கத் திறக்கப்படட்டும், அவர்கள் சுகமளிக்கும், இந்திரனுக்கு அதைத் திறக்கட்டும். அவர்கள் நெய்யை யடையட்டும். ஹோதாவே யஜிக்கவும். சு. ஹோதா உஷைக்கு பெரிய தாய்களான இணையும் இந்திரனின் நன்கு கறக்கும் பசுக்களை அவன் யஜிக்கட்டும். தேஜசால் இந்திரனை கன்றை ஓங்கச் செய்துளான். அவர்கள் நெய்யை யடையட்டும். ஹோதாவே யஜிக்கவும். எ. ஹோதாவானவன் அவியால் இந்திரனை சிகிச்சை செய்துகொண்டு வைத்தியர்களும் நண்பர்களுமான திவ்ய ஹோத்துருக்களை நாடட்டும். அறிவில் பெருமையாகும் தேவர்களும் கவிகளும் இந்திரனில் இந்திரியத்தை யளிக்கட்டும். அவர்கள் நெய்யை யடையட்டும். ஹோதாவே யஜிக்கவும். அ. ஹோதாவானவன் சிகிச்சைக்கும் மூன்று தேவிகளுக்கும் யக்ஞஞ் செய்யட்டும், மூன்று முத் தாதுக்களான மகான்களான இடை சரஸ்வதி பாரதி அவிகள் பற்றும் இந்திர பத்தினி நெய்யைப் பற்றட்டும். ஹோதாவே யஜிக்கவும். கூ. ஹோதாவானவன், நெய் சிறப்புடன் நல்லயஜனையும் வைத்தியனையும், துவஷ்டாவாயும் திவ்யனையுமுள்ள இந்திரனை யஜிக்கட்டும். இந்திரன் சுரேதசன், அதிக செல்வமுள்ளவன். துவஷ்டா இந்திரனுக்கு இந்திரிய மளித்து நெய்யை யடையட்டும். ஹோதாவே! யஜிக்கவும். க௦. ஹோதாவானவன், இந்திரியனைய், அறிவு பிரியனைய், நூறு பலங்களின் தலைவனைய் சாந்தஞ் செய்பவனையுள்ள

வனஸ்பதியை நாடட்டும். அவன் நெய்யால் நனைத்து சுகமான வழிகளுடன் இனிய நெய்யுடன் யக்ஞத்தை இனிமை யுடனுக்கட்டும்! அவன் நெய்யை யடையட்டும். ஹோதாவே யஜிக்கவும். கக. ஹோதா இந்திரனை யடையட்டும். சுவாஹா ! கிருதத்துக்கு சுவாஹா ! தாதுவுக்கு சுவாஹா ! துளிகளுக்கு சுவாஹா ! சுவாஹா கிருதமானவர்களுக்கு சுவாஹா ! அவிய சூக்தர்களுக்கு சுவாஹா ! தேவர்களுக்கு சுவாஹா ! பிரசன்னமாகி நெய்பருகும் தேவர்களுக்கு சுவாஹா ! இந்திரன் இன்பமாகி நெய்யை யடையட்டும். ஹோதாவே ! யஜிக்கவும். உஅ க—கக.

கஉ. யக்ஞத்தில் தேவர்களால் விசாலமாக்கப் பட்டுள்ளதும் வீரமாய் சுதேவனின் தருப்பையுமான இந்திரனை வளர்த்துள்ளது. தினத்தில் சுவீகாரமாகி இரவால் போற்றப்படும் அது திரவியத்துடன் தருப்பையுள்ளவர்களையும் மேன்மையாக்கியுள்ளது. அவன் செல்வாபி விருத்திக்காக அதை நாடட்டும். யஜிக்கவும். கஙு. திடமாய் ஒன்று சேர்ந்துள்ள திடமான கதவுகள் யக்ஞத்தில் இந்திரனை வளர்த்துள. பாலன் பலிஷ்டனை குமாரனுல் பற்றப்பட்டு அவர்கள் மணல் சாரியைத் தாண்டுங் குதிரையை அவர்கள் தமது சுவாதீனத்தி லாக்கட்டும். அவர்கள் செல்வச்செழுமைக்கு நாடட்டும். யஜிக்கவும், கச. யக்ஞம் நடக்குங்கால் தேவிகளான உஷைகள் இந்திரனை யழைத்துளார்கள். இதஞ்செய்யும் திடமான உனது ஊற்று தேவசனங்களை வரச்செய்ய வேண்டும். அவர்கள் செல்வச்செழுமைக்கு அடையட்டும், யஜிக்கவும். கரு. பிரியமாய், பொருள் காணும் இரு தேவிகள் திவ்யமான இந்திரனின் பலத்தை ஓங்கச்செய்துளார்கள். ஒருவன் துவேஷத்தை அந்த காரத்தையுமழிக்கிறான். மற்றவன் யஜமானனுக்கு செல்வத்தையும்

சிறப்பையு மளிப்பான். யஜிக்கவும். கற்பனையடையு மவர்கள் செல்வச் செழுமைக்கு இந்திரனை யடையட்டும், யஜிக்கவும், கசு. உறுதியான யக்ஞத்தைக் கொண்டுவரும் தேவிகள் பாலும் நல்லசத்தும் நிறையும் பசுக்கள் இந்திரனை பாலோடு ஓங்கச்செய்துளார்கள். ஒருவன் உணவையும் உறுதியையுங் கொண்டுவரட்டும், மற்றொருவன் போஜனம் பானத்தைக்கொண்டு வரட்டும், உறுதியான அவியைக் கொண்டு வருபவர்கள் அன்னத்தையும் நியமனஞ் செய்து பழைய பலத்தை புதிய பலத்துடன் புதிய பலத்தை பழைய பலத்துடன் சேர்த்து யஜமானனுக்கு செல்வம் செழுமைகளை வளர்த்துளார்கள். கற்பனை பெறுமவர்கள் செல்வமடைய அவற்றை யடையட்டும். யஜிக்கவும். கஎ. தேவர்களான இரண்டு திவ்ய ஹோதாக்கள் திவ்யமான இந்திரனை ஓங்கச் செய்துளார்கள். தீமை புரிபவர்களைக்கொன்று யஜமானனுக்கு செல்வங்களையும் செம்மைகளையுங் கொண்டு வந்துளார்கள். கற்பனைபெறும் அவர்கள் செல்வமடைய அவற்றை யடையட்டும். யஜிக்கவும். கஅ. முத்தேவிகள் தேவிகளான மூவர்கள் இந்திரனை பதியை ஓங்கச்செய்துளார்கள். பாரதி சோதியைப் பற்றியுளாள். சரஸ்வதி ருத்திரர்களோடு யக்ஞத்தையும் செல்வம் நிறைந்து இடை வீடுகளையும் பற்றியுளாள். செல்வமடைய அவர்கள் புவியைப்பற்றட்டும், யஜிக்கவும். கக. நராசம்சனை திவ்ய இந்திரன் மூன்று இரட்சிப்புக்களுடன் முச்சாதனங்களில் வருபவன் திவ்ய இந்திரனின் பலத்தை ஓங்கச்செய்துளான். நூறு ஆயிரம் துரிதவாகனங்களில் ஸ்தாபிதமாகி அவன் செல்லுகிறான். மித்திரவருணன் அவனது ஹோதாக்களாயும், பிரகஸ்பதி தோத்திரனாகவும் அசுவினிகள் அத்வர்யுக்களாக அருகர்கள். செல்வமடைய அவர்கள் புவியைப் பற்றட்டும். உ0.

தேவர்களோடு திவ்யனை வனஸ்பதிபோல் இலைகள் இனிய கிளைகள் சுந்தரப் பழங்களுடனை அவன் திவ்ய இந்திரனின் பலத்தை ஓங்கச்செய்துளான். அவன் தன் உச்சியால் சோதியையும் வானத்தையும் பற்றி புவியை ஸ்தாபித்துளான். செல்வமடைய அவன் புவியைப்பற்றட்டும். யஜிக்கவும். உக. சிலசெடி கொடிகளின், திவ்ய தருப்பை திவ்ய இந்திரனின் பலத்தை ஓங்கச்செய்துள்ளது. இந்திரன் அமரும் சுந்தரமான இந்த ஸ்தானம் அந்திய தருப்பை யனைத்திலும் உயரமானது. செல்வமடைய அது புவியைப் பற்றட்டும், யஜிக்கவும். உஉ. தேவனுய் சுவிஷ்டகிருதமுள்ள அக்கினி திவ்யமான இந்திரனை ஓங்கச்செய்துளான். சுவிஷ்டகிருதன் இன்று சிறப்பைச்செய்து எமக்கு செம்மையானதைச் செய்யட்டும். செல்வமடைய அவன் புவியைப் பற்றட்டும். யஜிக்கவும். உங. இன்று யஜமானன் அக்கினியை ஹோதாவாக அடைந்து பக்குவான்ன புரோடாசஞ் சமைத்து இந்திரனுக்கு ஆட்டைக் கட்டியுளான். இன்று திவ்யமான வனஸ்பதி அஜத்துடன் இந்திரனை நன்கு நாடியுளான். அவன் நெய்யினின்று புசித்துளான். அவன் பக்குவான்னத்தைப் பற்றியுளான்! அவன் புரோடாசத்தால் பெருகியுளான்—மிருதிக்கு. நஅஎ-வது அநுவாகம் சுக-வது மந்திரத்தைப் பார்க்கவும். உஅ.கஉ—உங.

உச. ஹோதாவானவன் எழுச்சியாகி நன்கு உதயமாய் அதிபலமளித்து, பூஜைக் கருகதையான, அக்கினியாகும், இந்திரனை நாடட்டும், அவனுக்கு காயத்திரீச் சந்தம் இந்திரியம் பதினெண் பலங்களிடனை பசுவையும் பலத்தையு மளிப்பான். அவன் நெய்யைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக்கவும். உரு. ஹோதாவானவன் அதிதி கருப்பமான தநூனபதனை புலனுக்கி திடத்தை யளிக்கும் தூய்

மையான இந்திரனை நாடட்டும். அவன் இந்திரியத்தை யும் உஷ்ணீச் சந்தத்தையும், திடஞ் சுமக்கும் பசுவை யும் யளிக்கட்டும், அவன் நெய்யைப் பற்றட்டும், ஹோதாவே! யஜிக்கவும். உசு. ஹோதாவானவன், பலிஷ்டனை நாடுவதற் கருகதையாய் சிறந்த பொருள் களால் நாடப்படும் விருத்திர சம்ஹாரனும் வன்மை யளித்து வலிமையுடனுள்ள சோம இந்திரனை நாடட்டும். அவனுக்கு இந்திரியம் அநுஷ்டுபுச்சந்தம் பஞ்சப் பிராணன் காக்கும், பசு, பலத்தைக் கொண்டு வரட்டும். அவன் நெய்யைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக் கவும்.

உஎ. ஹோதாவானவன் பிரியனும் அமுதனும் அழியாதவனும் பலமளிப்பவனும் தருப்பையுடன் பூஷண னுடன் சேர்ந்து தருப்பையில் திகழ்ந்து திடமளிக்கும் இந்திரனை நாடட்டும். அவன், அவனுக்கு, இந்திரியம் பிருஹதீச் சந்தம் மூன்று பலங்களுடனுகும் காளை பலத்தை யளிக்கட்டும். ஹோதாவே! யஜிக்கவும்..

உஅ. ஹோதாவானவன், பொன் மயமாய் புனித னும், பலமளித்து ருதஞ் செழிக்கும் விரியும் விசால கதவுகளாயும் பிராமணனுமான இந்திரனை நாடட்டும். அவன் அவனுக்கு இந்திரியம் பங்கதீச்சந்தம் நான்கு பலமுள்ள காளை பலத்தை யளிக்கட்டும். அவன் நெய் யைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக்கவும். உகூ. ஹோதாவானவன், பலமளிக்கும் பார்ப்பதற்குப் பிரிய மாய் பல நிறங்களுடன் நன்கு அலங்காரமுடனுள்ள உய ரிய உஷைகளான விசுவ இந்திரனை நாடட்டும். அவன் அவனுக்கு இந்திரியம் திருஷ்டுபுச் சந்தம் நான்கு பலங்க ளுள்ள காளை பலத்தை யளிக்கட்டும், அவர்கள் நெய்யை யடையட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ௩0. ஹோதா

வானவன் திவ்ய ஹோத்துருக்களாய், தேவர்களில் உய ரிய கீர்த்தியுள்ளவராய், அறிவோங்கும் கவிகளாய் திவ் யஞ்சேர்ந்து திடமளிக்கும் இந்திரனை யடையட்டும். அவன் அவனுக்கு, இந்திரியம் ஜகதீச் சந்தம் வண்டி யிழுக்கும் காளை பலத்தை யவனுக் களிக்கட்டும் ஹோதாவே! யஜிக்கவும். ௩௧. ஹோதாவானவன் பொன்மயமாய், பெரியவளாய் பெருமையுடனுகும் பாரதி களாய் சுந்தரலங்காரமுள்ள தேவிகளாய் திடமளித்து அவர்களின் தலைவருமான இந்திரனை நாடட்டும். அவன் அதை அடையட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ௩௩. ஹோதாவனவன் சுரேதசனுயுள்ள துவஷ்டாவா யும், புஷ்டி வளர்ப்பவனுயும். பலரூபம் வளர்ச்சியைத் தாங்குபவனுயும் பலம் அளிப்பவனுயுமுள்ள இந்திரனை நாடட்டும். இவன் அவனுக்கு இந்திரியம் விராஜச்சந் தம், பால்மிகும் பசுவை, யளிக்கட்டும் அவன் நெய்யைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக்கவும். ஹோதாவே. ௩௩. ஹோதாவானவன் சாந்தமளிக்கும் வனஸ்பதியா யும் நூறு சக்திகளுடன் போற்றுவதற்க் கருகனுயும், பொன் இலைகளுடன் கச்சையணியும் செல்வபதியாய் சக்தியுமளிக்கும் இநதிரனை நாடட்டும். அவன் அவனுக் குப் ககுப்புச் சந்தம் மலட்டுப் பசு கன்று விழச்செய்யும் பசுவை யளிக்கட்டும். அவன் நெய்யை பற்றட்டும். ஹோ தாவே! யஜிக்கவும். ௩௪. ஹோதாவானவன், சுவாஹா கிருதி தேவிகளாய், தனி கிருகபதியான அக்கினியாய், வைத்தியனை கவி வருணனும் க்ஷத்திரினுமாயுள்ள வலி மையளிக்கும் இந்திரனை நாடட்டும். அவன் அவனுக்கு, இந்திரியம் அதிச்சந்தச் சந்தம் பெரிய விருஷபப் பசு பலத்தை யளிக்கட்டும். அவன் நெய்யைப் பற்றட்டும். ஹோதாவே! யஜிக்கவும். உஅ. உச—௩௪.

௩௫. திவ்யமான தருப்பை இந்திரனின் காயத்திரீச் சந்தத்தால் இந்திரியம் காட்சி சக்தியைச் சாய்த்து, பலமளிக்கும் திவ்ய இந்திரனை ஓங்கச்செய்துள்ளது, அவன் செல்வமடைய சகத்தைப் பற்றட்டும். யஜிக்கவும்.

௩௬. திவ்யமான இந்திரனை ஓங்கச்செய்யும். அவர்கள் இந்திரனில் பலம் பிராணன் இந்திரியத்தை உஷ்ணீஹச் சந்தத்தோடு சாய்த்துள்ளார்கள். அவர்கள் செல்வத்தையடைய சகத்தைப் பற்றட்டும். யஜிக்கவும், ௩௭. பகலும் இரவுமான திவ்ய உஷைகள் அநுஷ்டுபுச் சந்தத்தால் இந்திரனில் பலம் சக்தி இந்திரியத்தைச் சாய்த்து பலமளிக்கும பிரகாசமான இந்திரனை ஓங்கச் செய்துள்ளார்கள். திவ்யர்கள் தேவனை வளர்த்துளார்கள், அவர்கள் செல்வத்துக்காக சகத்தைப் பற்றட்டும். யஜிக்கவும் ௩௮. பிரியமாய் திவ்யமாய் தாராளமாயுள்ள தேவிகள் தேவனையும் திவ்யமாயுள்ள திடமளிக்கும் இந்திரனை ஓங்கச்செய்து உறுதி யுடனுக்கியுளார்கள். அவை இந்திரனில் பிருஹதீச் சந்தத்தால் சக்தி சிரோத்திரம் இந்திரியத்தைச் சாய்க்கும். அவர்கள் சகத்தைப் பற்றி செல்வத்தை யடையட்டும், யஜிக்கவும். ௩௯. கறக்கும் நன்கு கறக்கும் திடம் யவி கொண்டுவரும் தேவிகள் இந்திரனில் பங்தியுடன் பலம் புனிதம் இந்திரியத்தைச் சாய்த்து இந்திரனின் பலத்தை பாலால் பெருக்கியுள்ளார்கள். அவர்கள் செல்வத்துக்காக சகத்தைப் பற்றட்டும். யஜிக்கவும். ௪௦. இரு தேவ திவ்யர்களான ஹோதாக்கள் பலமளிக்கும் பரிசுத்த இந்திரனை பலமுடனுக்கியுளார்கள். இத்தேவர்கள் தேவனை பெருமையுடனுக்கி யுளார்கள். அவர்கள் திருஷ்டுபுச் சந்தத்தால் இந்திரனில் சக்தி உறுதி உக்கிரத்தை ஸ்தாபித்துளார்கள். அவர்கள் சகத்தைச் செல்வத்துக்காக பற்றி யுளார்கள். யஜிக்கவும்.

சக. மூன்றுதேவிகள் தேவிகளான மூவர்கள், சகதீச் சந்தத்தால் இந்திரனில் பலம், சக்தி, பிராணனைச் சாய்த்து பலமளிக்கும் இந்திரபதியை பலமுடனாக்கியுளார்கள். அவர்கள் செல்வத்துக்காகச் செல்வத்தைப் பற்றட்டும். யஜிக்கவும். சஉ. நராசம்ஸனை தேவன், பலமளிக்கும் திவ்யமான இந்திரனை பலமுடனாக்கியுளார். தேவன் தேவனை விருத்தியாக்கியுளான். அவன் இந்திரனில் விராஜச் சந்தத்தால் ரூபம், பலம், இந்திரியத்தைச் சாய்த்துளான். அவன் சகத்துக்காகச் செல்வத்தைப் பற்றட்டும். யஜிக்கவும், சங. தேவனை வனஸ்பதி திடமளிக்கும் திவ்யமான இந்திரனை வளர்த்துளான்; தேவன் தேவனை பெருமையாக்கியுளான். அவன் துவிபதச் சந்தத்தால் இந்திரனின் பலம் பொருள் இந்திரியத்தை சாய்த்துளான். அவன், செல்வத்துக்காகச் சகத்தைப்பற்றட்டும், யஜிக்கவும். சச. செடி கொடிகளின் தருப்பை பலமளிக்கும் திவ்யமான இந்திரனை பெருமையுடனாக்கியுளான். தேவன் தேவனை விருத்தியாக்கியுளான். அவன் கருப்புச்சந்தத்தால் இந்திரனில் பலம் பெருமை இந்திரியத்தைச் சாய்த்துளான். அவன் செல்வத்துக்காக சகத்தைப்பற்றட்டும். யஜிக்கவும்.. சரு. சுவிஷ்ட கிருததேவனை அக்கினி பலமளிக்கும் இந்திரனை வளர்த்துளான். தேவன் தேவனை பெருமை யாக்கியுளான். அவன், இந்திரனில் அதி சந்தத்தால் பலம் க்ஷத்திரம் இந்திரியத்தைச் சாய்த்துளான். அவன் செல்வத்துக்காக சகத்தைப் பற்றட்டும், யஜிக்கவும். உஅ. நரு—சரு.

---

## அநுவாகம் ௩௯௫.

### அசுவமேதம்

௧. ஜாதவேதசனே! மகத்தான நண்பர்களுள்ளவனே! நீ இன்று மனிதர் கிரகத்தில் தேவனான நீ திவ்யங்களை நாடுகிறாய். நன்கு காணும் அவற்றை இங்கு கொண்டுவரவும். நீ அறிவு நிறையும் தூதன் கவியாகும். ௨. நல்ல நாவுள்ள தநூனபதே! ருதவழிகளை இனிமையால் நனைத்து இன்பமுடனாக்கவும். எமது துதியை அறிவுகளால் சித்தஞ்செய்து யக்ஞத்தை திவ்யத்தில் ஸ்தாபனஞ் செய்யவும். ௩. நாங்கள் யக்ஞம், பாக்களோடு நராசம்சனின் மகிமையை சுத்தர், அதி அறிஞர் அறிவுதயர், இரு அவிகளை நாடும் தேவர்களுக்குப் போற்றுவோம். ௪. அக்கினியே! அழைக்கப்பட்டு போற்றுவதற் கருகதையான நீ வசுக்களுடன் சேர்ந்து வரவும். திடமுள்ளவனே! நீ தேவர்களின் ஹோதாவாகும். யஜிப்பவர்களில் சிறந்த நீ அவர்களைத் துரிதமாக்கவும். ௫. வேதத்தால் தருப்பை பிராசீனமாக்கப்பட்டுள்ளது. உஷாகால முதயமாகுங்கால் புவியை யணிய அது உடைபோலுள்ளது. அது விசாலமாகி எங்கும் நன்கு விரிந்துள்ளது; அதுதேவர்களுக்கு திவ்யமாயும் சுகமளிப்பதாயு முள்ளது. ௬. தங்கள் புருஷர்களுக்கு அலங்காரஞ் செய்துகொள்ளும் மனைவிகளைப் போல விசாலமான கதவுகள் விரிந்து திறக்கப்படட்டும். உயர்ந்து திவ்யமாகி விசுவ முதயமாக்கும் கதவுகள் தேவர்களைப் பிரவேசிக்கச்செய்து அவர்களுக்கு சுகவழிகளை யளிக்கட்டும். ௭. இரவும் பகலும் பரஸ்பரம் இசைந்து இனிய இரசங்களைப் பொழிபவர்கள் தங்கள் மூல நிலயத்தில் ஸ்தாபமானயுள்ளார்கள். பெரியவர்களாய் திவ்யர்களுமான பெண்கள்

சுந்தர ராலங்காரங்களுடன் செல்வமும் அதி அழகுமான வடிவங்களை யெல்லாந் தரிக்கிறார்கள். அ. முதன்மையான நல் மொழியுள்ள இரு திவ்ய ஹோதாக்கள் மனிதர்கள் யஜிக்க யக்ஞத்தை அமைக்கிறார்கள். சபைகளில் சேதன மளிப்பவர்கள்போல் தங்கள் திசையால் பிராசீன சோதியைப் புலனுக்குகிறார்கள். கூ. பாரதி எங்கள் யக்ஞத்துக்குத் துரிதமாகட்டும். இடை மனிதனைப்போல் புலனுக்கட்டும். சரஸ்வதி மூன்றுதேவி இத்தருப்பையான சுகமளிக்கும் செயலையும் நற்செயல்செய்யும் எம்மையுமடையட்டும். கo. அறியும் ஹோதாவே! யக்ஞத்தில் சிறந்தவனே! துரிதத்துடன் தேவ துஷ்டாவையும், பெற்றோர்களான இச்சோதிசகத்தை அவர்கள் வடிவம் எல்லா சீவர்களுடன் ஒன்று சேர்ப்பவனையும் இங்கு நாடவும். கக. தேவர்களின் உணவை இனிய நெய்யால் நனைத்து நீயாகவே அவிகளால் ருதுவில் யளிக்கவும். அக்கினி வனஸ்பதி சாந்தமளிக்கும் தேவன் இனிய கிருதத்தால் அவியத்தை சுவையுடனுக்கட்டும். கஉ. அக்கினி தோன்றும் பொழுதே யக்ஞத்தைப் பக்குவமாக்கியுளான். அவன் தேவர்களின் முதல்வன். தேவர்கள் சத்திய ஹோதாவின் சொல், வழி சாய்ந்து சுவாஹா கிருதமான அவியைப் புசிக்கட்டும். கங. மானிடனே! நீ சோதியில்லாத இடத்தில் சோதிசெய்து சுந்தரமில்லாததில் சுந்தரஞ் செய்து உஷைகளுடன் தோன்றியுளாய். உக. உரு—ஙஎ

## தேவ நட்பு

கச. கருங்கழுத்து அக்கினி சம்பந்தமாகும். மேஷம் சரஸ்வதியமாகும். பழுப்புள்ளவை சோம சேர்க்கை; சியாமம் பூஷண உறவு; வெண் முதுகு பார்ஹஸ்பத்தியம், பல நிறமுள்ளவை வைசுவதேவம். சிகப்பு, ஐந்திரம், புள்ளிகளிள்ளவை மருத்துக்கள்; காய பலமுள்

ளது ஐந்திராக்கினி, அதோ வெண்மை சாவித்திரம், ஒரு வெண்பாதமுள்ள கருப்பாடு வாருணம். கரு. அனீக வானுன அக்கினிக்கு சிகப்புக் குறியுள்ள காளை; கீழ் இரு வெண் சின்னங்களுடனுன இரண்டு சாவித்திரிக்கு; வெண் நடுவுள்ள இரண்டு பூஷணனுக்கு, கொம்பு இல்லாத மஞ் சளாடுகள் விசுவதேவர்களுக்கு, புள்ளிகளுள்ளது மருத் துக்களுக்கு; சரஸ்வதிக்கு பெண் ஆடு; வருணனுக்கு ஆண் ஆடாகும். உகூ. ருஅ-ருகூ.

---

## அநுவாகம் ௩௧௬.

### புருஷமேதம்

#### சவிதா

க. தேவ சவிதாவே! யக்ஞத்தைப் புலனுக்கவும். யக்ஞபதியை செல்வத்துக்குத் துரிதமாக்கவும். விக்ஞா னஞ் செய்யுங் கந்தர்வன் எமது அறிவைச் சுத்தமாக்கட் டும். வாசஸ்பதி எமது வாணியை இனிமையாக்கட்டும். உ. எமது அறிவைத் தூண்டும் தேவனின் அதி உத்தம மான சவிதாவின் சிறப்பை அடைவோம். ௩. தேவ சவிதாவே! தீமைகளையெல்லாந் தூரத்தி லாக்கவும். நன்மையாயுள்ளதையே புலனுக்கவும். ச. அதிசயமான செல்வத்தை விபாகஞ்செய்து, மனிதர்களைக் காணும் சவிதாவையே நாங்கள் அழைக்கிறோம். ௩௦. க-ச.

#### தேவ நண்பர்கள்

ரு. பிரமணத்துக்கு பிராமணனே, க்ஷத்திரத்துக்கு அரசனை; மருத்துகளுக்கு வைசியனை, தவத்துக்கு சூத்தி ரனை, இருளுக்குத் திருடனை, நரகத்துக்கு வீரனழிப்ப வனை, பாவத்துக்கு நபும்சகனை, சிறு விற்பனைக்கு

---

௩௧௫. கருத்து—சமர் மர்மம்.

அயோகுவை, காமத்துக்கு விபசாரனை, நிந்தனைக்கு மாக தனை நன்கு அறியுங்கள். ௬. நடனத்துக்கு சூதனை, கானத்துக்கு நாட்டியனை, தர்மத்துக்கு சபைசெல்பவனை, பழங்கதைக்கு பயந்தவனை, கிரீடைக்கு முகஸ்துதி செய்பவனை, சிரிப்புக்குக் கலைஞனை, இன்பத்துக்கு ஸ்திரீ நண்பனை, விருப்பத்துக்கு குமாரிமகனை, நுட்பத்துக்கு இரதஞ் செய்பவனை, தீரனுக்கு தச்சனை நாடுங்கள். ௭. தபத்துக்கு குயவன் மகனை, விசித்திரவேலைக்கு விளங்கச்செய்பவனை, ரூபத்துக்குத் தட்டானை, சுபத்துக்கு விதைப்பவனை, அம்பு செய்ய விற்செய்பவனை, துன்பத்துக்கு தனுஷுள்ளவனை, செயலுக்கு விற்கயிறு செய்பவனை, அதிருஷ்டத்துக்கு கயிறு செய்பவனை, மரணத்துக்கு வேடனை, அந்தத்துக்கு நாய்த்தலைவனை பற்றுங்கள். ௮. நதிகளுக்கு செம்படவனை, ரிக்ஷிகர்களுக்கு நிஷதமகனை, புருஷப்புலிக்கு வெறிப்புதல்வனை, காந்தர்வன் அப்சரர்சர்களுக்கு விராத்தியனை, நோக்கங்களுக்கு உன்மத்தனை, சர்ப்பதேவ சனங்களுக்கு நம்பிக்கையற்றவனை, காய்க்கு சூதாடுபவனை ஊக்கத்துக்கு பந்தயஞ் செப்பவனை; பிசாசத்துக்கு பிரம்பு பிளக்கும் பெண்ணை, யாதுதானர்களுக்கு முள்ளில் வேலைசெய்யும் ஸ்திரீயை-நாடித்தெரிந்து கொள்ளவும். ௯. சங்கேத ஸ்தலத்துக்குக் காதலனை, தோட்டத்துக்குக் கள்ளக் காதலனை, துன்பத்துக்கு விவாகமில்லாத தமையனை, தீமைக்கு மணம்செய்த இளையவனை, துக்கத்துக்கு விவாகமான இளஞ்சகோதரி புருஷனை, பரிகாரத்து சிருங்காரவேலை செய்பவனை, ஒற்றுமைக்கு ஞாபகஞ் செய்பவனை, அலப்புக்கு அருகிலுள்ளவனை, வர்ணத்துக்கு வீம்புள்ளவனை, பலத்துக்கு இணங்குபவனைப்—பற்றவும். ௧௦, இடையூறுகளுக்குக் கூனனை, இன்பத்துக்குக் குள்ளனை, கதவுகளுக்கு குறைக் கண்ணுள்ளவனை; தூக்கத்துக்குக்

குருடனை, அதர்மத்துக்கு செவிடனை, புனித சாதனத்துக்கு வைத்தியனை, பிரக்ஞானத்துக்கு நட்சத்திர தரிசியை, அசிட்சிதனுக்கு ஆராய்பவனை, அதி அறிவு விரும்புபவனுக்கு அதி ஆராய்பவனை, நியாய அநியாயத்துக்கு விடையளிப்பவனைப் பற்றவும். ௧௧. கண் நோய்களுக்கு யானைப்பாகனை, துரிதத்துக்கு குதிரைக்காரனை, புஷ்டிக்குக் கோபாலனை, ஆண்மைக்கு இடையனை, தேஜசுக்கு ஆடுமேய்ப்பவனை, உணவுக்கு உழுபவனை, அன்னத்துக்கு சுராகாரனை, க்ஷேமத்துக்கு வீடு காப்பவனை, மங்களத்துக்கு செல்வமுள்ளவனை, அத்தியக்ஷத்துக்கு அநுகூல சாரதியை—நாடவும். ௩௦. ரு—௧௧.

௧௨. ஒளிக்கு விறகுகொண்டு வருபவனை, பிரகாசத்துக்கு அனல் எழுச்சியாக்குபவனை, குதிரையின் நிலயத்துக்கு அபிஷேகஞ் செய்பவனை, அதி நிலயத்துக்கு வியாபகனை, தேவலோகத்துக்கு சுந்தரமறிபவனை, மனிதலோகத்துக்கு விபாகஞ் செய்பவனை, எல்லா உலகங்களுக்கு உபசேசனை செய்பவனை; ஏழ்மை, வேதனைக்கு சமர் தூண்டுபவனை, அறிவுக்கு சுத்தஞ்செய்பவனை, இன்பத்துக்கு சாயமளிப்பவனைப் பற்றவும். ௧௩. எதிர்ப்புக்குக் கள்ள இருதயனை, காதகனுக்கு அவதூறு செய்பவனை, பகுத்தறிவுக்குக் காவல் காப்பனை, பரிட்சைக்கு காவல் காப்புக்காரனை, வன்மைக்கு வேலைக்காரனை, புஷ்டிக்கு துரிதமாகுபவனை, பிரியனுக்கு பிரியம் பேசுபவனை, க்ஷேமத்துக்குக் குதிரையில் செல்பவனை, சுவர்கலோகத்துக்கு பாகம் பூரணமாக்குபவனை, அதிநிலயத்துக்கு வியாபகனை முறையே நாடவும். ௧௪. கோபத்துக்கு இரும்பு உருக்குபவனை, குரோதத்துக்கு அமைதியாயுள்ளவனை, இணைப்புக்கு இணைப்பவனை ,சோகத்துக்கு எதிரியை, க்ஷேமத்துக்கு துக்கம் நீக்குபவனை,

மலைமேல் மலைகீழுள்ளவனுக்கு, மூன்று ஸ்தானங்களி லுள்ளவனை; காயத்துக்கு கருத்துள்ளவனை, சிலத் துக்கு தைலம் செய்யும் ஸ்திரீயை, நிர்ருதிக்கு கோசஞ் செய்பவளை, யமனுக்கு மலட்டு ஸ்திரியை, முறையே நாடுங் கள். கரு. யமனுக்கு இரட்டைப் பிள்ளைத் தாயை, அதர் வனுக்கு கருப்பம் பிசகுபவளை, முதல் வருஷத்துக்குக் கிரமமாய் செல்பவனை, பரிவத்சரத்துக்குப் பிள்ளை பெறா தவனை, இதாவத்சரத்துக்கு அதிக்கிரமிப்பவனை, இதவத் சரத்துக்குத் தாண்டிச் செல்பவனை, வத்சரத்துக்குத் தளர்ந்தவனை, சம்வத்சரத்துக்கு வெண் ரோமமுள்ளவனை, ரிபுக்களுக்கு சர்மஞ் சுத்தஞ்செய்பவனை, சாத்தியர்களுக்கு சர்மம் பதனிடுபவனை முறையே யறியவும். கசு. ஏரி களுக்கு மீன் காரனை, நிற்குஞ்சலங்களுக்கு மீன் பிடிப்ப வனை, குளசலங்களுக்கு நிஷதனை, நாணல் காடுகளுக்கு மீன் விற்பவனை, எதிர் கரைக்கு மீன் நாடுபவனை, இக் கரைக்கு மீன் பற்றுபவனை, தடைகளுக்குக் கட்டுபவனை, ஆழமற்ற ஸ்தானங்களுக்கு மீன் வலையை, சப்தத்துக்கு அடவி வாசியை, குகைகளுக்குக் கிராதனை, மலைஉச்சிகளுக் கு நாசஞ்செய்பவனை, மலைகளுக்கு வனவாசியை, நாடவும், கஎ. கோரத்துக்கு பௌல்கசனை, வர்ணத்துக்கு பொன் னைபரணஞ் செய்பவனை, தராசுக்கு வியாபாரியை, பச்சா த்தாபத்துக்கு சோம்பேறியை, எல்லா சனங்களுக்கு குஷ்ட ரோகியை, செல்வத்துக்கு விழிப்புள்ளவனை, தோல்விக் குத் தூங்குபவனை; துன்பத்துக்கு அதிகம் பேசுபவனை, துக்கத்துக்கு வெட்க மற்றவனை, நாசகாரனுக்கு அதிசே தனஞ் செய்பவனை அறியவும். கஅ. அட்ச ராஜனுக்கு சூதாடுபவனை, கிருதகூதனுக்கு கெடுதல் செய்பவனை, திரேதனுக்கு சிரேஷ்டனை, துவாபரனுக்கு அதிதலைவனை, ஆஸ்கந்தனுக்கு சபை நீங்காதவனை, மிருத்யுவுக்கு பசுக்

கள் நாடுபவனை, அந்தகனுக்கு பசு கொல்பவனை, பசிக்கு புஷ்டியழித்து பிச்சை எடுப்பவனை, துட்டச் செயலுக்கு சரகாசாரியனை, துக்கத்துக்கு திருடனை முறையே நன் கறியுங்கள். கக. எதிரொலிக்குத் தூஷிப்பவனை, சத்தத் துக்குச் சீற்றனை, முடிவுக்கு அதிகம் பேசுபவனை, முடி வின்மைக்கு ஊமையை, கோஷத்துக்கு முரசு கொட்டுப வனை, வன்மைக்கு வீணை வாசிப்பவனை, ஒலிக்கு வாத்தி யங் கோஷிப்பவனை, அபசுவரத்துக்கு சங்கு கோஷனை, வனத்துக்கு வனரட்சகனை, சிறு அடவிக்கு நெருப்பு அணைப்பவனை யறியுங்கள். உ௦. கிரீடைக்கு வேசியை, சிரிப்புக்குக் கோமாளியை, காமத்துக்கு சுந்தராங்க முள்ளவனை, பலத்துக்கு கிராமாதிகாரி கணித மறிபவன் காவலனை; கைகொட்டுபவன் வீணை வாசிப்பவனை நட னுத்துக்கு, இன்பத்துக்கு கானமறிபவனை நாடவும். உக. அக்கினிக்குப் புஷ்டியுள்ளவனை, புவிக்கு முடவனை, வாயுக்கு சண்டாளனை, அந்தரிட்சத்துக்கு கொம்பில் விளையாடுபவனை, சோதிக்கு ரோம சூன்னியத் தலைவனை, சூரியனுக்குச் பச்சைக்கண்ணனை, நட்சத்திரங்களுக்கு புள்ளியுள்ளவனை, சந்திரனுக்குக் குஷ்டரோகியை, பக லுக்கு வெண் மஞ்சக்கண் உள்ளவனை, இரவுக்கு மஞ்சக் கண்களுடனுன கருப்பனை யறியவும். உஉ. அதி உயரன் அதிகுள்ளன், அதிபருமன், அதிகிருசன், அதிசுவேதன் அதிகருப்பன், ரோமசூன்னியன், அதிரோமன் பலரூபங் களுள்ள எண் புருஷர்களை அறிஞன் தன் சுவாதீனஞ் செய்து கொள்ளுகிறுன். சூத்திரனும் பிராமணனு மல்லாதவர்கள் பிரஜாபதிக்காகும். சூத்திரனும் பிரா மணனு மல்லாத மாகதன், குணமற்றவள் நபும் சகன் பிரஜாபதிக்காகும். ௩௦. கஉ—உஉ.

---

௩கூசு* கருத்து—விசுவப் பொருள்களின் இரகசியங் களை யறியுங்கள்.

## அநுவாகம் ௩௯௭.

### புருஷ சூக்தம்

### சிருட்டி

௧. ஆயிரந் தலைகள் ஆயிரங் கண்கள் ஆயிரம் பாதங்களுள்ளவன் புருஷன். அவன் எங்கும் புவியைச் சூழ்ந்து, பத்து புலன்களை வியாபக மாகியுளான். ௨. புருஷனே இவ்வனைத்து மாவான், அவனே இருந்ததும் இருக்கப்போவதுமாவான். உணவினால் இன்னும் அதிகமாயோங்கும் அமுதத்தின் தலைவனு மவனே. ௩. அவன் மகிமையே மகிமை ; புருஷன் இதைவிட மேன்மை வாய்பவன் ; எல்லா சீவர்களும் அவனது பாதமாகும் ; மூன்று பாதங்கள் சோதியிலுள்ள அமுதமாகும். ௪. புருஷன் மூன்று பாதங்களால் உதயமாயுளான் ; மறுபடியும் இங்கு அவனது ஒரு பாத முண்டு. அப்பால் அவன் புசிக்கும் புசிக்காத எல்லாப் பொருள்களிலும் அவன் வியாபகமாயுளான். ௫. அவனிடமிருந்து விராஜன் தோன்றுவான். விராஜனிடமிருந்து மறுபடியும் புருஷன் புலனாவான். புலனானதும் கிழக்கிலும் மேற்கிலும் புவிக்கப்பாலும் பரவுகிறான். ௬. அந்த சர்வ ஹூதமான யக்ஞத்தினின்று பலவித நெய் ஒன்று குவியும். அவன் வாயுப் பிராணிகளையும் வனங் கிராமச் சீவர்களைச் செய்வான். ௭. அந்த சர்வஹூதமான யக்ஞத்தினின்று ருக்கு, சாமன்கள் தோன்றும் ; சந்தங்களும் புலனாகும் ; அந்த யக்ஞத்தினின்றே யஜூஸும் உண்டாகும். ௮. அதனிடமிருந்து குதிரைகள் தோன்றும் ; அந்த யக்ஞத்தினின்று இரு வரிசை பற்களுடனாகும் பிராணிகள் புலனாகும், அந்த யக்ஞத்தினின்று பசுக்களாகும் ; ஆடுகளும் அஜங்களும் அந்த யக்ஞத்திலிருந்தே அமையும். ௯. தேவர்கள், ரிஷி

கள், சர்வமான சாத்தியர்களும் முதன்மையாய்த் தோன்றும். யக்ஞமான புருஷனை தருப்பையில் தோய்த்துளார்கள். அவர்கள் அவனால் யக்ஞஞ் செய்வார்கள். கய. புருஷனை அவர்கள் எப்படி பற்பல பாகங்களாய் தரித்து அறிவார்கள்? அவன் முகம் எது? கைகள் எவை? அவன் தொடை பாதங்களின் நாமங்களெவை? கக. பிராமணன் அவனது முகமாகும்; அவன் கைகளால்—இராஜன்யர்கள்—குணமாவார்கள். அவன் தொடைகள் வைசியர்களாவார்கள்; அவன் பாதங்களினின்று சூத்திரர்கள் தோன்றுவார்கள். கஉ. அவன் மனத்தினின்று சந்திரனும்; அவன் கண்ணினின்று சூரியன் புலனுவான். அவன் செவியினின்று வாயுவும் சுவாசமும், அவன் முகத்தினின்று அக்கினி சனிக்கிறான். கங. அவன் நாபியினின்று அந்தரிட்சமாகும்; அவன் சிரத்தினின்று சோதி செம்மையாக்கப்பட்டுளான். அவன் பாதங்களினின்று புவியும் செவியினின்று திசைகளும் தோன்றும். அவர்கள் இப்படி உலகங்களைச் செய்வார்கள். கச. தேவர்கள் அவியான புருஷனால் யக்ஞத்தைச் செய்யுங்கால் வசந்தம் நெய்யாகும், கிரீஷ்மம் சமித்தாகி, சரத்து ஆகுதி போலாகும். கரு. தேவர்கள் புருஷனை பசுவை பந்தஞ் செய்து யக்ஞத்தை விசாலமாக்குங்கால் ஏழு அதன் சுற்றுச் சமிதைகளாகும்; இருபத்து ஒன்று அதன் சமித்துக்களாகும். கசூ. தேவர்கள் யக்ஞத்தை யக்ஞத்தால் யஜிப்பார்கள்; இவை தான் முதன்மையான தர்மங்களாகும். மேன்மையானவர்கள், சாத்தியர்களும் பழைய தேவர்களும் பிரசன்னமாகும் உயரிய நிலயத்தை யடைவார்கள். கள. அவன் முதல்வனாய், விசுவகருமஇரசத்தினின்றும் சலங்களினின்றும், சேர்க்கப்பட்டுளான்; இதன் ரூபத்தை துவஷ்டா தெளிவாக்குகிறான்.





**17.** விஷ்ணு

இதுதான் தேவ மானிடப் பிறவியின் ஆதியாகும். கஅ. நான், தமசுக் கப்பால், சூரிய நிறமுயுள்ள மகத்தான புருஷனை யறிவேன். அவனை அறிபவனே மிருத்யுவை தன் பின் நீக்கமுடியும். இதைத் தவிர வேறு வழி புலனுவதில்லை கசு. பிரஜாபதி கருப்பத்தில் சஞ்சரிக்கிறுன். அவன் அனைத்திலும் புலனுனபோதிலும் பிறப்பதே இல்லை. தீரர்கள் அவன் மூல நிலயத்தை நன்கு பார்க்கிறுர்கள். அவனில் எல்லா புவனங்களும் நிலைத்துள்ளன. உ0. தேவர்களுக்காக ஒளியும் உஷ்ணமளிப்பவனுக்கு, தேவ புரோகிதனுக்கு, தேவர்கள் முன் தோன்றுபவனுக்கு, சோதியாயும் அறிஞை யுமுள்ளவனுக்கு நமஸ் காரம்,

உக. தேவர்கள் ஒளியையும் உயரிய அறிவையும் முதன்மையா யறிந்து சொல்வார்கள். உன்னை இப்படி யறியும் பிராமணன் தேவர்களை தன்வசஞ் செய்துகொள் வான். உஉ, ஸ்ரீயும் இலட்சமீயும் உனது மனைவிகள்; உனது இருபக்கத்தில் இரவும் பகலுமாகும். உனது ரூபம் நட்சத்திரங்களாகும், அசுவினிகள் உனது மலரும் வாய் களாகும், நாடி எனக்கு பரத்தை விரும்பவும். சர்வ லோகத்தையும் எனக்குரிமையாக்க விரும்பவும். ருக. க—உஉ.

---

## அநுவாகம் ருகூஅ.

### சர்வமேதம்

க. அவனே அக்கினி, அவன் ஆதித்தியன், அவன் வாயு. அவன் சந்திரனுகும், அவனே சுக்கிரன், அவன் பரமன். அச்சலங்களும் அவனே, அவன் பிரசாபதி

ருகூஎ. கருத்து. புருஷனை யறியவும்.

யாகும். உ. ஒளியுடனாகும் புருஷனிடமிருந்து இமை கொட்டும் பிராணிகளெல்லாம் தோன்றும். அவனை உயரத்திலும் யப்பாலும் நடுவிலும் ஒருவனும் காண்பதில்லை. ந. மேன்மையாய் யசசுடனாகு மவனுக்கு பிரதிமை இல்லை. இப்படித் தோன்றும் இரண்ணியகருப்பன் என்னை இம்சிக்காமலாகட்டும். இப்படித் துரிதபாகுபவன் எக்காரணத்தாலும் சனிக்காதவன். இப்படி இரண்ணிய கருப்பனாகும். ச. இத்தேவனே எல்லாதிசைகளையும் வியாபகமாகியுளான். பூர்வம் புலனாகுபவன் கருப்பத்தினகத்திலுளான். தோன்றும் இனி தோன்றப் போகுபவன் எல்லா முகங்களையுங் கண்டு ஒவ்வொன்றையுமடைந்து திரமாயுளான் ரு. அவன் முன்னர் எப்பொருளும் தோன்றவில்லை; தன் நிகழ்ச்சியால் எல்லாப் பொருள்களையும் உதவி புரிகிறான். பிரஜாபதி தன் பிரசையுடன் நன்கு இன்பமாகி ஷோடசியாகுமவன் மூன்று சோதிகளையுந் தாங்கியுளான். சு. எவனால் சோதிகள் உக்கிரமாயுளதோ, எவனால் சகம் திறமாயுளதோ, எவனால் சுவர்கமும் சிறந்த நிலயமும் தரிக்கப்படுகின்றதோ, எவனால் வானத்தின் திசைகளை யெல்லாம் அளக்கப்பட்டுளதோ அந்த எவனென்னும் தேவனையே அவியுடன் நாடுவோம். எ. அறிஞர் அனைத்தின் ஒரே ஆசிரிய நிலயமான ஒரே மறை பொருளான அவனைக் காண்கிறார்கள். அவனில் அனைத்தும் ஒன்று சேரும். அவனிடமிருந்தே அது தோன்றும். விசாலமான அவன் பிரசைகளில் அவனே பாவும் நெசவுமாகும். அ. அமுதத்தையறியுங் கந்தர்வன் மறைந்து விசேஷமாய் தரிக்கப்படும் மறைவாயும் மேன்மையுமான நிசநிலயத்தை முழங்கட்டும். இதன் மர்மத்தில் மூன்று பதங்கள் நிலைக்கப்பட்டுள்ளன. இவற்றை யறிபவன் பிதாவின் பிதாவாவான்.

கூ. அவன் நமது பந்து, நமது பிதா, நம்மைப் புலனுக்குபவன், அவன் எல்லா புவனங்களையும் பெரிய நிலயங்களையு மறிவான். தேவர்கள் அவனில் அமுதத்தை அடைந்து மூன்றுவதான பெரிய நிலயத்துக்கு எங்கும் வியாபகமாகிறார்கள். கo. அவன் புவனங்களை வியாபகமாகி உலகங்களைச் சூழ்ந்து திசை, எல்லாப் பிரதிசைகளை நிறைந்து, முதல் தோன்றும் ருதாத்மாவை யணுகி தன் னுத்மாவை ஆத்மாவினிடமிருந்து நுழைவான். கக. அவன் சோதியையும் சகத்தையும் துரிதமாய்ச் சூழ்ந்து சகல சகம், சகல திசைகளை எங்கும் துரிதமாய்க் கவர்ந்து ருதத்தின் விரியும் இழையை விசாலமாக்கி அவன் அதைக் காண்கிறான். அவன் அதாகிறான். அவன் அதுதான். கஉ. நான் சபையின் அற்புதமான பதியை, இந்திரனின் கமனீயமாய் பிரியமான அறிவளிக்கும் ஆதரவை நான் அடையவேண்டும். சுவாஹா! கங. தேவகணங்கள் பிதுருக்கள் உபாஸிக்கும் அவ்வறிவினால், அக்கினியே! என்னை இன்று அறிவுள்ளவனுகச் செய்யவும். சுவாஹா! கச. வருணனே! எனக்கு அறிவை அளிக்கவும்! அக்கினியும் பிரஜாபதியும் எனக்கு யளிக்கட்டும். வாயு எனக்கு அறிவை யளிக்கட்டும். தாத்ரு எனக்கு அதை யளிக்கட்டும். சுவாஹா! கரு. இந்தப் பிரமும் க்ஷத்திரமும இந்த என் ஸ்ரீயை யடையட்டும். தேவர்கள் என்னில் உயரிய செல்வத்தைத் தரட்டும், அச்செல்வமான உனக்கு சுவாஹா! ௩உ. க-கூ, அ-ககூ.

---

௩கூஅ. கருத்து—உலகத்திலுள்ள எல்லாப்பொருள்களையும் உன் சுவாதீனஞ் செய்துகொள்ளவும்.

## அநுவாகம் ௩௯௯.

### சர்வமேதம்

௧. வீடு காத்து சுகந்த புகைகளுடன் புனிதஞ் செய்யும் அழியாத அக்கினி அவனுடையதாகும்; வெண்மையாயும் வன்மைபெருகி கமனசீலர்களான சோமர்கள் சலங்களிலே ஸ்தாபனமாயுளார்கள்; அவர்கள் வாயுக்குச் சமானமானவர்கள். ௨. பொன்னிறமுடன் அவர்கள் புகைக் கொடியுள்ளவர்கள்; அவர்கள் வாயுவினுல் துரிதமாகி சுவாலைகளுடனுகும், அக்கினிகள், சோதி நோக்கித் துரிதமாகிறுர்கள். ௩. அக்கினியே! எமக்கு மித்திர வருணனை யஜிக்கவும். பெரிய ருதத்துக்கு தேவர்களை யஜிக்கவும். உன் வீட்டை நாடவும், ௪. அக்கினியே! சாரதிக்குச் சமானமாய் தேவர்களால் போற்றப்படும் குதிரைகளை யுக்தமாக்கவும். பழைய ஹோதாவாயுட்காரவும். ௫. அமுத குண பொன் நிறமொன்று; சோதியாயும் சுவர்சஸுடனும் மற்றொன்றில் தோன்றும், இந்த இரண்டு விரூபங்கள் சுந்தரப் பயன்களுக்குச் செல்லும். ஒவ்வொன்றும் தொடர்ந்து சிசுவைக் காக்கும். ௬. இங்கு நியமனஞ் செய்பவர்களால் பிரசைகளுக்கு இம்முதன்மையாய் மேன்மையுமான ஹோதா யக்ஞங்களில் போற்றுவதர்க் கருகனுன இவன் தரிக்கப்படுகிறுன். அப்னவானவனும், பிருகுக்களும் பிரகாசஞ் செய்யும் அனல் வனங்களில் அதிசயமாக எங்கும் விரிந்துளான். ௭. ஒன்பது, முப்பது, மூன்று நூறு மூவாயிரம் தேவர்கள் அக்கினியை நாடியுள்ளார்கள். அவனுக்கு நெய்யால் நனைக்கப்படும் தருப்பை விரிக்கப்பட்டுள்ளது; அவனுக்காக ஹோதாவை ஸ்தாபனஞ் செய்துளார்கள். ௮. தேவர்கள், புவியின் தூதன், சோதியின் தலைவன், ருதஜாதன் வைசுவா

நரன், கவியும் சாம்ராஜ்யனுயுமுள்ள அக்கினியை, அதிதியாயும் அவர்கள் நாக்களுக்கு அதிதியாயுமுள்ள அனலை, புலனுக்கியுளார்கள். கூ. நமக்குப் பொருள் விரும்பி, நன்கு உதயமாகி சுக்கிரனுய் சாதனத் தால் யழைக்கப்படும் அக்கினி, விருத்திரனைக் கொல்ல வேண்டும். க௦. அக்கினியே! மித்திர நியமங்களுடன், இந்திரன் வாயு விசுவே தேவர்களோடு சோமபானத்தைப்பருக வும். கக. தேஜசானது மனிதர் பதியைத் தூரிதமாக்க அவனை யடைந்தவுடன் சோதியினின்று சுத்தமான இரேதசு எங்கும்—வியாபகமாகும்; அக்கினி, திடனுயும் நிர்தோஷனுயும் யுவனுயும் அனைவரும் நினைப்பவனுன இரேதசை பிரகாசத்துக்காக புலனுக்கியுளான். கஉ. அக்கினியே! மகத்தான சௌபாக்கியத்துக்கு உன் சக்தியைப் புலனுக் கவும். உனது ஒளிகள் உயரியவை யாகட்டும். தம்பதி விவகாரங்களைத் தரிக்க நல்வழிகளுடனுக்கவும்; எங்கள் சத்துருத்வஞ் செய்பவர்களின் சக்தியை வீழ்த்தவும். கங. அக்கினியே! எமது மகத்தான மொழியைக் கேட்க வும்; நாங்கள் சூரிய சமானமான சோதிகளுடன், இன்ப முழ்கு முன்னை வரித்துளோம். மனித சிரேஷ்டர்கள், சக்தியுடன் இந்திரனுக்கு இணையும் வாயுவாய் திவ்யமாகும் உன்னை செல்வத்தால் பூரணமாக்குகிறுர்கள். கச. சுவா ஹுதமான அக்கினியே! மனிதர்களின் ஜிதேந்திரியர்க ளான செல்வ புருஷர்கள், பசு இம்சர்களை யொழிக்கும் அறிஞர்கள் உனது பிரியர்களாகட்டும். கரு. சுருதி கேட் கச் செவி யுள்ளவனே! சாதக தேவ சேனைகளுடன் யக் ஞத்தைச் செவிகொடுக்கவும். காலை நாடும் மித்திரன் அரி யமான் தருப்பையி லுட்காரட்டும். கசு. எல்லா யக்ஞார் கர்களின் நடுவே அகாத அறிவுள்ளவன் அவன்; எல்லா மனிதர்களின் நடுவே அவன் அதிதியு மாவான். அக்கினி

தேவர்களின் இரட்சையை சுவீகாரஞ் செய்கிறான். ஜாத வேதர்களாய், அவன் சுகமளிப்பவனாகட்டும். கஎ. நாங்கள் பெரும் பிரகாசமான அக்கினியின் பாதுகாப்பில், சிறப்பான மித்திர வருண முன்னிலையில் குற்ற மன்னியிலாகவேண்டும். நாங்கள் இன்று சவிதாவின் சிறந்த ஆக்ஞையில் சாய்ந்து க்ஷேமத்துக்காக தேவர்களின் அத்துணையை நாடுகிறோம்.

### இந்திரன்

கஅ. இந்திரனே! உன்னைத் துதிப்பவர்கள் சலத்தைப்போல் பெருகுகிறார்கள்; விசால கிரணங்கள் ருதத்தை வியாப்தமாகும். வாயு தன் கூட்டத்துக்கு செல்வதுபோல் நீ எங்களிடம் வரவும். எங்கள் அறிவுகளால் எங்களுக்கு நீ செல்வங்களை யளிக்கிறாய். கக. பசுக்களே! தவத்தை இரட்சிக்கவும். இரு மகத்தானவர்கள் யக்ஞத்தை உருவ மாக்கட்டும். இரண்டு கர்ணங்கள் கனகத்தால் செய்யப்பட்டுள்ளன. உ0. இன்று சூரியன் உதயமாகும் இச்சமயத்தில் குற்றமில்லாத மித்திரன் அரியமான், பகன், சவிதா எம்மை நன்மையில் துரிதமாக்கட்டும். உக. சோதி சகம் சுபமுடனுக்கும் செல்வத்தை இரசத்தில் பொழியவும், இரசம் விருஷபத்தைச் சேரட்டும. இங்கு அறிஞனுயுள்ள நீ பழைய கால முதல்வனாகும். உஉ. அவன் உதயமாகுங்கால் அனைவரும் அவனை போற்றுகிறார்கள்; சுவயசோதியான அவன் சோதி யணிந்து சுற்றுகிறான். அவன் மகத்தான காளையின் பலமுள்ளவன். அசுர நாம முள்ளவன். விசுவரூபமான அவன் அமுத சலங்களை யடைந்துளான். உங. எங்கும் வியாபகமாகி வைசுவாநரனாய் இரசத்தில் இன்பமாகும் மகத்தான உங்களை நான் போற்றுகிறேன். எவனது புகழ் பலத்தை புவியும் சோதியும் போற்று

கிறதோ எவனது ஜயிக்கும் சக்தி சமரில் சக்திவாய்ந்தன வாயுளதோ அந்த இந்திரனை நான் போற்றுகிறேன். உச. எவர்களது நண்பன் சதா யுவனான இந்திரனாகிறானோ அவர்கள் சமித்துப் பெரியதாகும். அவர்கள் துதி திடமுள்ளதாகும், அவர்கள் புகழ் பெரியதாகும். உரு. இந்திரனே! ஓஜசுகளுடன் உயரிய விருப்பமுள்ள நீ, சகம் சோமங்களின் இரசத்தால் இன்பமாகும் நீ வரவும். உசா இந்திரன் தன் சேனையை யழைத்துச் சென்று விருத்திரனைக் கொல்லுகிறான்; மாயாவிகளின் சுந்திரத் தலைவன் திடம் தளர்கின்றான். வச்சிராயுதமுள்ளவன் வனங்களில் வியம்சனை யழித்து இன்பமளிக்கும் பசுக்களைப் புலனாக்கியுளான். உஎ. இந்திரனே! வீரர் பதியே! வன்மையுடனுள்ள நீ, தனிமையாய் வருவதேன்? உன் நோக்கமென்ன? குதிரைகளுள்ளவனே! நன்கு செல்லும் நீ எம்மை அதன் மர்மமறிய கேட்கவும். மங்களமொழிகளால் அவன் இரகசியத்தைச் சொல்லவும். ஓஜசினால் இந்திரன் பெரியவனாகும்; நீ எப்பொழுதும் பயனன்னியிலாவதில்லை. நீ எப்பொழுதும் அசிரத்தையாவதில்லை. உஅ. இந்திரனே! எம்மனிதர்கள் நன்மை செய்யுமுன்னை புரு புத்திரர்களுடன் ஆயிரந் தாரைகளோடு விசால புவியைக் கறக்க விரும்புகிறார்களோ, எவர்கள் புலன் நிறைந்து இம்சை செய்பவர்களை எதிர்த்துளார்களோ, அவர்கள் உனது நற்செயலைப் போற்றுகிறார்கள். உகூ. மகத்தான உனக்கு நான் இம்மேன்மையான அறிவை தரிக்கிறேன். துதியால் எனது அறிவு உன்னைப் பிரகாசிக்கச் செய்கிறது. சக்தியால் ஜயமுடனாகும் இந்திரனில் சோமன் பொழியும் பொழுது தேவர்கள் உற்சவத்தில் உற்சாக முடனாவார்கள். ௩0. அதிபிரகாசமுள்ளவன் மகத்தாய் இனிமையாயுள்ள சோமனைப்

பருகட்டும். அவன் யக்ஞபதிக்கு சம்பூரணமான ஆயுசை யளிக்கவேண்டும். வாயுவினுல் துரிதமாகும் அவன், தன் ஆத்மாவால் பிரசைகளைப் புஷ்டி செய்கிருன். இரட்சிக்கிருன். அவன் வெகு விதமாய் விளங்குகிருன். ௩க. ஜாதவேதசனுய் திவ்யமாயுள்ள சூரியனை விசுவம் பார்ப்பதர்க்காக கிரணங்கள் உயரமாய் அவனைச் சுமந்து செல்லுகின்றன. ௩உ. புனிதஞ் செய்யும் வருணனே! நீ எந்தக் கண்ணுல் காப்புடன் காண்கிருயோ அக்கண்ணுல் அப்படியே சனங்களை காணவும். ௩௩. திவ்யமான அத்வர்யுக்களே! சூரிய ஒளியுடனுகும் இரதத்தில் இங்கு வாருங்கள்; இனிமையால் இந்த யக்ஞத்தை நனையுங்கள். நீ பழைய முதல்வன். இவன் வேனன். இவன் தேவர்களின் அதிசய ஒளியுள்ளவன். ௩ச. எல்லா மனிதர்களாலும் விரும்பப்படும் சவிதா, துதிகளுடனளிக்கும் பாக்களால், எமது சபைக்கு வரட்டும். அதி இளைஞர்களே! நீங்கள் இன்பமுடனுகுங்கள். உங்கள் தரிசனத்தில் எமது சனங்களும் இன்பமாகவேண்டும். ௩ரு. இந்திரனே! சூரியனே! விருத்திரனைக் கொல்பவனே! இன்று உன் வசத்திலுள்ள அனைத்தும் உதயமாயுள்ளது. ௩சு. சூரியனே! சகலங் காணும் நீ துரிதன். சோதி செய்பவன். ஒளியான புவியையெல்லாம், நீ பிரகாசிக்கச்செய்கிருய். ௩எ. இது தேவத்வம், இது மஹித்வம்; பூரணமாகாத வேலையினின்று அவன் தன்னகத்தில் நீங்கியுளான். தமது நிலயத்தினின்று தன் குதிரைகளை நீக்குஞ் சமயத்தில் அனைவர்க்கும் இரவென்றும் உடையை அவன் விசாலமாக்குகிருன். ௩அ. சோதியின் நடுவில் மித்திரனும் வருணனுங் காண்பதர்க்காக, சூரியன் இந்த ரூபத்தைத் தரிக்கிருன். அவன் குதிரைகள் ஒரு சமயம் ஒளி, மற்ருெரு சமயம் இருளுமான சதாகால சக்தியை

பலத்தை நன்கு தரிக்கின்றன. ௩௯. சூரியனே! நீ மகானாகும்; ஆதித்தியனே! நீ பெரியவனாகும்; நீ பெரியவனாயிருப்பதால் உன் பெருமை போற்றப்படுகின்றது. தேவனே! நீ பெரியவன் தான். ௪0. சூரியனே! நீ சிரேயசில் சிறந்தவனாகும். தேவனே! நீ சத்தியமுடன் பெரியவனாகும். நீ உனது மகிமையால் தேவர்களின் திவ்ய பிராணப் புரோகிதனாகும். விசாலன் ஜயிக்கமுடியாத சோதியாகும். ௪௧. சூரியனைப் பார்ப்பதற்குப் போல் திரும்பி எல்லா நன்மைகளையும் இந்திரனிடமிருந்து யநுபவிக்கவும். பலத்தினால் புலனாகும் புலனாகப் போவதான அவனில் நாம் செல்வங்களை நமது உரிமையாகக் காண்கிறோம்.

௪௨. தேவர்களே! இன்று சூரியன் உதயமாகும் பொழுது துன்பம் துக்கத்தினின்று எம்மை நீக்கவும். மித்திரன் வருணன் அதிதி ஸிந்து சகம் சோதி இந்நன்மையை எமக்களிக்கட்டும். ௪௩. தேவசவிதா, இருளான இரஜசுடன் நிகழும் மிருதம் அமிருதத்தை திரஞ்செய்பவனையும், எல்லாப் பொருள்களையுங் காண்பவனையும் பொன் இரதத்தில் அமர்ந்து வருகிறான். ௪௪. நற்வழியுடனாகும் தருப்பை வியாபகமாயுள்ளது; சுற்றிலும் சேனையுள்ள அரசனைப்போல் இவை செல்லும். சனங்களின் நடுவே இரவும் பகலும் பூர்வமழைக்கப்படும் வாயுவும் பூஷணனும் நமது க்ஷேமத்துக்காக சேர்க்கப்பட்டுளார்கள். ௪ரு. இந்திரவாயு பிரகஸ்பதியை மித்திராக்கினி பூஷணனை பகனை ஆதித்தியர்களை மாருத கணத்தை—உங்கள் சுவாதீனஞ் செய்துகொள்ளவும். ௪௬. வருணன் நமது முதற் காப்பாகட்டும். மித்திரன் எல்லாத் துணைகளுடன் எம்மைக்காக்கட்டும். நீங்கள் எம்மை அதி செல்வர்களாக்கவும். ௪௭. இந்திரனே! விஷ்ணுவே! மருத்துக்களே!

அசுவினிகளே! உங்களது பந்துக்களான எங்களை கவனி யுங்கள். நீ பழைய முதல்வன். இவன் வேனன், பதி ஞென்று தேவர்களே! மனிதர்களால் விரும்பப்படும் சவிதா-எம்மைக் காக்கட்டும். எல்லா தேவர்களோடும் எம்மைச் சேரவும். காக்கும் விசுவே தேவர்களே எம் மைக் காக்கவும், சஅ. அக்கினியே! இந்திரனே! வருண னே! மித்திரனே! விசுவே தேவர்களே! மருத்துகணங் களே! விஷ்ணுவே! பலத்தையளியுங்கள். நாசத்தியர் கள் ருத்திரர், திவ்யமாதாக்கள், பூஷணன் பகன், சரஸ் வதி, எம்மை யங்கீகரிக்கட்டும். சகூ. நான் அவர்கள் நம்மைக் காக்க இந்திரன் அக்கினி மித்திரன் வருணன் அதிதி சலங்கள், மலைகள், மருத்துக்கள், சோதி, புவி, சுவர்கம் விஷ்ணு, பூஷணன், பிரமணஸ்பதி பகன், சம் ஸன், சவிதாவை யழைக்கிறேன். ருo. எங்களுடன் செல் வம் வர்ஷிக்கும் ருத்திரர்களுண்டு; விருத்திர ஹத்தியில், சமர்கோஷத்தில் சாயும் மேகங்களுண்டு. துதி செய்பவ னுக்குத் திடம் நியமனஞ் செய்யப்படும். தேவர்கள் இந் திரனை முதன்மையாகக்கொண்டு எம்மை இரட்சிக்கட்டும். ருக. பூஜார்கர்களே! இன்று இங்கு எம்மை நோக்குங் கள். அதனுல் எமது இருதயத்தில் பயமுடனுகி நாங்கள் உங்களை நாடுவோம். தேவர்களே! எங்களைக் காக்கவும். ஓநாய் எங்களை யழிக்காமலிருக்கட்டும். பள்ளம் படு குழியினின்று எங்களைக் காக்கவும். ருஉ. வானம் நடு வானத்தில் வசிக்கும் விசுவே தேவர்களே! இங்கு எமது அழைப்புக்குச் செவி கொடுங்கள். பூஜார்கர்களான நீங் கள், இத்தருப்பையிலுட்கார்ந்து இன்பமுடனுருங்கள். ருஙு. நீ முதன்மையாய் திவ்யமான தேவர்களுக்கு உயரிய பாகங்களான அமுதத்தை உண்டு பண்ணி யுளாய்; சவிதாவே! அப்பால் மனிதர்களுக்கு சாதக

மாக, அநுசரிக்கும் சிவனை விசாலமாக்குகிறாய். ௫௪. நான் உயரிய மொழியால், தாராளனாய், இரதம் நிறைந்து அதி செல்வனாயுள்ள வாயுவை இங்கு அழைக்கிறேன். கவி யான நீ குதிரைகள் சேரும் நீ சக்தியுடனுள்ளவனாய் சுக்கிரமான வழியுடன் அறிஞனை துரிதமாய் கண்ணியஞ் செய்கிறாய். ௫௫. நான் புனித பலனான மித்திரனை யழைக்கிறேன். நெய் சாதன யக்ஞத்தைப் பூரணமாக்கி சத்துருவை யழிக்கும் வருணனை யழைக்கிறேன். ௫௬. அதிசயங்கள் செய்யும் நாசத்தியர்களே ! திடதருப்பை யுடனாகும் இரசங்கள் உமதாகும். ஒளி வீசும் பாதை களுடனாகும் நீங்கள் வாருங்கள். ௫௭. சரமை மலையின் பிளவுகளைக் கண்டவுடன் புராதானமாய் வியாபகத்துட னுள்ள அந்நிலயத்தை நன்றாய் ஆக்கிரமிப்பாள்; சுலபமாய் செல்லுமவள் வெள்ளபந்த நிலயத்தில் அவற்றை யழைத்துச் செல்லுவாள். நன்கறியு மவள் கோஷத்துக்கு முதன்மையாய் வருவாள். ௫௮. வழியை நடத்திச்செல்ல எங்கும் வைசுவாநராக்கினியைத் தவிர வேறு தூதனை அவர்கள் காணவில்லை; அமுதமான தேவர்கள் சகத்தை சமரில் ஜயிக்க அமுதமான வைசுவாநரனை சக்தியுட னாக்கி யுள்ளார்கள். ௫௯. நாங்கள் பகைவர்கள் உக்கிரனாய் யொழிக்கும் இந்திராக்கினியை யழைப்போம்; அவர்கள் என்னைப் போலுள்ளவனுக்குச் சுகத்தை யளிக்கட்டும். ௬௦. மானிடர்களே ! தேவர்களை நாடவிரும்பும் நீங் கள், புனிதமாக்கும் இந்துவுக்கு கானஞ் செய்யுங்கள். ௬௧. மகவானே ! இந்திரனே ! மருத்து கணங்களுடன் சோமனைப் பருகவும். அறிஞர்கள் உன்னை அஹியி னழிப் பில் பலமுடனாக்கி யுள்ளார்கள். குதிரையுள்ளவனே ! பசு ஜயிப்பதில் சாம்பரனுக்கு மாறாயுள்ள உன்னை நாடு பவர்கள் உன்னில் இன்பமுடனாகிறார்கள். ௬௨. நீ ஒஜிஷ்

டன், வீரமும் யபிமானமுமுள்ளவன், துரித ஜயத்துக்கு நீ திடமாய் தோன்றுபவன். திடமான, தாய், வீரமகனைத் துரித மாக்குவதுபோல், அங்கு மருத்துக்கள் இந்திரனைப் பலமுடனுக்குவார்கள். சுங. இந்திரனே! பெரியவனே! உனது பெரிய துணைகளுடன் விருத்திரனைக் கொல்லும் நீ, எங்கள் மேன்மைக்கு வரவும். சுச. இந்திரனே! நீ சமர்களில் எல்லா சத்துரு சேனைகளையும் அடக்குபவன். நீ துஷ்டனைத்தொலைத்து எல்லாஞ் ஜயிக்கும் பிதாவாகும். எங்களுடன் சண்டை செய்பவர்களை யொழிக்கவும். சுரு. பெற்றோர்கள் பாலனைப் பற்றுவதுபோல், புவியும் சோதியும் உனது பலத்தை தரிக்கும், சுசு. அத்வர்யுக்களால், பொழியப்பட்டு, வீரச்சுடர்களுடன் இனிய இரசங்களான நீங்கள் பாய்ந்துளீர்கள். இணையும் நீங்கள் இங்கு வாருங்கள்; வாயுவே! இன்பத்துக்காக சோமனின் இரசத்தைப் பருகவும். சுஎ. சத்துருவைக் கொல்லும் நீங்கள் இருகவிகளின் மூலஸ்தானங்களுக்கு திட அறிவுடன் துரோணத்துக்கு வாருங்கள். சுஅ. இதன் குறுக்கான கிரணம் கீழே விசாலமாயுள்ளதோ அல்லது மேலேயுள்ளதோ; இங்கும் அங்கும் இரேதசு தரிப்பவர்களுண்டு, மேன்மையான, பலமுள்ளவர்களுண்டு, இங்குமங்கும் முயற்சியுண்டு. சுசு. செயல் செய்பவர்கள் வானத்தில் அவனை தரிக்குங்கால் அவன்சோதி சகம் சுவர்க்க நிலயத்தை வியாபகஞ்செய்துளான். இதஞ்செய்யும் கவியான இவன் செல்வஞ் ஜயிக்க யக்ஞத்துக்கு அழைத்துச் செல்லப்படுகிறுன். எo. நமது சமானமொழியில் இன்பமாகி பாக்களால் சத்துருவைக் கொல்லும் இருவர்களை இங்கு அழைக்கவும். எக. எல்லா அமுத மக்கட்களும் நாம் சொல்லும் மொழிகளைக்கேட்டு நமக்கு நற்சுக மளிப்பவர்களாகட்டும். எஉ. என் நினைவுகள் அறிவுகளாகும். இரசங்கள் இனிமைகளாகும். சக்தி

பிரேரிக்கும் என் ஆயுதம் ஓங்கியுள்ளது ; அவர்கள் எனக்கு கோஷிக்கிறார்கள், எனக்கு அவர்களது மொழிகள் நாடுகின்றன. எனது இக்குதிரைகள் என்னை யக்ஞத்துக்கு வகிக்கட்டும். எந. மகவானே! உன் முன்னிலையில் திடமாய் நிற்பது ஒன்றுமில்லை ; தேவர்கள் நடுவில் உனக்குச் சமானமாய் எவனுமில்லை; சனிப்பதும் சனிக்கப்போவது ஃதுவும் உன்னருகில் வரப்போவதில்லை. அதிசக்தியுள்ளவனே! நீ செய்வதைச்செய்யவும், எச. புவனங்களில் பெருமை வாய்வது எதுஉண்டோ அதனிடமிருந்து சிறந்த வீரம் நிறையும். உக்கிரதேவன் தோன்றுவான் ; அவன் தோன்றுங் காலத்திலேயே துரிதமாய் தன் சத்துருவைக் கொல்வான் ; அவனில் சகல துணைச்செயல்களைச் செய்பவர்கள் சந்தோஷமுள்ளவர்களாகும். எரு. அதிசெல்வமுள்ளவனே! எனது துதிமொழிகள் உன்னைப் பெருகச்செய்யட்டும் ; சுத்த நிறமுள்ளவர்கள் தூய அறிஞர்கள் ஸ்தோமங்களுடன் உன்னைத் துதிக்கிறார்கள். எசு. அவன் நல்ல செல்வங்களின் பதி; இங்கு எல்லா ஆரியன் தாசன் அவனதே யாகும். ருசும, பவீரவி, உனதாகும், உனக்கே செல்வம் அருகில் கொண்டு வரப்பட்டுள்ளது. எஎ. ஆயிரம் ரிஷிகளால் பலஞ்சேர்க்கப்படும் இவன் சமுத்திரம் போல் விசாலமாயுளான் ; அவன் மகிமை சத்தியமாகும்; யக்ஞங்களில் விப்பிர இராஜ்யத்தில் சக்தி போற்றப்படும். எஅ. சோதி பற்றும் எங்கள் யக்ஞத்துக்கு நல்ல மனங்களோடு வாயுவே! வரவும். அகத்தின் பவித்திர உயர்வில் ஆசிரயமாகி இந்த சுக்கிரமான பானம் உனக்கு அளிக்கப்பட்டுள்ளது. எகூ. சபையில் அழைவரும் சனங்களும், நாங்களும், நமக்கு நல்மனமுடனுகி நோய் குறைய காணக்கனிந்து கேட்கத்துரிதமாகும் இந்திர வாயுவை அழைக்கிறோம். அ௦. எந்த ஓங்கும் மானி

டன் தேவ குணங்களுக்காக, அதி அவியடைய மித்திர வருணனை நிலையாய் நாடுகிறானோ, அவன் சாந்தமாவான். அக. நீங்கள் யஜுகி எமது பக்கமாகுங்கள். அசுவினிகளே! இனிமையான இரசத்தைப் பருகுங்கள். பலமுள்ளவர்களே! அதிசெல்வம் நிறைபவர்களே! பாலைக் கறக்கவும். எங்களைத் துன்பஞ்செய்யவேண்டாம்; எங்களிடம் வாருங்கள். அஉ. பிரமணஸ்பதி நமதருகில் வரவேண்டும்; தேவியான சுநிருதை வரட்டும். தேவர்கள் மனிதர் விரும்பும் யக்ஞனைய் பஞ்ச செல்வங்களையளிக்கும் வீரனை யழைத்துச் செல்லட்டும். அங. சந்திரன் சுபர்ணனாய் சோதியில் சலங்களின் நடுவே செல்லுகின்றான். பொன் குதிரை பலர் விரும்பும் வெகு சுந்தரமான செல்வத்தை கோஷித்துக்கொண்டே அடையும். அச. நாங்கள் ஒவ்வொரு தேவனையும் மங்களத்துக்காகவும், உங்கள் துணைக்கு ஒவ்வொரு திவ்யத்தையும் உங்களை பலமுடனாக்க ஒவ்வொரு பெருமையையும், திவ்ய அறிவால் அவர்களைப் புகழ்ந்துகொண்டு அழைப்போம். அரு. சோதியில் ஸ்தாபனமாகும் அக்கினி, வைசுவாநரன் ஓங்கும் ஒளியுடன் பிரகாசமாயுளான், தயாளமாயுள்ள அவன் தரணியால் திடம் வளர்ந்து சோதியால் அவன் தமசை நீக்குகிறான். அசா. இந்திராக்கினியே! முதன்மையான இவன் பாதங்களுட னுள்ளவர்களிடம் பாதங்களன்னியில் வந்துளான்: தன் தலையை விசாலமாக்கி, நாவினால் கோஷஞ்செய்து கீழே முப்பது அடிகள் வந்துளான். அஎ. மனிதர்களுடன் தேவர்கள் ஒரு மனமுள்ளவர்கள்; எல்லா யளிப்புக் களின் சம பாகஸ்தர்கள்; இன்றும் இனியும் அவர்கள் எல்லாசெல்வங்களையும் அளித்துக்கொண்டு எங்களது பலத்தை ஓங்கச் செய்யவேண்டும். அஅ. அதி ஒளி வீசுபவன், மருத்துகணன் இந்திரன் தேவர்கள்

உனது நட்புக்கு முயற்சி செய்பவர்கள். ஒளியுடனுகு மிந்திரன் துஷ்டர்களை நீக்கியுள்ளான்; தீமைகளைத் தூரமாக்கியுள்ளான்.

அகூ. இந்திரனுக்கு பெரிய மருத்துக்கு பிரமத்தைச் சேர்க்கவும். விருத்திரனைக் கொல்லும் சதக்கிரதுநூறு கிளைகளுள்ள வச்சிராயுதத்தோடு சத்துருவைக் கொல்லட்டும். கூo. இந்திரன், யக்ஞத்தில் வியாபக இரசத்தினின்பத்தில் இந்திரன் தன் பலத்தை விருத்தி செய்துள்ளான்; பழையவர்கள் போல் இன்று நிகழ்பவர்களும் அவன் மகிமையைப் போற்றுகிறார்கள். இவை—உன்னை புகழட்டும். இவன் நல்ல செல்வபதியாகும். அவன் பலத்தால்—முன் சென்றுள்ளான். நிமிர்ந்து நிற்கவும். ௩௩.க—ருக.ரு௩—ருரு. ருஎ—கூஎ.எo.எஉ.எச.—கூஎ.

---

## அநுவாகம் சoo.

### சிவ சங்கற்பம்

க. மனிதன் விழித்திருக்குங்கால் எந்த திவ்யமான வஸ்து—தூரமாய் செல்லுகின்றதோ, அவன் உறங்கும் பொழுது எது அவனுக்குத் திரும்புகின்றதோ, தூரஞ் செல்லும் சோதியின் ஏக சோதியான அந்த எனது மனம் சிவசங்கற்ப முடனுகவேண்டும். உ. எதனல் தருமம் மிகும் தீரர்கள் யக்ஞம், போர்களில் செயல்களைச் செய்கிறார்களோ, அபூர்வமான எது பிரஜைகளில் சேர்ந்துள்ளதோ, அந்த என் மனம் சிவசங்கற்ப முடனுகட்டும். ௩. பிரஜைகளினகத்தில் எது பிரக்ஞானம் அறிவு நிலை

---

௩கூகூ. கருத்து—உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையு மறியவும்.

யாகி, அமுத சோதியாயுளதோ, எஃதன்னியில் மனிதன் எச் செயலையுஞ் செய்வதில்லையோ, அந்த என் மனம் சிவ சங்கற்பமுடனாகட்டும். ௪. எந்த அமுதத்தால் இறந்ததும் நிகழ்வதும் வரப்போவதும் அனைத்தும் அறியப் பட்டு, எதனால் ஏழு ஹோத்துருக்களுடன் யக்ஞம் விரிகின்றதோ, அந்த என்மனம் சிவசங்கற்ப முடனாகட்டும். ௫. இரதச் சக்கர நடுவே கம்புகளைப்போல எதில் ருக்கு ஸாமன் யஜுர்வேதம் ஸ்தாபனமா யுளதோ, பிரசைகளின் சித்தம் எல்லாம் எதில் இழைக்கப்பட்டுளதோ, அந்த என் மனம் சிவசங்கற்பமுடனாகட்டும்.

௬. வழி காட்டுங் கடிவாளங்களால் நல்ல சாரதி துரித குதிரைகளை நடத்துவதுபோல் மனிதர்களை எது நடத்திச் சென்று இருதயத்தினுள்ளே வசிக்கின்றதோ, எது திடமாயும், அதி துரிதமாயுளதோ அந்த என் மனம் சிவசங்கற்ப முடனாகட்டும். ௭. எதன் ஓஜசினால் திருதன் விருத்திரனை அங்கமங்கமாய் நாசஞ்செய்கிறானோ அந்த பெரும் பலத்தின் தரிப்பான உணவை இப்பொழுது நான் துதிக்கிறேன்

௮. அநுமதியே! நீ அநுகூலமாகி எங்களுக்கு ஆனந்தத்தை யளிக்கவும். அறிவையும் பலத்தையும் எமக்குத் தூண்டவும். எங்கள் ஆயுசை பூரணமாய் வளர்க்கவும். ௯. அநுமதியே! இன்று தேவர்களில் எங்கள் யக்ஞத்தை யநுகூலஞ் செய்யவும். அவி சுமக்கும் அக்கினியே! நாடுபவனுக்குச் சுக மளிப்பவனாகவும். ௧௦. விசால கேசமுள்ள சினீவாலியே! தேவர்களின் சகோதரியான நீ, யளிக்கும் யக்ஞத்தை யங்கீகரிக்கவும். தேவியே! எங்களுக்குப் பிரசையை யளிக்கவும். ௧௧. பிரவாகம் ஒருமையுடனாகும் பஞ்சநதிகள் சரஸ்வதியை நாடுகின்றன. அப்பால் சரஸ்வதி நிலத்தில் ஐந்து பிரிவுள்ளவளாவாள்.

கஉ. **அக்கினியே!** நீ பழைய அங்கிரசனுகும், ரிஷியும் தேவனுமாகும். நீ தேவர்களின் மங்கள நண்பனுவாய். உனது விரதத்தில் சுந்தராயுதங்கள் தரித்து துரிதமான அறிஞர்கள் தோன்றுவார்கள். கங. அக்கினியே! தேவனே! உன் துணைகளால் எங்களையும் எங்கள் செல்வப் பிரபுக்களையும் காக்கவும். துதிப்பதர்க் கருகனை நீ உன் விரதத்தில், என் புத்திர பௌத்திரர் களை பசுக்களை சதாகாலம் காப்பவனுயுளாய். கச. அறிஞனுயும் பண்டிதனுயு முள்ளவர், விசாலமான புவி யில், வர்ஷிக்கும் காரணமான யக்ஞத்தைப் புலனுக்கு கிருர்கள். ஒளிக் குவியலுடன் அவன் பிரகாசம் பிரகா சமாயுளது. எங்கள் அறிவில் இடையின் மகன் சனித் துளான். கரு. நாங்கள் புவியின் நடுவாயுள்ள இடை யின் ஸ்தானத்தில், தேவர்களுக்கு எங்கள் அவியைச் சுமந்து செல்ல அக்கினி ஜாதவேதசனை ஸ்தாபித் துளோம். கசு. நாங்கள் அங்கிரசனைப்போல் கானம் விரும்பி பலம் வளரும் அவனுக்கு இன்பமளிக்கும் மொழி யைக் கூறுவோம். நாங்கள் அறிஞர்கள் சுந்தர மொழி களால் துதிக்கப்படுவதற்கான அதி புகழுள்ள நரனைப் போற்றவேண்டும். கஎ. மகத்தான நமஸ்காரத்தைப் பெரியவனுக்கு அளிக்கவும். அதி பலமுள்ள அவனுக் குச் சாமனை யளிக்கவும். எவனை எங்கள் பிதா அங்கிர சர்கள் அர்ச்சித்து நிலயங்களை யறிந்து பசுக்களைக் காண் பார்களோ அவனையே நாடவும். கஅ. சோமனளிக்கும் நண்பர்கள் உன்னைக் காண விரும்புகிருர்கள். அவர்கள் சோமனைப் பொழிகிருர்கள்; தங்கள் உணவான சாத னங்களை யளிக்கிருர்கள். அவர் சனங்களின் துர்வசனங் களை சகிக்கிருர்கள்.

இந்திரனே! எல்லா யறிவும் உன்னிடமிருந்தே வரும். கக. வானத்தின் உயரிய திசைகள் உன்னிடமிருந்து வெகு தூரத்திலில்லை. குதிரை தலைவனே! உன் இரு குதிரைகளுடன் இங்கு நோக்கவும். இந்த யக்ஞம் திடன் திரமுள்ளவனுக்கு பொழியப்பட்டுள்ளது. சாதனங்கள் ஒன்று சேர்ந்துள்ளன! அக்கினி உதயமாக்கப்பட்டுள்ளது.

உ0. சோமனே! போரில் உன்னை ஜயிக்க முடியாது, சமர்களில் காப்பளிப்பவன் நீ; நீ எங்கள் நிலயம் இரட்வசிப்பன், பலம் பிராணனின் துணைவன். பெரியவற்றில் புலனுகுபவன், நல்ல நிலயமுள்ளவன். நற் சிரேயசுடன் சத்துரு ஜயிப்பவன். இப்படிப்பட்ட உன்னில் நாங்கள் இன்பமுடனுவோம். உக. சோமன் பசுவை யளிக்கிறான். சோமன் துரிதமான வீரச் செயலுள்ளவனை யளிக்கிறான். சோமன், வீடு அறிபவனையும் சபை ஞானியையும் அறிவு யறிபவனையும், பித்துரு புகழையும் இவனுக்களிப்பான். உஉ. சோமனே! நீ இந்த ஓஷதிகள் இந்த பசுக்கள் இந்த எல்லா சலங்களையும் நீயே சனனஞ்செய்துளாய்; விசால வானத்தை விரிப்பதும் நீயே! நீ சோதியால் இருளை நீக்குகிறாய். உங. தேவனான சோமனே! உன்னுடைய தேவமனத்துடன் ஜயசாலியான நீ எங்களுக்கு செல்வ பாகத்தை யளிக்கவும். உன்னை ஒருவரும் தடுக்காமலிருக்கட்டும். நீ வீரபதியாகும்; இங்குள்ளவர்களுக்கு சமர்களில் இருப்பவர்களுக்கும் சிகிச்சையை யளிக்கவும். உச. அவன் ஏழு நதிகளையும் மூன்று பாலை நிலயங்களையும் புவியின் எண் திசைகளையும் பிரகாசஞ் செய்துளான். நாடுபவனுக்கு சிறந்த இரத்தினங்களை யளித்துக்கொண்டு பொன் கண் சவிதா இங்கு வந்துளார். உரு. துரிதமாய்ச் செல்ல தங்கக் கைச் சவிதா வானம் புவியின்

நடுவே செல்லுகிருள். அவள் நோயை நீக்கி சூரியனை நம்மிடம் வரச் செய்கிருள். அவள் கரும் இருளோடு ஒளி வானத்தை விரிக்கிருள்.

உசு. பொன்கையுள்ள அசுரர் நல்ல தலைவர் சுக மளிக்கும் சுவயகுணங்களோடு எங்களுக்கு இங்கு வர வேண்டும். தேவர் அரக்கர் யாது தானர்களைத் துரத்தி திரமாயுளான்; அவன் சாதனத்தில் கிரகிக்கப் படுகிருன். உஎ. சவிதாவே! உனது பழைய புழுதி சூன்னிய பாதைகள் அந்தரிட்சத்தில் நன்கு செய் யப்பட்டுள்ளன. தேவரே! சுகமனங்களான அப்பாதை களால் நீ வரவும். இன்று துன்பத்தினின்று எங்களைக் காத்து எமக்கு ஆசியளிக்கவும்.

உஅ. அசுவினிகளே! நீங்கள் இருவர்களும் இரசத்தைப் பருகுங்கள்; எவரும் தடுக்க முடியாத துணைகளுடன் எங்களுக்கு இரட்சிப்பை யளியுங்கள். உகூ. அசுவினிகளே! துக்கமழித்து திடமளிப்பவர் களே! எங்கள் வாக்கை மேன்மையாக்கவும். நான் புனித உஷையின் முன்னர் இரட்சிப்புக்கு உங்களை யழைப்போம். எங்களைப் போர்க்களத்தில் பலமுடனுக்க வும். ௩௦. அசுவினிகளே! குறையில்லா சௌபாக்கியங் களுடன் இரவும் பகலும் எங்கும் எங்களைக் காக்கவும். வருணனும் மித்திரனும் அதிதியுட் சிந்துவும், புவியும் சோதியும் எங்கள் இந்த விருப்பத்தை யளிக்கட்டும். ௩௧. தேவ சவிதா, இருளான இரஜசுடன் நிகழும் மிருதம் அமி ருதத்தைச் திரஞ்செய்பவனுயும் எல்லாப் பொருள்களை காண்பவனுயும் பொன் இரதத்தில் அமர்ந்து வருகிருள். ௩௨. இரவே! புவிச்சேர்க்கையான உலகம் பிதாவின் நிலயங்களுடன் பூரணமாயுளது; நீ சோதியுடன் உச்ச நிலை யங்களில் விரிகிருய். நீ ஒளியும் இருளுமாய் நிகழ்கிருய்.

௩௩. உஷையே! செல்வம் மிகும் நீ நாங்கள் எதனால் பிள்ளைகளையும் பேரன்களையும் தரிப்போமோ அந்த அதிசய செல்வத்தை எங்களுக்களிக்கவும். ௩௪. நாங்கள் காலையில் அக்கினியை, காலையில் இந்திரன், காலையில் மித்திரன் வருணனை அசுவினிகளை அழைப்போம்; நாங்கள் காலையில் பகனை, பூஷணன் பிரகஸ்பதியையும் சோமனையுங் காலையி லழைப்போம்.

௩௫. எந்த **பகனை** நினைத்து பல சூன்னியன் பலமுள்ளவன் மன்னன் நான் பகனுடன் அநுபவிக்கட்டும், யென சொல்லுகிறார்களோ அந்த விதாதாவாய் அதிதி மகனாய் முதல் ஜயிப்பவனாயுள்ள உக்கிரனை நாங்கள் அழைப்போம். ௩௬. பகன் எங்கள் பிரேரகன், பொருள் சக்தியுமாயுள்ள நீ இந்த அறிவை எங்களுக்களிக்கவும்; பகனே! எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். பகனே! எங்கள் பசுக்களை கோக்களை புலனுக்கவும்; பகனே! நாங்கள் மனிதர் வீரர்களில் நிறைய வேண்டும். ௩௭. இப்பொழுது தினம் வரும்பொழுது பகற்காலத்தில், செல்வங்கள், எங்களுக்காகவேண்டும். மகவானே! மாலையில் நாங்கள் இன்னம் தேவர்களின் நல்ல நினைவில் இன்பமுடனாகவேண்டும். ௩௮. பகனே பொருள் அளிப்பவனாகும், தேவனே! அவனால் நாங்கள் பகவந்தர் களாகவேண்டும். பகனே! நாங்கள் அனைவரும் உன்னை பலமுடன் யழைப்போம். பகனே! அப்படியுள்ள நீ எங்கள் முன்னாகவும்.

௩௯. உஷை ததிக்கிராவணனைப்போல் சுத்த நிலைய யக்ஞத்துக்கு நன்கு சாய்ந்துளாள். துரித குதிரை இரதத்தை இழுப்பது போல் அவர்கள் இங்கு பொருள் காணும் பகனைக் கொண்டு வரட்டும். ௪௦. நட்புள்ள உஷைகள் புஷ்டி பொழிந்து, எல்லாச்

செல்வம் வர்ஷித்து பசு, வீரர், அசுவச் செல்வங்களோடு எங்களுக்குச் சதாகால முதய மாகட்டும். தேவர்களே! எப்பொழுதும் க்ஷேமங்களுடன் எங்களைக் காக்கவும். சக. பூஷணனே! உனது விரதத்தில் நாங்கள் எப்பொழுதும் பாதுகாப்பாகவேண்டும்; நாங்கள் ஒருபொழுதும் வீழ்தல் வேண்டாம். உன்னைத் துதிக்கும் நாங்கள் இங்கு உளோம். சஉ. எல்லா வழிகளின் பெரிய தலைவனை மொழியால் நாடுகிறேன். காமத்தால் தூண்டப்படுங்கால் அவன் அர்க்கனுக்குச் செல்லுகிறான். அவன் எங்களுக்கு துரிதமாய் துன்பம் நீக்கி இன்ப சாதனப் பொருளை யளிக்கட்டும். பூஷணன் எங்கள் ஒவ்வொரு அறிவையும் சித்தமாக்கட்டும்.

சங. இம்சையற்ற விஷ்ணு பாதுகாக்கும் அவன் தர்மங்களை தரிப்பவனாயுள்ளான்; இதனால் மூன்று நிலயங்களை ஆக்கிரமித்துளான். சச. சதா உதயமாயுள்ள துதி செய்பவர்கள் அறிஞர்களாகும் அவர்கள் விஷ்ணுவின் இப்பரமபதத்தை-மனிதர்காண-பிரகாசஞ் செய்கிறார்கள். சரு. நெய் நிறைந்து எல்லா புவனங்களின் ஆசிரயமாயும் விசாலமாய் விரிந்தும் சுந்தர ரூபத்தோடு சுவை பொழிவதாயும், அழியாத அதிரேதசுடனுள்ள, சோதியும் புவியும் வருணனின் தர்மத்தால் பரஸ்பரம்-தாங்கி நிற்கும். சசு. எங்கள் பகைவர்கள் எங்களிடமிருந்து தூரமாகட்டும். நாங்கள் இந்திரன் அக்கினியால் அவர்களை வேதனை செய்வோம். வசுருத்திரர் ஆதித்தியர்கள், உச்சம்பற்றி பகுத்தறிவுள்ள பலிஷ்டனுயுள்ள என்னை இராஜாதி இராஜனாய் என்னைச் செய்யவேண்டும்.

சஎ. நாசத்தியர்களே! மூன்று, பதினொன்று தேவர்களுடன் இங்குவாருங்கள்; அசுவினிகளே! இனிய இரசத்

தைப் பருக வாருங்கள். எங்கள் ஆயுட்களை பூரணமாக்கி எங்கள் எல்லாக் குறைகளையும் நீக்கவும். துவேஷிகளை நீக்கி எங்களுடன் எப்பொழுது மிருக்கவும். சஅ. மருத்துக்களே! இந்த உங்கள் ஸ்தோமம் மனத்தின் மகனை மாந்தாரிய அறிஞனல் துதிக்கப்படும். இது புசிக்க உணவையும் உடலுக் உதவியையும் யளிக்கும். நாங்கள் சீவஹேது உணவையும் உறுதியையுங் காணவேண்டும். சகூ. ஸ்தோமங்களையும் சந்தங்களையும் சேர்ந்தறியு மவர்கள் நியமங்களும் குருகுல, தீட்சை நீங்கியவர்களே ஏழு திவ்யமான ரிஷிகளாகும்; தீரர்கள் பழைய வழியைப் பார்த்துக்கொண்டு இரத சாரதிகளைப்போல் கடிவாளங்களைப் பற்றியுளார்கள். ருo. நீ ஆயுசளிப்பவன், வர்சஸளிப்பவன். செல்வமளிப்பவன். புஷ்டியளிப்பவன். ஜயமளிப்பவன்; சோதியுடனுகும் இச்சொர்ணம் ஜயத்துக்காக என்னைச் சேரட்டும். ருக. இந்தப் பொன்னை எந்த அரக்கனும் இம்சிப்பதில்லை, பிசாசங்களும் அவமதிப்பதில்லை; ஏனெனில் இது தேவர்களின் ஒஜசாகும், முதல் தோன்றுவதாகும்; தாக்ஷாயண தங்கத்தைத் தரிப்பவன் தேவர்களில் பூரண ஆயுசை வசித்து மனிதர்களிலும் நீண்ட ஆயுளை வாழ்கிறுன், ருஉ. தாக்ஷாயணமாயும் நல்ல மனங்களுடனுமுள்ள சதசேனைகளுடனுகும் எனக்கு நூறுவருஷங்கள் வாழ மூப்பு வரும்வரை நான் சீவிக்க இந்தத் தங்கம் தரிப்பாகட்டும். ருங. அஹிபுத்தினியனும் அஜஏகபாதனும், புவியும் சமுத்திரனும் எங்கள்—மொழியைக்—கேட்கட்டும். ருதம் வளர்க்கும் எல்லா தேவர்களும், அழைக்கப்பட்டு போற்றப்படு பவர்களும், கவிகளால் கூறப்படும் மந்திரங்களும் எங்களை இரட்சிக்கட்டும். ருச. நான் கிருதம் பொழியும் இம்மொழிகளை சாதனத்துடன் எப்பொழுதும் அரசர்களான ஆதித்தியர்களுக் களிக்

